மே 1972 (வைசாகம் 1894)



ரூ. 6–00

*Original Title* : Chitta Lahu (Punjabi)
*Tamil Translation* : VEN KURUDHI

விநியோகிப்பாளர் :
பாரி நிலையம்
1/59, பிராட்வே, சென்னை–1

வெளியிட்டவர் :
டைரக்டர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
ஏ–5 கிரீன் பார்க், புது தில்லி–16

அச்சிட்டவர் :
கபீர் பிரிண்டிங் ஒர்க்ஸ், சென்னை–5

# முகவுரை

இந்தியா ஒரு விசாலமான நாடு. இந்நாடு பண்பாட்டினால் ஒன்றாக இருந்தபோதிலும், இதனை முன்னேற்றமடைந்த சக்தியுள்ளதொரு நாடாக ஆக்கக்கூடிய ஒற்றுமைத் தளைகளை இன்னும் வலிமைப்படுத்த வேண்டியிருக்கின்றது.

நம்முடைய பாரத நாட்டில் பல மொழிகள் பேசப்படுகின்றன. நம்முடைய நாட்டைப்போல உலகத்தின் மற்றெந்த நாட்டிலும் மொழிகளுடைய எண்ணிக்கை இவ்வளவு அதிகமாக இல்லை. ஆனால், நமது அண்டையிலுள்ள பகுதியில் வழங்கும் மொழிகளைப்பற்றி நாம் அதிகம் அக்கறை கொள்ளுவதில்லை. அப்பகுதிகளில் இலக்கியம், கலாசாரம் இவற்றின் செழிப்பைப்பற்றிய அறிவும் நாம் அதிகமாகப் பெற்றிருக்கவில்லை. ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன் முதலிய ஐரோப்பிய மொழிகளின் இலக்கியத்தைப்பற்றியும், அம் மொழிகள் வழங்கும் சமுதாயங்களைப்பற்றியும் நமக்குள்ள அறிவை விட நமது நாட்டின் மொழிகளில் உள்ள இலக்கியங்களைப்பற்றிய அறிவு குறைவாயுள்ளது.

நாட்டின் உணர்ச்சி—பண்பாடு ஒருமைப்பாட்டிற்கு நமது நாட்டினர் தேசத்தின் பல மொழிகளிலுள்ள சிறந்த இலக்கியப் படைப்புக்களைப்பற்றி நன்கு அறிந்திருத்தல் வேண்டும். அவற்றின் வாயிலாகப் பல்வேறு பகுதிகளில் வழங்கும் வாழ்க்கை முறைகள், மக்களது எண்ணங்கள், நம்பிக்கைகள், நடை—உடை பாவனைகள் ஆகியவை பற்றியும் அறிய வேண்டும்.

மேற்கே சுதந்திரமான பல நாடுகள் உள்ளன. ஒவ்வொரு நாட்டுக்கும் தனிப்பட்ட மொழி உண்டு. ஆயினும் ஒவ்வொரு நாட்டினரும் மற்ற நாட்டினருடைய இலக்கியத்தைப்பற்றியும், சிந்தனையைப்பற்றியும் அறிந்து வைத்திருக்கிறார்கள். அவ்வாறு நாம் நமது நாட்டு மொழிகளைப்பற்றி அறிந்திருக்கவில்லை. ஐரோப்பிய மொழியொன்றில் வெளியாகும் எந்தச்

சிறந்த நூலும் உடனடியாக மற்ற மொழிகளில் பெயர்க்கப்படு கின்றது. இந்தியா ஒரே நாடு. ஆனல் நமக்கு நமது அண்டை மொழிகளில் என்ன நடைபெறுகின்றது என்பதைப் பற்றித் தெரிந்து கொள்வதில் அவ்வளவு ஆவல் கிடையாது. இந்நிலை மாறிக்கொண்டு வருகிறது என்பது உண்மையே. ஆனல் இந்த மாறுதல் மிகவும் மெதுவாக நடைபெற்று வருகிறது.

இந்நிலையை உத்தேசித்தே, இந்திய அரசு ஒவ்வொரு இந்திய மொழியிலிருந்தும் தற்காலத்திய இலக்கியத்திலிருந் தும் தெரிந்தெடுத்த நூல்களை மற்ற மொழிகளில் மொழி பெயர்ப்பிப்பதற்கான திட்டமொன்றை வரைந்திருக்கிறது. இந்தத் திட்டத்தின்கீழ் மக்கள் படித்து மகிழக்கூடிய நூல்கள் அதாவது, கதைகள், புதினங்கள், இன்பமளிக்கும் பயண வரலாறுகள், சுய சரிதைகள் போன்றவை தெரிந்தெடுக்கப் படும். மிகச் சிறந்தவையும், மக்களிடையே பிரபலமடைந்த வையும், அந்தந்த மொழிப் பகுதியில் வாழும் மக்களுடைய நடை—உடை பாவனைகளையும், வாழ்க்கை முறைகளையும் சமூக நிலைமையையும் கண்ணாடிபோலப் பிரதிபலித்துக் காட்டக்கூடியவையுமான நூல்களே இத்தொடரில் தெரிந் தெடுக்கப்படும். இத்திட்டத்தின் வாயிலாக பலவேறு மொழிகள் பேசுவோரிடையே பரஸ்பரப் பரிவுணர்வும் ஒற்று மையும் வளருமென நம்புகிறோம்.

வெவ்வேறு மொழிகளின் சிறந்த படைப்புக்களைத் தெரிந் தெடுப்பதும், அவற்றை மொழிபெயர்ப்பதும் எளிய காரிய மல்ல. இப்பணியில் எங்களுடைய ஆலோசனைக் குழுவின ருக்கும், மொழிபெயர்ப்பாளர்களுக்கும் நாங்கள் கடமைப் பட்டவராவோம். அவர்கள் வழிகாட்டி, உதவி செய்து, ஒத்துழைப்பு தராவிடில் இந்த திட்டத்தை வெற்றிப் பலனுடன் செயலாக்குவது முடியாது.

—பாலகிருஷ்ண கேஸ்கர்

# முன்னுரை

காலத்துடன் கூடவே மனிதப் போக்கின் விதமும், அவனுடைய சிந்தனையும் விரிவடைந்து கொண்டே வருகின்றன. ஒரு நாடு மற்றொரு நாட்டுடன் சண்டையிடுவதும், அதனைத் தன் வசப்படுத்திக்கொள்ள முயற்சிப்பதும், அல்லது ஒரு மனிதன் ஒரு பெண்ணின் பலவீனத்தைத் தன் சுய நலனுக்காகப் பயன்படுத்திக் கொள்வதும், அவளைத் தன் ஆசைக்கிரையாக்கிக் கொள்வதும், சுயாபிமானமும் பரோபகாரச் சிந்தனையுடைய மனிதன் இரக்கங்கொண்டு அந்தப் பெண்மணியைக் காக்க முயல்வதும் தான் முதன் முதலில் கதாசிரியர்களின் படைப்புக்கு உகந்த பொருளாக விளங்கிற்று. ஆனால் இன்று சமுதாய வாழ்க்கை அவ்வளவு எளிதாக இல்லை, அதன் சிக்கல்களை இன்று புரிந்துகொள்வது அவ்வளவு சுலபமான காரியமில்லை. இப்போது கல்வி, நட்பு இவற்றின் காரணமாக நல்லன, தீயனவெல்லாம் நம் முன் வெகு எளிதாக கலந்துவிடுகின்றன. அதன் காரணமாக மனிதனின் போக்கு ஒரு புரியாத புதிராகிவிட்டது.

நாவலாசிரியர் கதையை எழுதிவிட்டால் மட்டும் போதாது. ஆனால் கதையின் சூழ்நிலைக்கேற்றவாறு ஒவ்வொரு பாத்திரத்தையும் படைத்தாக வேண்டும். சமுதாயத்தின் போக்கும் அத்துடன் பழகிவரும் ஆடவர்—பெண்டிரின் சுபாவமும் ஒன்றுடன் ஒன்று பிணைந்து காணப்பட்டால், நாவலாசிரியரின் வேலை கடினமாகிவிடும். ஒரு நல்ல நாவலாசிரியர் என்றால் மனிதனின் போக்கை நன்கு அறிந்துகொள்ளும் தகுதி அவரிடம் இருக்கவேண்டும். ஆசிரியர் பஞ்சாபி எழுத்தாளராக இருந்தால் இந்துக்கள் கோழைகளாகவும், முஸ்லீம்கள் களிப்பூட்டும் வாழ்க்கையில் நாட்டம் கொள்பவராகவும், சீக்கியர்கள் மட்டும் உண்மையான குருபக்தர்களாகவும் அவருக்குத் தோன்றக்கூடாது. இந்து—முஸ்லீம் இரு பாலர்களிலும்கூட நல்லோரிருப்பதை அவர் உணர

வேண்டும். சிக்கியர்களிலும் கெட்டவர் இருக்கிருர் என்பது அவருடைய அறிவிற்கு எட்டவேண்டும். மற்றும் மற்ற எழுத்தாளர்கள் சில துறைகளை மட்டும் நன்கு அறிந்தவராக இருக்கலாம். ஆனுல் நாவலாசிரியர் சம்பிரதாயம், மதம், மனத் தத்துவம், சரித்திரம், பூகோளம், விஞ்ஞானம், இலக்கியம், சமுதாயத்தைப்பற்றிய சாதாரண பரிசயம், அக்கம் பக்கத்துச் சமூகங்களின் நிலைமை ஆகியவற்றை களங்கமற்ற மனத்துடன் ஆராய்ந்தறிந்திருக்க வேண்டும்.

இந்தப் பொருள்களைப் பற்றிய அறிவை அவசரப்பட்டு அறிந்திருக்கக் கூடாது. ஆதலால்தான் நாவல் என்பது இலக்கியத்தின் மற்ற படைப்புகள் எல்லாவற்றிர்கும் பிறகு தோன்றுகிறது. சமுதாயத்தின் நிலைமைகள் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருக்கவேண்டும்—இது நாவல் வெளிவர மிகவும் அவசியமாகும். எந்த நாட்டில் பெண்களின் நிலைமை இன்னும் கடையாகத்தானிருக்கிறதோ-அந்த நாட்டில் சமுதாய மலர்ச்சி பெற்றிருக்கவே முடியாது. அப்படியிருக்க, அங்கு நாவல் எவ்விதம் வெளிவர இயலும்? சீர்பெற்ற சமுதாயம் என்ருல், அங்கே ஆடவரும் பெண்டிரும், எசமானன்—அடிமை என்ற உறவு முறையிலிருக்கக் கூடாது. அவர்களுடைய பரஸ்பர உரிமைகளில் ஓரளவு சமத்துவம் இருக்கவேண்டும். சில குறைபாடுகளிருக்கலாம், ஆனுல் அவற்றைத் தீர்க்கவும் வழியிருக்கவேண்டும். திறந்த உள்ளத்துடன், மனதில் மாசின்றி நடந்துகொள்ளும் போக்கு சமுதாயம் முழுவதிலும் இருக்க வேண்டும்.

நம் நாட்டில் முதன் முதலில் இம்மாதிரி நிலைமை இருக்கவில்லை. இப்போது மெள்ளமெள்ள வந்துகொண்டிருக்கிறது. நாவலும் மெள்ளமெள்ள இத்துறையில் வர ஆரம்பித்திருக்கிறது. சமுதாயச் சீர்கேட்டின் போது எழுதப்படும் நாவல்களில் சமுதாயத்தைச் சீர்திருத்துவது பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கும். உதாரணமாக வீர்சிங் அவர்கள் எழுதிய "சுபாகின் சீர்திருத்தம்" எனும் நாவலைச் சொல்லலாம். இதில் பெண் மக்களின் வாழ்க்கையின் வருந்தத்தக்க நிலைபற்றி வர்ணிக்கப் பட்டிருக்கிறது. நௌத்சிங்கின் சுபாவத்தை வெறும் லட்சிய

மனிதனைமட்டும் சித்தரிக்காமல் பாரபட்சமற்ற நல்ல சுபாவமுள்ள மனிதனைச் சித்தரித்திருக்கிறார் ஆசிரியர். அந்தப் பாத்திரம் நாவலில் படிக்கும் பாத்திரமாகத் தோன்றாமல் நம்மவரில் ஒருவராகக் காணப்படுகிறார். அவரிடமுள்ள சில சிறந்த குணங்கள் அவர் மற்ற பாத்திரங்களினின்றும் வேறுபட்டவர் என்பதை வெகுநன்றாக எடுத்துக் காண்பிக்கின்றது. ஆகையால் வீர்சிங் அவர்களுடைய மற்ற நாவல்களை விட இதனை உண்மையாகவே சிறந்த நாவல் என்று எல்லா விதத்திலும் நாம் குறிப்பிட்டுக் கூறலாம்.

சகோதரர் நானக்சிங் அவர்களுடைய நாவல்களும் சமூக சீர்திருத்தத்தைக் குறிக்கோளாகக் கொண்டவை. இவர் முதலில் 'இனிக்கும் கனி' (மீட்டாமஹீரா) 'காதல் கீதம்' 'காலச்சக்கரம்' முதலிய நாவல்களை எழுதியவர். இவற்றின் காரணமாக பஞ்சாபி இலக்கிய அன்பர்கள் இவருடைய பெயரை நன்கறிவர். ஆனால் இவர் 'வெண்குருதி' எனும் இந்த நாவலில் சொல்லொணா வெற்றி கண்டுவிட்டார். முதலில் சமுதாயத்தில் ஓரிரு குறையை எடுத்துக்கொண்டு நாவலை எழுதிவந்தார். ஆனால் இப்போது முழுச் சமுதாயத்தையும் இறுகப்பிடித்து உலுக்கியிருக்கிறார். ஒவ்வொரு துறையிலும் பயங்கரமாக அதனைத் தாக்கியிருக்கிறார். நாட்டின் ஒவ்வொரு மூலையிலும் இந்த நாவல் அனுப்பப் பட்டால், பல துறையிலும் சமுதாயம் சீர்திருத்தமடையும் என்று நாம் நம்பலாம். எழுத்தறிவின்மை, தீண்டாமை, போதை தரும் பொருள்களில் நாட்டம், திருமணங்களில் நடக்கும் அமர்க்களங்கள், பெண்டிரின் பேரில் இழைக்கப்படும் கொடுமை, குறிப்பாகக் கைம்பெண்களிடம் சமுதாயம் நடந்து கொள்ளும் அரக்க முறை, குருத்வாரத்தைப்பற்றி அக்கறையின்றி நடந்துகொள்வது, பேச்சிற்கெல்லாம் சண்டை-சச்சரவு, வழக்குகள் முதலிய தீய செயல்களும், சூழ்ச்சிகளும் கதையில் மிக அழகாகக் கோர்த்துப் பிணைக்கப்பட்டிருக்கின்றன. படிப்பவரின் உள்ளத்தை கதை வெகு விரைவில் ஆட்கொண்டுவிடுகிறது. மனதில் சில நிகழ்ச்சிகள் ஆழப் பதிந்துவிடுகின்றன.

இந்த நாவலின் கதாநாயகன், நாயகி, மற்றும் உள்ள பாத்திரங்களை மிகவும் கலை நுட்பத்துடன் ஆசிரியர் சித்தரித்துள்ளார்.

ஒரு கழைக்கூத்தாடி, குரங்காட்டியினால் வளர்க்கப்பட்ட சிறுமி சுந்தரி, குருவினிடம் கல்வி கற்று, பச்சன் சிங்கின் நட்பின் காரணமாக மிகச் சிறந்த பண்புடையவளாக மாறுகிறாள். ஆனால் அந்தக் கூத்தாடிகளுடன் வளர்ந்து வந்த காரணத்தால் அவளுடைய சுபாவம் அடிக்கடி அந்தத் தரத்திற்கு இழுத்துச் செல்லப்படுகிறது. ஆனால் பச்சன்சிங்கின் காரணமாக அவள் சமுதாயத்திற்குத் தொண்டாற்ற விழைகிறாள். ஆனால் அவளுடைய பழைய சம்ஸ்காரங்கள் அவளைச் சமுதாயத்தைப் பழி வாங்கத் தூண்டுகின்றன. சமுதாயம் அவளிடம் கடுமையாக, இரக்கமின்றி நடந்து கொண்டது தான் அதற்குக் காரணம். நல்லவை—தீயவை இரண்டுக்கும் உள்ளத்தில் வந்து ஒரு பேராட்டமாக அமையும்படி ஆசிரியர் சித்தரித்திருக்கிறார். இங்கு அவருடைய கலைத்திறன் பாராட்டத்தக்கது.

புரோகிதர் ராதாகிருஷ்ன் மிகவும் நுண்ணறிவு கொண்டு படைக்கப்பட்ட ஒரு பாத்திரம். நகைச்சுவை நிரம்பிய பாத்திரம் அது. பிறருடைய ஊதியத்தில் வாழும் அந்தணன் செய்யும் செயல்களனைத்திலும் வெளிவேஷம்தானிருக்கிறது. மடி—மடி என்று தீண்டாமையை அனுஷ்டிக்கும் அந்த அந்தணன் உள்ளே உட்கார்ந்து கொண்டு முஸ்லீம் நண்பர்களுடன் ஒரே தட்டில் சாப்பாடு சாப்பிடுகிறான். இப்படிப் பட்ட வெளிவேஷக்காரனைச் சித்திரிக்கப்பட்ட பாத்திரம் அது. கிராமத்தில் நடக்கும் ஒவ்வொரு திருட்டு, புரட்டு, வஞ்சகம் எல்லாவற்றிற்கும் இந்த அந்தணனின் அறிவுரை தான் அடிப்படைக் காரணம். ஆயினும் அவன் தன் மகிமையும் பெருமையும் குன்றாமல் சமுதாயத்தில் வளைய வந்து கொண்டிருக்கிறான்.

தசௌந்தா சிங்கின் உடலமைப்பு, அவனுடைய கோழைத் திறன், அறிவின்மை—இவற்றை ஆசிரியர் மனப்பூர்வமாக ரசித்து ரசித்துச் சித்தரித்திருக்கிறார்.

எல்லோரைக் காட்டிலும் ஆசிரியர் மனம் ஒன்றிச் சித்தரித்திருப்பது கிழவன் ரோடுவைத்தான். உண்மையான அன்பிற்கு அவன் ஓர் எடுத்துக்காட்டு. இப்படிப்பட்ட அன்பு, பெரும்பாலும் அத்தகைய மக்களிடம்தான் அதிகமாகக் காணப்படுகிறது. மக்கள் தம் குழந்தைகளிடம் பாசமாக இருப்பதைக் கண்டால் முதன் முதலில் ரோடுவிற்குச் சிரிப்பு வந்தது. அவன் அவர்களைப் பரிகசித்தான். ஆனால் புதருக்கிடையே ஒரு குழந்தை கிடைத்ததும் அந்தப் பெண் குழந்தையின் பேரில், அவனுக்கு எவ்வளவு பாசம் வளர்ந்து விட்டது! இறக்கும் வரை அவளிடம் அவன் தன் உயிரையே வைத்திருந்தான். நாகரிகமற்ற அவனுடைய போக்கு எவ்விதம் சிறந்த எண்ணங்களாக மாறின, அவன் எப்படி ஒரு பொறுப்புள்ள மனிதனாக மாறிவிட்டான், இந்த அன்பு அவனை எப்படி ஆட்கொண்டுவிட்டது என்பதை ஆசிரியர் மிகவும் அழகாக எடுத்துக் காண்பித்துள்ளார்.

இதே திறமையை ஆசிரியர் மற்ற பாத்திரங்களின் படைப்பிலும் காண்பித்திருக்கிறார். சில காட்சிகளை ஆசிரியர் வர்ணித்திருப்பதும் வெகு அருமையாக அமைந்திருக்கிறது. நாட்டில் எழுத்தாளர்களின் சீர்கெட்ட நிலை, இளங்குழந்தை சுந்தரிக்காக அந்தக் கிழவன் படும்பாடு, அவன் அவளை பாடித் தூங்கச் செய்யும் முறை, பாலாசிங்கின் போக்கிரிக் கூட்டத்தினர் இழைத்த தீங்கு, சத்திரத்தில் ஒரு சிறு விஷயம் பெரிய சண்டையாக மாறிய கோரக் காட்சி, சுந்தரி அன்வரிடன் சென்று, ‘அம்மா, அம்மா’ என்று அன்புடன் அவளை அழைத்துப் பேசி, அவளுடைய வாழ்க்கையை மாற்றி விடுதல்—ஆகிய காட்சிகள் மிகவும் நேர்த்தியாகச் சித்தரிக்கப் பட்டிருக்கின்றன. இத்தகைய காட்சிகளைப் பற்றிய வருணனையை இதுவரையில் நாம் பஞ்சாபி இலக்கியத்தில் படித்ததில்லை.

மொழியின் நடையும், பாணியும் மிகச் சிறந்த கலையழகு நிரம்பியதாக இருக்கிறது. நாவலின் துவக்கம் மிகவும் வியக்கத் தக்க வகையில் அமைந்திருக்கிறது. நகைச்சுவையின் போது ஆசிரியர் மிகவும் அடக்கத்துடனும் நிதானத்துடனும் தம்

திறமையைக் கையாண்டிருக்கிருர். வருத்தம், துக்கம், சோகம் முதலிய உணர்ச்சிகள் நிரம்பிய காட்சிகளைச் சித்தரிக்கும் போது நடையில் ஒரு கம்பீரமான வேகமும், ஆவேசமும் இருப்பதை நாம் உணருகிருேம். ஒரு புறம் அறிஞரின் மொழி, மறுபுறம் பயிர்த்தொழில் புரிவோரின் எளிய நடை இரண்டிலும் ஆசிரியரின் திறமை வியக்கத்தக்க வகையில் அமைந்திருக்கிறது. சிற்சில இடங்களில் உபயோகிக்கப் பட்ட பழமொழிகளும் சொற்ருெடர்களும் ஆசிரியர் எந்தப் பிரதேசத்தைச் சார்ந்தவர் என்று பறைசாற்றித் தெரிவிக் கின்றன.

நானக் சிங் அவர்களுடைய நடையின் அழகே அலாதி யானது. கலையின் மிகச் சிறந்த நுணுக்கமான திறமை கொண்டது அவரது நடை. சங்கேதமாக நகைச்சுவையைக் கையாளும் முறையும் நாடக முறையில் அங்கதத்தைக் கையாளும் விதமும் (Dramatic Irony) இவருடைய நடை யின் சிறப்பு அம்சங்கள். அதனுல் சொல்லும் பாணி உள்ளத் தைக் கடிதே கவர்ந்து விடுகிறது. ராதாகிருஷ்ணைப் போன்ற பண்டிதன் தீண்டாமையை அனுஷ்டிக்கும் பண்டி தன் முஸ்லீமிடம் மட்டுமா, அவர்களுடைய சமையற்காரன் தயாரிக்கும் உணவைக்கூடச் சாப்பிடுகிருன். அவன் எச்சில் செய்த டம்ளரில் மதுபானம் அருந்துகிருன். தன் வீட்டில் சகோதரியாவது மகளாவது விதிவசத்தால் கைம்பெண்ணுகி விட்டால் அவளுக்கு வீட்டில் இடம் கிடையாது. ஆனுல் ஏதாவதொரு முஸ்லிம் அன்பரின் வீட்டில் ஒரு கைம்பெண் விலேமாதாக வந்திருந்தால், அவளுடைய கால்களில் போய் விழுகிருன் இந்தப் பண்டிதன். ஹரிஜன் மக்கள் யாராவது வந்து வணங்கினுல், வீடே அசுத்தமாகிவிடுகிறதாம். ஆனுல் நாய் வந்து மடியில் உட்கார்ந்தால் ஒருவிதத் தயக்கமும் கிடை யாதாம்! பாலாசிங் இதனுல்தான் பச்சன் சிங்கை எதிர்க் கிருன், பிறரையும் சேர்த்துக்கொண்டு எதிர்க்கிருன்—காரணம் தீண்டப்படாத வகுப்பைச் சேர்ந்த ஒரு பெண் (சுந்தரி)ணிடம் நட்புக் கொண்டிருக்கிருன். ஆனுல் அவன் சுந்தரியைத் தன் வீட்டிற்குள் அழைத்து வைத்துக்கொள்ள விரும்பும்போது

அவர் கூறுகிறுன்—'அடே விடப்பா! இந்த வீண் பேச்செல்லாம் எதற்கு? இப்படிப்பட்ட தொல்லையெல்லாம் சீக்கியர்களுக்கு எதற்கு?'

இந்த நாவல் ஒரு சோகக் கதைதான் (Tragedy). இதைப் படித்ததும் மனதில் வருத்தம் ஆழப் பதிந்து விடுகிறது. நம்மை மிகவும் அதிகமாகக் கவரவும் செய்கிறது. டிக்கன்ஸ் அவர்களுடைய நாவல்கள் சாதித்த சாதனையை பார்லிமென்டின் சட்டங்கள்கூடச் சாதிக்கவில்லை என்று கூறப்படுகிறது. இந்த நாவல் நம் சமுதாயத்து வெண் குருதியை எவ்வளவு சுத்தம் செய்கிறது, அதற்குள்ள நல்ல இரத்தத்தை எவ்வளவு பாய்ச்சுகிறது என்று நாம் பார்க்கலாம்.

18, ஜூலை 1932 —(பிரின்ஸிபல்) தேஜாசிங்.

# முற்றுப் பெருத பகுதி

'சிப்பாய்! இந்தப் போக்கிரியை நிறுத்திவை,' என்று கூறி விட்டு டிக்கட் பரிசோதகர் மற்ற எல்லோருடைய டிக்கட்டுகளை யும் பரிசோதிக்க ஆரம்பித்தார். மாலை ஏழு மணியடித்து விட்டது. மக்கள் டிக்கட்டுகளைக் காண்பித்து விட்டு வாயிலி லிருந்து வெளியே சென்று கொண்டிருந்தனர். காவலாள் பயணியின் தோளைப் பிடித்து வேகமாக ஒரு உலுக்கு உலுக்கி விட்டு, வாயிலின் ஒரு ஓரத்தில் நிறுத்தி வைத்தான். அப் போது பயணியின் அழுக்கடைந்த நீண்ட கோட்டின் பையி லிருந்து கசங்கிய காகிதங்கள் கொண்ட ஒரு கட்டு கீழே விழுந்தது. உடனே அதை அவன் எடுத்துக் கையில் வைத்துக் கொண்டான்.

இளைஞனை அந்தப் பயணியிடம் வேறு ஒரு சாமானும் இருக்கவில்லை. பார்ப்பதற்கு அவன் ஒரு சீக்கியனைப் போலிருந்தான். சுமார் பதினெட்டு வயதிருக்கும். மீசை இன்னும் முளைத்தபாடில்லை. அவனுடைய சட்டை கழுத் தருகே கொஞ்சம் கிழிந்திருந்தது. அவனுடைய கருத்த நீளமான கோட்டின் நிலையும் அதே தான். கோட்டில் பல இடங்களில் ஒட்டுக்கள் போடப்பட்டிருந்தன. பருமனை வெள்ளை நூலால் பலமுறை தைக்கப்பட்டிருப்பது நன்ருகத் தெரிந்தது. பல இடங்களில் தையல் போட்ட இடங்களில் துளைகள் காணப்பட்டன. கோட்டில் பித்தானில்லை. குளிரி லிருந்து பாதுகாத்துக் கொள்ளப் பித்தான் இருக்கும் இடங் களில் பருமனை வெள்ளை நூலால் தைக்கப்பட்டிருந்தது. கோட்டின் ஒரு பை முழுதும் கிழிந்திருந்தது. ஆனல் மற்ருென்று சரியாக இருந்தது. பயணியின் வாளிப்பான சிவந்த உடலின் ஒவ்வொரு அங்கமும் ஏழ்மை, நலிவு மற்றும் அவமானம் இவற்றை எடுத்துக் காண்பித்தது.

சிப்பாயின் கை பட்டவுடனேயே உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை பயணி நடுங்கி விட்டான். அவனெதிரே

நூற்றுக்கணக்கான பயணிகள் தத்தம் டிக்கட்டுகளைக் காண்பித்து விட்டு வெளியே சென்றுவிட்டனர். இவனைக் கண்டு முறைப்பது போல் டிக்கட் பரிசோதகர் வேறு யாரையும் கண்டு முறைக்கவில்லை. மக்களின் பார்வையிலிருந்து தப்ப அவன் வாயிலிலிருந்து இரண்டு அடி தள்ளி முதுகைத் திருப்பிக் கொண்டு நின்றுவிட்டான். அவன் தப்பி ஓட முயல்கிறான் என்று எண்ணி, சிப்பாய் அவனைக் கண்களால் மிரட்டினான்—' என்னய்யா ! எங்கே போகிறாப் போலே ! உன்னிடத்திலே நின்றுகொள். இல்லாவிட்டால் தோலை உரித்து விடுவேன் !'

பயணி வாய்திறக்காமல் மறுபடியும் அதே இடத்தில் வந்து நின்று கொண்டான். சுமார் முக்கால் மணி நேரமாகியிருக்கும். எல்லாப் பயணிகளும் சென்ற பிறகு டிக்கட் பரிசோதகர் அவனிடம் வந்து கடுமையான குரலில் பேசினார்—' எடு இப்படி ஒரு ரூபாய் பத்தணா !' டிக்கட் பரிசோதகர் கூறுவதற்கு முன்பே பயணி கோட்டின் பையில் கையை விட்டு எதையோ தேடிக் கொண்டிருந்தான். பருமனான விளிம்புள்ள ஒரு செப்பு நாணயம் அவனிடமிருந்தது. எதிரே உப்புத் தண்ணீர் நிறைந்த ஒரு கிண்ணம் இருக்க, தாகத்தால் உயிரே போகும் நிலையில் இருக்கும் ஒரு மனிதனைப் போன்றிருந்தான் அவன். அவனுடைய பையில் ஒரு செல்லாத நாலணா நாணயம் தானிருந்தது.

பயணி மிகவும் மென்மையான குரலில் நடு நடுங்கியபடி கூறினான்—' சாமி ! என் பேரில் கருணை காட்டுங்கள். நான் மிகவும் ஏழை. எவ்வளவோ முயன்று பார்த்தேன். அப்படியிருந்தும் டிக்கட்டுக்குப் பணம் சேர்க்க முடியவில்லை. அதனால் தான் டிக்கட் இல்லாமல் நான் பயணம் செய்ய நேர்ந்தது.'

கேலியும் வெறுப்பும் கலந்த சிரிப்புடன் டிக்கட் பரிசோதகர் கூறினார்—' சரிதான் ! உங்கப்பனுடைய வண்டியா, டிக்கட் வாங்காமல் பயணம் செய்ய ? இப்படிப் பயணம் செய்யும் போது சிறைச்சாலையின் ரொட்டி நினைவுக்கு வரவில்லையா ?'

அருகே நின்றுகொண்டிருந்த சிப்பாய் கூறினான்—'சாமி! இவனிடம் டிக்கட்டுக்குக் காசு இல்லை என்று நினைக்கிறீர்கள்? இவனைப் பரிசோதித்துப் பார்த்தால், இவன் உண்மையில் ஏழையா, இல்லை நடிக்கிறானா என்பது புரிந்துவிடும்!'

சிப்பாயின் வார்த்தைகளை ஆமோதித்தபடி டிக்கட் பரிசோதகர் கூறினார்—'எனக்குத் தெரியாதா என்ன? இந்தப் பசங்களுக்கு இதுவே தொழிலாகிவிட்டது. டிக்கட்டில்லாமல் பயணம். எவனாவது ஏமாளி அகப்பட்டால் அவனுடைய சாமானைச் சுருட்டுதல்'—இவ்வாறு பேசியபடியே பயணியைப் பார்த்துக் கேட்டார்—'காசு தருகிறாயா, இல்லை, கேசு எழுதட்டுமா?'

பயந்த பயணியின் ரத்தம் சுண்டிப்போய்விட்டது. முகத்தில் ஒரு நிறம் மறைந்து மற்றோர் நிறம் காணப்பட்டது. இரண்டு—மூன்று முறைகள் அவனுடைய வாய் திறந்து திறந்து தடைப்பட்டுவிட்டது. முடிவில் அவன் தைரியத்துடன் கூறினான்—'சாமி, நான் திருட்டு—புரட்டு செய்பவனல்ல; ஒரு ஏழை. அவ்வளவுதான். டிக்கட் இல்லாமல் நான் பயணம் செய்தது தவறு தானுங்க. நீங்கள் எங்கு வேண்டுமானாலும் அழைத்துச் செல்லுங்கள். ஆனால் உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன். இம்மாதிரி வார்த்தைகள் பேசி என் நெஞ்சில் ஈட்டிகளைப் பாய்ச்சாதீர்கள்.' பேசப் பேசப் பயணியின் கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் உதிர்ந்தன.

டிக்கட் இல்லாமல் பயணம் செய்வோரின் இத்தகைய, இதைவிட அதிகமான, வார்த்தைகளைக் கேட்டுக் கேட்டுப் பரிசோதகரின் காதுகள் பழக்கப்பட்டிருந்தன. ஆகையால் அவர் இந்தப் பயணியின் வார்த்தைகளை மிகவும் அலட்சியமாகக் கேட்டார். ஆனால் அவனுடைய கண்களைப் பார்த்து அவர் பிரமித்து நின்றுவிட்டார். பயணியின் பெரிய கண்களிலிருந்து இரத்தம் சொட்டிக்கொண்டிருந்தது. சினத்தாலும் வெறுப்பாலும் அவனுடைய உதடுகள் துடித்துக்கொண்டிருந்தன. அவனுடைய சிவந்த முகத்தில் செவ்வரி ஓடிக்கொண்டிருந்தது.

சிப்பாய் இன்னும் அதிகமான கல்நெஞ்சத்தவன் போலும்! அவன் பயணியைச் சற்றும் கவனிக்கவேயில்லை. ஆனால் பயணி கூறிய நான்கு வார்த்தைகள் டிக்கட் பரிசோதகரைத் துடிதுடிக்க வைத்து விட்டன. மனம் நலிந்த இந்தப் பயணியை நாம் ஏன் துன்புறுத்தினோம் என்று அவர் தன்னைத் தானே நொந்துகொண்டார். இமைகொட்டாமல் அவர் பயணியின் கண்களையே வெகுநேரம் வரை பார்த்துக் கொண்டிருந்தார். அந்தக் கண்கள் அவருடைய மனதை விசித்திரமான முறையில் ஆட்கொள்ள ஆரம்பித்தன.

கையில் வைத்திருந்த காகிதக் கட்டை மறைத்து வைத்துக் கொள்வதும் பையில் போட்டுக்கொள்வதுமாக இருந்தான் பயணி. மறுபடியும் கீழே விழுந்துவிடப் போகிறதே என்று அஞ்சி அதைக் கையில் எடுத்து இறுகப் பிடித்துக் கொண்டான்.

தன் வேலையை வேறொரு பரிசோதகருக்கு ஒப்படைத்து விட்டு 'என்னுடன் வா' என்று கூறி, பயணியைத் தன்னுடன் ஸ்டேஷனுக்கு வெளியே அழைத்துச் சென்றார் பரிசோதகர். அவருடைய ட்யூடி முடிந்திருக்கும் என்று தோன்றிற்று. பயணியும் அவரைத் தொடர்ந்து சென்றான்.

டிக்கட் பரிசோதகர் தன்னைப் போலீசாரிடமோ ஸ்டேஷன் மாஸ்டரிடமோ ஒப்படைக்கப் போகிறார் என்ற கவலை அவனுக்கு இனியிருக்கவில்லை. வெளியே சென்ற பரிசோதகர் புல் தரையில் போய் உட்கார்ந்ததைக் கண்டு பயணி வியப் படைந்தான். அவர் பயணியையும் உட்காரும்படி சமிக்ஞை செய்தார்.

நன்றாக ஒருமுறை மறுபடியும் பயணியைப் பார்த்துவிட்டுப் பரிசோதகர் கேட்டார்—'எங்கிருந்து வருகிறாய்?'

'சாமி, லாஹோரிலிருந்து வருகிறேன்.'

'வீடு எங்கே இருக்கிறது?'

'இங்கேதான்! அமிருத்சரில்.'

'வியப்பாக இருக்கிறது. வீடு அமிருத்சரில் இருக்கிறது. சட்டைப்பையில் பத்தணாக் காசுகூட இல்லை! என்ன வேலை செய்கிறாய்?'

இதற்குப் பதில் சொல்வதற்குள் பயணி வேதனைப்பட்டு விட்டான். சற்று யோசித்து—'ஒன்றுமில்லைங்க!' என்று பதிலளித்தான்.

பரிசோதகர் வியந்து கேட்டார்—'ஒன்றுமில்லையா? பிறகு சாப்பாட்டிற்கு வழி?' பரிசோதகர் மறுபடியும் பயணியைச் சந்தேகத்துடன் பார்த்தார். ஆனால் அங்கு சந்தேகத்திற்கு இடமே இருக்கவில்லை. பயணியின் கண்களில் உள்ளத்தை கவர்ந்திழுக்கும் ஒரு சக்தி இருந்தது. அதிகாரியை அது ஈர்த்திழுத்தது. அவருடைய உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பி அது போதையூட்டியது.

பயணி கூறினான்—'சாமி! எப்படிச் சாப்பிடுகிறேன் என்று என்னத்தைச் சொல்வேன்?' பிறகு சற்றுத் தயங்கியபடி ஆரம்பித்தான்—'உண்மையில் மரணம் மிகவும் கொடியதுதான். மனிதனுக்குத்தான் மரணத்திடம் எவ்வளவு நடுக்கம்! கடவுள் மனிதனை, குறிப்பாக என் போன்றவனை மானம் வெட்கம் இல்லாத போக்கிரியாக ஆக்கியிருக்கிறார். எல்லாமே அழிந்த பிறகும், அவமானத்திற்கும், கொடுமைக்கும் ஆளானபின்பும் நான் உயிர்வாழ ஆசைப்படுகிறேன். சீ! என்ன மானங் கெட்ட பிழைப்பு, போங்கள்!' பயணியின் தொண்டையைத் துக்கம் வந்தடைத்துக்கொண்டது. இரண்டாவது முறையாகப் பயணி கூறிய ஓரிரு வார்த்தைகள் டிக்கட் பரிசோதனை செய்யும் அதிகாரியின் உள்ளத்தையே மாற்றிவிடும்போலிருந்தன. அவர் பயணிக்கு ஆறுதலளித்தபடி கூறினார்—'சர்தார்! உள்ளத்தெம்பை இழக்காதே! நீ ஏதோ பெரும் இன்னலுக்கு ஆளாகியிருக்கிறாய் போல் தோன்றுகிறது. என்றால் இயன்ற வரை நான் உனக்கு உதவிசெய்ய முயற்சிக்கிறேன்.'

பயணி ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டுவிட்டான். அதிகாரியின் பேச்சைக் கவனியாமலேயே அவன் நீண்ட மூச்செறிந்தபடி கூறினான்—'ஐயா! நீங்கள் எனக்காகச் செய்தது சரியில்லை. என்னைப் போலீசாரிடம் ஒப்படைத்திருக்க வேண்டும். மாலை நேரத்திற்குள் என்னைச் சிறைக்கு அனுப்பியிருப்பார்கள். நான் இதற்குத் தகுந்தவனல்ல. நீங்கள் செய்தது சரியில்லை.'

அவன் பேசிய பேச்சின் பொருளைப் புரிந்துகொள்வதற்காக அதிகாரி மறுபடியும் அவனுடைய முகத்தை உற்று நோக்கினார். பயணிக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதோ, என்றுகூட ஒரு கணம் அவருக்கு எண்ணத் தோன்றிற்று. பிறகு மறுபடியும் அவனைக் கேட்டார்—'நான் இதற்குத் தகுந்தவனல்ல என்கிறாயே, அப்படியென்றால்?'

பயணி கையிலிருந்த காகிதக் கட்டை ஒருமுறை பார்த்தபடி கூறினான்—'என் நாவலின் முற்றுப்பெறாத பகுதி முடிந்திருக்கும்.'

'நீ சொல்வது புரியவில்லை. விளக்கிக் கூறு. எனக்குப் புரியவில்லை' என்று கேட்டார் அதிகாரி.

பயணி கூறினான்—ஐயா, நான் இந்த நகரில்தான் ஒரு சிறு அறையில் இருக்கிறேன். அதற்கு வாடகை மாதம் எட்டணாதான். ஆனால் எனக்கு அது எட்டு ரூபாய்க்குச் சமம். நான் ஓர் எளிய எழுத்தாளன். எனக்கு வேறு தொழிலும் கிடையாது. சில தினங்களாக இலக்கிய கர்த்தாவாக வேண்டும் என்று ஆசை வந்துவிட்டது.

இதற்கு முன்னமேயே நான் சில நூல்களைப் படைத்துப் பிரசுரிப்பாளர்களிடம் கொடுத்திருக்கிறேன். அவை வெளிவந்தும் உள்ளன. இதைத் தவிர பல பத்திரிகைகளில் என் சிறுகதைகள் வெளிவந்திருக்கின்றன. மக்கள் அவற்றைப் பெரிதும் பாராட்டியுள்ளனர். ஆயினும் வெறும் பாராட்டுதலை வைத்துக்கொண்டு நான் என்ன செய்வேன்? இதுவரை எவரும் என் கையில் நான்கு அணுக்களுக்கு மேற்பட்டு வைத்ததே கிடையாது. இந்தத் தொகை என் தேவைகளுக்கு மிகவும் குறைவானது.

சற்று நிறுத்திவிட்டுப் பயணி மறுபடியும் கூறினான்—'ஐயா, சில தினங்களுக்கு முன்பு நான் இதை எழுதிக்கொண்டிருந்தேன். (கையிலிருந்த காகிதக் கட்டைக் காண்பித்தபடி) நான் இன்று போலவே நலிந்த நிலையில் தானிருந்தேன். கையில் செல்லாத காசுகூட இருக்கவில்லை. கடன் கொடுப்பவரும் எவரும் கிடையாது. முந்திய தினத்தில் நடந்த சம்பவம் இது. என்னிடமிருந்த காகிதங்கள்

தீர்ந்துவிட்டன. நான் தவித்தப்போனேன். என் நாவலின் இறுதி அத்தியாயம்தான் முடிக்கவேண்டியிருந்தது. நான் பசியால் மடிவேன், உடையின்றி நலிவேன். ஆனால் காகிதங் களின்றி நான் எப்படி உயிர் வாழ்வேன்? அன்று முழுவதும் அலைந்து திரிந்து பார்த்தேன். யாரும் கடனாக ஒரு தாலணைத் தரவில்லை. காகிதமும் கொடுக்கவில்லை.

'நான் மிகவும் அமைதி குலைந்துபோனேன். இறந்து விடலாமா என்று கூட அப்போது நினைத்தேன். ஆனால் என் புத்தகம் முற்றுப்பெறாமல் நின்றுவிடுமே என்றோ, அல்லது வேறு எந்த மோகத்தாலோ, இந்தத் தடவை கூட என்னால் இறக்க முடியவில்லை.

'கடைத்தெருவிற்குச் சென்றேன். அங்குக் குப்பையில் அழுக்கடைந்து கிடந்த சில காகிதங்களைக் கண்டேன். பள்ளி மாணவன் எவனாவது வேண்டாத காகிதங்களை எடுத்து எறிந்திருப்பான். அவற்றை எடுத்துப் பார்த்தேன். எல்லாமே நனைந்திருந்தன. ஒருபக்கம் பள்ளிக்கூடப் பாடம் எழுதப்பட்டிருந்தது. மறுபுறம் ஒன்றும் எழுதப்படவில்லை. ஆனால் மை ஊறியிருந்ததால் அந்தப் பக்கங்களும் எழுதப் பட்டவைபோல் காணப்பட்டன.

'எல்லாக் காகிதங்களையும் நான் பொறுக்கி எடுத்துக் கொண்டேன். என் அறைக்குச் சென்று நெருப்பில் காண் பித்து எல்லாவற்றையும் உலர்த்தினேன். நான் அடையக் கொடுத்து வைத்திருந்தது அவ்வளவுதான்.

'அந்தக் காகிதங்களில் நான் இடைவிடாமல் ஆறு அல்லது ஏழு மணி நேரம் எழுதிக்கொண்டிருந்தேன். மறுநாள் நான் எழுதுவதற்குக் காகிதம் இருக்கவில்லை. அப்போது என் நாவல் கிட்டத்தட்ட முடிந்துவிட்டது என்றே சொல்லலாம். கடைசிப் பகுதியும் பாதிக்குமேல் எழுதியாகிவிட்டது. நான் இதை விற்பதற்காகத் துடித்துக்கொண்டிருந்தேன். இதை விற்று நான் நிரம்பப் பணம்பெற்றால், என் கடமையைப் பூர்த்தி செய்து விடுவேன். இதுதான் விரும்பினேன். அந்தக் கடமை என்ன என்று நான் கூறமாட்டேன். அதைச் சொல்ல என் உள்ளத்தில் அவ்வளவு தெம்பு கிடையாது.

'இந்த நூல் என் மற்றப் படைப்புக்களை விடச் சிறந்தது என்பது என் கருத்து. நான் இதை லாஹோரிலுள்ள மிகச் சிறந்த பதிப்பாளருக்குக் கொடுப்பேன். ஆனால் கையில் காசில்லாமல் லாஹோர் செல்வதுகூட கல்கத்தா செல்வது போலத்தான்.

'நேற்று நான் எப்படியோ ஒரு ரூபாய்க்கு ஏற்பாடு செய்திருந்தேன். சூதாட்டம் ஆடுவோருக்குப் பணம் கொடுத்துதவும் சேட்தான் எனக்கு அந்த ரூபாயைக் கொடுத்தவன். இரண்டு ரூபாய்க்கு ரசீது வாங்கிக்கொண்டு அவன் ஒரு ரூபாய் கொடுத்தான்.

'நான் இன்று காலையிலிருந்து பசித்திருந்தேன் முற்றுப் பெறாத இந்த நாவலை எழுதிக்கொண்டு நான் லாஹோருக்குக் கிளம்பினேன். யாரிடமாவது இதை விலை பேசிவிட்டால், அவரிடமிருந்தே கொஞ்சம் காகிதமும் வாங்கி முற்றுப்பெறாத பகுதியை, அருகிலுள்ள தோட்டத்தில் உட்கார்ந்துகொண்டு முடித்துவிடலாம் என்று நினைத்தேன்.

'ரயில் டிக்கட்டை வாங்கிக்கொண்டு நான் லாஹோருக்குப் புறப்பட்டேன். பல கடைக்காரர்களைப் பார்த்துப் பேசினேன். எனது நாவலை யாரிடம் காண்பித்தாலும் முதலில் அவருக்கு இதன் கதையைக் கூறிவிட்டால், அது அவருடைய உள்ளத்தைக் கவர்ந்துவிடும், எனக்கும் நிரம்பப் பணம் கிடைக்கும் என்று நினைத்தேன். ஆனால் என் காகிதக்கட்டைப் பார்த்தவுடனேயே அவர்கள் அஞ்சினார்கள். பதினைந்து ரூபாய்க்கு மேல் தர மறுத்துவிட்டார்கள். இந்தத் தொகையைக்கொண்டு என் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்வது முயலாத காரியம்.

'இவ்விதம் நாள் முழுதும் நான் சுற்றித் திரிந்துகொண்டிருந்தேன். எங்குமே அதற்கு நல்ல விலை கிட்டவில்லை. அப்போது அம்ருத்சர் திரும்பிச் சென்றுவிடலாமா என்று தோன்றியது. பசி உயிரையே மாய்த்துவிடும் போலிருந்தது. அப்போது என்னிடம் ஒரு நான்கணா நாணயம் இருந்தது. ஒரு கடைக்காரனிடம் சென்று நான்கணாவிற்குச் சாப்பாடு சாப்பிட்டேன். காசைக் கடைக்காரனிடம் கொடுத்தபோது

எனக்கு பகீரென்றது. காசு செல்லாதது. கடைக்காரன் நாணயத்தை என் முகத்தின்மீது வீசி எறிந்தான். அவனுடைய கடையில் மற்றும் பலர் சாப்பிட்டுக்கொண்டிருந்தனர். என் நிலை கண்டு மனமிரங்குவதற்குப் பதிலாக அவர்கள் என்னைப் பார்த்துப் பரிகசித்தனர். என்னைப் பலவிதமாகக் கேலியும் செய்தனர்.

'கடைக்காரன் என்னை நான்கைந்து கடுஞ்சொற்களால் திட்டினன். என்னிடம் வேறு ஒன்றுமே கிடையாது. என் சட்டைப்பையில் ஒரு பட்டுக் கைக்குட்டை இருந்தது. அதை நான் எவ்வளவு விலையுயர்ந்ததாகக் கருதிவந்தேன் தெரியுமா? இதைப்பற்றி நான் உங்களிடம் எப்படிச் சொல்வேன்? (பேசிக்கொண்டேயிருந்த பயணியின் தொண்டையைத் துக்கம் அடைத்துக் கொண்டது.) என் வாழ்வின் முற்றும் அழிந்து போன சொத்தின் பொருள் அது. மனதை எப்படியோ தேற்றிக்கொண்டு அந்தக் கைக்குட்டையைக் கடைக்காரனிடம் கொடுத்துவிட்டேன். கொடுக்கும்போது என் கண் முன்னே ஓர் எழிலுருவம் தோன்றியது கண்களில் கண்ணீர் நிரம்ப ''கல்நெஞ்சம் படைத்தவனே! உன் இரத்தப்கூட வெண்மையாகிவிட்டதா?'' என்று அந்த உருவம் என்னைக் கேட்பது போல் தோன்றிற்று.

'நான் இரு கைகளாலும் நெஞ்சைப் பிடித்துக்கொண்டு நேராக ஸ்டேஷன் வந்து சேர்ந்தேன். டிக்கட் வாங்காமலேயே வண்டியில் உட்கார்ந்து கொண்டுவிட்டேன். வண்டியில் உட்கார்ந்தபடியே செய்தித்தாளின் பழைய ஏடுகளில் என் நாவலின் எஞ்சிய பகுதியை எழுத ஆரம்பித்தேன். ஆனல் அதை இன்னும் முடிக்க இயலவில்லை. பிறகு உங்கள் பிடியில் அகப்பட்டுக்கொண்டேன்.

'அதனல்தான், என்னைச் சிறைச்சாலைக்கு அனுப்பியிருந்தால் நாவலை அழகாக முடித்திருப்பேன் என்று கூறினேன். காரணம் நாவலின் தலைப்பு ''வெண் குருதி.'' இந்த நாவலில் குறிப்பிடப்பட்ட பாத்திரங்களில் ஒரிருவரைத் தவிர மற்ற எல்லோருடைய இரத்தமும் வெண்மையாகி விட்டதாகக் காண்பிக்கிறது. நீங்கள் என் நாவலின் கடைசிப் பாத்திரம்.

உங்கள் இரத்தமும் வெண்மையாக இருந்தால் இது ஒரு விசித்திரமான 'ட்ரேஜடி'யாகிவிடும். இறுதிப் பகுதியில் சேர்க்க வேண்டியதைச் சேர்த்துவிட்டு, இனி, புதிய கதைக்கு வேறு கருப்பொருளைத் தேடிப் பிடித்தாக வேண்டும்!'

பயணியின் நாவலுடைய இறுதிப்பகுதியே இவ்வளவு உருக்கமாக இருக்கிறது என்றால், அதன் மற்ற பகுதியைப் பற்றிக் கேட்கவா வேண்டும்? அவனைப் பற்றிய கதையைக் கேட்டு அதிகாரியின் உள்ளம் உணர்ச்சி வசப்பட்டது. அவர் மிகுந்த சிரத்தை, அனுதாபம் மற்றும் அன்புடன் மறுபடியும் ஒரு தடவை அந்தப் பயணியை தலையிலிருந்து கால் வரை பார்த்தார். அவனுடைய கையை முத்தமிட்டுவிட்டு மிகுந்த சிரத்தையுடன் கூறினார்.

'சர்தார்ஜி! என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் இவ்வளவு உயர்ந்த மனிதர் என்று எனக்குத் தெரியாது. வாருங்கள், இன்றிரவை இந்த ஏழையின் குடிசையில் கழிக்கலாம். உங்களுக்கு ஆட்சேபணையில்லை என்றால் தயது செய்து இந்த நாவலையும் எனக்குப் படித்துக் காண்பியுங்கள். எனக்கும் நாவல் படிப்பதில் மிகுந்த ஆர்வமுண்டு. இதை வெளியிட என்னால் இயன்றால் நானே முயன்று பார்க்கிறேன். எனக்கு இங்கு அநேக பதிப்பாளர்களைத் தெரியும்!'

பயணி ஏதும் பதில் கூறாமல் எழுந்து அதிகாரியைப் பின் தொடர்ந்தான். அதற்குப் பிறகு அதிகாரி அவனை ஒரு கேள்வியும் கேட்கவில்லை.

சிறிது நேரத்தில் பயணி அதிகாரியின் வீட்டையடைந்தான்.

சென்றவுடனேயே அதிகாரி தன் பணியாளை அழைத்து அவனுடைய சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்தார். ஏனென்றால் வீட்டில் அதிகாரி மட்டும்தான் இருந்தார். சாப்பிட்ட பிறகு இருவரும் அறைக்குள் சென்றனர். அதிகாரி ஒரு படுக்கையின் மீது உட்காரும்படி சமிக்ஞை செய்துவிட்டுக் கூறினார்—'சர்தார்ஜி, உட்காருங்கள். முதலில் உங்களுடைய இந்த நாவலைப் படித்துக் காண்பியுங்கள்.'

இரவு மணி ஒன்பதடித்து விட்டது. பயணி காகிதக் கட்டைக் கட்டியிருந்த ஒரு கந்தல் துணியின் முடிச்சை

அவிழ்த்தான். அவிழ்த்தவுடனேயே அதிலிருந்து சிறிதும் பெரிதுமாகப் பல காகிதங்கள் சிதறி விழுந்தன. சிறிது நேரம் வரை அவற்றைச் சீர்படுத்திக் கொண்டிருந்தான். பக்கங்களை எண்ணிக்கைப்படி சரிப்படுத்திவிட்டு முதலில் தலைப்பு எழுதப்பட்டிருந்த பக்கத்தை முக்காலியின் மீது வைத்தான். தலைப்பின் மீது அதிகாரியின் பார்வை விழுந்த கணமே பரபரப்புடன் நாற்காலியிலிருந்து எழுந்து நின்று கொண்டார். தன் அலுவலக அதிகாரி திடீரென்று எதிரே வந்துவிட்டால் வாரிச் சுருட்டிக் கொண்டு எழுவது போல் எழுந்து விட்டார். முதல் பக்கத்தில் அப்படி ஒன்றும் அதிகமாக எழுதப்படவில்லை. இதுதான் எழுதியிருந்தது.

"வெண்குருதி"

எழுதியவர்

"குப்தேச்வர்"

அதிகாரி ஷாம்தாஸின் அணு அணுவில் இடம் பெற்றிருந்த அதே பெயர்தான் 'குப்தேச்வர்' என்பது. அவர் குப்தேசவரின் புத்தகங்களை எவ்வளவு சிரத்தையுடனும், ஆசையுடனும் ஆர்வத்துடனும் படிப்பது வழக்கம்! அவற்றைப் படிப்பதால் அவருக்கு எத்தகைய நிம்மதியும், மன நிறைவும் கிட்டும்! அவர் குப்தேச்வருடைய புத்தகங்களை அறநூல்களைப் பாதுகாப்பது போல் ஒரு சிறு துணியில் கட்டி வைத்திருப்பார்.

'இவர் அதே குப்தேச்வர்தானா? அவருடைய ஒவ்வொரு வாக்கியமும் எனக்கு இறைவனுடைய வாக்கிற்குச் சமமாகத் தோன்றுமே! அந்தப் பெருந்தகையையா நான் தரிசிக்கின்றேன்! இத்தகைய மகானின் நிலைமையா இப்படி இருக்கிறது?' இவ்வாறு பல கேள்விகள் அவருடைய உள்ளத்தினின்றும் எழுந்தன.

அவர் நாற்காலியிலிருந்து எழுந்து, தரையில் உட்கார்ந்து கொண்டார். தன் இரு கரங்களாலும் பயணிகளின் கால்களைத் தொட்டபடி கூறினார்.

'நீங்களா குப்தேச்வர்? என் உள்ளத்தின் அணு அணுவில் உறைந்திருக்கும் அந்த மகாத்மா நீங்கள்தானா?'

இப்படிக் கூறிக்கொண்டே அவர் விரைந்து சென்று ஒரு கைக்குட்டையில் கட்டப்பட்டிருந்த புத்தகக் கட்டை அலமாரியிலிருந்து எடுத்துவந்தார். அதை அவிழ்த்தபடி கேட்டார்.

'இவையெல்லாம் உங்கள் படைப்புக்கள்தானா?' அந்தக் கட்டில் குப்தேச்வர் இன்றுவரை எழுதியிருந்த எல்லா நூல்களும் இருந்தன. பத்திரிகைகளில் வெளிவந்திருந்த அவருடைய சில கட்டுரைகளின் பிரதிகள் இருந்தன.

பொதுவாக எல்லா ஆசிரியர்களுடைய உள்ளத்தைக் கவருவதுபோல் இந்தப் புகழுரை பயணியின் உள்ளத்தை ஒரு சிறிதும் கவரவில்லை. முன்புபோலவே உணர்ச்சிவசப்படாமல் தலையசைத்தபடி பேசினான்—'ஆமாம், இதெல்லாம் அந்தப் பரம்பொருளின் அருள்தான்.'

ஷாம்தாஸ் தன் பக்திசிரத்தை அவ்வளவையும் அந்த ஆசிரியரின் காலடியில் அர்ப்பணிக்க விழைந்தார். நா தழுதழுத்தபடி அவர் கூறினார்—'என் அன்புக்குகந்த குப்தேச்வர் அவர்களே! நான் உண்மையில் பாக்கியசாலிதான். யாரை எப்போதும் எண்ணி ஜபம்செய்தபடி இருந்தேனோ, அவரை இன்று நேரில் காணும் வாய்ப்பைப் பெற்றேன். எனக்கு விடுதலை அளித்த பெருந்தகையே, நீங்கள் எனக்கு எத்தகைய பேருதவி யளித்திருக்கிறீர்கள் தெரியுமா? இன்றிலிருந்து சில ஆண்டுகளுக்கு முன்பு என் வாழ்க்கை நாயினும் கடையாக இருந்தது. எல்லாக் குற்றங்களும் குறைகளும் என்னிடம் இருந்தன. அவற்றை அடைந்த நான் மிகவும் பெருமிதமடைந்து நிமிர்ந்துநிற்கவும் செய்தேன். ஆனால் உங்கள் நூல்களைப் படிக்க ஆரம்பித்ததிலிருந்து என் வாழ்க்கை தானாகவே மாற ஆரம்பித்துவிட்டது. நான் உங்கள் படைப்புக்களனைத்தையும் தேடிக் கண்டுபிடித்தேன். உங்கள் கட்டுரைகளும், கதைகளும் பிரசுரமாகும் பத்திரிகைகளை வாங்க ஆரம்பித்தேன். இந்நூல்களில் எத்தகைய ஆன்மீகக் கருத்துக்களிருக்கின்றன. எத்தகைய வேதனை, எவ்வளவு சிறந்த உபதேசங்கள் காணப்பட்டன. அவை என் வாழ்வை எவ்வளவு விரைவில் மாற்றியமைத்துவிட்டன என்று என்னால் கூறவேமுடியாது. உங்களைத் தரிசிக்கத் துடியாய்த் துடித்தபடி

நான் எத்தனை தடவைகள் அலைந்திருக்கிறேன் தெரியுமா? ஆனால் நீங்கள் இருக்கும் இடத்தை என்னால் கண்டுபிடிக்கவே இயலவில்லை. சில நாட்களுக்குள்ளேயே புகழ் ஏணியை எட்டிய இந்த அறியமுடியாத எழுத்தாளரை யாரும் பார்த்த தில்லை. இவ்வளவு விரைவில் நீங்கள் புகழ்பெற்ற எழுத்தாள ராகிவிட்டீர்கள்!

'குப்தேச்வர் சாஹப்! இதே இடத்தில் சிலநாட்களுக்கு முன்பு குடிகாரர்கள், சூதாட்டம் ஆடுபவர்கள், மற்றும் பல கெட்ட நடத்தையுள்ளவர்கள் கூடியிருக்கிறார்கள். நான் அவர்கள் எல்லோருக்கும் தலைவன். அது மட்டுமா? அந்தத் தீய செயல்களையும் பாதகச் செயல்களையும் பற்றி இன்று எண்ணிப் பார்த்தால் கூட...'

அவருடைய நிலைமையைப்பற்றித் தெரிந்துகொண்டதும் குப்தேச்வர் மனம் இரங்கிற்று. இத்தகைய மாபாதகச் செயல்கள் புரிந்தவர் தன்னைத்தான் இவ்வளவு விரைவில் சீர்திருத்திக்கொண்டு விட்டாரே! ஷாம்தாஸைக் கண்டு அவன் உள்ளத்தில் அன்பும் இரக்கமும் பொங்கின. அன்புடன் அவருடைய தோளைப் பிடித்து நாற்காலியில் உட்கார்த்தியபடி குப்தேச்வர் கூறினான்—

'என் மதிப்பிற்குரியவரே! மீண்டுவரவே முடியாத பாவக் குழியினின்றும் தன்னைத்தான் மீட்டுக் கொண்டுவந்த தங்களை நான் பாக்கியசாலி என்று கூறி மகிழ்கிறேன். உங்கள்பேரில் கருணை காண்பித்த அந்த இறைவனுக்கு நான் நன்றி செலுத்துகிறேன்!'

ஷாம்தாஸின் உள்ளம் ஆனந்தத்தால் கரைபுரண்டோடியது. ஆனால், சிறிது நேரத்திற்கு முன்பு இந்த மகானை நாம் எவ்விதம் அவமானப்படுத்தினோம் என நினைத்து—நாணித் தலை குனிந்தார். குப்தேச்வரின் கால்களைப் பிடித்துக்கொண்டு கூறினார்—

'என்னை மன்னித்து விடுங்கள். இன்று நான் மன்னிக்க முடியாத குற்றம் புரிந்துவிட்டேன்!'

தன் கால்களினின்றும் ஷாம்தாஸின் கரங்களை நகர்த்தியபடியே குப்தேச்வர் கூறினான்—

'பெரியவரே! அப்படிப் பேசி என்னை நரகத்திற்குப் போகச் செய்துவிடாதீர்கள். வயதில் நீங்கள் என் தந்தைக்குச் சம மானவர்!'

ஷாம்தாஸ் கூறினர்—'அது சரி. ஆனல் வயது பெரிதா, அறிவு பெரிதா? முதலில் நாவலைப் படித்துக் காண்பியுங்கள். மற்ற விஷயங்களைப்பற்றி பிறகு பேசிக்கொள்ளலாம்!' என்று குப்தேச்வரை வேண்டிக்கொண்டார்.

குப்தேச்வர் கூறினன்—'வாசிக்கிறேன். ஆனல் இது பெரிய புத்தகம். நீங்கள் கேட்டுச் சலிப்படைந்து விடுவீர்கள்!'

'என்ன சொன்னீர்கள்? சலிப்படைந்து விடுவேனு? நீங்கள் களைத்துப்போகாமல் படித்துக் காண்பிக்கும்பட்சத்தில், நான் முழுக் கதையையும் கேட்காமல் தண்ணீர்கூடக் குடிக்க மாட்டேன்!'

'அப்படியானல் இன்று உங்களுக்குச் சிவராத்திரிதான். நான் எவ்வளவு விரைவாகப் படித்தாலும், இதைப் படித்து முடிப்பதற்குக் குறைந்தது எட்டு அல்லது பத்து மணிநேரம் பிடிக்கும்!'

'பத்து நாட்களே படித்தாலும் நான் கண் மூடமாட்டேன்!'

'சரி! அப்படியானல் கேளுங்கள்!'

ஷாம்தாஸ், மின்சார விளக்கை அவன் பக்கமாகத் திருப்பி விட்டார். 'உம், ஆரம்பியுங்கள்!' என்று கூறினர்.

குப்தேச்வர் தலைப்பு எழுதப்பட்டுள்ள ஏட்டை எடுத்து எதிரேயிருந்த முக்காலியின் மீது வைத்தான். பிறகு நாவலைப் படிக்க ஆரம்பித்தான்.

## [1]

இலையுதிர் காலத்தில் கானகத்தின் நிசப்தத்திற்கிடையே மரங்களில் உதிர்ந்த இலைகள் சடசடவென்று ஓசை செய்வது போன்றும், அந்த ஒலி அதே நிசப்தத்துடன் மறைந்துவிடுவது போன்றும் நள்ளிரவு நேரத்தில் வைக்கோலால் ஆன ஒரு நலிந்த குடிசையில் உட்கார்ந்தபடி ஓர் இளம்பெண் பெருமூச்செறிந்து கொண்டிருந்தாள். இருள்சூழ்ந்த பயங்கரமான கணத்தில்

அவளுடைய உஷ்ணமான பெருமூச்சுடன் கலந்த குரல் ஒரு தனிப்பட்ட ஒலியை ஒலிக்கச்செய்து பிறகு மறைந்துவிடும்.

மக்களின் நடமாட்டமற்ற இருள், போதாததற்குக் கிராமத்திற்கு வெளியே இருந்த அந்தக் குடிசையில் அந்தப் பேதை மட்டும் தனிமையாக இருந்தாள். அக்கம்பக்கத்தில் ஒருவருமே கிடையாது. அருகில் கவலைக் கிணற்றை இழுக்கும் மக்களின் ஒரு குடிசையிருந்தது. பகல் நேரங்களில் மக்கள் அங்கே உட்கார்ந்துகொண்டு உக்காவும், புகையும் பிடிப்பது வழக்கம். பெண்ணின் வயது பதினெட்டிற்குமேல் இருக்காது. அடுப்பில் எரிந்து கரியேறிய வெண்கலப் பாத்திரத்தைப்போல், மிகச் சிறந்த அழகைப் படைத்திருந்தும் அவளுடைய அழகின்மீது துக்கத்தின் சாயை படர்ந்திருந்தது. அவளுடைய கண்களைச் சுற்றிலும் கருமையாக இருந்தது. சிக்கலான கேசம். கிழிந்த உடை. காலச்சக்கரம் அவளுடைய தலையில் இளமையிலேயே வருத்தம் எனும் ஒரு மலையைக் கொண்டுவந்து வைத்து விட்டது என்பது நன்கு புரியும்.

அமாவாசை. மை போன்ற இருட்டு. குளிர்காலம்; மார்கழி மாதம் வேறு. புயற்காற்றின் வீச்சும், உலர்ந்த மரங்களின் வறண்ட ஒலியும் சேர்ந்து வருத்தம் எனும் வெந்தணலில் எரிந்து கொண்டிருந்த அந்தப் பெண்ணைச் சுற்றிப் பிரளயத்தையே உருவாக்கிக் கொண்டிருந்தன. அவளுடைய உடல் குளிரால் நடுங்கிக் கொண்டிருந்தது. ஆனால் அவளுடைய உள்ளத்தில் எரிந்துகொண்டிருந்த நெருப்பு விறகையோ கரியையோ எரிக்கத் தருந்ததாக இல்லை. அதனால் இயற்கையின் குளிரைப் போக்க முடியவில்லை.

சுகத்தின் நினைவுபோல் இரவு மெள்ளக் மெள்ளக் கழிந்து கொண்டிருந்தது. ஆனால் எதிர்காலத்து வருத்தங்களைப் போல் குளிரும், புயலும் அதிகரித்துக் கொண்டிருந்தன.

அவளுடைய உடல் ஒரேயடியாக மரத்துவிட்டது. சுய உணர்வு கூடக் கைவிட்டுவிடும் போன்றிருந்தது. சாணத்தால் மெழுகப்பட்ட அந்தத் தரையில் அவள் குப்புற வீழ்ந்தாள். கீழே விழுந்தவுடன் நினைவிழந்துவிட்டாள். அவளுடைய சகிக்க முடியாத நிலைகண்டு விண்ணகத்தில் பளிச்சிடும்

தாரகைகள் கூடக் கண்களை மூடிக் கொண்டன. மேகங்கள் துக்க உடை தரித்து அவளுடைய வருத்தத்தைக் கண்டு கண்ணீர் உதிர்த்தன.

மழையும் காற்றும் புயலை உருவாக்கி விட்டன. அப்பேதை மட்டும் அப்படியே கிடந்தாள். புயலின் ஒரு வீச்சு அவளுடைய அந்தக் குடிசையைக்கூட அடித்துக்கொண்டு எங்கோ எறிந்துவிட்டது. அப்படியிருந்தும் சில புற்களும் மூங்கில்களும் துணிச்சலுடன் அந்த அதிருஷ்டக் கட்டைக்கு ஆதரவு அளிக்க நின்று கொண்டிருந்தன. ஆனால் விபத்துக் காலத்து நண்பர்களைப் போல் அவை எப்போது பறந்து சென்றன என்று கண்டுபிடிக்க முடியவில்லை.

அளக்க முடியாத ஆகாயத்தைத் தவிர அந்த ஏழையின் தலைமீது வேறு ஒன்றும் இருக்கவில்லை. குளிர்ந்த தென்றல் கூட அரைப்பிணமான அவளது உடலில் பருமனான அம்புகளைப் பாய்ச்சுவது போலிருந்தது. அவளுடைய உலர்ந்த நீண்ட கேசம் தண்ணீரில் நனைந்து, குற்றவாளியின் உள்ளத்தைப் போல் கடுமையாகி விட்டது. இதயமற்ற காவலன் அவளுடைய உடலைச் சவுக்கால் அடிப்பது போல் தோன்றிற்று.

நடைபிணமாகிவிட்ட அந்தப் பேதை இப்போது திறந்த வெளியில் வீழ்ந்து கிடந்தாள்.

[ 2 ]

அவளுடைய மூர்ச்சை மெள்ள மெள்ளத் தெளிய ஆரம்பித்தது. உடல் சற்று சூடாக இருந்தது. அவள் தன் உள்ளத்திற்குச் சிறிது தெம்பு வந்துவிட்டதாக உணர்ந்தாள். கண்கள் மெள்ள அசைந்தன. மெதுவாக அவள் கண்களைத் திறந்து பார்த்தாள். அருகிலிருக்கும் எல்லாப் பொருள்களுமே இருளில் சுழல்வது போல் அவளுக்குத் தோன்றிற்று. எந்தப் பொருளின் மீதும் அவளுடைய பார்வை ஒன்றவில்லை. அவளுடைய கை தன்னையும் அறியாமல் தலையின் பின்புறத்தைத் தொட்டுப் பார்த்தது. அவளுடைய விரல்கள்

வலிக்கும் இடத்தைத் தேட ஆரம்பித்தன. கேசங்கள் ரத்தத்தால் நனைந்து கட்டிதட்டிப் போய் விட்டன. தலையில் கட்டுப் போடப்பட்டிருந்தது.

மெள்ள மெள்ள அவள் தன் சுய நினைவிற்கு வந்தாள். அப்போது அவள் தன் நிலைமையை நன்கு புரிந்து கொண்டாள். கூடவே ஏதோ ஒரு புதிய நிகழ்ச்சி நினைவிற்கு வந்தது. உடனே 'ஐயோ' என்று அவள் வாயிலிருந்து வெளிவந்தது. மறுபடியும் அவள் மூர்ச்சித்துக் கீழே விழுந்தாள். ஆனால் இந்தத் தடவை வெகு நேரம் வரை அவள் நினைவிழந்து கிடக்கவில்லை. விரைவில் சுய நினைவிற்கு வந்து விட்டாள். எழுந்திருப்பதற்குக் கட்டிற் கால்களைத் தேடினாள்.

யாரோ மென்மையான குரலில் 'வேண்டாம் அம்மா! இப்போது எழுந்திருக்கவேண்டாம்' என்று கூறி அன்புடன் தன் கையைப் பிடித்ததை அவள் உணர்ந்தாள்.

அந்த வார்த்தைகளைக் கூறிய பெண்மணி யாரென்று தெரிந்து கொள்ள அவள் நினைத்தாள். ஆனால் எங்கு அவளைப் பார்த்தோம் என்ற நினைவே அவளுக்கு வரவில்லை. அதே சமயத்தில் மறுபடியும் குரல் கேட்டது—'குழந்தாய், அல்லாவின் கருணையால் நீ உயிர் பிழைத்தாய்! உனக்கு அவர் தான் புது வாழ்வளித்திருக்கிறார். எனக்கு ஒரே கவலையாக இருந்தது! அல்லா! நீ என்ன நினைத்திருக்கிறாயோ, என்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்தேன்!'

பெண் அவளுடைய வார்த்தைகளை மிகவும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள். ஆனால் 'அல்லாவின் கருணை' எனும் வார்த்தைகள் மட்டும் ஒலி பெருக்கியின் வாயிலாக நூறு மடங்கு உரக்க அவள் காதில் ஒலித்துக் கொண்டிருந்தன. நான் முஸ்லிமுடைய வீட்டிலா இருக்கிறேன்? இதை நினைத்த மாத்திரத்தில் அவளுடைய பயம் எல்லையை மீறி விட்டது. மறுபடியும் அவள் மூர்ச்சையடைந்திருப்பாள். ஆனால் அந்தப் பெண்மணி அவளுடைய தலைமாட்டில் உட்கார்ந்து கொண்டு கண்ணீர் வடிப்பதையும் உணர்ந்தாள். நோயாளியின் தலையைத் தன் மடியின் மீது வைத்துக் கொண்டு அடிக்கடி அவளுடைய நெற்றியை முத்தமிட்டு

விட்டுக் கூறிக் கொண்டிருந்தாள்—'என் கண்ணே, பயப்படாதே. நான் இருக்கிறேன் உன்னைக் காப்பாற்றுவதற்கு. ஒரு சிறிதும் கவலைப்பட வேண்டாம். நீ குணமடைந்து கொண்டு தான் வருகிறாய்!'

நோய்வாய்ப்பட்டிருந்த பெண்மணிக்கு ஒரு பழைய நிகழ்ச்சி நினைவிற்கு வந்தது. அவள் குழந்தையாக இருந்த போது மலேரியாக் காய்ச்சலால் ஒரு முறை துடித்துக் கொண்டிருந்தாள். வெளியே சென்றிருந்த அவளுடைய தாய் அப்போது வந்து அவளுடைய தலையைத் தன் மடியில் வைத்துக் கொண்டு அவளுடைய நெற்றியை அடிக்கடி முத்தமிட்டபடி இதே போலத்தான் கூறினாள். சில காலமாக மறந்திருந்த தாயின் அன்பு மறுபடியும் அவளுடைய நினைவிற்கு வந்து விட்டது. தன் வேதனையையும் வலியையும் மறந்து, உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை தாயின் அன்பினால் நிறைந்து பரவசமடைந்து விட்டாள்.

படுத்திருந்தபடியே தலையைத் திருப்பி அவள் அந்தப் பெண்மணியைப் பார்த்தாள். இரு கைகளையும் பின்புறம் திருப்பி அவளுடைய தோள் பட்டையின் மீது போட்டபடி கூறினாள்—'அம்மா! நீ என்னை விட்டுவிட்டு எங்கே போய் விட்டாய்? என்னை உன்னிடம் அழைத்துக் கொள் அம்மா. நீ இறந்து விட்டாய். நீ இறந்து விட்டாய் என்று எல்லோரும் சொல்கிறார்கள். (சற்று சிந்தித்தபடி) ஆம், நானே பார்த்தேனே, உன் சிதையில் அப்பா தீயிட்டாரே! என்னையும் நீ...'. தாயின் அன்பை நினைந்து அவளுடைய தொண்டை அடைத்துக் கொண்டது. அவள் விசிக்கத் துவங்கினாள்.

தலைமாட்டில் உட்கார்ந்திருந்த பெண்மணி தைரியமிழந்து விட்டாள். அவள் நோயாளியை எடுத்துத் தன் மடியில் அமர்த்திக் கொண்டாள். அவளை அன்புடன் தழுவியபடி கூறினாள்—'என் கண்ணே, நான் எப்போதும் உன்னுடனேயே இருக்கிறேன். இனி உன்னை விட்டுப் பிரிந்திருக்கவே மாட்டேன். அல்லாவின் அருளால், இறைவனின் கருணையால் நீ விரைவில் குணமடைந்து விடுவாய்!'

இப்போது நோயாளி முற்றிலும் சுய நினைவுடனிருந்தாள். தாயென்று கருதிவந்த அந்தப் பெண்மணியும், வீட்டின் ஒவ்வொரு பொருளும் உருமாறி இருந்ததை அவள் உணர்ந்தாள். எந்த வீட்டை அவள் தன் தாயின் வீடு என்று கருதி வந்தாளோ, அது உண்மையில் ஒரு முஸ்லீமுடைய வீடு என்பது அவளுக்குப் புரிய வந்தது. அவளுக்குத் தான் தாறுமாருகப் பேசிவிட்டோமே என்று வெட்கமாக இருந்தது. அவள் வியப்புற்று, 'நான் எங்கே இருக்கிறேன்?' என்று கேட்டாள். அவளுடைய தொண்டை வறண்டு போய் விட்டது. அவள் தண்ணீர் கேட்டாள். கிழவி அவளைக் கட்டிலில் படுக்கவைத்தாள். 'இதோ குழந்தாய், தண்ணீர் கொண்டு வருகிறேன்' என்று கூறியபடியே அறையை விட்டு வெளியே வந்தாள்.

நோயாளி இப்போது சுய நினைவிற்கு வந்து விட்டாள். 'இது முஸ்லீமுடைய வீடாயிற்றே, நான் எப்படி இவளுடைய கையில் தண்ணீர் வாங்கிக் குடிப்பேன்? முடியாது. என்னுல் குடிக்க முடியாது' என்று எண்ண ஆரம்பித்தாள்.

அதே சமயத்தில் கிழவி உள்ளே நுழைந்தாள். அவளுடன் ஓர் இந்துச் சிறுவன் வந்தான். அவனுடைய கையில் தண்ணீர் டம்ளர் இருந்தது.

தண்ணீர் குடித்தவுடன் அவள் முற்றிலும் களைப்புத் தீர்ந்தவளாகிவிட்டாள். அவள் மறுபடியும் கேட்டாள்—'நான் இங்கே எப்படி வந்தேன்? நான்...'

கிழவி இடையிலேயே கூறினுள்—'அம்மா! நான் சொல்கிறேன். நீ கவலைப்படாதே. இந்த வீட்டை உன் வீடாகவே நினைத்துக்கொள். நாங்கள் முஸ்லீம்கள்தான். ஆனுல் அதனுல் உன் மதம் ஒருவிதத்திலும் பாதிக்கப்படாது.'

கிழவி மேலும் கூறினுள்— நானும் என் மகனும் இன்று தான் அம்பாலாவிலிருந்து வந்திருக்கிறும் என் மகன் அங்கு கண்ட்ராக்டர் வேலை பார்த்து வருகிறுன். விடியற்காலையில் நான்கு மணிக்கு நாங்கள் வண்டியிலிருந்து இறங்கினேம். குதிரைவண்டி ஒன்றை வாடகைக்குப் பேசிக் கொண்டு உட்கார்ந்தோம். சுமார் ஒன்றரை மைல் சென்றிருப்

போம். எங்கள் வண்டிக்காரன் ரிஹானு கிராமத்திற்கு வெளியே உன்னைப் பார்த்தான்...நீ நினைவற்று விழுந்து கிடந்தாய். முதலில் நாங்கள் உன்னை உயிரற்றவள் என்று நினைத்தோம். ஆனால், என் மகனுக்குச் சிறிது வைத்திய அறிவு உண்டு; அவன் உன்னைப் பார்த்துவிட்டு—'அம்மா நெஞ்சில் கை வைத்துப் பார். லேசாகத் துடித்துக்கொண்டிருக்கிறது' என்றான். முதலில் கிராமத்து மக்களிடம் உன்னை ஒப்படைத்துவிடலாம் என்று நினைத்தோம். சுற்றும் முற்றும் பார்த்தோம், ஒருவருமே தென்படவில்லை. நீ எங்காவது வழியிலேயே உயிரை விட்டுவிடப் போகிறுயே என்று மகன் கவலைப்பட்டான். அப்போது மழை சற்று லேசாகத் தூறிக்கொண்டிருந்தது. கிராமத்திற்குள் சென்று உன்னைப்பற்றித் தெரிவித்துவிட்டு வரலாம் என்று நினைத்தோம். ஆனல் அந்தக் கடுங்குளிரில் யாராவது வெளியே காணக்கிடைப்பார்களோ என்னமோ என்று நினைத்து, மகனின் கருத்துப்படி உன்னையும் வண்டியில் படுக்கவைத்துக் கொண்டு வீடுவந்து சேர்ந்தோம். காரணம் எங்களுக்குப் போலீசார்மீது பயமாக இருந்தது. உன் நிலைமையும் மோசமாக இருந்தது. வீட்டிற்கு வந்ததுமே டாக்டரை வரவழைத்தோம். உன் நனைந்த துணிகளை மாற்றினேன். நெருப்பின் உஷ்ணம் உன்மீது படும்படி உன்னைப் படுக்க வைத்தேன். இதற்குள் டாக்டரும் வந்துவிட்டார். அவர் நன்ருக இருக்க வேண்டும். பாவம், அவர் அசையாமல் இரண்டுமணி நேரம் உன் தலைமாட்டில் உட்கார்ந்திருந்தார். உனக்கு வேண்டிய மருந்துகளைக் கொடுத்தார். உன் மண்டையின் பின்புறம் காயமாக இருந்தது. உன் கேசங்கள் ரத்தத்தில் நனைந்து கிடந்தன. காயத்தைத் தைத்து அதன்மீது கட்டுப் போட்டார் அவர். அதன் பிறகு மகன் கஃபூர் பத்திரமாக உன்னைக் கவனித்துக்கொள்ளச் சொல்லிவிட்டு எங்கோ வெளியே சென்றுவிட்டான். நீ இரவு முழுதும் நினைவிழந்து இருந்தாய். அல்லாவின் கருணையால் இப்போது மூர்ச்சை தெளிந்திருக்கிருய்.'

சிறிது நேரங் கழித்துக் கிழவி மறுபடியும் பேச ஆரம்பித்தாள். 'குழந்தாய், இனி நீ உன்னைப்பற்றிச் சொல். ஏன் விதி உன்னை இந்நிலைக்குக் கொண்டுவந்துவிட்டது? எந்தக் கொடியவன் உன்னை இக்கதிக்கு ஆளாக்கியவன்? முதலில் உன் பெயரென்னவென்று சொல். நான் உன்னை என்ன பெயரிட்டு அழைக்கட்டும்?'

நோயாளிப் பெண் படுத்தபடியே கிழவியின் பேச்சைக் கேட்டுக்கொண்டிருந்தாள். அவளுடைய முகத்தில் பலவித உணர்ச்சிகள் தோன்றி மறைந்தன. ஒருபுறம் கோபத்தால் துடித்தாள்; மறுபுறம் வெறுப்பும் பொறுமையும் அவளுடைய நெற்றியைச் சுளிக்கச் செய்தன. இன்னொரு புறம் இந்தப் பெண்மணியின் பரிவு நிறைந்த எண்ணத்தை நினைத்து அவளுடைய கண்கள் நன்றி கலந்த அன்புடன் ஒளி வீசின.

கிழவியின் வார்த்தைகளுக்கு அவள் பதிலளிக்கவேயில்லை. கிழவி மறுபடியும் கேட்டாள்—'குழந்தாய், கவலைப்படாதே. எவ்வளவோ நல்லவர்களுக்கும் இன்னல்கள் வருவதுண்டு. விதிக்கெதிரே எத்தகைய சக்தியாலும் ஒன்றும் செய்ய முடியாது. அது சரி, உன் பெயரென்ன?'

போர்வையின் ஓரத்தால் கண்களைத் துடைத்துக்கொண்டு பெண் பதிலளித்தாள்—'குர்தேயி.'

கிழவி மறுபடியும் ஆரம்பித்துவிட்டாள்—'சரி, குர்தேயி, இனி உன்னைப்பற்றிச் சொல்லம்மா. உன் வீடு எங்கே இருக்கிறது. கஸ்தூர் தெரிந்துகொள்ளத் துடியாய்த் துடிக்கிறான். விரைவில் இவளுடைய விலாசம் தெரிந்தால், இவளைப் பத்திரமாக அங்கு கொண்டு விட்டுவிடலாமே என்கிறான். குழந்தாய், காலம் கெட்டிருக்கிறது. யாரையாவது மகிழ்வித்தால் அவர்கள் நம்மைப் பற்றிப் பேசவேமாட்டார்கள். ஆனால் அழவைத்தால் உடனே கெட்டபெயரைக் கட்டி விடுவார்கள்.'

குர்தேயி பெருமூச்செறிந்தபடி கூறினாள்—'அம்மா! நீங்கள் எனக்குப் பேருதவி செய்திருக்கிறீர்கள். ஆனால் இவ்விதம் எனக்கு உதவாமலிருந்தால் அதுவே நன்றாயிருந்திருக்கும். நான் எல்லா அல்லல்களினின்றும் விடுதலை

யடைந்திருப்பேன். ஆனால் தீவினை செய்திருப்பவர்களுக்கு மரணத்தையும் கண்டால் பயமாக இருக்கும். இன்னும் நான் என்னென்ன அனுபவிக்கவேண்டும் என்று என் தலையில் எழுதியிருக்கிறதோ, யார் கண்டார்கள்?' என்று சொல்லச்சொல்ல அவளுடைய முகம் முழுதும் கண்ணீரால் நனைந்துவிட்டது.

கஷ்டங்களால் நலிந்துகொண்டிருக்கும் அந்தப் பெண்ணின் நிலைகண்டு கிழவி மனம் வெதும்பினாள். அவளை அன்புடன் அணைத்துக்கொண்டு அந்தப் பெண்ணிற்கு ஆறுதலளித்தாள் கிழவி. உள்ளத்து வேதனை வெளிப்பட்டதால் குர்தேயி சற்று மன நிம்மதியுற்றாள். அவள் சொல்லத் துவங்கினாள்—

'என் பிறந்தகம் வைராவால் கிராமத்தில் இருக்கிறது. நான் பத்து வயதுச் சிறுமியாக இருக்கும்போதே என் தாய் இறந்துவிட்டாள். எனக்கு உடன் பிறந்தவர் வேறு ஒருவரும் கிடையாது. தந்தை ஒருவர்தான் எனக்கு இருந்த ஒரே ஒரு துணை. ஆனால் அவர் இருப்பதும் இல்லாததும் ஒன்றாகத் தானிருந்தது. தீய சேர்க்கையின் காரணமாக அவர் ஒன்றுக்கும் உதவாதவராகிவிட்டார். அம்மா உயிருடனிருந்த வரையில் இடைவிடாமல் புலம்பிக்கொண்டேயிருந்தாள். கள் குடிக்கவேண்டாம் என்று அப்பாவை அவள் தடுத்தால், அவர் அவளை உதைத்துவிடுவார். பாவம், இந்த உலகத்துக் கஷ்டங்களைத் தாங்கமுடியாமல் கண்களை மூடிவிட்டாள்.

'அவள் இறந்தவுடனேயே அப்பாவின் போக்கு இன்னும் சுயேச்சையாகிவிட்டது கட்டுத் தளர்ந்துவிட்டது. இராப் பகலாகக் கள் குடிப்பதிலேயே முனைந்திருந்தார். அப்பாவின் கையில் பண நடமாட்டமிருந்தவரையில் நண்பர்களின் கூட்டமும் அதிகரித்துக்கொண்டே வந்தது. அவர் எல்லாவற்றையும் இழந்து வெறும் ஆளாகிவிடவே, நண்பர்களும் அவரைவிட்டு மெள்ள நழுவ ஆரம்பித்தனர்.

'நான் அவருக்கு ஒரு பெரும் சுமையாக வளர்ந்திருந்தேன். ஆனால் அதைப்பற்றி அவருக்குக் கவலையே கிடையாது. எனக்கு வயது பதினைந்தாகிவிட்டது.'

'உன் திருமணத்திற்கு அவர் ஒருவிதமான ஏற்பாடும் செய்யவில்லையா?' என்று கிழவி கேட்டாள்.

'என் தாய் செய்திருந்த ஏற்பாட்டையே அவர் வேண்டாம் என்று நிறுத்திவிட்டார்.'

'ஏன்?'

'ஏனென்று எப்படிச் சொல்வேனம்மா! மனிதர்கள் எல்லோரும் வாய்க்கு வந்தபடி பேசத் துவங்கினர். அம்மா உயிருடனிருக்கும் வரை ஒருவரும் வாயைத் திறக்கவில்லை. அவள் கண்களை மூடியவுடனேயே வம்புப் பேச்சுக்கள் கிளம்ப ஆரம்பித்தன. பெண் படிக்கவில்லை என்றவுடனேயே பிள்ளை வீட்டார் பெண்வேண்டாம் என்று சொல்லி விட்டார்கள் எனச் சிலர் கூறினர். பெண்ணின் தகப்பன் பிள்ளை வீட்டாரிடம் பணம் கேட்டாராம் என்று மற்றும் சிலர் பேசிக் கொண்டனர்.'

'ஏனம்மா உன் தந்தை உன்னைப் படிக்க வைக்கவில்லை? இந்தக்கள் குழந்தைகளைப் பிறந்தவுடனேயே பள்ளிக்கு அனுப்பிவிடுவார்களே!'

'ஆனால் என் தந்தை அவர்களைப் போன்றவரல்ல. நான் படிக்கத்தான் விரும்பினேன். ஆனால் தந்தை கூடாது என்று பிடிவாதம் பிடித்தார். படித்தால் பெண்கள் கெட்டு விடுவார்கள் என்பார். அதுமட்டுமல்ல. நம் ஏழு தலைமுறைகளில் ஒரு பெண்ணும் படிக்காதபோது, உன்னைமட்டும் படிக்கவைத்து அந்தக் குலக் கௌரவத்தை ஏன் குலைக்கவேண்டும் என்பார்.'

'உம், அப்புறம்?'

'அப்புறம் என்ன? திருமண சம்பந்தத்தை முதலில் முறித்தார். பிறகு அதே தீய சேர்க்கை மறுபடியும் அவரைப்பற்றிக் கொண்டது. தன் கைப்பணத்தைச் செலவழித்து அவருக்கு மதுபானமளித்தது அந்தப் பாவிக் கூட்டம்.'

'அப்படிச் செய்ததன் நோக்கம் என்ன?'

'நோக்கமா? தந்தை ஒப்புக்கொள்ளாத இடத்தில் என்னைத் தள்ள அவர்கள் முயற்சி செய்தனர். ஆனால் தலைவிதிக்கெதிரே யாராலும் எதையும் செய்ய முடியாது. அவர்கள் தந்தையை எப்படியோ ஒப்புக் கொள்ளும்படி செய்துவிட்டனர். என்னைக் கொடுத்துவிட்டு, அதற்குப் பதிலாக ஆயிரம் ஆயிரம் ரூபாய்

கொண்ட இரண்டு பணமுடிச்சுக்களை என் மாமனர் வீட்டிலிருந்து என் தந்தை பெற்றுக் கொண்டார்.

'சில தினங்களுக்குப் பிறகு திருமணம் நடந்தது. என் சோகக் கதையே இதிலிருந்து தான் துவங்குகிறது. நான் புக்ககம் வந்து சேர்ந்தேன். அவருடைய (கணவருடைய) வயது என் தந்தையை விட அதிகமாக இருந்தது போன வருடம் தான் அவருடைய பேரனுக்கு முடியிறக்கினர்கள். இருமலும், ஆஸ்துமாவும் அவருடைய உடல்நிலையை மோசமாக்கியிருந்தன. வீட்டில் மருமகளிருந்தாள், பிள்ளைகளிருந்தனர், பேரன் பேத்திகளும் இருந்தனர். சொத்துக்குக் குறைவே கிடையாது. அரசாங்க வேலையில் அவர் ஏராளமான பணம் சம்பாதித்திருந்தார்.'

'ஆனல் மகளே உன் தந்தை பெருந்தவறு செய்துவிட்டார். உன் சுற்றத்தார் கூடவா பேசாமலிருந்தனர். கிழ ஒட்டகத்தின் கழுத்திற்கு மணி என்ன கேடு என்று அவர்கள் கூடவா கேட்கவில்லை. அதுவும் மகளைப் பணத்திற்கு விற்றுவிட்டு, நல்ல சம்பந்தத்தை மறுத்துவிட்டு அவர்கள் ஒன்றுமே சொல்லாமலா இருந்துவிட்டனர்?'—என்று கிழவி கேட்டாள்.

'அம்மா! நீங்கள் உற்றர் உறவினரைப் பற்றிப் பேசுகிறீர்கள். வந்த வினையே அவர்களால் தானே! தந்தையின் தீய சேர்க்கையில் அப்படிப்பட்ட உறவினரும் கலந்திருந்தனர். இந்தச் சுற்றத்தார் தொட்ட எதுவுமே உருப்படாதம்மா. அவர்கள் செய்த ஒவ்வொரு அட்டூழியத்தையும் பற்றிப் பேச ஆரம்பித்தால் என் கதை வளர்ந்து கொண்டே போகும். உறவினர் என் வாழ்வில் தலையிடாமலிருந்தால், இன்று என் கதி இவ்வளவு மோசமாகியிருக்காது!'

நிலத்தைத் தொட்டுப் பிறகு காதைத் தொட்டுவிட்டு கிழவி கேட்டாள்—'சரி குழந்தாய், பிறகு என்ன நடந்தது?'

'எது நடக்கும் என்று அஞ்சினேனே அதுதான் நடந்தது. திருமணமாகி ஒரு வருடம் கூட முடிந்தபாடில்லை, அதற்குள் எல்லாம் மண்ணோடு மண்ணாகிவிட்டது. இரண்டு மாதங்களுக்குள் ஆஸ்துமா நோயால் அவர் அவதிப்பட்டார். கடைசி

தடவையாக அது அவரை மாய்த்து விடவே வந்தது. நான் என் விதியை நொந்து கொண்டு இருக்கிறேன்.

'என் விதி என்னை இத்துடன் விட்டிருந்தால் நானும் மற்ற அதிருஷ்டக் கட்டைகளைப் போன்று எப்படியாவது வாழ்க்கையைக் கடத்தியிருப்பேனே! ஆனால் நான் அவ்வளவு புண்ணியசாலியா என்ன? அவருக்கு இரண்டு பிள்ளைகள். இளையவன் பள்ளியில் படித்துவந்தான். என் எந்தவித வேலையிலும் அவன் தலையிடமாட்டான். ஆனால் மூத்த மகனும் அவனுடைய மனைவியும் என்னைக் கண்டால் கரித்துக் கொட்டுவார்கள். தங்கள் மனம்போனபடியெல்லாம் என்னை அவர்களிருவரும் வதைத்தனர். நானும் அவர்களுக்குக் குறைந்தவளல்ல. சரியான பிடிவாதக்காரியாக இருந்தேன். ஒரு வார்த்தைக்கு நான்கு வார்த்தைகள் பதில் சொன்னால்தான் என் மனம் நிம்மதியுறும். நான் கெட்டுப் படித்திருந்தால் நான் என் வாழ்க்கையை எப்படியாவது மாற்றியமைத்துக் கொண்டிருப்பேன். ஆனால் என் விதி அப்படியிருக்கவில்லையே?

'வீட்டில் எப்போது பார்த்தாலும் என்னைப் பற்றிக் குற்றப் பாடம் படிக்கப்படும். என்மீது பலவிதமான பழிகள் சுமத்தப் படும். யாரும் என்னுடன் வாய்விட்டுப் பேசமாட்டார்கள். என்மீது வசைமாரி பொழிந்துவிட்டுத் தான் அவர்கள் தங்கள் ஆத்திரத்தைத் தணித்துக்கொள்வர். மூத்தமகன் கரம்சந்த் தன் மனைவியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு என்னை அடிக்கவும் ஆரம்பித்துவிட்டான்!

'கோபத்தால் நான் பல நாட்கள் சாப்பிடாமல் இருந்து விடுவேன். ஆனால் என்னைச் சமாதானப்படுத்திச் சாப்பிடச் செய்ய யார் இருக்கிறார்கள்? வேறு வழியின்றி நானே சாப்பிட்டுவிடுவேன்.

'இவ்விதம் வருத்தத்திலேயே உருகி உருகிச் சில நாட்களைக் கழித்தேன். ஒரு நாள் என் தந்தையின் உடல்நிலை சரியாக இல்லை என்று தெரியவந்தது. நான் பிறந்தகம் செல்லத் தயாரானேன்.

'நான் கிளம்ப ஆயத்தமாகிக் கொண்டிருந்தேன். அதற்குள் மூத்தமகன் கரம்சந்த் என்னிடம் வந்து தந்தையின் உடல்

நிலையைப் பற்றி மிகப்பரிவுடன் கேட்டான். பிறகு கூறினான் : தினந்தோறும் வீட்டில் இப்படி மனத்தாங்கலுடன் எத்தனை தினங்கள்தான் வாழ்வது ? நீ ஒப்புக்கொண்டால், நான்கு நல்லவர்களை வைத்துக்கொண்டு வீட்டைப் பகிர்ந்துகொள்ளலாம்.

'நானும் சரி என்று ஒப்புக்கொண்டேன். சிறிது நேரத்தில் அவன் நான்கைந்து பேர்களை அழைத்துக்கொண்டு வந்துவிட்டான். அவர்களில் ஒருவர் அந்தக் கிராமத்துப் பண்டிதர். ஒரு காகிதத்தில் ஏதோ எழுதிவிட்டு அதில் என் கட்டைவிரலில் அடையாளத்தைப் பதிக்கும்படி கூறினார் அவர். அவர் அதில் இவ்விதம் எழுதப்பட்டிருப்பதாக என்னிடம் தெரிவித்தார்.

"ரொக்கப் பணத்தையும் சேர்த்து வீட்டின் மொத்த சொத்து அறுபதாயிரம். அந்தத் தொகையில் குர்தேயிக்கு இருபதாயிரம் கொடுக்கப்பட்டது. மிகுந்த இருபதாயிரத்தை இளைய மகனுக்காக வைக்கப்பட்டிருக்கிறது. இதைத் தவிர குர்தேயி, கரம்சந்தின் மனைவி இருவரின் நகைகளையும் சேர்த்து மூன்று பாகங்களாகப் பிரித்து மூவருக்கும் சமமாகப் பங்கிட வேண்டும். மூன்றாவது பகுதியை இளையமகன் திருமணம் செய்துகொள்ளும் போது கொடுப்பதற்காகப் பத்திரப்படுத்தி வைக்கலாம்."

'நான் என் கைக் கட்டைவிரலின் அடையாளத்தை வைத்தேன். பலர் சாட்சியம் கூறினர். பலர் கூறியதன் பேரில் இந்தச் சங்கிலியை மட்டும் வைத்துக்கொண்டு மற்ற எல்லா நகைகளையும் கொடுத்துவிட்டேன். "நீ பிறந்தகம் சென்றுவா. திரும்பி வருவதற்குள் உனக்குச் சேரவேண்டிய சொத்தையும் நகையையும் பிரித்து வைக்கிறோம்." என்று அவர்கள் கூறினார்கள்.

'நான் அன்று மாலையே என் பிறந்தகம் சென்றேன். அங்கு சென்று பார்த்தால் ஒரு காசிற்கு வழியில்லாமல் தந்தை தவித்துக்கொண்டிருப்பது தெரியவந்தது. அவரிடம் செல்லாத காசுகூட கிடையாது. எல்லாவற்றையும் அவருடைய சகாக்கள் சாப்பிட்டு ஏப்பம் விட்டுவிட்டார்கள். அடுத்த நாளே காலன் அவரைக் கொண்டு சென்றுவிட்டான். நான் அவருடைய ஈமக்கடன்களை முடித்துவிட்டுப் புக்ககம் திரும்

பினேன். அப்போது லேசாக மழை தூறிக்கொண்டிருந்தது. காற்று வேகமாக அடித்துக்கொண்டிருந்தது. நான் குளிரால் நடுங்கிக் கொண்டிருந்தேன். வீட்டிற்கு வந்தேன். எல்லோரும் விசித்திர மனிதர்களாக மாறிவிட்டனர். ஆத்திரத்தில் என் அறையின் பூட்டு உடைக்கப்பட்டிருந்தது. பெட்டிகளெல்லாம் எடுக்கப்பட்டிருந்தன. இதைக் கண்ட நான் பதைபதைத்துப் போனேன். மருகளிடம் கேட்டதன் பேரில் ஆத்திரத்துடன் பதிலளித்தாள்—"இந்தப் பொருள்களுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்? எங்கிருந்து வந்தாயோ, அங்கேயே சென்றுவிடு."

'நான் நெருப்பின் மீது நிற்பதுபோல் தவித்துப் போனேன். நான் அடித்துக்கொண்டு அழ ஆரம்பித்தேன். தெருவிலுள்ள மக்கள் அனைவரும் வந்து சூழ்ந்துகொண்டனர். கரம்சந்தும் வந்தான். அவனுடன் பல கண்ணியமான மக்களும் இருந்தனர்.

'நான் அழுதபடியே நிலைமையை விவரமாக அவர்களுக்கு எடுத்துக் கூறினேன். நான் கைக்கட்டைவிரலின் அடையாளம் பதித்த காகிதத்தைப் பெட்டியிலிருந்து மருமகள் எடுத்து என் காலடியில் வீசினாள். அங்கிருந்தவர்களில் ஒருவர் அதை எனக்குப் படித்துக் காண்பித்தார். அதில் எழுதியிருந்தது—"நான் கணவருடைய சொத்தில் மூன்றில் ஒரு பகுதியைப் பெற்றுக்கொண்டு தீர்த்தயாத்திரை செய்யப் போகிறேன். இனி இந்த வீட்டின் எந்தப் பொருளுடனும் எனக்கு ஒருவித சம்பந்தமும் கிடையாது."

'இதைக்கேட்டதும் என் உடல் நெருப்பில் போட்டாற் போல் கொதித்தது. ஆனால் அங்கு என்பேச்சைக் கேட்பவர் யார்? வீட்டோரும் வெளியோரும் என்னைத்தான் திட்டினார்கள். சிறிது நேரங்கழித்து எல்லோரும் அவரவருடைய வீட்டிற்குச் சென்றுவிட்டனர். நான் வானமே இடிந்துவிழும் போல் கூக்குரலிட்டுக் கதறிக்கொண்டிருந்தேன். வீட்டிலிருந்த மூவரும் கோபத்தால் விவேகமிழந்து என்மீது சீறி விழுந்தனர்.

'நான் இந்த இடத்தைவிட்டு நகரமாட்டேன் என்று அவர்களைப் பயமுறுத்தினேன். அப்போது அவர்களுடைய ஆத்திரம் எல்லையை மீறிவிட்டது. பஞ்சாயத்தின் அனுமதியும் அவர்களுக்குக் கிடைத்துவிட்டது. என்னை அவர்கள் உதைக்கவும் குத்தவும் ஆரம்பித்தனர். இவ்விதம் அடிக்கும் போதுதான் மருமகள் அப்பளக்குழவியை எடுத்து என் மண்டையில் ஒரு போடு போட்டாள். நான் அப்படியே மயங்கிக் கீழே விழுந்தேன். பிறகு அவர்களுக்குப் பயமாகி விட்டது. என் வாயைத் துணியால் அடைத்து, என் கைகளையும் கால்களையும் இழுத்து வெகுதொலைவில் கொண்டு போட்டுவிட்டுத் திரும்பினர்.

'அப்போது பயங்கரமாக மழை பெய்து கொண்டிருந்தது. தட்டுத்தடுமாறிக் கொண்டு நான் எப்படியோ நடந்து சிலர் வீட்டுக் கதவுகளைத் தட்டினேன். ஆனால் யாருமே திறக்கவில்லை!

'இனி உயிருடனிருந்து என்ன சாதிக்கப் போகிறோம் என்று எனக்குத் தோன்றிற்று. கிணற்றில் குதித்து மிக எளிதில் உயிரை மாய்த்துக் கொண்டிருக்கலாம். கிராமத்திற்கு வெளியேயிருந்த கிணற்றை நோக்கி நடந்தேன். இருண்ட இரவு நேரம். ஒவ்வொரு கணமும் மேகம் கர்ஜித்துக் கொண்டிருந்தது. பளிச் பளிச்சென்று மின்னல் வேறு மின்னிக் கொண்டிருந்தது. மழையும் வேகமாகப் பெய்து கொண்டிருந்தது. கிணறு வெகு தொலைவிலிருந்தது. புயல் என்னைப் பிடித்துத் தள்ளிக் கொண்டிருந்தது. மழையின் வெள்ளம் என்னைத் தடுத்து நிறுத்திக் கொண்டிருந்தது. ஆனால் என் கால்கள் சலித்துப் போயின. ஓரடிகூட எடுத்து வைக்க முடியவில்லை. கிணறு இருக்குமிடமும் இருளில் தெரியவில்லை. மின்னல் பளிச்சிடும் போதெல்லாம் வழியைக் கண்டு கொண்டு அந்தப் பக்கம் நோக்கி நடந்து கொண்டிருந்தேன். என் துரதிருஷ்டம் பாருங்கள். நான் எந்தப் பக்கத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தேனோ, அந்தப் பக்கத்தில் தான் மழையும் புயலும் வீசி அடித்தன. ஓரடி முன்னே வைத்தால் பல அடிகள் பின்னே என்னை இழுத்துச் சென்றது.

'எப்படியோ முடிவில் அந்தக் குடிசையின் வாசலில் போய் மூர்ச்சையுற்று வீழ்ந்தேன். இரண்டாவது தடவையாக நான் சுய நினைவிற்கு வந்த போது உங்கள் முன்பு இருப்பதை உணர்ந்தேன்.'

குர்தேயியின் வேதனை கலந்த கதையைக் கேட்டுக் கிழவியின் உள்ளம் உருகியது.

[ 3 ]

பண்டிதர் ராதாகிருஷ்ணனை இந்தக் கிராமத்தில் எல்லோருக்குமே தெரியும். குறிப்பாகக் கிராமத்து வாலிபக் கூட்டமும் இளைஞர் குழாமும் அவரைத் தெய்வம் போன்று பூஜிக்கும். அவர்களில் சிலர் அவரை 'ஹாதிம்தாயி' அல்லது ராஜா விக்ரமாதித்தியனின் அவதாரம் என்று குறிப்பிடுகிறார்கள். பிறருக்கு நன்மை செய்வது அவருடன் பிறந்த இயல்பு. யார் பேரிலாவது ஏதாவது வழக்குத் தொடரப்பட்டாலோ, அல்லது யாருடைய வீட்டிலாவது ஏதாவது சண்டை சச்சரவு நடந்தாலோ, மக்கள் முதலில் பண்டிதர் ராதாகிருஷ்ணனைத் தான் தேடிக் கொண்டு ஓடுவார்கள். அப்படியே மக்கள் அவரை மறந்து விட்டாலும், அவர் விடமாட்டார். தம்முடைய வேலைகளனைத்தையும் உதறித் தள்ளி விட்டு அவர்களிடம் செல்வார். அவர்களுடைய சிக்கலான பிரச்னைகளனைத்தையும் அலசி ஆராய்ந்து அவற்றிற்குத் தீர்வு காண முயற்சிப்பார்.

ஒரு முறை ஓரிடையனுடைய மாடு லாலா பானேஷாவின் வயலில் சென்று பயிரை மேய்ந்து விட்டது. அப்போது பண்டிதரின் அறிவாற்றல் காரணமாக இருபது ரூபாய் பெறும் படியான ஸ்டாம்புப் பத்திரத்தில் அவனைக் கையொப்பமிடும்படி செய்துவிட்டார்கள். பாவம், இடையன் எழுதப் படிக்கத் தெரியாதவன். பண்டிதரின் மகிமையை அறியாமல் வாயில் வந்தபடி பேசிவிட்டான். அதனால் பண்டிதரின் சாபத்திற்கு இலக்காகிவிட்டான். இது நடந்து ஆறாண்டுகள் முடிந்து விட்டன. இன்னும் அவனால் அந்த இருபது ரூபாயைச் செலுத்த முடியவில்லை. பாவம், அவனுடைய ஆடுமாடுக

ளனைத்தும் விற்றுகிவிட்டது. ஆனால் பானேஷாவிற்குக் கொடுக்க வேண்டிய கடன் அடைபடவில்லை.

பண்டிதரின் பக்தர்கள் இப்படிப்பட்ட கதைகள் ஆயிர மாயிரமாகக் கூறி அவர் மிகவும் பெரிய மகாத்மா என்று மக்கள் அவரை நம்பும்படி செய்தனர். அவரிடமிருக்கும் பெரிய இந்திர ஜாலம் என்ன வென்றால் அவர் ஒரு வேலையும் பார்ப்பதில்லை. அப்படி இருந்தும் அவருடைய வீட்டில் அஷ்டசித்திகளும் நவநிதிகளும் கொழிக்கும். இளமையி லேயே தம் மனைவியை அவர் வெளியே துரத்திவிட்டார். காரணம் அவளுடைய நடத்தை சரியானதில்லை என்பது அவருடைய கருத்து. வீட்டிலிருக்கும் உணவில் சரிபாதியை ஏழைகளுக்குக் கொடுத்து விடுவாள். பண்டிதரின் மனைவி யாக இருந்தபோதிலும் தனவந்தர்களிடம் செல்வத்தை வசூ லிக்கும் வழி தெரியாதவளாக இருந்தாள். அதுமட்டு மல்ல. பார்ப்பதற்குக் கீழ்த்தர வகுப்பைச் சேர்ந்த பெண்களின் இலட்சணம் அவளிடமிருந்தது. யாருக்காவது ஒரு சிறிது கஷ்டம் வந்தாலும் சரி, உடனே சாதாரணமான பணிப் பெண்ணைப்போல் அவர்களுக்குச் சேவை புரியத் தயாராகி விடுவாள். ஒரு நாள் பண்டிதரின் மனைவி சென்ற பிறவியில் கீழ்த்தர வகுப்பைச் சேர்ந்த பெண்ணாக இருந்தாள் என்று ஒரு அசரீரி கிளம்பிற்று. அதைக் கேட்டவுடனேயே பண்டிதர் அவளுடன் ஒத்துழையாமை செய்ய ஆரம்பித்து விட்டார். அவ்வளவுதான். இன்றுவரை அவளை நிமிர்ந்து பார்க்கவில்லை. சாத்திரங்களைப் பண்டிதர் கரைத்துக் குடித்திருக்கிறார். வாழ் நாள் முழுதும் புத்தகப் புழுவாக இருந்தும் மக்களால் அறிந்து கொள்ள முடியாத நுண்ணறிவையும், தத்துவ ஞானத்தையும் அ, ஆ, இ, ஈ என்ற எழுத்துக்களை படிக்காமலேயே பண்டிதர் ராதாகிருஷ்ணன் அடைந்து விட்டார். சாத்திரங்களின் வாத விவாதங்களில் பண்டிதரை யாராலும் வெல்ல முடியாது. விவேக மிழந்து இருளில் தத்தளிப்பதால் ஆன்மீக விஷயங் களை மறந்து உழலும் மக்களை அறிவெனும் ஒளிக்கு அழைத் துச் செல்வதில் பண்டிதர் வெற்றி கண்டார். உதாரணமாக சிவனுடைய அன்புக் காதலி என்று போதைப் பொருள்

சஞ்சாவைப் பிரசாரம் செய்வார். மதுபானத்தைத் தேவர்களின் பதினைன்காம் இரத்தினம் என்பார். சோமரசம் என்று அதற்குப் பெயரிட்டு அதைத் தாமும் அருந்தி, எல்லோரையும் அருந்தச் செய்வார். சூதாட்டத்தைப் பாண்டவர்களும் கௌரவர்களும் விரும்பி ஆடிய ஆட்டம் என்று கூறி அதில் மக்களை நாட்டமடையச் செய்வார். தம் ஒரே பிறவியில் இவ்விதம் பண்டிதர் செய்த பரோபகாரச் செயல்களுக்குக் கணக்கே கிடையாது.

நகரத்துச் செல்வந்தர்களின் புதல்வர்கள், இளைஞர்கள் பண்டிதரின் குருகுலமாகிய அவருடைய இல்லத்தில் கூடுவார்கள். தலைவராக விளங்கும் பண்டிதர் சாத்திரங்களைப்பற்றியும் அரசியல் பற்றியும் சர்ச்சை செய்யத் துவங்குவார். அப்போது, ரசிகப் பெருமக்கள் ஆகா, ஆகா வென்று ரசித்து மகிழ்வர்.

இன்றும் நம் வாசகர்களுக்கு இந்தப் பண்டிதரின் கூட்டத்தைக் காண அழைத்துச் செல்வோம். இரவு மணி எட்டு அடித்து விட்டது. வெளியே பயங்கரமான குளிர். ஆனால் பண்டிதரின் பராக்கிரமத்திற்கெதிரே குளிரின் பாச்சா பலிக்காது. வராந்தாவில் குளிர் எட்டிப்பார்க்க வழி கிடையாது. காரணம் அங்கு ஏற்கெனவே அடுப்பு தகதகவென்று எரிந்து கொண்டிருந்தது. அங்கு அவருடைய தொண்டர்களில் சிலர் மீன், கோழி முதலியவற்றைச் சுவைபடச் சமைத்துக் கொண்டிருந்தனர். அவருடைய பக்தர் குழாமிடமும் குளிர் அண்ட வழி கிடையாது. ஏனென்றால் அவர்களிடம் 'சோமரசம்' இருந்ததே.

ஒன்பது மணி அடித்தவுடனேயே எல்லாத் தொண்டர்களும் தத்தம் ஆசனங்களை அலங்கரித்தனர். பிறகு பண்டிதர் தமது ஆசனத்தை அலங்கரித்தார். அப்போது அன்பர்களனைவரும் எழுந்து நின்று பண்டிதரை வரவேற்றனர். உடனே ஒரு தொண்டர் ஒரு புட்டியைத் திறந்தார். சாப்பிடவேண்டிய பொருள்களை ஒன்றுசேர்த்து அந்த நல்ல காரியத்தைத் துவங்குவதற்குப் பண்டிதரின் அனுமதி கோரினர்.

பண்டிதர் மிகவும் கவனத்துடன் எல்லோர் பேரிலும் தம் அருட்பார்வையை வீசியபடி கூறினர்—' அன்பர்களே !

சற்றுப் பொறுங்கள். இன்னும் நம் கூட்டத்திற்கு அணி கலனாக விளங்கும் க்வாஜா சாஹப் எழுந்தருளவில்லை. இன்றைய கொண்டாட்டத்திற்கு அவருக்கு யாரும் அழைப்பு அனுப்பவில்லைபோல் தோன்றுகிறது.'

இடையில் ஒருவர் எடுத்து கூறினர்—'இல்லை ஐயா. நானே இரு முறை அவருடைய வீட்டிற்குச் சென்றேன். அவர் கிளம்பும் சமயத்தில் இரண்டு கிராமவாசிகள் அவரைக் காண வந்துவிட்டனர். அதனால் அவர் மறுபடியும் உட்கார்ந்து விட்டார். அவர்களுடன் பேசிக்கொண்டிருப்பதால்தான் நேரமாகிறது என்று நினைக்கிறேன். இல்லாவிட்டால் அவரா வராமலிருப்பவர் ?'

அதே சமயத்தில் வெளியிலிருந்து யாருடைய பூட்ஸ் ஒலியோ 'கிச் கிச்' என்று கேட்டது. 'இதோ அவரே வந்து விட்டாரே' என்று கூறியபடியே பண்டிதர் தம் ஆசனத்தி லிருந்து எழுந்து வாயில்வரை சென்றார்.

க்வாஜா ஷேர்கான் சாஹப் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் வேலை பார்ப்பவர். சுமார் மூன்று ஆண்டுகளாக இந்த ஊரின் கௌரவத்தை அதிகரித்துக் கொண்டிருப்பவர். வந்ததுமே பெரிய ஆர்ப்பாட்டத்துடன் பண்டிதரைச் சந்தித்தார் அவர். பிறகு இருவரும் ஒரே ஆசனத்தில் அமர்ந்தனர். பண்டிதர் பேச ஆரம்பித்தார்—'ஏது, இவ்வளவு நேரமாகிவிட்டதே! உங்களை எதிர்நோக்கிப் பார்த்துக் கண்கள் களைத்துப் போயின. இன்னும் சிறிது நேரத்தில் நீங்கள் வந்திரா விட்டால், கூட்டத்தையே கலைத்திருக்க வேண்டியதுதான். தலைவரின்றி போர்ப்படைக்கு அழகேது ?'

தன்னைப் புகழக் கேட்டு க்வாஜா சாஹப் பூரித்துப் போனார். தன் தலைப்பாகையைச் சீர்ப்படுத்தியபடி கூறினார்—'பிரமாதம் பண்டிதரே ! நீங்கள் இருக்கையில் என்ன குறைச்சல் ? நான் முன்னமேயே வந்திருப்பேன். ஏதோ அவசர வேலை வந்து விட்டது. அதனால்தான் இந்தத் தாமதம்.'

பண்டிதர் சற்று நகர்ந்து க்வாஜா சாஹபின் அருகே வந்தார். அவருடைய காதருகே சென்று கேட்டார்—'ஏன், ஏதாவது புதிய வேட்டையோ ?'

க்வாஜா சாஹப் தலையிலிருந்து தொப்பியைக் கழற்றிக் கூட்டத்திலிருந்த ஒரு தொண்டனுடைய கையில் வைத்தார். தம் வழுக்கைத் தலையைத் தடவிக்கொண்டே பேசினார். 'அல்லா ஒரு நபரை அனுப்பியிருந்தார்!'

'அப்படியா? என்ன விஷயம், நல்ல கை நிறைய வேட்டையா?'

'அப்படியொன்றும் குறிப்பிடக்கூடியதல்ல. மிகவும் சாதாரணமானது தான்!'

'அப்படியா? கொலை சம்பந்தப்பட்ட கேஸாக இருக்குமோ என்று நான் நினைத்தேன்!'

'அப்பப்பா! பண்டித்ஜி! அவ்வளவு அதிருஷ்டம் ஏது? ஆறு மாதத்திற்கும் ஒரு வருடத்திற்கும் ஒரு முறை கிடைத்தால் அதிகம். நல்ல சரியான வேட்டையாக வந்து சிக்கிக் கொள்ளும். தினமும் கொலைக் கேஸ் வந்தால்தான் நாம் தங்க ஊஞ்சலில் ஆடிக்கொண்டிருக்கலாமே!'

'சுமார் நானூறு—ஐநூறு கிடைக்குமா?'

'ஊம்! கிடையாது. இருநூறு தான்!'

'என்ன வழக்கு?'

'அதாவது அருகிலுள்ள சுல்தான்பூரில் கொஞ்சம் போய்ப் பரிசோதனை செய்ய வேண்டுமாம்!'

'ஓகோ! வெறும் வேண்டுகோள் விடுத்துவிட்டுப் போயிருக்கிறார்களா? அவர்கள் நினைத்தது நடந்துவிட்டால், பிறகு கேட்கவே வேண்டாம். உங்களைப் பணத்தால் மூடிவிடுவார்கள்!' என்று மீசையைச் சீர்ப்படுத்தியபடி பண்டிதர் கூறினார்.

'உம், நம்பிக்கை இருக்கிறது!'

'இறைவனுடைய கருணையை என்னவென்று சொல்வேன்! எப்படியாவது அருளைப் பொழிந்து விடுகிறார். க்வாஜா சாஹப்! இறைவன் எல்லையற்ற அருளாளரேயிற்றே! கல்லினுள் தேரைக்கும் உணவளிப்பவராயிற்றே அவர்! (கரம்சந்தைப் பார்த்துவிட்டுப் பிறகு க்வாஜா சாஹபிடம்) அடேடே! இன்று நாம் ஏன் கூடியிருக்கிறோம் என்று சொல்ல மறந்து விட்டேனே! நம் தனவந்த நண்பர் இன்

றைய செலவை மேற்கொள்வதாக ஒப்புக்கொண்டிருக்கிறார். இவர் மிகவும் கண்ணியமானவர். காலஞ்சென்ற இவருடைய தந்தை என் ஆருயிர் நண்பர். இவரும் மிகப் பெரிய மனதுடையவர். (ஏப்பம் விட்டபடி) ஹரி ஓ...ம்!'

க்வாஜா சாஹப் புன்முறுவலுடன் கரம்சந்தைப் பார்த்தார். உடனே கரம்சந்த் கைகூப்பி எழுந்து நின்றான். கையால் சமிக்ஞை செய்து அவனை உட்காரும்படி கூறினார் க்வாஜா சாஹப். 'ஓகோ! இவர் அந்தப் பெண்ணின் வழக்கு விஷயமாக வந்திருக்கிறாரோ? ஆமாம் பண்டிட்ஜி! எனக்குத் தெரியும். அந்தப் பெண்ணை அப்புறப்படுத்தியது நல்லதாகி விட்டது. இப்போது அவள் எங்கே இருக்கிறாள்?' என்று கேட்டார் க்வாஜா சாஹப்.

பண்டிதர் டம்ளரை நீட்டியபடியே கூறினார்— 'சரியான விலாசம் இன்னும் தெரியவில்லை. ஆனால் காலையில் ஒரு குடிகாரனவனிடமிருந்து தகவல் தெரிந்தது. முகமூட்ட மணிந்த ஒரு பெண்மணி அவளை வண்டியில் வைத்துக் கொண்டு சென்றாளாம். அவளுடன் ஓர் இளைஞனும் இருந்தானாம்!'

மடமட வென்று டம்ளரில் இருந்ததை அருந்திப் பிறகு அதை ஒரு மூலையில் வைத்துவிட்டு க்வாஜா சாஹப் கேட்டார்— 'என்ன சொன்னீர்கள்? முஸ்லீமின் வீட்டிலா?'

'ஆமாம்!'

இதற்குள் கிராமத்துத் தலையாரி ஜ்வாலா சிங் குறுக்கிட்டுப் பேசினான்— 'ஆமாம் ஐயா, எங்கள் வயல் பக்கமாகத்தான் வண்டி போயிற்று. நான் என் கண்களால் பார்த்தேன்.'

இரண்டாவது டம்ளர் குடித்த பிறகு க்வாஜா சாஹப் போதையடைந்து விட்டார். தலையைத் தடவிக் கொண்டே பேசினார். 'அதெல்லாம் கிடக்கட்டும். நடந்தது நல்லதாகப் போய்விட்டது. இனி இங்கே கொண்டாட்டத்தைக் கவனிப்போம்!'

அவர் சொல்லி முடிப்பதற்குள் புட்டிகள் திறக்கப்பட்டன. டம்ளரில் ஊற்றப்பட்டு காலி செய்யப்பட்டன.

பண்டிதர் மீனின் ஒரு துண்டிலிருந்து முள்ளை எடுத்த படியே கூறினார்— 'க்வாஜா! உங்கள் வேலையாள் சமையற் கலையில் தேர்ந்தவன் போலிருக்கிறது. மீன் எவ்வளவு ருசி யாக இருக்கிறது! தொண்டைக்குக் கீழே போகமாட்டேன் என்கிறது!'

'ஆமாம். அவன் ஐந்தாண்டுகளாக என்னிடம் வேலை பார்க்கிறான். கடவுள் அவனுடைய தந்தைக்கு ஆன்ம சாந்தி யளிக்கட்டும். அவன் மகனைவிடக் கைதேர்ந்தவன். மாமிசம் சமைப்பதில் அவன் மிகப் பெரிய நிபுணன். காரணம் மேஜர் பர்ட்டன் சாஹபின் வீட்டில் நான்கு ஆண்டுகள் கழித்திருக் கிறான். அங்கு வேலை பார்த்த அனுபவம் வேறு!'

இதற்குள் மதுபானம் மெள்ள மெள்ள எல்லோரையும் ஆட் கொண்டுவிட்டது. போதையில் எல்லோரும் தத்தம் முறைப் படிப் பேச ஆரம்பித்தனர். பண்டிதர் மயக்கத்தில் எல்லோ ருடனும் பேசத் துவங்கினார்—'நண்பர்களே! நம் நாட்டில் இப்படி அன்பும் ஒருமைப்பாடும் ஒற்றுமையும் நிலவுவதைக் கண்டு நான் பெருமிதமடைகிறேன். உண்மையில் இந்துக் களும் முஸ்லீம்களும் ஒரே இடத்தில் இருந்துகொண்டு ஒன்றுயச் சாப்பிடுவதையும் அருந்துவதையும் கண்டால் என் உள்ளம் ஆனந்தக் கூத்தாடுகிறது. பாரதநாடு முழுவதில் இத்தகைய நட்புறவு நிலவக் கடவுள் நமக்கு அருள் புரியட்டும்.'

க்வாஜா சாஹப் கூறினார்—'பண்டித்ஜி! உண்மையில் இதெல்லாம் இந்த மதுபானத்தின் கிருபைதான். தெய்வீகத் தன்மைக்கு முரணானது என்று மக்கள் இந்த மதுபானத்தைத் தூஷிக்கின்றனர். இதனால் பரஸ்பரம் அன்பு எப்படி வளர்ச்சி யடைகின்றது என்பதை அந்த அறிவற்றவர்கள் எங்கே புரிந்துகொள்ளப் போகிறார்கள்?'

பண்டித்ஜி பதிலுரைத்தார்--'க்வாஜா சாஹப்! நட்பு என்றால் என்ன என்று அவர்களுக்கெங்கே தெரியப்போகிறது? ஆமாம்! மறந்துபோய் விட்டேன். பலமுறை நீங்கள் உங்கள் விருப்பத்தைத் தெரிவித்திருக்கிறீர்களே! இன்று உங்களுக்கு ஒரு புதிய பரிசை அளிக்கப் போகிறேன்!'

'என்ன அது?'

'அதுதான் வீட்டில் தயார் செய்யப்பட்ட மதுபானம்—!' பிறகு ப்யாராசிங்கைப் பார்த்துப் பண்டிதர் கூறினர்—'எடுத்துவா!—தினந்தோறும் நினைப்பதுண்டு க்வாஜா சாகப் அருந்தவில்லையே என்று. உம், சீக்கிரம் எடுத்து வா!'

'எடுத்து வர்றேனுங்க' என்று சொல்லிய ப்யாராசிங் அருகில் அமர்ந்திருந்த தன் சகோதரி மகன் தன்னுசிங்கின் தோள்களை உலுக்கியபடி கட்டளையிட்டான்—'தன்னே! போய் சித்தியிடம் சொல்லி வைக்கோல் வைத்திருக்கும் அறையின் ஓரத்தில் கட்டில்களை நகர்த்திவிட்டு, கீழே வைத்திருக்கும் சிறு பானையை எடுத்துத் தரச் சொல்லு. பானையின் வாயை மாவால் மூடியிருக்கிறேன். எங்காவது மோதி உடைத்துவிடப் போகிருய்! போ! என் சிங்கக் குட்டியில்லே, எடுத்துக் கொண்டு ஓடிவா!'

சிறிது நேரத்தில் சிறுவன் பானையைக் கொண்டுவந்து க்வாஜா சாஹுபின் முன்பு வைத்துவிட்டான். க்வாஜா சாஹுப் ஏற்கெனவே போதையில் மூழ்கிக் கிடந்தார். இந்தப் புதிய பரிசைக் கண்டதும் துள்ளிக் குதித்தார். முதலில் விரல்களைப் பானைக்குள்விட்டு ருசி பார்த்தார். மனதிற்குப் பிடித்ததால் கைகளால் அள்ளிக் குடித்தார். நாக்கை சப்புக்கொட்டிய படியே மகிழ்ந்தார்—'ஆகா! பண்டித்ஜி! இது மிகவும் ருசியான பொருளாயிற்றே!'

'பின்பு நான் உங்களிடம் பொய்யா சொன்னேன்?'

'இதுவரை இந்த மதுபானத்தை நீங்கள் தருவித்ததே கிடையாதே!'

'உங்களிடம் அஞ்சி வாங்காமலிருந்தேன். இல்லாவிட்டால்...!'

'பிரமாதம் போங்கள்! என்னிடம் பயமா? நான் உங்களுடன் பிறந்த சகோதரனாயிற்றே! இனி எனக்கு இதையே (பானையில் டம்பளரைவிட்டு எடுத்தபடியே) கொடுங்கள். இதோ நீங்களும் சுவைத்துப் பாருங்கள். மிகத் தரமான சரக்கு!'

இரவு பன்னிரண்டு மணி வரை கூட்டம் மிகுந்த ஆர்ப்பாட்டத்துடன் விளங்கிற்று. கடைசியில் கூட்டம்

கலந்தது. அப்போது யார் எந்த நிலையில் இருந்தார், எப்படி தத்தம் வீடு போய்ச் சேர்ந்தனர் என்பது யாருக்கும் தெரியாது.

[ 4 ]

மாலை நேரம். மெள்ள மெள்ள இருள் நாற்புறங்களிலும் சூழ ஆரம்பித்தது. அப்போது ஒரு வண்டி கிராமத்திற்கருகே வந்து நின்றது. ஒரு முஸ்லீம் வாலிபன் வண்டியிலிருந்து இறங்கி வழிப்போக்கனைக் கேட்டான்—'ஐயா, பண்டிதர் ராதாகிருஷ்ன் வீடு எங்கே இருக்கிறது?'

'அதோ எதிரேயுள்ள வீட்டில் தானிருக்கிறார். ஏன்? அவரிடம் ஏதாவது வேலையாக வந்திருக்கிறீர்களா?'

'அவரிடம் ஒரு முக்கியமான வேலையிருக்கிறது.' வண்டியில் உட்கார்ந்திருந்த ஒரு பெண்மணியைப் பார்த்தபடியே இளைஞன் கூறினான். பிறகு வண்டியினருகே சென்று அவளிடம் சொன்னான்—'வாருங்களம்மா நான் உங்களை அவருடைய வீட்டிற்குக் கொண்டு சேர்க்கிறேன்.'

பெண்மணி பேசாமல் அவன் பின்னே சென்றாள். சிறிது நேரத்தில் இருவரும் பண்டிதர் ராதாகிருஷ்னின் வீட்டிற்கெதிரே போய்ச் சேர்ந்தனர். வாலிபன் கதவைத் தட்டினான். உள்ளேயிருந்து ஒரு மெலிந்த சிறுவன் வந்து 'யார் வேண்டும்?' என்று கேட்டான்.

'பண்டித்ஜி வீட்டில் இருக்கிறாரா? அவரைப் பார்க்க வேண்டும்' என்று இளைஞன் பதிலுரைத்தான்.

'அவர் வீட்டில் தானிருக்கிறார். ஆனால், இப்போது அவரை நீங்கள் பார்க்க முடியாது. அவர் பூஜை செய்யும் நேரம் இது.'

'பரவாயில்லை. நாங்கள் சிறிது நேரம் காத்திருப்போம். எவ்வளவு நேரத்தில் பூஜையை முடிப்பார்?'

'இன்னும் ஒரு மணி நேரமாகும்!'

'சரி, பூஜையை முடித்த பிறகு அவருக்குத் தெரிவியுங்கள்!'

'சரி' என்று கூறிவிட்டுச் சிறுவன் உள்ளே சென்று விட்டான்.

சுமார் முக்கால் மணி நேரங் கழித்துப் பண்டிதர் வெளியே வந்தார். இளைஞன் எழுந்து அவருக்கு வணக்கம் தெரிவித்தான்.

வந்தவுடனேயே பண்டிதர் கூறினார்—'கொஞ்சம் வாசற் கதவிற்கு வெளியே போய் நில். இது பிராம்மணருடைய வீடு என்பது தெரியாதா ?'

இளைஞன் தன் தவறை நினைத்து வெட்கமடைந்தான். பிறகு கூறினான்—'மன்னித்துவிடுங்கள். உண்மையில் தவறு செய்துவிட்டேன் !'

இளைஞன் பெண்மணியைக் காண்பித்துக் கூறினான்—'இந்தப் பெண்மணி இன்று காலையில் இந்தக் கிராமத்திற்கு வெளியே மூர்ச்சித்துக் கிடந்தார்கள். நானும் என் தாயும் இவர்களை எங்கள் கிராமத்திற்கு எடுத்துச் சென்றோம். அப்போது அக்கம் பக்கத்தில் ஒருவரும் இருக்கவில்லை. இவருடைய நிலைமையும் கவலைக்கிடமாக இருந்தது.

இப்பொழுது அல்லாவின் கருணையால் இவருடைய உடல் நிலை சரியாகிவிட்டது. தான் காலஞ் சென்ற லாலா மிட்டாமலின் மனைவி என்று இவர் கூறினார். மற்றவைகளை நீங்களே விசாரித்துக் கொள்ளுங்கள். எப்படியாவது இவரை வீட்டில் கொண்டு சேர்த்து இவருடைய வாரிசுகளோடு பேச்சு வார்த்தை செய்து வையுங்கள். இது உங்களுடைய பெரிய கருணையாகும்' இளைஞன் மறுபடியும் கூறினான், 'சகோதரி ! நீங்களே வந்து பண்டிதரிடம் கூறுங்கள்'

இந்தப் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த பண்டிதரின் முகம் கோபத்தால் சிவந்தது. அவர் இளைஞனிடம் கூறினார், 'இளைஞனே ! உன் உடைகள் படித்தவர்களது போல் காணப் படுகிறது. ஆனால் நீயோ கல்வியற்றவனாகத் தெரிகிறாய்.'

இளைஞன் ஆச்சரியத்துடன் கூறினான், 'பெரியவரே, உங்களைப் போன்ற பெரியோர்களுக்கு எதிரில் நான் உண்மையிலேயே கல்வியற்றவன்தான். ஆனால் நான் எப். ஏ. தேறியிருக்கிறேன். நான் ஏதாவது தவறாகப் பேசியிருந்தால் மன்னிக்க வேண்டுகிறேன்.'

பண்டிதர் கூறினர், 'எனக்குப் புரிந்துவிட்டது. இந்த ஆங்கிலம்தானே நமது இந்தியாவையே அழித்து விட்டது. நீ ஆங்கிலம் கற்காமல் இருந்திருந்தால் ஒரு இந்துப் பெண்ணை "சகோதரி" என்று கூறும் தவறு செய்திருக்கமாட்டாய். உன்னுடன் குதிரை வண்டியில் உட்காரவைத்துக் கொண்டு உன்னுடைய வீட்டிற்கு அழைத்துச் சென்று இந்தப் பெண்ணின் வாழ்க்கையை பாழ்படுத்தி யிருக்கமாட்டாய்.'

பண்டிதருடைய இந்தச் சொற்களைக் கேட்ட இளைஞனுக்கு ஒன்றும் புரியவில்லை. இவருக்கு என்ன விடை அளிப்பது என்று அவன் யோசிக்கலானன். கடைசியாக அவன் கூறினன், 'நல்லது; நான் என்னுடைய தவறுகளுக்கெல்லாம் மன்னிப்பு வேண்டுகிறேன். தயவுசெய்து தாங்கள் துன்பத்திலிருக்கும் இந்தப் பெண்மணியை இவர்களுடைய வீட்டில் கொண்டு சேர்த்துவிடுங்கள். இந்தப் பெண்மணி தன் நிலையைப் பற்றி கூறியதிலிருந்து இவர்களுக்குப் பெருத்த கொடுமை இழைக்கப்பட்டிருக்கிறது என்று தெரியவருகிறது.'

பண்டிதர் இன்னும் வேகமாகப் பேசலானர், 'அது முடியாது. இப்பொழுது இவள் இந்துமதத்திலிருந்து தவறி விட்டாள். இவளை எப்படியாவது......(ஏதோ யோசித்துக் கொண்டு பற்களில் விரலை வைத்தவாறு) இவளுடைய நிலையைப் பார்த்து எனக்கு வேதனையாகத்தான் இருக்கிறது. இவளுடைய கணவனின் மறுமனைவி பிள்ளைகள் இவளை வீட்டைவிட்டு விரட்டிவிட்டார்கள் என்று நேற்று கேள்விப்பட்டதிலிருந்து நான் சாப்பிடவேயில்லை. ஆனல் (சூர்தேயியைப் பார்த்து) மகளே! நீ உள்ளேபோய் உட்காரு. நான் அந்தப் போக்கிரிகளை அழைத்து இப்பொழுதே சரிப்படுத்துகிறேன். நீ கவலைப் படாதே. (ஏப்பம் விட்டவாறு) ஹரி...ஓ...ம்...'

பண்டிதர் கோபத்தை விட்டுவிட்டு கருணை உடையவராக மாறியதைப் பார்த்து இளைஞனின் கண்களில் ஆனந்தக் கண்ணீர் துளிர்த்தது. அவன் மனம் நெகிழ்ந்து பண்டிதருடைய பாதங்களில் வணங்கிக் கூறலானன், 'தாங்கள் உண்மையில் ஆண்டவன்தான். நான்......'

அவன் இன்னும் ஏதாவது பேசுவதற்கு முன்பே பண்டிதர் இரண்டு மூன்று அடிகள் பின்னால் நகர்ந்தவாறு கூறினார், 'அடேடே, காலைத் தொட்டுவிடாதே. இந்தக் குளிரில் நான் ஸ்நானம் செய்யவேண்டிவரும்.'

தனது பொறுமையின்மையை நினைத்து இளைஞன் வெட்கமடைந்தான். அவன் தொலைவிலிருந்த கைகூப்பி, தலை குனிந்து வணங்கியவனாகப் பின்னால் நகர்ந்தான் அவன் போகும்பொழுது பெண்மணியைப் பார்த்தவாறு கூறினான், 'நல்லது. நான்...' உடனே அவனுக்குத் தன் பழைய தவறு நினைவிற்கு வந்தது அவன் ஏதும் பேசாமல் வண்டியில் போய் உட்கார்ந்தான். வண்டிக்காரன் குதிரையைச் சவுக்கால் அடித்தான். வண்டி ஓட ஆரம்பித்தது. வண்டி பார்வையிலிருந்து அகலும் வரையில் குர்தேயி நன்றியுடன் அந்தப் பக்கமே பார்த்துக்கொண்டிருந்தாள்.

குர்தேயி உள்ளே போய்விட்டாள். எதிரேயுள்ள அறையின் இடதுபுறம் பண்டிதரின் பூஜை அறை இருந்தது. அவர் பூஜைக்காக அறைப் பக்கம் போகும்பொழுது குர்தேயியிடம் கூறினார், 'மகளே! நீ எதிரேயுள்ள ஆசனத்தில் உட்கார்ந்திரு. நான் இதோ பூஜையை முடித்துக்கொண்டு வந்துவிடுகிறேன். ஹரி...ஓ...ம்.'

அவள் உடல் குறுகியவளாய் ஒரு மூலையில் தரையில் உட்கார்ந்தாள். பண்டிதர் பூஜையில் ஈடுபட்டார். முதலில் அவர் சந்தியாவந்தனம் செய்தார். பிறகு ருத்ராட்சத்தைக் கையில் வைத்துக்கொண்டு வெகுநேரம் ஜபம் செய்துகொண்டிருந்தார். அதன் பிறகு அவர் தியானம் கலைந்தது. அவர் எழுந்து மெதுவாக ஏதோ மந்திரத்தை ஜபித்தவாறு குர்தேயியின் அருகில் வந்து கட்டிலில் உட்கார்ந்து கொண்டார். பின்னர் அவர் பேசலானார், 'மகளே! இப்பொழுது சொல்லு. என்ன சொல்ல விரும்புகிறாய்?'

சிறிது நேரம் மௌனமாக இருந்த பின்னர் புல்லால் நிலத்தைக் கீறியவாறு அவள் மெதுவான குரலில் கூறினாள், 'தங்களுக்குத் தெரியாதது என்ன?'

பண்டிதர் ஒரு ஏப்பத்துடன் நீண்ட குரலில் 'ஹரி...ஓ...ம்' என்றவாறு வயிற்றைத் தடவிக்கொண்டு கூறினர், 'ஆமாம் கரம்சந்த் உன்னை அடித்து வீட்டைவிட்டு விரட்டி விட்டதாக ராஜாராம் (பண்டிதரின் வேலையாள்) என்னிடம் கூறினன். நான் பூஜையில் ஈடுபட்டிருந்தேன். அவனிடம் கேட்க நேரமே கிடைக்கவில்லை. ஹரி...ஓ...ம்.'

தயங்கியவாறு குர்தேயி கூறினள், 'தங்களுக்கு ஞாபக மில்லாமலிருக்கும். அப்பொழுது தாங்கள் அங்கேதான் நின்று கொண்டிருந்தீர்கள். தாங்களும் கரம்சந்தின் காதில் ஏதோ சொல்லிக் கொடுத்தீர்கள்.'

பண்டிதர் ஏதோ மறந்துபோனதை நினைவுபடுத்திக்கொள் ளுவதுபோல் விரலால் காதைக் குடைய ஆரம்பித்தார். பின்னர் அவர் கூறலானர், 'ஆமாம். ஆமாம். இப்பொழுது நினைவிற்கு வந்தது. சிவசிவா! இந்த மூளை எத்தனை பலவீன மாய் போய்விட்டது! இரவில் சாப்பிட்ட சாப்பாடுகூட மறந்து போய்விடுகிறது. சரி. அப்பொழுது பூஜைக்கு வேண்டிய சாமான்கள் கொண்டுவந்து கொண்டிருந்தேன். உன் வீட்டு வழியாக வரும்பொழுது அழும் குரல் கேட்டது. சரிதான். நான்தான் "இந்தப் பெண்ணைக் கொடுமைப்படுத்தாதே. சொத்தில் இவளது பங்கைப் பிரித்து ஒப்படைத்துவிடு" என்று அவன் காதில் ரகசியமாகக் கூறினேன். ஆனல் அந்தப் போக்கிரிதான் யார் சொல்வதையும் கேட்கவில்லையே. பிறகு என்ன நடந்தது?'

குர்தேயி அப்பொழுதிலிருந்து இதுவரை நடந்த தனது துன்பக் கதையைக் கூறினள். அப்துல் கஃபூர், அவனுடைய தாய் இருவருடைய தாராள மனப்பான்மையையும் உதவியை யும்பற்றிக் கேட்டதும் பண்டிதர் கோபத்தால் உதட்டைக் கடித்தவாறு கூறலானர், 'மகளே! நீ இவர்களுடைய சாமர்த்தி யத்தை இப்பொழுது புரிந்துகொள்ள முடியாது. இவர்கள் உன்னுடைய மதத்தைக் கெடுத்துவிட்டார்கள். இன்னும் இவர்கள் என்னென்ன கெட்ட காரியங்கள் செய்வார்களோ தெரியாது. அந்தக் கிராமத்து முஸ்லீம் ஒருவன் மயக்கமாக இருந்த உன்னைத் தூக்கிக்கொண்டு போனன் என்று நேற்று

நான் கேள்வியுற்றபொழுது என் உயிரே போய்விட்டது. மிலேச்சர்கள் இவ்வாறு ஒரு இந்துப் பெண்ணைக் கொடுமைப் படுத்துவதா? நான் அந்த நிமிடமே என்னுடைய வேலையா ளைக் குதிரையில் அனுப்பினேன். உடனே பெண்ணை என்னு டைய வீட்டில் கொண்டுவந்து சேர்க்கும்படியும், இல்லையென் ருல் அந்தக் கிராமம் முழுவதிற்கும் ஆபத்து விளையும் என்று அவர்களிடம் சொல்லும்படியும் அவர்களிடம் கூறினேன். அதன் முடிவுதான், உன்னை அந்தப் போக்கிரி பேசாமல் இங்கே கொண்டுவந்து விட்டுவிட்டான் (ஏப்பம் விட்டவாறு) ஹரி...ஓ...ம்.'

இதைக் கேட்டதும் குர்தேயி சிறிது ஆவேசம் கொண்டாள். ஏதோ பேசத் தொடங்கி நின்று விட்டாள். பிறகு தனது நாவை அடக்கிக் கொண்டு கூறினாள், 'நான்தான் அவர் களிடம் கூறினேன்.'

'என்ன?'

'என்னை என்னுடைய வீட்டிற்கு அனுப்பாதே. பண்டித ருடைய வீட்டில் கொண்டு போய்ச் சேர்த்து விடு என்று. தாங்கள் கரம்சந்திடம் கூறினால் அவன் தானாகவே ஏற்றுக் கொண்டு விடுவான் என்று நான் நினைத்தேன்.'

'சரிதான், நீயும் சொன்னாய். என்னுடைய செய்தியும் போய்ச் சேர்ந்தது. அப்படியிருக்கும் பொழுது அவர்கள் உன்னை எவ்வாறு கொண்டு வந்து சேர்க்காமலிருப்பார்கள்? நடந்தது நடந்து விட்டது. இப்பொழுது நீ என்ன விரும்பு கிறாய், சொல்லிவிடு.'

'எனக்கு என்னுடைய பங்கைக் கொடுக்கும்படி செய்து விடுங்கள்.'

'ஆனால் நீ முன்போல் வீட்டில் இருந்து விடுவதில் உனக்கு என்ன கஷ்டம்?'

'அவர்கள் என்னை ஒரு நிமிடம் கூட இருக்க விட மாட்டார்கள்.'

சிறிது யோசித்தவாறு பண்டிதர் கூறினார், 'நல்லது நீ போய் மேலே உள்ள அறையில் உட்கார்ந்திரு. நான் அவர் களைக் கூப்பிடுகிறேன்.'

குர்தேயி தலை குனிந்தவாறு மேலே போய்விட்டாள். பண்டிதர் ராமநாம அங்கவஸ்திரத்தைத் தோளில் போட்டுக் கொண்டு பாதரட்சை அணிந்தவாறு வெளியே போய்விட்டார்.

## [ 5 ]

சிறிது நேரத்திற்குப் பிறகு லாலா கரம்சந்தின் வீட்டு வாயிலில் பஞ்சாயத்துத் தலைவர்களின் கூட்டம் நடந்து கொண்டிருந்தது. அதற்கு அடிப்படையாக இருந்தவர் நமது பெரியவர் பண்டிதர்தான்.

சௌதரி சாகப் தித்தாமல் உக்காவைத் திருப்பி ஒரு முறை புகையை இழுத்தார். பின்னர் இருமியவாறு கூறினார், 'ஆமாம் கரம்சந்த், அந்த விஷயம் என்னவாயிற்று?'

கரம்சந்த் தலைப்பாகையைச் சொறிந்தவாறு கூறினான், 'சௌதரி, எல்லாம் உங்களுக்கு எதிரில்தான் நடந்தது. இன்று பண்டிதர் ஒரு புதுச் செய்தி கொண்டு வந்திருக்கிறார். இதையும் கேட்டுக் கொள்ளுங்கள்.'

இதற்குள் பண்டிதர் ஏப்பம் விட்டுக் கொண்டு 'ஹரி ஓ...ம்' என்று நீண்ட குரலில் கூறியவாறு பேசத் தொடங்கினார். 'சௌதரி, என்ன சொல்லட்டும்? சொல்ல என்னதான் இருக்கிறது? பயங்கரமான கலிகாலம் வந்து விட்டது. இத்தனை வயது அமைதியாக மதத்தைக் காப்பாற்றியவாறு கழிந்து விட்டது. ஆண்டவனே! இப்படிப்பட்ட அபசாரங்களைப் பார்ப்பதற்கு முன்னாலேயே என்னை அழைத்துக் கொண்டுவிடு என்று இரண்டு நேரமும் கைகூப்பி வேண்டிக் கொண்டே இருக்கிறேன். ஆனால் தலையில் என்ன எழுதியிருக்கிறதோ, தெரியவில்லை (ஏப்பம் விட்டாறு) ஹரி ஓ...ம்.'

மக்களனைவரும் இந்தப் புதுச் செய்தியைக் கேட்க அவசரப் பட்டார்கள். 'பெரியவரே! சொல்லுங்கள் சொல்லுங்கள்' என்று சத்தம் போட்டார்கள்.

பண்டிதர் கோபத்துடன் சொன்னார், 'அப்பா, நான் என்ன சொல்ல இருக்கிறது? இதெல்லாம் உங்களுடைய கெட்டப் போக்கின் பலன்தான். நாளுக்கு நாள் சாத்திர முறைகளை

மீறிச் செல்வது, பூஜை, சந்தியாவந்தனம் முதலியவற்றை விட்டுவிட்டு கெட்ட செயல்களில் ஈடுபட்டிருப்பது, இப்படி யிருந்தால் பூமியில் கொடுமைகள் ஏற்படாமல் என்ன ஏற்படும்? சிவ, சிவ, சிவா! (சிறிது நேரம் பேசாமலிருந்து விட்டு பின்னர் கரம்சந்தைப் பார்த்து)

'அப்பா! அந்த குணங்கெட்ட பெண்ணுக்கு அதிகப்படியாக இடம் கொடுக்காதே, அவளை உரிய இடத்தில் இருக்க வைக்க முயற்சி செய் என்று ஒரு முறை அல்ல, ஆயிரம் முறை சொன்னேனே! கடைசியில் நடக்க வேண்டியது நடந்தே தீர்ந்தது. அந்தக் கேடுகெட்டவள் முஸ்லீம்களின் வீட்டில் போய் இருக்கிறாள். இதைக் கேட்டது முதல் உள்ளுக் குள்ளேயே என் உயிர் தாழ்ந்து போய்விட்டது. ஆண்டவனுக் குத்தான் தெரியும். நாம் இந்த ஊரில் இருக்கும் போது இப்படி ஒரு அக்கிரமம் நடப்பதா? இது நமக்கெல்லாம் ஒரு பெருத்த அவமானமாகும். (ஏப்பம் விட்டவாறு) ஹரி ஓ...ம்.'

தன் சமுதாயத்திடம் பண்டிதருக்கு இருக்கும் பரந்த உள்ளத்தையும் கருணையையும் கண்ணுற்று எல்லோரும் 'வாழ்க, வாழ்க' என்று ஒரு குரலில் புகழத் தொடங்கினார்கள்.

பின்னர் பண்டிதர் கரம்சந்தையும் ஸோஹன்லாலையும் பார்த்துக் கூறினார், 'தற்காலத்துப் பிள்ளைகளின் அறிவு மங்கிப் போய்விட்டது. எதைச் செய்தாலும் தன் இஷ்டப்படி செய்கிறார்கள். என்னிடம் நீங்கள் முன்பே கேட்டிருந்தால் உங்களுக்கு என்ன குறை ஏற்பட்டிருக்கும்? இந்தப் பிராம் மணன் உங்களுக்கு விரோதி இல்லையே? உங்களுடைய மூதாதையர்களின் கருணையில்தானே நான் வளர்ந்திருக் கிறேன். நல்ல யோசனை சொல்ல முடியாவிட்டாலும் தவறான யோசனை யொன்றும் சொல்லமாட்டேனே! நல்லது அப்பா; இந்தச் சச்சரவுகளில் எனக்கு என்ன சம்பந்தம்? இஷ்டப்படி நீங்கள் விரும்பியதெல்லாம் செய்து கொள்ளுங்கள். நான் ஏன் வீணாகத் தலையிட வேண்டும்?' இவ்வாறு கூறிக் கொண்டே முழங்கால்களில் கையை வைத்துக்கொண்டு பண்டிதர் எழுந்தார்; பின்னர் அங்கிருந்து போகத் தொடங்கினார்.

இதைக் கண்டு எல்லோரும் கவலைப்பட்டார்கள். 'பெரியவரே! உட்காருங்கள். ஏன் கோபப்படுகிறீர்கள்? சொல்வதைக் கேளுங்கள்' என்று சொல்லிக் கொண்டு அவர்கள் பண்டிதரைச் சூழ்ந்து கொண்டார்கள். ஒருவன் அவர் பாதங்களில் தன் தலையை வைத்து வணங்கினான், மற்றொருவன் அவர் கையிலிருந்து தடியை வாங்கிக் கொண்டான், மற்றும் ஒருவன் அவர் பாதையைத் தடுத்துக் கொண்டு நின்று விட்டான். வேறு வழியின்றி பண்டிதர் உட்கார வேண்டி வந்தது. இதற்குள் கரம்சந்த் கழுத்தில் வேஷ்டித் தலைப்பைப் போட்டுக்கொண்டு பண்டிதரின் காலில் விழுந்து நடுங்கியவாறு சொல்லலானான், 'ஐயா! என்னுடைய மான மரியாதை உங்களுடைய கையில்தானிருக்கிறது. இந்த விஷயத்திற்கு ஒரு முடிவு கட்டாயம் செய்து விடுங்கள். இல்லையென்றால் இந்தச் சமுதாயம் எங்களை இருக்க விடாது.'

அருகில் உட்கார்ந்திருந்த ஒருவன் கூறினான், 'ஆமாம் ஐயா! இதனால் இந்த அப்பாவிக்கு எங்கும் கெட்ட பெயராக இருக்கிறது.'

அந்தக் கூட்டத்தில் முன்ஷி தேவிதயாளின் மகன் மோகன் லாலும் உட்கார்ந்திருந்தான். சில நாட்களாக அவன் டி.ஏ.வி. கல்லூரியை விட்டு வந்திருந்தான். அவன் கூறினான், 'பண்டிதரே, உண்மையிலேயே இது ஒரு உபகாரமாகும். தங்களைப் போன்ற பெரியோர்களின் முயற்சியால்தான் இப்படிப்பட்ட பெருத்த பிரச்சினைகளைத் தீர்க்க முடியும். இப்பொழுது கூட நீங்கள் முயற்சி செய்தால் அவள் திரும்பி வரமுடியும்'

'என்ன சொன்னாய்? அவள் திரும்பி வரமுடியுமா?' என்று கூறிக்கொண்டு பண்டிதர் பஞ்சாயத்துக்காரர்களை நோக்கினார். 'இந்த மூர்க்கனின் மூளையைப் பார்த்தீர்களா?' பிறகு அவர் அந்தப் பையனைப் பார்த்துக் கூறினார். 'உன் கல்லூரி உனக்கு இந்தக் கல்வியைத்தான் கற்பித்ததா? அப்பா! வாயிருக்கும் அளவுதான் பேசவேண்டும். பெரியோர்கள் பேசும் பொழுது நீ எதற்காகத் தலையிடுகிறாய்?

மாற்ருேர் கல்யாண ஊர்வலத்தில் முட்டாள்கள் ஆட்டம் ஆடினூர்கள் என்ற பழமொழி தெரியுமல்லவா ?'

இதைக் கேட்டதும் எல்லோரும் கடைக்கண்ணுல் மோகன் லாலை ஏளனமாகப் பார்க்கலானூர்கள். ஆனல் மோகன்லால் பேசாமலிருக்க முடியவில்லை. அவன் கூறினுன் : 'மன்னிக்க வேண்டும் பெரியவரே! நான் தவறு ஒன்றும் சொல்லிவிட வில்லையே ! அவளை மறுபடியும் நமது சமுதாயத்தில் சேர்த்துக் கொள்ளுவதில் என்ன தவறு இருக்கிறது? பாவம், அவள் ஒரு இளம் விதவை. லாலா சரம்சந்த் அவளைக் கவனித்துக்கொள்ள முடியவில்லை என்ருல் நல்ல யோக்கியமான வரனை......'

இந்தத் தடவை பண்டிதருடைய கோபம் பன்மடங்காக ஆகிவிட்டது. அவர் கோபத்துடன் அவனுடைய பேச்சை இடையிலே மறித்துப் பேசலானூர், 'போதும், நிறுத்து! இப்படி மிலேச்சனைப்போல் மறுபடியும் பேசாதே. சோப்பைப் பூசிக்கொண்டுவிட்டால் கழுதை பசுவாகிவிட முடியுமா? இந்து மதத்தில் விதவை மறுமணத்தைப்பற்றிப் பேசி இந்தப் புனிதமான சாதியைக் களங்கப்படுத்துவதில் உனக்கு வெட்க மாக இல்லை? (நெற்றியில் இருமுறை கையால் அடித்துக் கொண்டு) நண்பர்களே ! அக்கிரமக்காலம் வந்துவிட்டது. இந்த ஆரிய சமாஜிகளும் அகாலிகளும் சேர்ந்து பாரதத்தின் நாகரிகத்தையே அழித்து விட்டார்கள். (ஏப்பம் விட்டவாறு) ஹரி ஓ......ம்.'

மோகன்லால் மறுபடியும் கூறினுன், 'ஐயா, அப்படியே தங்கள் சொற்படி கழுதை பசுவாக முடியாதென்ருல் பசு மட்டும் எவ்வாறு கழுதையாக முடியும்?'

இப்பொழுது எல்லோரும் சேர்ந்து கோபத்துடன் மோகன் லாலைப் பேசவிடாமல் செய்தபிறகுதான் அமைதியானூர்கள். லாலா கன்னையாலால் கூறினுர், 'சிறுவனே, நிறுத்து. இனி மேலும் பேசிக்கொண்டே போகாதே. காலஞ் சென்ற ஒரு உயர்குலத்து மனிதனின் விதவை மனைவியைப்பற்றி இவ் வாறு பேசுவதற்கு நீ வெட்கப்படவேண்டும். இவ்வளவு படித்தவனுக இருந்தும் நமது தர்மசாத்திரங்களின் கட்டளை என்ன என்று உன்னுல் உணர முடியவில்லையா? (பண்டிதரைப்

பார்த்து) ஆமாம் பண்டிதரே நீங்கள் உங்கள் கடமையைச் செய்துகொண்டு போங்கள். இவன் ஒரு தான்தோன்றிப் பையன். இவனுடைய சொற்களைக் கேட்டு கோபித்துக் கொள்ளக் கூடாது. அந்தப் பெண்ணுக்கு என்ன ஏற்பாடு செய்யவேண்டும் என்று நீங்கள் சொல்லுங்கள்.'

கரம்சந்த் கூறினான், 'பஞ்சாயத்துக்காரர்களே! நான் ஒரு விண்ணப்பம் செய்ய விரும்புகிறேன். அவள் மரியாதையுடன் விதவை வாழ்வைக் கழிக்க விருப்பியிருந்தால் என் வீட்டில் அவளுக்கு என்ன குறை இருந்தது? ஆனால் நான் பல நாட்களாகப் பார்த்துக்கொண்டிருந்தேன். அவளுடைய நடத்தை மாறுபட்டுவிட்டது. ஆனாலும் நான் எருமை மாட்டைப்போல் அமைதியாக இருந்தேன். நமக்கு என்ன, தான் செய்யும் கருமத்தின் பயனை அவள்தானே அனுபவிப்பாள் என்று எண்ணிக்கொண்டிருந்தேன். ஆனால் வாயிலிருந்து எச்சில் கீழே விழுந்தால் யார்தான் என்ன செய்ய முடியும் என்று சொல்லப்பட்டிருக்கிறது இல்லையா? அவளோ எங்களது மூதாதையர்களின் மரியாதையை அழிக்கத் துணிந்து விட்டாள். என்னை என்ன கேட்கிறீர்கள்? வயிற்றைக் கிழித்துக்கொண்டால் துணி எவ்வாறு என்று சொல்லுவதில்லையா? இதெல்லாம் சொல்லக்கூடியவைகளா? ஆனாலும் நான் பொறுமையாகத்தான் இருந்தேன். வேறு நான் என்னதான் செய்வேன்? நீங்களே சொல்லுங்கள். அவளைக் கயிற்றால் கட்டவேண்டியதுதான் மிச்சம். அதற்குப் பிறகு அவள் எவ்வாறு தனக்குத் தானே இழுக்கைத் தேடிக்கொண்டு போய் விட்டாள் என்பது உங்களுக்கே தெரியும்.'

நான்கு புறத்திலிருந்தும் எல்லோருடைய குரலும் ஒன்றாக எழும்பிற்று, 'சரி, சரி, இந்த அப்பாவிக்கு அவள் அந்நிய மானவள்தான். தான் பெற்ற பிள்ளை கூட இவ்வளவு நன்மையைச் செய்யாது. அவளுடைய தலைவிதி கெட்டுக்கிடந்தது. அதற்கு யாரைக் குற்றம் சொல்வது?'

பண்டிதர் யோசித்துக் கூறினார், 'இப்பொழுது என்ன செய்வது?'

ராதர்சிங் என்பவர் தலைப்பாகையைப் பின்புறம் நகர்த்திக் கொண்டு கூறினார், 'செய்வது என்ன? மதத்தை மீறிச் சென்றவள் சாதியை விட்டு அகன்றுவிட்டாள். நிறைந்த வீட்டிலிருந்து வெறுங்கையுடன் வெளியேறின அந்தப் பாவிக்காக நாம் என்ன செய்ய இருக்கிறது? அவளே அனுபவித்துக் கொள்ளட்டும்.'

எல்லோரும் ஒருமுகமாகக் கூறினார்கள், 'அதுதான் சரி. பெரியவர் சரியாகக் கூறினார்'

பண்டிதரும் கூறினார், 'அந்தப் பாவி அங்கேயே இருந்து கொள்ளட்டும் என்பதுதான் என் எண்ணமும். வேறு என்ன தான் செய்ய முடியும்? என்னப்பா கரம்சந்த்! உன் எண்ணம் என்ன? (ஏப்பம் விட்டவாறு) ஹரி ஓ...ம்'

கரம்சந்த் கை கூப்பி மகிழ்ச்சிக்குரலில் கூறலானான். 'ஐயா! உங்களுடைய எண்ணமே என் எண்ணமும். நீங்கள் அறிந்தவர். அவள் இனி இந்த வீட்டில் ஒரு அடி வைக்கக் கூடாது. ஐயா! உதிர்ந்த மலரையும் உடைந்த உள்ளத்தையும் சேர்க்கமுடியுமா?'

எல்லோரும் இதனை ஏற்றுக் கொண்டார்கள். அனைவரும் பண்டிதருடைய பெருந்தன்மையையும் கரம்சந்தின் திறமையையும் புகழ்ந்தவாறு மெதுவாக எழுந்து போய்விட்டார்கள். பண்டிதரும் 'ஹரி ஓ...ம்' என்று கூறிக்கொண்டு எல்லோருக்கும் பின்னால் எழுந்தார். போகும்பொழுது கரம்சந்த் அவருடைய கையில் சில வெள்ளி நாணயங்களை அழுத்தியவாறு கூறினான் 'ஐயா! என்னிடத்தில் எப்பொழுதும் இப்படியே கிருபையோடு இருக்கவேண்டும்.'

பண்டிதர் நிறைந்த கையால் சட்டைப் பையைத் துழாவிக் கொண்டே மற்றொரு கையால் கரம்சந்தின் தோளைப் பிடித்துக் கொண்டு கூறினார். 'இருக்கட்டும், இருக்கட்டும்.' மறுபடியும் அவர் கூறலானார், 'உண்மைதான். நான் சொன்னேனே......'

'ஆமாம். அப்பொழுதே நான் க்வாஜா சாஹபிடம் போனேன். முதலில் அவர் ஏற்றுக்கொள்ள மறுத்தார். ஆனால் நீங்கள் சொன்னது என்று தெரிந்ததும் ஏற்றுக் கொண்டுவிட்டார்.'

'நல்லது; எத்தனை ரூபாய்......?'

'ரொக்கமாக ஐம்பது ரூபாய் கொடுத்துவிட்டு வந்தேன். எல்லாம் சரியாகிவிட்டால் இன்னும் ஐம்பது ரூபாய் கொடுப்பதாகச் சொல்லிவிட்டு வந்தேன்.'

'நல்லது, அதிகச் செலவு இல்லாமல் வேலை முடிந்துவிட்டது.'

'ஆமாம். எல்லாம் தங்களுடைய கருணையின் பயன்தான். இல்லையென்றால்......?'

அதற்குப் பிறகு அவனை ஆசீர்வதித்துவிட்டு பண்டிதர் கைத்தடியை ஊன்றியவாறு மெதுவாகத் தன் வீட்டுப்பக்கம் நடக்கலானார். வீடுபோய்ச் சேருவதற்கு முன்பு அவர் எந்த வீடுகளுக்கெல்லாம் போனாரோ, அங்கே என்னென்ன யோசனைகளெல்லாம் தந்தாரோ, ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்!

## [6]

குர்தேயி கவலையில் ஆழ்ந்து கிடந்தாள். அப்பொழுது பண்டிதர் உள்ளே வருவதைக் கண்டாள். அவர் சுற்றி வளைத்து ஏதோ பேசிய பின்னர் கூறினார். 'மகளே, உனக்காக ஊர் முழுவதும் சுற்றினேன், பஞ்சாயத்தைக் கூட்டினேன். யார் முகத்தையெல்லாம் பார்க்க விரும்பமாட்டேனோ அவர்களுடைய காலிலெல்லாம் விழுந்தேன். ஆனால் ஆண்டவன் அவர்களுடைய மூளைகளையெல்லாம் ஏன்தான் மறைத்தானோ? எந்த வகையிலும் அவர்கள் கட்டுப்படவில்லை. (ஏப்பம் விட்டுக்கொண்டு) ஹரி ஓ...ம்.'

குர்தேயி மரியாதையுடன் தலைவணங்கியவளாய் கூறினாள், 'பெரியவரே, என் போன்ற துன்புற்ற பெண்ணுக்காக நீங்கள் சிரமப்படவில்லையென்றால் வேறு யார் சிரமப்படப் போகிறார்கள்?'

'ஆனால் மகளே, என் விருப்பம் நிறைவேறுமென்று தெரியவில்லை.'

'ஏன்?'

'கரம்சந்த் ஏற்றுக்கொள்ளவேயில்லை—அவள் எனக்கு எழுதிக் கொடுத்திருக்கிறள். அவளால் என்னை என்ன செய்து விடமுடியும், என்று அவன் கூறுகிறன்.'

குர்தேயி நம்பிக்கை இழந்தவளாய் பெருமூச்சு விட்டுக் கொண்டு கேட்டாள், 'மற்ற உறவுக்காரர்கள் என்ன சொன்ஞர்கள்?'

'மகளே! உறவுக்காரர்களின் கையில் என்ன இருக்கிறது? உறவினர்களால் மற்றவர்களைப் பலவந்தப்படுத்தி ஏற்றுக் கொள்ள வைக்கமுடியாதே! அது என்ன அரசாங்கக் கோர்ட்டா, நாம் நினைத்ததைச் செய்துகொள்ள?'

'இப்பொழுது நான் என்ன செய்வேன்?'

சிறிது யோசித்த பிறகு பண்டிதர் கூறிஞர், 'நான் என்ன சொல்ல இருக்கிறது மகளே! இது ஒரு பெரிய பிரச்சினை, வழக்குத் தொடர்ந்தாலும் ஏதும் நடக்கும் என்று தோன்றவில்லை. ஏனென்றல் அதற்குப் பணம் தேவை.'

'எவ்வளவு செலவாகும்?'

'குறைந்தது முன்னூறு ரூபாய் கட்டாயம் வேண்டும்.'

தன் கைவளையைப் பார்த்து குர்தேயி கேட்டாள், 'இது என்ன விலைக்குப் போகும்?'

பண்டிதர் பேராசைக் கண்ணேடு வளையைப் பார்த்துக் கூறிஞர், 'ஏதோ நூற்றைம்பது இருநூறு ரூபாய்க்குப் போகும்.'

குர்தேயி நம்பிக்கை இழந்தாள்.

பண்டிதர் ஆறுதல் அளித்தவாறு கூறிஞர், 'மகளே, நீ கவலைப்படாதே. மீதப் பணத்தை நான் போட்டு உன்னுடைய காரியத்தை முடித்துவைக்கத் தயாராக இருக்கிறேன்.'

குர்தேயி கையிலிருந்த வளையைக் கழற்றி பண்டிதருடைய கால்களில் வைத்துவிட்டு தலைவணங்கிக் கூறிஞள், 'ஐயா, நான் உங்களையே நம்பியிருக்கிறேன். உங்களால்தான் என்னைக் காப்பாற்றமுடியும்'

பண்டிதர் அவளுடைய தலையைக் கையால் தடவியவாறு கூறிஞர், 'மகளே, ஆண்டவன் உன் காரியத்தை முடித்துவைப்பான். நான் இன்று முதல் இந்த வழக்கின் பொறுப்பை ஏற்றுக்

கொள்ளுகிறேன். ஆண்டவன் கருணையால் மிக விரைவில் வெற்றி கிடைக்கும் என்ற நம்பிக்கையை உனக்கு அளிக்கிறேன். (ஏப்பம் விட்டவாறு) ஹரி ஒ...ம். ஆனால் நீ இங்கே இருந்தால் காரியம் கெட்டுப் போய்விடுமோ என்று பயமாக இருக்கிறது.'

'அப்படியானால் நான் எங்கே போவேன்? நீங்கள் கூறினால் பிறந்தகத்திற்குப் போய்விடுகிறேன். ஆனால் அங்கேயும் எனக்கு யாரும் கிடையாது. இருப்பதற்கு ஒரு வீடுதான்.'

'மகளே, நீ கவலைப்படாதே. ஸியால்கோட்டில் என்னுடைய நண்பன் ஒருவன் இருக்கிறான். நீ விரும்பினால் நான் உன்னை அவனிடம் அனுப்பமுடியும்.'

'பெரியவரே! தங்களுடைய அடைக்கலத்தில் வந்திருக்கிறேன். நீங்கள் எப்படிச் சொல்லுகிறீர்களோ அப்படியே செய்கிறேன்.'

பண்டிதர் வளையை எடுத்துச் சட்டைப் பையில் போட்டுக் கொண்டே அவளுக்கு ஆறுதல் அளித்தவாறு கூறினார், 'மகளே! நான் இப்பொழுதே அதற்கு ஏற்பாடு செய்கிறேன். நீ சாப்பாடு சாப்பிட்டுவிட்டு ஓய்வெடுத்துக்கொள். எதற்கும் கவலைப்படாதே.'

'ஐயா, நீங்கள் இருக்கும் பொழுது எனக்கு என்ன கவலை? நீங்கள் தூணைப் பிளந்து கொண்டு எனக்கு உதவி செய்ய வந்திருப்பது போல் வந்திருக்கிறீர்கள். உங்களுடைய உதவிகளுக்கு நான் எவ்வாறு கைம்மாறு செய்ய முடியும்?'

'ஹரி ஓ...ம்' என்று சொல்லியவாறே பண்டிதர் கீழே போய்விட்டார். அவள் சிறிது சாப்பிட்டுவிட்டு அறையில் இருந்த கட்டிலில் படுத்துக் கொண்டாள்.

வெகுநேரம் வரையில் அவளுக்குக் கவலையினால் தூக்கமே வரவில்லை. கடைசியில் சிறிது கண்ணயரும் பொழுது யாரோ மேலே வரும் சத்தம் கேட்டு அவள் எழுந்து உட்கார்ந்தாள். இதற்குள் பண்டிதர் ஒரு உயரமான இளைஞனுடன் அறைக்குள் வந்து அவளிடம் கூறினார், 'மகளே, நீ இன்று (இளைஞன் பக்கம் பார்த்தவாறு) இந்த என் நண்பனுடன் ஸியால்கோட் போய்விடு. இதுதான் என்னுடைய புத்திமதி.

அங்கே நீ இருப்பதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்யப்படும். உனக்கு எந்தவிதமான கஷ்டமும் ஏற்படாது.'

குர்தேயி நன்றியுடன் பண்டிதரைப் பார்த்தபடி கூறினாள். 'நான் உங்களுடைய இந்த நன்றியை ஒரு நாளும் மறக்க முடியாது.' அவள் கிளம்புவதற்குத் தயாராகி விட்டாள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு அவள் அந்த மனிதனுடன் ரயில் வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்தாள்.

[ 7 ]

குர்தேயி ஸியால்கோட் போய்ச் சேர்ந்தாள். சில நாட்களுக்குப் பிறகு இந்த நாடகத்தின் புதுக்காட்சி அவளுக்கு எதிரில் வந்தது. உண்மை பல நாட்கள் வரையில் மறைந்திருக்க முடியவில்லை. ஆண்டவனின் அவதாரம் என்று எந்தப் பண்டிதரை அவள் உள்ளத்திலேயே பூஜித்து வந்தாளோ அவர் உண்மையில் மறைந்திருந்து கடிக்கும் பாம்பாகி விட்டார். அவர் குர்தேயியின் நகையை ஏப்பம் விட்டுவிட்டு அவளை தாராசந்த் என்ற ஒரு இளைஞனிடம் விற்றுவிட்டார். அவளை இங்கே கொண்டுவந்து விட்டவன் உண்மையில் பண்டிதருடைய தரகனுவான். வினைப்பயனுல் துன்புற்ற அவள் தலையிலடித்துக் கொண்டு இருந்து விட்டாள். இப்பொழுது அவளால் என்ன செய்ய முடியும்? இப்பொழுது தாராசந்த் காட்டிய சுக போகங்களின் பேராசையில் சிக்கி அவள் தொலை தூரம் போய்விட்டாள். அவனுடைய வலையில் விழுந்து குர்தேயி தன்னையே அவனுக்கு அர்ப்பணித்து விட்டாள்.

தாராசந்த் சிறிது படித்தவன். ஒரு அரசாங்க அலுவலகத்தில் முப்பது ரூபாய் சம்பளத்தில் குமாஸ்தா வேலை பார்த்து வந்தான். அவன் குர்தேயியிடம் கூறினுன், 'என் குடும்பம் குஜரான் வாலாவில் இருக்கிறது. ஆனுல் நான் என் தந்தையின் கோபத்தினுல் வீட்டுக்குப் போவதில்லை. அங்கே லட்சக் கணக்கான ரூபாய்கள் மதிப்புள்ள சொத்து இருக்கிறது.' ஆனுல் பொய் பல நாட்கள் வரையில் மறைந்திருக்கவில்லை.

சில மாதங்களுக்குள்ளேயே தாராசந்தின் இந்தப் பொய் வெளிப்பட்டுவிட்டது. ஒரு நாள் அவனுடைய தாயிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. தாராசந்த் வீட்டிலில்லை. குர்தேயி மற்றொருவரைக் கொண்டு கடிதத்தைப் படிக்கச் சொன்னாள். அவனுடைய தாய் கடிதத்தில் எழுதியிருந்தாள் :

'நான் கூலி வேலை பார்த்து வயிற்றைக் கழுவி வருகிறேன். நீ போனதிலிருந்து எனக்கு ஒரு காசு அனுப்பவில்லை. நீ யாரோ ஒரு பெண்ணைக் கடத்திக்கொண்டு வந்திருக்கிறாய் என்றும் கேள்விப்பட்டேன். இதெல்லாம் உனக்கு நல்லதல்ல.'

குர்தேயி இப்பொழுது ஒன்றும் செய்யக்கூடிய நிலையி லில்லை. அவளுக்குப் பிறந்தகத்திலும் இடம் கிடையாது, பக்ககத்திலும் இடம் கிடையாது. அத்துடன் அவள் அறியாத வளாகவும் இருந்தாள். யார் அழைத்தாலும் அவனுடன் போய் விடுவதாக இருந்தது அவள் போக்கு, இதனால் தான் அவள் தன் மானத்தைக் காத்துக் கொள்ளாமல் தனக்கு உரிய இடத்திலிருந்து தவறி விட்டாள்.

கடைசியில் அவள் இந்த நிலையில் இருப்பதே தனக்கு நன்மை என்று எண்ணினாள். ஒன்றுமில்லா விட்டாலும் காய்ந்த ரொட்டித் துண்டாவது கிடைக்குமல்லவா? ஆனால் தலைவிதி நிழலைப்போல் அவளை இன்னும் தொடர்ந்து கொண் டிருப்பது அவளுக்குத் தெரியவில்லை.

வினைப்பயன்—அப்பொழுது தான் அரசாங்க காரியாலயங் களில் வேலையாட்களைக் குறைக்கத் தொடங்கினார்கள். தாரா சந்தும் காய்ந்த கிளையைப்போல் வெட்டி எறியப்பட்டு விட்டான். குர்தேயி நோயாளியாகக் கட்டிலில் விழுந்து கிடந்தாள்.

சில நாட்கள் முன்பு குர்தேயியின் காதலில் பித்துப் பிடித்துச் சுற்றிக் கொண்டிருந்த தாராசந்துக்கு ஒன்பது மாதங்களிலேயே அவளிடம் வெறுப்புத் தட்டிவிட்டது. இப் பொழுது அவனுக்கு குர்தேயியைக் கண்ணால் பார்ப்பதுகூட பிடிக்கவில்லை. அவன் அவளுக்கு மருந்து கொடுப்பதைக் கூட வெறுக்கத் தொடங்கினான். அவன் கெட்ட நடத்தை உள்ளவளாகவும் பிடிவாதக் காரனாகவும் சண்டை போடு

பவனாகவும் இருந்தான். அந்த வீட்டில் மனைவியின் தலை மயிரைப் பிடித்து இழுத்து, தடியால் அடிக்கும் நாடகம் தினசரி நடந்து கொண்டிருந்தது.

இப்பொழுது குர்தேயி முற்றிலும் அழிந்துபோய் விட்டாள். ஒரு புறம் உலகத்தின் தூற்றல், மற்றொரு புறம் துன்புறுத்தும் கணவன்; அது மட்டுமன்றி ஏழ்மை வேறு. எல்லாவற்றுக்கும் மேலாக குர்தேயிக்கு இப்பொழுது தன் தலைவிதி இன்னும் பயங்கரமாகக் காட்சி அளிக்கலாயிற்று. ஐயோ! பயங்கரமான நிகழ் காலத்தை உடைய அவளுடைய எதிர்காலம் எவ்வாறாக இருக்குமோ? இதை எண்ணியதும் அவள் தலை முதல் கால் வரை நடுங்கினாள். இந்தக் கணவனிடம் பெரிய நம்பிக்கைகள் வைப்பது ஒருபுறமிருக்கட்டும், சிறிய நம்பிக்கைகள் வைப்பது கூட வீண் என்பதை அவள் நேரடியாகக் கண்டு கொண்டிருந்தாள். 'எலி சாவைக் கண்டு ஓடிற்று, ஆனால் சாவே எதிரில் வந்து நின்றுவிட்டது' என்று சொல்வது உண்டு அல்லவா? இப்பொழுது இந்தப் பாவச் சுமையைத் தாங்கிக் கொண்டு எங்கே போவது, வாழ்க்கையின் எஞ்சிய நாட்கள் எங்கே எவ்வாறு கழியும் என்றெல்லாம் குர்தேயி எண்ணத் தொடங்கினாள். இருளடைந்த உள்ளத்தில் இந்தக் கேள்விக்கு 'ஒன்றும் கிடையாது' என்ற ஒரே விடை தான் கிடைத்தது.

கடைசியில் அவள் பயந்து கொண்டிருந்த அந்த நாள் அருகில் வந்துவிட்டது. கடுமையான காய்ச்சலினால் அவள் கண்ணைக் கூட திறக்க முடியாமலிருந்தாள். இந்த நிலையிலேயே பல நேரம் கழிந்துவிட்டது. ஆனால் காய்ச்சல் இறங்கவில்லை.

ஒரு நாள் நள்ளிரவில் அவள் தன் கால்களைத் தேய்த்துக் கழுவிக் கொண்டிருந்தாள். அவளுக்கு ஒரு வாய் தண்ணீர் கொடுப்பவர் கூட ஒருவரும் இல்லை. தாராசந்த் இரண்டு நாட்களாக வீட்டிற்கு வரவில்லை; அவன் வருவான் என்ற நம்பிக்கையும் இல்லை. அவன் போவதற்கு முன், 'இனி நான் வருவேன் என்ற நம்பிக்கையை விட்டுவிடு. நீ இருந்தால் இரு, செத்தால் செத்துப்போ. நான் ஆஸ்பத்திரி ஒன்றும்

திறந்து வைக்கவில்லை. நானே பசியால் வாடிக் கொண்டிருக்கிறேன். உன்னை வேறு என்றால் எப்படிக் காப்பாற்ற முடியும்? எங்கேயாவது வெளியூர்போய் நான் சம்பாதித்துக் கொள்வேன். சனியிடமிருந்து விடுதலையாவது கிடைக்கும்,' என்று சொல்லிவிட்டுப் போய் விட்டான். குர்தேயி நினைவின்றிக் கிடக்கும் பொழுது அதனைப் பயன் படுத்திக்கொண்டு அவன் வீட்டுச் சாமான்களையெல்லாம் எடுத்துக் கொண்டு போய்விட்டான். இதுதான் அவன் செய்த கொடுமையினும் கொடுமை!

அவளுடைய தலைவிதி, அவளுடைய வீடு இருந்த இடத்தில் அக்கம்பக்கத்தில் இந்துக்களின் வீடே கிடையாது.

அவள் தாகம் தாங்காது எப்படியோ தட்டுத்தடுமாறி கட்டிலிலிருந்து இறங்கி, தண்ணீர் இருக்குமிடத்திற்குச் சென்றாள். ஆனால் அவள் தலைவிதியைப்போல் குடத்திலும் தண்ணீர் இல்லை. அதிர்ஷ்டவசமாக ஒரு டம்ளரில் சிறிது அழுக்குத் தண்ணீர் இருந்தது. அதை நடுங்கும் கைகளால் எடுத்து குர்தேயி வாயில் வைத்தாள். சிறிது தண்ணீர் கீழே விழுந்துவிட்டது. சிறிது அவள் வாய்க்குள் சென்றது. அவளுடைய நிலைமை மிகவும் கெட்டுவிட்டது. அவளால் எழுந்திருக்க முடியவில்லை. அவள் அங்கேயே உணர்விழந்து விழுந்துவிட்டாள். இந்த நிலையில் அவள் எவ்வளவு நேரம் கிடந்தாள் என்பது ஆண்டவனுக்குத்தான் தெரியும்.

## [ 8 ]

ஐப்பசி மாதத்து வெயிலில் நாள் முழுவதும் குரங்கு வேடிக்கை காட்டிவிட்டு குரங்காட்டி ரோடு தன் இருப்பிடத்திற்குத் திரும்பினான். அவனுடைய துணிப்பையில் சில ரொட்டித் துண்டுகளும் சிறிது மாவும் இருந்தது. ஒரு கிழிந்த கம்பளி, இரண்டு மண் கோப்பைகள், இரண்டு கிண்ணங்கள், ஒரு துணிப்பை, இது போன்ற இன்னும் சில சாமான்கள்—இவைகள்தான் அவன் சொத்து. அவனும் அவனுடைய அன்பான பெண் குரங்கும்தான் அவனுடைய

குடும்பம். உலகில் அவனுக்கு வேறு யாரும் கிடையாது. அவன் பால் குடிக்கும் குழந்தையாக இருக்கும்பொழுது அவனுடைய பெற்றோர்கள் பிளேக் காய்ச்சலில் இறந்து விட்டார்கள். அவனுடைய ஒரு கண் சரியாக இல்லாததினால் அவனுக்குத் திருமணமும் ஆகவில்லை.

இப்பொழுது ரோடுவின் வயது அறுபதைத் தாண்டி விட்டது. ஆனால் உலகத்தின் ஆசை அன்பு முதலியன பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியாது. ஒருத்தி ஒருவனைக் காதலிக்கிறாள் என்று எப்பொழுதாவது யாராவது சொல்லக் கேட்டால் அவன் அந்தப் பொருளற்ற சொற்களைக் கேட்டுப் பல நேரம்வரை சிரித்துக்கொண்டிருப்பான். மனிதன் பிறக்கிறான், பின்னர் இறந்துவிடுகிறான்—இவ்வளவுதான் அவனுக்குத் தெரியும். ஆனால் ஆண்டவனிடத்திலும் பெரியோர்களிடத்திலும் அவனுக்கு அபாரமான மதிப்பு இருந்தது. தாழ்ந்த சாதியைச் சார்ந்த தீண்டப்படாதவனாக இருந்தபோதிலும் அவன் தன்னைத்தானே இந்து மதத்தில் மதிப்புள்ளவனாகக் கருதி வந்தான்.

ரொட்டியும் மாவும் இருந்த தன் துணிப்பையை அவன் குடிசையின் நடுவில் மூங்கில் அடித்திருந்த ஆணியில் மாட்டினான். குரங்கைக் கட்டிவைக்கவும் அவிழ்த்துவிடவும் அவனுக்குத் தேவையே இல்லாமலிருந்தது. அது அவனுடைய வாழ்வோடு இணைந்திருந்த சிநேகிதியாக இருந்தது. அந்தப் பெண் குரங்குக்கு ரோடுவிடம் அபாரமான ஆசை, அது தானாகவே ஆலமரத்தின் குளிர்ந்த வேரில் தலையை வைத்துக்கொண்டு படுத்துவிட்டது. ரோடு விரலால் நெற்றி வியர்வையைத் துடைத்துக்கொண்டான். வியர்வையில் நனைந்துபோயிருந்த தையல்கள் நிரம்பிய கையில்லாத சொக்காயைக் கழற்றிவிட்டு அவன் படுத்துக்கொண்டான்.

குளிர்ந்த காற்றில் அவனுடைய உடல் வியர்வை காய்ந்து விட்டதும் அவன் தொங்கிக்கொண்டிருந்த வாளியிலிருந்து கோப்பையில் தண்ணீரை ஊற்றினான். பையிலிருந்து ஒரு வெல்லத்துண்டைத் தேடிப்பிடித்தான். அதைக் கல்லால் பொடிப்பொடியாக உடைத்து சர்பத் தயாரித்தான். பாதிக்கு

மேல் சர்பத்தை அவன் குடித்தான். மீதமிருந்ததை குரங்குக்காக மற்றொரு கோப்பையில் வார்த்து அதன் பக்கம் திரும்பிப் பார்த்தான். குரங்கு எதிர்பார்த்துக்கொண்டுதான் இருந்தது. அது ஒரே பாய்ச்சலில் அருகில் வந்து வேகமாகக் கோப்பையிலிருந்த சர்பத்தைக் குடித்துவிட்டுத் தன் இடத்தில் போய் உட்கார்ந்துகொண்டது.

சில வினாடிகளுக்குப் பிறகு எங்கிருந்துதான் நாய்களின் ஒரு கூட்டம் வந்ததோ? சத்தம் போட்டுக்கொண்டு அவைகள் ரோடூவின் நான்கு புறமும் வட்டமிடத் தொடங்கின. ரோடூ பையை எடுத்தான். மாவிலிருந்து ரொட்டித் துண்டுகளைப் பொறுக்கிப் பொறுக்கி நாய்களுக்குப் போடத் தொடங்கினான். பையில் மாவுதான் மிச்சம் என்ற நிலை வந்ததும் பையை மாட்டிவிட்டு அவன் மறுபடியும் படுத்துக் கொண்டான்.

இன்று அவன் தாமதமாகச் சமையல் செய்வதாக இருந்தான். படுத்ததும் அவனுக்குத் தூக்கம் வந்துவிட்டது. சிறிது நேரத்திற்குப் பிறகு அவன் புரண்டு படுத்தான். சிறிது கண் திறந்தது. ஆனால் அவன் மறுபடியும் தூங்கி விட்டான். ஒரு நிமிடத்திற்குப் பிறகு அவன் விழித்து எழுந்து உட்கார்ந்தான். பிறகு கையைக் குழாய் போல் செய்து காதில் வைத்துக் கொண்டான். எதையோ காதால் கேட்க முயன்றான். அவனுக்கு ஏதோ ஒரு குரல் தெளிவாகக் கேட்டது. அவன் குரல் வருவதாகத் தோன்றிய திசையை நோக்கி அவசரமாக நடக்க ஆரம்பித்தான்.

தன் எஜமான் இவ்வாறு போவதைப் பார்த்து குரங்கும் அவனுக்குப் பின்னாலேயே சென்றது. அவன் நடந்து கொண்டே ஒரு புதருக்கருகில் போய் நின்றான். குரலிலிருந்து ஏதோ இப்பொழுதுதான் பிறந்த குழந்தை அழுவது போல் தோன்றிற்று. அவன் குனிந்து புதரில் பார்த்தான். அங்கே சிவப்பான ஒரு பொருள் இருப்பதாகக் காணப்பட்டது. அவன் இன்னும் அருகில் போனான். சிவப்பான துணியில் சுற்றப்பட்டு ஒரு பெண் குழந்தை அங்கே கிடந்தது. அது தான் உவாங்! உவாங்! என்று கத்திக் கொண்டிருந்தது.

குழந்தையின் இந்த அவல நிலையைப் பார்த்துக் கொண்டு ரோடுவால் இருக்கமுடியவில்லை. அவன் உடனே சிறிதும் தயங்காமல் துணியோடு குழந்தையைத் தூக்கிக் கொண்டு தன் இருப்பிடத்திற்குத் திரும்பி வந்தான். அது குளிர்கால மாக இல்லாவிட்டாலும் அந்தப் பிஞ்சுக் குழந்தைக்கு குளிர்ந்த மாலைக் காற்றுகூட சகிக்க முடியாமலிருந்தது. சிவந்த துணி யில் சுற்றப்பட்ட அந்தக் குழந்தை நினைவற்றுப் போய்க் கொண்டிருந்தது. அதன் உதடுகளில் நீல நிறம் பரவ ஆரம்பித்தது.

ரோடு பயந்துபோய் அந்தக் குழந்தையை என்ன செய்வது, அதனை எங்கே கொண்டு போவது என்று யோசிக்கத் தொடங் கினான். குரங்குக்கு இயற்கையாகவே சிறு குழந்தைகளிடம் அன்பு அதிகமாக இருக்கும். ரோடு அதை முறைத்துப் பார்த்து அப்பால் அகற்றிக் கொண்டிருந்தான். அது ரோடு வின் கையிலிருந்து குழந்தையைப் பிடுங்கிக் கொள்ள முயற்சி செய்து கொண்டிருந்தது. ரோடு சீக்கிரமாகக் கிழிந்த துணியை ஒன்று சேர்த்து, அதில் குழந்தையை மறைத்து விட்டான். பூனைக்குட்டி போன்ற அந்தச் சிறு குழந்தை எத்தனை நாட்களாகப் பசியோடு இருக்கிறதோ என்று அவ னுடைய நினைவிற்கு வந்தது. அதற்குப் பால் கொண்டுவர வேண்டும் என்று எண்ணி அவன் குழந்தையை அங்கேயே படுக்க வைத்தான். கிண்ணத்தை எடுத்துக் கொண்டு உடனே கிராமத்தை நோக்கி ஓடினான். வழியில் அவனுக்குக் கவலை உண்டாக ஆரம்பித்தது. 'அந்தக் குழந்தையை இவ்வாறு தன்னந்தனியே விட்டு விட்டு வந்து விட்டேனே! அதுவும் குரங்கைப் போன்ற சஞ்சலமான பிராணியினிடத்தில்! நான் ஒரு பெரிய தவறு செய்து விட்டேன். என்னோடு குழந்தையை யும் கொண்டு வந்திருந்தால் பயப்படாமலிருந்திருக்கலாமே! யார் என்னை என்ன சொல்லிவிட முடியும்? யாராவது கேட்டால் அது என் உறவினரின் குழந்தை என்று சொல்லி யிருக்கலாமே!' என்றெல்லாம் நினைக்கலானான்.

இப்பொழுதே திரும்பிப் போய் விடலாம் என்றுகூட அவன் நினைத்தான். ஆனால் குழந்தையின் பசியை நினைத்ததும்

அவனுடைய கால்கள் பின்னே போக மறுத்தன. அவன் கை கூப்பிக் கண்களை மூடிக் கொண்டு சிவன் பார்வதியின் பெயரை ஜபித்துக் கொண்டே நடக்கலானுன்.

அவன் வேகமாகத் தான் எல்லா வேலைகளையும் செய்தான். அப்படியும் போய் வருவதில் அவனுக்கு அரை மணி நேரம் ஆகி விட்டது. பாலை எடுத்துக் கொண்டு அவன் குடிசையை நோக்கித் திரும்பி வந்து கொண்டிருந்தபொழுது அவனுடைய உள்ளம் நடுங்கிக் கொண்டிருந்தது. எங்கேயாவது என்னுடைய முட்டாள் தனத்தினுல் ஒரு உயிரை இழந்துவிடக் கூடாதே என்று அவன் நினைத்துக் கொண்டே இருந்தான்.

தன் இருப்பிடத்திற்கு வந்து பார்த்ததும் அவன் திகைத்துப் போய்விட்டான். குரங்கு அந்தக் குழந்தையைத் தாயைப் போல் மடியில் வைத்துக்கொண்டிருந்தது. துணி ஒரு மூலையில் கிடந்தது. குழந்தை கண்களைத் திறந்துகொண்டு விட்டது. இப்பொழுது அது முற்றிலும் அழாமலிருந்தது. குரங்கு தன் உடலின் உஷ்ணத்தால் குழந்தையின் குளிரைப் போக்கி விட்டது. எஜமானன் வந்துவிட்டதைப் பார்த்து குரங்கு குழந்தையைத் துணியில் படுக்கவைத்து விட்டு பயத்துடன் தயங்கியவாறு ஒருபுறம் நின்றுகொண்டுவிட்டது.

ரோடு கிழிந்த துணியிலிருந்து பஞ்சை எடுத்து அதைப் பாலில் நனைத்து நனைத்து குழந்தையின் வாயில் பாலை ஊட்டத் தொடங்கினுன். பால் குடித்ததும் குழந்தை தூங்கிவிட்டது. ரோடுவுக்கு அப்பொழுதுதான் அமைதி ஏற்பட்டது.

இரவு அவன் எப்பொழுதும் போல் கற்களை ஒன்று சேர்த்து அமைத்த அடுப்பில் மூன்று சப்பாத்திகளைப் பண்ணிக் கொண்டான். தான் இரண்டைச் சாப்பிட்டுவிட்டு ஒன்றைக் குரங்குக்கும் கொடுத்தான். இன்று ரோடு தரையில்தான் தூங்கவேண்டியிருந்தது. அவன் கிழிந்த துணியை இரண்டாகச் செய்து பாதியில் குழந்தையைப் படுக்கவைத்தான்; மற்ருெரு பாதியால் அதற்குப் போர்த்திவிட்டான். பின்னர் தானும் துணியை வயிற்றில் அணைத்துக்கொண்டு தூங்கி விட்டான். நடு இரவில் ரோடு திரும்பிப் படுத்தபொழுது அவனுக்குக் குழந்தை நினைவிற்கு வந்தது. அவன் அவசர

அவசரமாக எழுந்தான். குழந்தையின் நிலைமையைப் பார்ப்பதற்காக அவன் துணியின் மேற்பகுதியைத் தூக்கினான். ஆனால் அங்கே குழந்தையைக் காணவில்லை. குழந்தையை ஏதோ ஒரு காட்டுமிருகம் தூக்கிக் கொண்டுபோய் விட்டதோ என்று அவன் எண்ணலானான். அப்பொழுது அவன் பின்னால் திரும்பிப்பார்த்தான். குழந்தை உண்மையிலேயே அந்தக் காட்டு மிருகத்தினிடம்தான் இருந்தது. குரங்கு லச்சோ அதை மடியில் வைத்துக்கொண்டு பஞ்சினால் அதற்கு இராப் பால் கொடுத்துக் கொண்டிருந்தது. ரோடூ பால் கொடுத்ததைப் பார்த்துக் கொண்டிருந்ததல்லவா? அதேபோல் தானும் பால் கொடுத்துக்கொண்டிருந்தது.

ஆண்டவனின் படைப்பின் இந்த லீலையைப் பார்த்து ரோடூவுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. 'ஆண்டவனின் கருணைக்கு எல்லையே கிடையாது. அவன் குழந்தையை மனிதத் தாயிடமிருந்து அகற்றி காட்டுத்தாயிடம் ஒப்படைத்து விட்டானே?' என்று அவன் நினைக்கலானான்.

இருளடைந்தும் உணர்வற்றும் போயிருந்த ரோடூவின் உள்ளத்தில் உலகப்பற்றின் இந்த முதல் ஒளி பரந்துவிட்டது. இன்றுதான் அவன் முதன்முதலாக உள்ளத்தைத் தொடும் உலகப்பற்றையும் அதன் மந்தமான ஒளியையும் உணர்ந்தான்.

காலம் கடக்கலாயிற்று. காலையில் சூரியன் உதித்தபின்னரே தூங்கி எழுந்திருக்கும் ரோடூவின் தூக்கம் இப்பொழுது விநாடிக்கு ஒருதரம் கலைந்துகொண்டிருந்தது. இரவில் அந்தக் குழந்தை சுந்தரி விழித்துக்கொண்டு பிடிவாதம் பிடிக்கும் பொழுதெல்லாம் அவன் மணிக் கணக்காக அதைத் தோளில் போட்டுக்கொண்டு சுற்றிச்சுற்றி வந்துகொண்டு தாலாட்டுப் பாடுவது வழக்கமாகிவிட்டது.

'பூச்செடி போட்டான் ஆண்டவன்
நான் திருஷ்டி கழிக்கிறேன் பாப்பா!'

இப்படிப்பட்டத் தாலாட்டுகளைக் கேட்டு ஒரு சமயம் அவன் பரிகசித்ததுண்டு. ஆனால் இன்று அந்தப் பாடல்களிலே அவன் இன்பத்தை உணர்ந்தான்.

'ஆண்டவன் ஒருவனைக் காப்பாற்றினால் அவனை யார்தான் அழிக்கமுடியும்!' உலகமறியாத அந்தக் குழந்தையை யாரோ மரணத்தின் வாயில் கொண்டுவந்து போட்டுவிட்டார்கள். ஆனால் அது பிழைத்துவிட்டது. ஏனென்றால் அதற்கு இவ்வுலகத்தைப் பார்க்கவேண்டி யிருந்தது. ரோடுவின் சூனியமான உள்ளத்தில் அன்புவிளக்கு ஏற்றுவதற்காக அனுப்பப்பட்ட அந்தக் குழந்தை தன் திறமையைக் காட்டாமல் எவ்வாறு உலகைவிட்டுப் போகமுடியும்?

குழந்தையின் கண், மூக்கு முதலியன மிகவும் அழகாக இருந்தன. அதன் பழுப்பு நிறமான கண்கள், சிவந்த உடல், பொன்னிறமான தங்கக்கேசம், எல்லாம் சேர்ந்து அது இயற்கையின் கைத்திறமைக்கு ஒரு சாட்சியாக விளங்கிற்று. அதன் அழகைப் பார்த்துத்தான் ரோடு அதற்கு சுந்தரி என்ற பெயரை வைத்தானோ என்னவோ?

கிழவன் ரோடுவின் உள்ளத்தில் பல நாட்களாக இருந்த கேள்விகளுக்குத் தானாகவே விடை கிடைத்துக்கொண்டிருந்தது. இந்த ரோடுதான் முன்பெல்லாம் மக்களுடைய பாசத்தை பார்த்துக் கேலி செய்து வந்தான். 'தன் குழந்தைகளுக்காக உலகக் கவலைகளையெல்லாம் தலையில் போட்டுக்கொள்வதுதானா புத்திசாலித்தனம்? மக்கள் காரணமேயில்லாமல் மயக்கத்தில் மூழ்கி பற்று, ஆசை என்று அடித்துக் கொள்ளுகிறார்களே! ஆசை என்று ஒன்று உண்டா?' என்றெல்லாம் பேசிவந்தான்.

அந்தக் கிழக்குரங்காட்டி முன்பெல்லாம் இருவருடைய வயிற்றுக்கு வேண்டிய மாவு கிடைத்ததும் குளிர்ந்த மரநிழலில் காலை விரித்துக்கொண்டு தூங்கிவிடுவது வழக்கம். இப்பொழுது அவன் பகல் வருவதற்கு முன்பே எழுந்து விடுகிறான், இருட்டுவதற்கு முன்பு திரும்பிவிடுகிறான். இப்பொழுது அவனுக்கு மாவைத் தவிர பணமும் தேவையாக இருக்கிறது. முன்பு அவன் ரொட்டித்துண்டுகளை நாய்க்குப் போடுவது வழக்கம். இப்பொழுது அவற்றைப் பசுவின் உணவோடு கலக்க ஆரம்பித்தான்.

ரோடு விரைவிலேயே கொஞ்சம் பணம் சேமித்து, அதைக் கொண்டு முதலில் சுந்தரிக்காக ஒரு சிறு கட்டிலும் சில

துணிகளும் வாங்கினான். சில பொம்மைகளும் வாங்கி வந்தான். முன்பெல்லாம் அவன் கிடைத்ததை வாங்கிக் கொண்டு, பொறுமையோடு இருந்து வந்தான். இப்பொழுது அவன், 'தம்பி! குழந்தைக்கு ஏதாவது கிழிந்த துணிகொடு, அப்பா! சின்னபாப்பாவுக்குப் பால் தரக் காசு கொடு!' என்றெல்லாம் மக்களிடத்தில் வேண்டிக்கொள்ள ஆரம்பித்தான்.

சுந்தரியிடத்தில் ரோடுவின் அன்பு அளவற்றுதான் இருந்தது. ஆனால் ஒரு மிருகத்தின் அன்போ எல்லைபற்றிருந்தது. குரங்கு ஒரு வினாடிகூட சுந்தரியைவிட்டு அகலாமல் இருந்தது.

துவக்கத்தில் ரோடு சுந்தரியைத் தன் வாழ்க்கைக்குத் தடையாக நினைத்தான். ஆனால் இப்பொழுது குழந்தை சுந்தரி அவனுடைய உயிரோடு ஒன்றிவிட்டது. அவன் இப்பொழுது சுந்தரியைத் தூக்கிக்கொண்டு தன் தொழிலுக்குப் போய்வந்தான். முன்பு அவனிடம் ஒரே ஒரு குரங்கு இருந்தது. இப்பொழுது இரண்டு ஆகிவிட்டது. குழந்தையிடம் கருணை கொண்டு மக்கள் அவனுக்கு ஏதாவது கொடுத்து வந்தார்கள். ரோடு அழுவது போல், 'ஐயா! இந்தக் குழந்தை பிறந்ததும் இதன் தாய் இறந்து போய்விட்டாள். என் குழந்தையிடம் கருணை காட்டுங்கள்!' என்று சொல்லும் பொழுது மக்களுடைய உள்ளத்தில் இன்னும் அதிகமாகக் கருணை சுரக்க ஆரம்பித்தது.

சுந்தரிக்கு இப்பொழுது இரண்டு வயது நிரம்பிவிட்டது. குரங்காட்டியின் இருளடைந்த குடிசையில் இயற்கை ஒளி பரப்பி விட்டது. அதைப் பார்த்துக் கொண்டே இருப்பதில் ரோடுவுக்குச் சலிப்பே உண்டாகவில்லை. குரங்குத் தாயோடு சேர்ந்திருந்ததால் சுந்தரியின் பழக்கங்களும் குரங்குகளைப் போலவே இருந்தன. சுந்தரியும் லச்சோவைப் போலத் துள்ளிக் குதித்தாள். சில சமயம் அந்தக் குழந்தை இரண்டு கைகளையும் தரையில் ஊன்றிக் கொண்டு கால்களை மேலே தூக்கிக்கொண்டு நின்றது; சில சமயம் குடிசையில் மூங்கிலில் காலை வைத்து மேலே ஏற முயன்றது. அதாவது குரங்கு எதை யெல்லாம் செய்வதை அது பார்த்து வந்ததோ அதை யெல்லாம் தானும் இயற்கையாகச் செய்யலாயிற்று.

சுந்தரி ஏழைக் குழந்தைகளோடு விளையாடுவதைப் பார்க்கும் பொழுதும் குழந்தைகளெல்லாம் சுந்தரியோடு அன்பாக இருப்பதைப் பார்க்கும் பொழுதும் ரோடுவின் உள்ளம் பூரிப்படைந்தது. இயற்கை அழகோடு கூட சுந்தரிக்கு நல்ல அறிவையும் கொடுத்திருந்தது. அந்தக் குழந்தை தான் பார்ப்பதை யெல்லாம் செய்யத் தொடங்கிற்று, கேட்பதை யெல்லாம் பேசத் தொடங்கிற்று. அந்தக் குழந்தையைப் பராமரிப்பதிலேயே ரோடு ஈடுபட்டிருந்தான்.

ரோடு வீட்டிற்குத் திரும்பும் பொழுதெல்லாம் சுந்தரிக்காக ஏதாவதொரு பொருள் கொண்டு வருவது வழக்கமாக இருந்தது. உண்மையிலேயே அவனுக்கு இது ஒரு வழக்கமாகி விட்டது. அவன் ஏதாவது ஒரு பொருளை எடுத்துக் கொண்டு வீட்டிற்கு வரும் பொழுது அவனுடைய கால்கள் வேகமாக நடை போடும்; அவனுடைய உள்ளத்தில் ஒரு புரியாத ஆர்வம் துள்ளி விளையாடும். வீட்டுக்கருகில் வரும் பொழுது அவனுடைய உள்ளத்தில் ஏற்படும் அளவற்ற பூரிப்பு சுந்தரிக்கு உணவு ஊட்டும் பொழுது கூட அந்த அளவிற்கு ஏற்படுவதில்லை. அவன் தொலைவில் வரும் பொழுதே சுந்தரி ஓடிப்போய் அவனுடைய கால்களைக் கட்டிக் கொண்டு அவனுடைய மேற்போர்வையைத் தடவ ஆரம்பித்துவிடுவாள். பிறகு துள்ளிக் குதித்துக் கொண்டு 'அப்பா, என் சாமானைக் கொடு' என்று சத்தம் போடத் துவங்கி விடுவாள், போர்வையின் நுனியிலிருக்கும் முடிச்சை அவிழ்த்து அவன் மிட்டாயை அவளுடைய கையில் கொடுத்ததும் அதை எடுத்துக்கொண்டு பொறுமையில்லாமல் ஓட்டமும் நடையுமாக மற்ற குழந்தைகளுக்குக் காட்டுவதற்காக ஓடிவிடுவாள். அதைப் பார்க்கும் பொழுது ரோடுவின் பூரிப்பிற்கு எல்லையே இருக்காது அவன் பூரிப்பால் பைத்தியமாகவே ஆகிவிடுவான். அந்த நேரத்துச் சுகம் அரசர்களுக்குக் கூடக் கிடைக்க முடியாது.

சுந்தரி குழந்தைகளோடு விளையாடும் பொழுதெல்லாம் அவர்களுடைய தாய்மார்களைப் பார்ப்பது உண்டு. இரண்டு குழந்தைகள் சண்டை போட்டுக்கொள்ளும்பொழுது அவர்கள் தங்கள் தங்கள் தாயைக் கூப்பிட்டு, 'அம்மா, பாரு இவள்

என்னை அடிக்கிறாள். அம்மா, இவள் என்னுடைய சில்லைக் கொடுக்கமாட்டேனென்கிறாள்' என்றெல்லாம் சத்தம் போடுவார்கள்.

சுந்தரிக்கு 'அம்மா' என்ற சொல்லிற்குப் பொருளை புரியாமலிருந்தது. அவளுடைய உலகம் அப்பா ரோடுதான், மற்றொன்று குரங்கு லச்சோ. ஆனால் குழந்தைகளைத் தாய்மார்கள் அன்பாகக் கொஞ்சுவதையும், அவர்களின் தலையைச் சீப்பால் கோதுவதையும் பலவிதமான பொருள்களைத் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்குக் கொடுப்பதையும் பார்க்கும் பொழுது ஒரு குழந்தை யாரிடமாவது பொம்மையைக் கொடுத்துவிட்டு அழத்தொடங்குவது போல, அவளும் அம்மாவை அடைவதற்கு அழத் தொடங்கி விடுவாள்.

ஒரு நாள் இரவில் நிலவு மலர்ந்திருந்தது. கிழவன் ரோடு குடிசைக்கு வெளியே சாக்கின்மேல் படுத்தவாறு சுந்தரியை முழங்காலில் உட்கார வைத்துக்கொண்டு ஊஞ்சலாட்டிக் கொண்டிருந்தான்.

அவன், 'அம்மா, அம்மா, தூக்கம் வா' என்று சொல்லி முடிக்கும்பொழுது சுந்தரி, 'அப்பா, அப்பா, இன்னும் ஊஞ்சலாட்டு' என்று சொல்லிக்கொண்டே இருந்தாள். ரோடுவின் கால்கள் களைத்துப் போய்விட்டன. அவன் களைத்துப்போய், 'சுந்தரி இப்ப உனக்குக் கிளிபோட போறேன்' என்று சொல்லிக்கொண்டே சுந்தரியின் பிஞ்சுக் கைகளைப் பிடித்து, 'இதோ பார் கிளி; காக்காய் கொண்டு போச்சு' என்று கூறிக்கொண்டே கடைசியாக, 'இதோ புடிச்சுட்டேன் அதை' எனக் கூறி அவளுக்குக் கிசிகிசு மூட்டும்பொழுது சுந்தரிக்குச் சிரித்துச் சிரித்து மாளவில்லை. அந்தச் சிரிப்பில் ரோடு அமுதத்தின் இனிமையை உணர்ந்தான்.

அந்த நேரம் ஏதோ ஒரு குழந்தை, 'அம்மா' என்று தன் தாயைக் கூப்பிடுவது கேட்டது.

அதைக் கேட்டதும் சுந்தரி சிரிப்பை மறந்து தன் இரண்டு கைகளாலும் ரோடுவின் முகவாயைப் பிடித்துக்கொண்டு கேட்டாள், 'அப்பா! என் அம்மா எங்கே?'

அந்த அப்பாவிக் கிழவன் இந்த சிறிய ஆனால் பெரிய கேள்விக்கு என்ன விடை கொடுப்பான்? அவனுடைய உள்ளத்தில் ஒரு வேதனை உண்டாயிற்று. அவன் சுந்தரியை முத்தமிட்டுக் கூறினான், 'சுந்தரிக் கண்ணு! உன் அம்மா போய்விட்டாள்.'

குழந்தை மறுபடியும் கேட்டது, 'அப்பா! என் அம்மா எங்கே?'

'கண்ணு! உன் அம்மா ரொம்ப தூரம் போய்விட்டாள்.'

'அப்பா! அம்மா ரொம்ப தூரம்!'

அப்பொழுது சுந்தரி படுத்துக்கொண்டு வானத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். அப்படியே பார்த்தவண்ணம் கேட்டாள்.

'அப்பா, அம்மா ரொம்ப தூரம்.........!

'ஆமாம் கண்ணு.........'

'அப்பா, அம்மா மேலே!'

'ஆமாம் கண்ணு! மேலே போய்விட்டாள்!''

'அம்மா அம்புலிமாமா கிட்டேயா?'

'ஆமாம் கண்ணு! அம்புலிமாமா கிட்டேதான்!'

'அப்பா! அம்மாவைப் பருந்து.........'

'ஆமாம் குழந்தை! அம்மாவைப் பருந்து தூக்கிண்டு போயிடுத்து!'

'அப்பா! அம்மாவை ரொம்ப தூரம் ........பருந்து?'

'ஆமாம் என் கண்ணு! ரொம்ப தூரம் பருந்து கொண்டு போயிடுத்து.'

இப்படியே பேசிக்கொண்டு சுந்தரி சிறிது நேரத்திற்குப் பிறகு தூங்கிப் போய் விட்டாள். ரோடுவும் தூங்கி விட்டான்.

## [ 9 ]

(பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு)

ஆர்வம் என்பது நல்லதோ கெட்டதோ; அது மனிதனை ஒரேயடியாக மாற்றி விடுகிறது. அது ஒரு துளி போன்ற

தாகும். அது பாலைத் தயிராகவும் மாற்றும்; ஆனால் அந்த ஒரு துளியே பாலைத் திரித்துக் கெடுத்துவிடும்.

தீவான்பூரைச் சேர்ந்த ஜீவாசிங்கின் மகன் பச்சன் சிங்குக்கும் ஓர் ஆர்வம் ஏற்பட்டிருந்தது. அவன் பத்தாம் வகுப்பு தேறிய பின்னர் கால்சா கல்லூரியில் சேர்ந்த பொழுது ஒரு விதமான ஆர்வம் அவனைப் பிடித்துக்கொண்டது. அவ்வளவு தான், அந்த ஆர்வம் ஒரு பெரியவரின் தொடர்பு என்ற உருவில் வந்து அவனுடைய வாழ்க்கையிலேயே ஒரு திருப்பத்தைக் கொண்டுவந்து விட்டது.

பச்சன் சிங்குக்கு 18—19 வயது இருக்கும். பல ஆண்டுகளாக அம்ருத்சரின் அசுத்தமான காற்றில் வாழ்ந்து வந்த போதிலும் அவனுடைய உடலில் கிராமிய இரத்தம் இன்னும் ஓடிக்கொண்டிருந்தது. அவனுடைய உடம்பு கட்டுமஸ்தாக இருந்தது, முகம் களை நிரம்பியிருந்தது, மீசை துளிர்விட்டுக் கொண்டிருந்தது; அது அவனுடைய முகத்தை இன்னும் அதிகமாக அழகுபடுத்திக் கொண்டிருந்தது. அவனுடைய கள்ளமற்ற கண்களும் இனிமையான பேச்சும் அவனைப் பள்ளிக்கூடம் முழுவதிலும் தலைவனாக ஆக்கிவிட்டது. கவிதை இயற்றுவதிலும், சிறப்பாக மேடையில் ஏறிப் பேசுவதிலும் இருந்த அவனுடைய ஆர்வமும் இதற்கு ஒரு காரணமாக இருந்தது. அவன் தன் பள்ளிச் சங்கத்திற்குத் தலைவனாக இருந்தான். மாணவர்களின் விழாக்களிலும், கூட்டங்களிலும் அவன் எப்பொழுதும் எல்லோருக்கும் முன்னால் நின்று வந்தான். பொதுக்கூட்டங்களிலும் அவனுக்கு ஏராளமான புகழ் இருந்தது. பெரிய பெரிய கூட்டங்களில் பச்சன் சிங்கின் பாடல்களுக்குப் பெருமை அளிக்கப்பட்டது. அவனுடைய பாடல்களின் கருத்து மிகவும் உயர்ந்ததாக இருந்தது என்பதாலல்ல. அவனுடைய பாடல்கள் சாதாரணமாகத்தான் இருந்தன. ஆனால், அவனுடைய குரலில் இருந்த இனிமையினால் பித்தளையும் தங்கத்தைப் போல் மதிப்பிடப்பட்டு வந்தது. கூட்டத்தில் அவனுடைய ஆவேசம் நிறைந்த குரல் எதிரொலிக்கும் பொழுது கேட்பவர்கள் சிலை போல் நின்று விடுவார்கள்.

இப்பொழுது நாம் பச்சன்சிங்கின் வாழ்க்கையில் புரட்சியை உண்டாக்கிய அந்தப் புதிய ஆர்வத்தைப் பற்றிய நிகழ்ச்சியைப் பார்க்கலாம். பத்தாவது வகுப்புத் தேறிய பிறகு பச்சன் சிங் கால்சா கல்லூரியில் முதலாண்டு வகுப்பில் சேர்ந்தான். அந்தக் காலத்தில் நகரங்களிலும் கிராமங்களிலும் கிராமச் சீர் திருத்தம் பற்றிக் கூட்டங்கள் நடைபெற்று வந்தன. கிராமங்களில் பரவியிருந்த மூடப்பழக்கவழக்கங்களையும் வீண் செலவுகளையும் தடுப்பது அந்தக் கூட்டங்களின் குறிக்கோளாக இருந்தது.

ஒரு நாள் அம்ருத்சரில் ஜலியான்வாலாபாகில் இது போன்ற ஒரு கூட்டம் நடந்து கொண்டிருந்தது. ஏறக்குறைய பத்தாயிரம் ஜனங்கள் கூடியிருந்தார்கள்.

அந்தக் கூட்டத்தின் செயலாளர் பச்சன்சிங்கின் பெயரை அறிவித்ததும் கூட்டத்தில் ஒரே குழப்பம் நிரம்பி விட்டது. அதற்கிடையில் அவன் மேடைக்கு வந்தான்.

அவன் தன் பாட்டைப் பாடத் தொடங்கினான். கூட்டத்தில் அமைதி நிரம்பிற்று. மறுபடியும் பாடும்படி எல்லோரும் அவனை வற்புறுத்தினார்கள்.

கூட்டம் முடிந்தது. அன்றைய வெற்றியால் பச்சன்சிங்குக்குப் பெருத்த பூரிப்பு ஏற்பட்டது. பூமியில் நடக்கும் பொழுது தான் வானத்தில் பறப்பது போல் அவனுக்குத் தோன்றிற்று. அவனைச் சுற்றி அவனைப் புகழ்வோர்கள் கூட்டமாகக் கூடி விட்டார்கள்.

கூட்டம் சிறிது குறைந்ததும் வெண்மையான தாடி நிறைந்த ஒளி நிரம்பிய ஒரு முகம் அவனுக்கு எதிரில் தோன்றிற்று. 50—60 வயது நிரம்பிய ஒரு பெரியவர் அங்கே வந்தார். அவருடைய முகம்தான் அவ்வாறு களை நிரம்பியதாக இருந்தது. ஆடம்பரமற்ற கதர் துணி அணிந்து அவர் ஒரு தேவதையைப் போல் தென்பட்டார்.

எதிரில் வந்ததும் அந்தப் பெரியவர் அன்புடன் பச்சன்சிங்கின் கையைப் பிடித்துக் கொண்டார். அவர் அவனை மிகுந்த மரியாதையுடன் அந்தக் கூட்டத்திலிருந்து அப்பால் அழைத்துச் சென்றார். அவர் பின்னர் புல் தரையில் உட்கார்ந்தவாறு

'ஐயா! தங்களுடைய கவிதைதான் என்னைத் தங்களிடம் இழுத்து வந்தது.'

பச்சன்சிங் அவருக்கருகில் உட்கார்ந்துகொண்டு கூறினான், 'ஐயா! இது உங்களது பெருந்தன்மையாகும் இதற்கு நான்.........'

அவன் பேச்சில் இடைமறித்துப் பெரியவர் கூறினார், 'நான் அதிகம் படித்தவனல்ல. அதனால் நான் தங்களுடைய கவிதையின் பொருளை அறிந்துகொள்ள விரும்புகிறேன்.' பெரியவரின் கையில் ஒரு காகிதத் துண்டு காணப்பட்டது. அவர் அதைப் படிக்கத் தொடங்கினார்—

'இந்தியத்தாயே! உன் பாதத்தின் பேரில் ஆணை;
உனது தொண்டினில் நான் வாழ்வைக் கழித்திடுவேன்,
தேசத்தின் பகுதிகளனைத்திலும் சென்று நான்,
அங்குள்ள தீய பழக்கங்களை அழித்திடுவேன்!'

கூட்டத்தில் பச்சன்சிங் இசைத்த கவிதைதான் அது.

அவன் இசைத்தது ஒரு பெரிய கவிதை. ஆனால் பெரியவரின் காகிதத்தில் இரண்டு வரிகள்தான் எழுதப்பட்டிருந்தன. பச்சன்சிங் கூறினான், 'ஐயா! இந்த வரிகளின் பொருள் மிகவும் எளிமையானது தானே?'

பெரியவர் பச்சன்சிங்கை அன்புடனும் பெருமையுடனும் பார்த்தவாறு கூறினார், 'இல்லை ஐயா! எளிமையானது அல்ல, மிகவும் கடினமானது. மறுபடியும் சிந்தித்துப் பாருங்கள்!' பச்சன்சிங் சிந்தனையில் ஆழ்ந்துவிட்டான். பெரியவர் மறுபடியும் கூறினார், 'உன் பாதத்தின் ஆணை! என்ற சொற்களின் பொருளை நீங்கள் உணர்ந்திருக்கிறீர்களா?'

இப்பொழுதுதான் பச்சன்சிங்கு உண்மை புலப்பட்டது. அவன் ஒருமுறை மறுபடியும் பெரியவரைப் பார்த்தான். ஆனால் இம்முறை அவனுடைய கண்கள் பெரியவரின் கண்ணொளியைப் பார்க்கக் கூசின. அவனுடைய பார்வை தாழ்ந்துவிட்டது. பச்சன்சிங்கால் விடை ஏதும் அளிக்க முடியவில்லை.

பெரியவர் பச்சன்சிங்கின் தோளைத் தட்டியவாறு கூறினார், 'இளைஞனே! ஆணையிடக்கூடாது. அது ஒரு பெரிய பாவமாகும்.'

பச்சன்சிங் பூமியைப் பார்த்தவாறு தலைகுனிந்து நின்று கொண்டிருந்தான். 'ஐயா! தொண்டு செய்வதிலேயே வாழ்க்கையைக் கழிப்பது என்பதற்குப் பொருள் வெறும் புகழ்ச்சி பெறுவது மட்டுமல்ல!'

பச்சன்சிங் அந்தப் பெரியவரின் கால்களில் வணங்கினான். 'உண்மையிலேயே உனக்குள் கனலிருக்குமானால் பொய்ப் பெருமை அடித்துக்கொள்வதை விட்டுவிட்டு ஏதாவது செய்து காட்டு' என்று பெரியவர் அவனுடைய முதுகைத் தடவிய வாறு கூறினார்.

பச்சன்சிங்கின் கண்கள் திறந்தன. உண்மையிலேயே அந்தப் பாடலின் வரிகளின் பொருள் மிகக் கடினமாக இருந் தது. இதுவரை பச்சன்சிங் ஆவேசம் நிறைந்த கவிதை களைப் பாடி மக்களின் உள்ளத்தில் ஒரு துடிப்பை உண்டாக்கு வதையும் எல்லையற்ற புகழ்ச்சி உரைகளைக் கேட்டு மகிழ்ச்சி யால் பூரித்துப் போவதையுமே தொண்டு, உபகாரம் என்று நினைத்து வந்தான். அதுவே அவனுடைய போக்காகவும் இருந்து வந்தது. ஆனால் இன்றுதான் அவனுக்கு, தான் செய்வதெல்லாம் வெறும் வெளிப் பகட்டு என்று தோன்றிற்று. இந்த வாழ்க்கையைத் தவிர வேறொரு உயர்ந்த வாழ்க்கையும் ஒன்று உண்டு என்று அவனுக்கு இதற்கு முன்னால் ஒரு பொழுதும் தோன்றியதில்லை.

மேலே கூறப்பட்ட சுருக்கமான பேச்சுவார்த்தைக்குப் பிறகு அந்தப் பெரியவர் அங்கிருந்து போய்விட்டார். ஆனால் போகும்பொழுது அவர் பச்சன்சிங்கின் உள்ளத்தில் ஒரு புது ஆர்வத்தை உண்டாக்கி விட்டார். பச்சன்சிங் கேட்ட பிறகு அவர் தன்னுடைய விலாசத்தையும் கூறிவிட்டுச் சென்றார். அவருடைய பெயர் தீதார்சிங். அவர் சில நாட்களாக அம்ருத்சரில் தங்கியிருந்தார்.

அந்த நாளிலிருந்து பச்சன்சிங்கின் வாழ்க்கையில் மாறு பாடு ஏற்படத் தொடங்கியது. அறிஞர் தீதார்சிங் அம்ருத் சரில் தங்கியிருந்த நாட்களில் அவன் தினந்தோறும் தவறாது அவரிடம் போய்வந்தான். சில மாதங்கள் அந்தத் தொடர் பினால் அவன் பெரிதும் மாறிவிட்டான். முன்னைய பச்சன்

சிங்குக்கும் இப்பொழுது இருக்கும் பச்சன்சிங்குக்கும் ஏராள மான மாறுபாடு காணப்பட்டது. முன்பும் அவன் கவிதை எழுதி வந்தான். ஆனால் அப்பொழுது அவன் உலகத்திற்காக எழுதி வந்தான். இப்பொழுது அவன் தனக்காக எழுத லானான். அன்று அறிஞர் தீதார்சிங் திருப்பித் திருப்பிக் கூறிய, 'உன் பாதங்களின் பேரில் ஆணை'—என்ற அந்த வரியை அவனால் மறக்கவே முடியவில்லை.

[10]

இந்தத் தடவை கோடை விடுமுறையில் பச்சின்சிங் தன் ஊருக்குப் போக விரும்பவில்லை. அவன் தன் கவிதைக்கு உண்மையான உருவம் அளிப்பதற்காகச் சில நாட்கள் கிராமங் களில் சுற்ற விரும்பினான். ஆனால் தன் தந்தையின் வியாதி யைப் பற்றிய கடிதத்தைப் படித்த பின்னர் அவனால் இருக்க முடியவில்லை. விடுமுறை துவங்கியதும் ஊருக்கு வந்து விட்டான்.

மகனின் உருவத்தையும் நடத்தையையும் பார்த்து ஜீவாசிங் கொந்தளித்தான். முன்பு காணப்பட்ட சூட்டு-பூட்டு, காலர், டை முதலியன எங்கே? இப்பொழுது அவன் அணிந்திருந்த கதர் சட்டை, பைஜாமா, கால்களில் போட்டிருந்த பன்னிரண்டு அணச் செருப்பு எங்கே?

நோய்வாய்ப்பட்டிருந்த ஜீவாசிங்குக்கு ஒரே கோபமாக வந்தது. ஆனால் அவன் என்ன செய்வான்? ஒரே ஒரு மகன். எதைச் சொல்லவும் தைரியம் வரவில்லை. கோபத்தில் மகன் வீட்டை விட்டே போய்விட்டால் என்ன செய்வது?

கடைசியாக அவன் பச்சன் சிங்கின் படிப்பை நிறுத்தச் செய்து அவனை வீட்டில் தொழிலில் ஈடுபடுத்துவதாக முடிவு செய்தான். படிக்க வைத்துவிட்டுக் கடைசியில் மகனையே கையை விட்டு நழுவ விட்டுவிடக்கூடாது என்று அவன் எண்ணினான்.

பச்சன் சிங்கைத் தொண்டு செய்யும் பழக்கம் தொற்றிக் கொண்டுவிட்டது. ஆனால் அவனால் பெற்றோரின் துன்பத்

தைப் பார்த்துக் கொண்டு இருக்க முடியவில்லை. மனதைக் கட்டுப்படுத்திக்கொண்டு அவன் வீட்டுத் தொழிலில் ஈடுபட்டு விட்டான்.

ஒரு நாள் நிலத்தைக் காவல் காப்பதற்காகப் போகும் பொழுது அவன் குருத்வாரத்தின் வழியாகப் போனான். குருத்வாரத்தில் பூட்டு போடப்பட்டிருந்தது. சீக்கியர்களின் இவ்வளவு பெரிய கிராமத்து குருத்வாரத்தின் நிலை இப்படியா இருப்பது என்று அவன் எண்ணலானான். அவன் அருகில் நின்றுகொண்டிருந்த ஒரு பையனிடம் கேட்டான், 'ஏனப்பா! இந்த குருத்வாரத்தில் "கிரந்தசாகப்" படிப்பவரே கிடையாதா?' பையன் விரலால் மேல் பக்கம் சைகை செய்தவாறு கூறினான், 'அதோ பார்; மேலே சன்னலில் மதகுரு உட்கார்ந்திருக்கிறார்.'

பச்சன்சிங்குக்கு ஆச்சரியமாக இருந்தது. தன்னுடைய வயலில் பிறருடைய மிருகங்கள் மேய்ந்து கொண்டிருப்பதைப் பார்த்தால் ஒருவனுக்கு எப்படி வியப்பு ஏற்படுமோ அது போன்ற வியப்பு அவனுக்கு ஏற்பட்டது, அத்துடன் அந்த நேரம் வயலில் காவற்காரனும் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தால் தோன்றும் வியப்பிற்கு அளவே இருக்க முடியாதல்லவா? அதுபோல் அந்த நிலையைப் பார்த்ததும் அவனுக்கு அளவற்ற வியப்பு ஏற்பட்டது. அவன் மறுபடியும் கேட்டான்—

'மதகுரு குருக்ரந்த சாகபை மேலே படிக்கிறாரா?' அந்தப் பையனுக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் கூறினான்—

'என்ன சொன்னே? பிரசாதமா? கடாய் பிரசாதமா? அது திருவிழா நாளன்று செய்யப்படுகிறது.'

பையன் தான் கூறியதைப் புரிந்து கொள்ளவில்லை என பச்சன்சிங் தெரிந்து கொண்டான். அவன் மத குருவை ஓரிரண்டு முறை குரலிட்டு அழைத்தான். சன்னலிலிருந்து குரு வெளியே தலையை நீட்டினார். கீழே ஜமீன்தார் சர்தார் ஜீவாசிங்கின் மகன் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்ததும் அவர் விரைவாகக் கீழே இறங்கி வந்தார். வந்ததும் அவர் இரண்டு அடி குனிந்து அன்புடன் கை கூப்பிக் கூறினார், 'வாருங்கள் சர்தார்ஜீ, கால்சா வாழ்க! தலைவர் வாழ்க!

தாங்கள் இங்கே வந்து பெரும் கருணை புரிந்திருக்கிறீர்கள். இந்த ஏழையின் குடிசையைத் தங்கள் பாதங்களால் புனிதப் படுத்திவிட்டீர்கள். வாருங்கள், மேலே வந்து தரிசனம் அளியுங்கள்.'

பச்சன்சிங் மதகுருவோடு பேசும் வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஆனால் குருத்வாரத்தை, 'ஏழையின் குடிசை' என்றும், 'புனிதப் படுத்துங்கள்' என்றும் மதகுரு சொல்வதைக் கேட்டதும் உடனே திரும்பிப் போகவேண்டு மென்று அவனுக்குத் தோன்றிற்று. பின்னர் சிறிது யோசித்துவிட்டு அவன் மத குருவுடன் மேலே போய்விட்டான்.

குருவின் உயரம் ஆறேகால் அடி இருந்தது. அவர் சாப் பிட்ட உணவு சதையை உண்டாக்காது வெறும் எலும்புக் கூட்டைத்தான் வளர்த்துக் கொண்டிருப்பதுபோல் அவ ருடைய உடல் தோற்றமளித்தது. கன்னத்தில் விழுந்திருந்த குழியைப் பார்க்கும்பொழுது ஒரு சின்னப் பந்தை அதில் வைத்தால் அது இருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க முடியாது போல் தோன்றிற்று. அவரது வயிற்றைச் சிறிது அழுத்தினால் அது முதுகெலும்பைப் போய் இடிக்கும்போல் தென்பட்டது. கீழ் வாயில் ஒரு பல்கூட இல்லை. அதை பார்க்கும்பொழுது பக்தனே இல்லாத குருத்வாரத்தைப் போல் தோன்றிற்று

மேல் வாயிலும் மொத்தம் நான்கு பற்கள்தானிருந்தன. அவைகளும் வெளியே நீட்டிக்கொண்டிருந்தன. குச்சியைப் போன்ற மெலிந்த கால்களைப் பார்த்து அவன் எண்ண லானான். 'பூமி ஒரு வெள்ளைக் காளையின் கொம்புகளின்மேல் நின்றுகொண்டிருக்கிறது. ஆனால் இந்த மத குருவின் இவ்வளவு உயரமான உடலை எந்தப் பொருள் தாங்கிக் கொண்டிருக்கிறதோ!' நாபி வயிற்றிலிருந்து கட்டை விரலளவு வெளியே வந்திருந்தது. மெலிந்த வயிற்றைப் பார்க்கும்பொழுது ஏதோ ஒரு தாம்பாளத்தை அழுக்கடைந்த துணியால் மூடிவைத்திருந்ததுபோல் தோன்றிற்று. தொங்கிக் கொண்டிருந்த காதுகளின் துவாரத்தைக் குண்டலம் முள்ளங்கி நுழையக்கூடிய அளவுக்குப் பெரியதாக்கி இருந்தது. நீண்ட கால்களைப் பார்த்தால் ஆண்டவனும்

இரட்டிப்பு விலையைப் போடும் வியாபாரியைப்போல் இரண்டு மடங்கு தவறு செய்துவிட்டதுபோல் ஐயம் ஏற்பட்டது. இயற்கை அவருடைய உடலை சிருஷ்டிக்கும் வேலையை ஒரே நாளில் செய்யாமல் வேறு வேறு நாட்களில் செய்தது போல் தோன்றிற்று.

மதகுருவின் கட்டிலில் எண்ணெயால் அல்வாக் கடைக் காரனின் கடையிலுள்ள கோணியைப்போல் ஆகியிருந்த தலையணை வைக்கப்பட்டிருந்தது. அதை அவர் விரைவாகக் கட்டிலுக்கடியில் எறிந்துவிட்டு ஜமக்காளத்தின் கிழிசலை மறைத்தவாறு அதனை இரண்டாக மடித்து விரித்துப் போட்டார். பிறகு அவர் மேலுதட்டை நீட்டி வெளியே நீண்டிருந்த பற்களை மறைக்க முயற்சித்தவாறு கூறினார், 'வாருங்கள், சர்தார்ஜீ... ..உட்காருங்கள் எப்படியிருந் தாலும் இது உங்களுடைய வீடுதானே! தாங்கள் தரிசனமே அளிப்பதில்லை. எப்படியானாலும் இன்று எறும்பு வீட்டிற்கு ஆண்டவன் எழுந்தருளிவிட்டார்.'

'எல்லாம் தங்களுடைய கருணை,' என்று சொல்லிவிட்டு பச்சன்சிங் அறையிலுள்ள பொருள்களைக் கவனித்துக் கொண்டே கேட்டான், 'கிரந்த சாகப் எங்கே படிக்கப் படுகிறது?'

'என்ன சொல்லட்டும் சர்தார்ஜீ! இங்கே குருத்வாரத் திற்கு ஒருவருமே வருவதில்லை. (சிறிது யோசித்தவாறு) கீழேதான் கிரந்த சாகப் படிக்கப்படுகிறது. ஆனால் இன்று என்ன சொல்லட்டும், உடல்நிலை சரியாக இல்லை. ஆதலால் படிக்க முடியவில்லை.'

பச்சன்சிங் அறியாத குழந்தை இல்லை. ஓரிரண்டு சொற்களிலேயே 'மதகுரு முகஸ்துதி செய்கிறார்' என்பதைப் புரிந்துகொண்டு விட்டான். ஆனால் அவருடைய உண்மை யைச் சோதிப்பதற்காக அவன் கேட்டான், 'வாருங்கள். தங்களுக்குச் சிறிது கஷ்டமாகத்தான் இருக்கும். கீழே வந்து கதவைத் திறந்து கிரந்த சாகபைப் படியுங்கள். கிராமத்திற்கு வந்தது முதல் கிரந்த சாகப் படிக்கும் வாய்ப்பே கிடைக்கவில்லை.'

மதகுரு தன் முயற்சியில் தோல்வியுற்றுக் கீழே இறங்க வேண்டி வந்தது. ஐந்தாறு நிமிடங்கள் முயற்சி செய்த பிறகு சாவி கிடைத்துவிட்டது. ஆனால் பூட்டில் சாவியைப் போட்டால் பூட்டு திறக்கவேயில்லை. பச்சன்சிங் சலித்துக் கொண்டு கூறினான், 'தவறாக வேறொரு சாவியைப் போட்டு விட்டீர்களா என்ன?'

மதகுரு சலிப்புடன் மேலே ஏறிக்கொண்டே சொன்னார், 'கொஞ்சம் இருங்கள். ஒருவேளை சாவி மாறிவிட்டதுபோல் இருக்கிறது.' அவர் வேகமாக மேலேபோய் எண்ணெய் விளக்கிலுள்ள எண்ணெயில் சாவியை நனைத்துக்கொண்டு வந்தார். பூட்டு திறந்ததும் மதகுரு கூறினார், 'என்ன சொல்லட்டும்! ஒரே கஷ்டமாகப் போய்விட்டது. சாவி வேறொரு அலமாரியில் கிடந்தது. நான் கூடத்துச் சாவியை எடுத்துக்கொண்டு வந்துவிட்டேன்.'

குருத்வாரத்தின் உள்ளே போய் அங்கிருந்த நிலையைப் பார்த்ததும் இருவருக்கும் நடுக்கமேற்பட்டது. பச்சன்சிங் கோபத்தால் துடித்தான், மதகுரு வெட்கத்தால் நடுங்கினார்.

அதற்குப் பிறகு பச்சன்சிங் பலவிதமான எச்சரிக்கை களுடன் மதகுருவை நன்றாகத் திட்டிவிட்டு வயல்களை நோக்கிப் போய்விட்டான்.

## [ 11 ]

'பெரியவரே! எல்லாம் நலம்தானே!' என்று பாலாசிங் மிகுந்த அன்புடன் "சத் ஸ்ரீ அகால்" எனக் கூறி வணங்கி விட்டு மதகுருவைக் கேட்டான். மதகுரு அப்பொழுது குருத் வாரத்தின் முற்றத்தைத் துடைப்பத்தால் சுத்தம் செய்து கொண்டிருந்தார். துடைப்பத்தை வைத்துவிட்டுத் தூசி படிந்த கையைச் சட்டையில் துடைத்துக் கொண்டே கூறி னார், 'வாருங்கள். என்ன சொல்லட்டும்? அந்த சர்தார் ஜீவாசிங்கின் மகன் எனக்கு ஆபத்தைக் கொண்டுவந்து விட்டான். அவன் இங்கே வந்ததிலிருந்து என் இரத்தமே காய்ந்து போய்விட்டது. பயத்தால் ஒன்றும் பேசமுடிய வில்லை. பலசாலி பத்தும் பண்ணுவானில்லையா?'

பாலாசிங் அந்த கிராமத்தில் ஒரு புகழ்பெற்ற போக்கிரி. அவனுடைய கூட்டம் அவனை மதத்தலைவனைப் போலப் பூஜித்து வந்தது. பெற்றோர் இறந்த பிறகு தன்னிடம் ஓரளவுக்கு இருந்த நிலத்தைச் சாப்பிட்டே அழித்துவிட்டான். அவன் பெரும் போக்கிரியாக இருந்தான். கிராமம் முழுவதும் அவனிடம் பயந்து வந்தது. யாருக்காவது சண்டை சச்சரவு அல்லது அது போன்ற ஏதாவது செய்ய வேண்டுமென்றால் பாலாசிங் தன் கூட்டத்தோடு அதனைச் செய்ய வந்துவிடுவது வழக்கம்.

ஆனால் அவனிடம் மற்றவருக்குக் கொடுத்துச் சாப்பிடும் வழக்கம் இருந்தது. அதனால் அவனுக்கு மரியாதை குறையவேயில்லை. பதினைந்து நாள் அல்லது ஒரு மாதத்திற்குப் பிறகு அவன் திருடக் கிளம்பும் பொழுது முதலில் குருத்வாரத்தில் வந்து வேண்டிக் கொள்ளுவான். அதனால்தான் மதகுரு அவனிடம் மதிப்பு வைத்திருந்தார். அவன் எப்பொழுதாவது பெரிய ஒரு திருட்டை முடித்துவிட்டு வந்தால் குருத்வாரத்தில் தவலை தவலையாக பிரசாதம் வழங்குவது வழக்கம். இதைத் தவிர அவனுடைய செலவில் இடையறாது பானகம் விநியோகிக்கப்பட்டு வந்தது.

சில நாட்களாக பாலாசிங் திருடச் சென்றிருந்தான். பல நாட்களுக்குப் பிறகு ஏராளமாகக் கொள்ளையடித்துவிட்டு, கிராமத்திற்குத் திரும்பி வந்திருந்தான்.

பாலாசிங் பல நாட்களாக ஜீவாசிங்கிடம் பொறாமை கொண்டிருந்தான். அவன் பல்லைக் கடித்துக்கொண்டு ஜீவாசிங்கைப் பழிவாங்கும் வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஜீவாசிங் அவனை மதிப்பதில்லை. மேலும் அவன் ஒரு முறை அதிகாரிகளிடம் பாலாசிங்கின் தீய செயல்களின் இரகசியத்தை வெளியிட்டு விட்டான். ஆதலால் ஒவ்வொரு வினாடியும் அவனுக்கு ஜீவாசிங்கினால் ஆபத்து காத்திருந்தது. இப்பொழுது அவனுக்கு பச்சன்சிங்கைக் கண்டாலும் எரிச்சலாக இருந்தது. ஏனென்றால் பச்சன்சிங் அவனுடைய பாதையில் பெரிய தடையாக இருந்தான்.

மதகுருவின் சொற்களைக் கேட்டு பாலாசிங் கூறினான், 'தங்களுக்கு அறிவு புகட்டுமளவுக்கு அந்தச் சின்னப் பயலுக்கு என்ன தைரியம்? அவன் தங்களுக்கு என்ன துன்பத்தைக் கொடுத்தான் என்று சொல்லுங்கள் போதும்.'

'ஒன்றும் கேட்காதீங்க ஐயா! பெரிய படிச்சவன் முளைச்சு வந்திட்டான்! பேசறதெல்லாம் தாறுமாறாகப் பேசுகிறான். தினசரி காலையில் எழுந்து குரு கிரந்தசாகபை பூசிக்க வேண்டுமாம்; இரண்டு வேளை துடைப்பம் போட்டு சுத்தம் செய்யவேண்டுமாம், மாலையில் கிரந்த சாகப் படிக்க வேண்டுமாம்! என்ன சொல்லட்டும்!'

பாலாசிங் கோபத்துடன் கூறினான், 'பார்த்தீர்களா? அவனுக்கு அறிவு மங்கிவிட்டது. இந்த இடத்தை அவன் அம்ருத்சர் என்று நினைத்து விட்டானா? நிலத்தை விட்டு விட்டு குருத்வாரத்திற்கு எவன் வருவான்? சங்கிராந்தி, அமாவாசை என்ற நாட்களிலே ஒரு மணி இரண்டு மணி நேரம் வந்தால் அதுவே பெரிய விஷயம். நான் சொன்னால் நீங்கள் கோபப்படுவீர்கள். நீங்களும் வெறும் மண் பொம்மைதானுங்க! உங்களுக்கு என்ன ஜீவாசிங்கா சம்பளம் கொடுக்கிறான்?'

தன் சார்பாகப் பேசுவதைக் கேட்டு அந்தப் பெரியவர் உற்சாகத்தோடு கூறினார், 'தங்களுடைய புள்ளை குட்டிகள் வாழட்டும். இலட்ச ரூபாய் மதிப்புள்ள வார்த்தை சொன்னீங்க! அந்தப் பயல் சின்ன வயசுப் பயல்தானே! அவனுக்கு யார் சொல்றது? என்ன இருந்தாலும் நாமெல்லாம் மாற்றான் மனைவி போலத்தானே! என்ன சொல்லட்டும். வாழ்க்கையை நடத்தவேண்டும். யாருடைய சொல்லையாவது கேட்காமல் போனால் ஒரு காசுக்கு மதிக்கக்கூடிய இந்த மதகுரு எதிர்த்துப் பேசுகிறானே என்று சொல்லிவிடுகிறார்கள். ஆதலால் மௌனமாக இருக்கவேண்டியிருக்கிறது. வருகிற கஷ்டம் போனால் சரி. எதற்காக நாம் கஷ்டத்தில் போய் விழ வேண்டும்? இங்கே யாரும் கருகிப்போன ரொட்டித் துண்டு கூட கொடுப்பதில்லை. ஏதோ உங்களைப் போன்ற கொடையாளிகளுடைய தயவினால் வாழ்க்கை ஓடிக்கொண்டிருக்கிறது.

கிராமத்தில் ஏதோ எப்பொழுதாவது ஒரு வழக்கு என்று வரு கிறது. அப்பொழுது 'கிரந்தசாகப்' படிக்கச் சொல்லி நான்கு காசுகள் கொடுக்கிறார்கள். இல்லையென்றால் குருத் வாரத்திற்கு யார் வருகிறார்கள்? அப்படி இருக்கும்பொழுது யாருக்காக அதிகாலையில் தூக்கத்தைக் கெடுத்துக்கொள்ள வேண்டும்?'

'இதனால்தானே யார் வேண்டுமானாலும் உங்களுக்கு கஷ்டம் கொடுக்கிறார்கள். இப்படியிருந்தால் எவ்விதம் வாழ முடியும்? தாங்கள் தயங்காமல் வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்பதுபோல விடைகொடுத்து விடுங்கள். அவன் உங்களை என்ன செய்து விடுவான்? பார்க்கலாமே! நான் இருக்கும் பொழுது உங்கள் பக்கம் பார்க்கக்கூட யாருக்காவது தைரியம் வருமா?'

பாலாசிங்கின் சொற்களைக் கேட்டுப் பெரியவரின் மறைந் திருந்த சக்தி விழிப்படைந்தது. அவர் ஆவேசத்துடன் கூறினார், 'அப்படியொன்றும் இல்லை சர்தார்ஜீ! எனக்கு அவனைப் பற்றிய கவலை இல்லை. ஆனால் எங்கேயாவது நாளைக்கு நீங்களும் அவனுடைய சொற்களைக் கேட்டு என்னையே கெட்டவன் என்று சொல்லக் கூடாதே என்று நினைக்கிறேன். உங்களைப் பற்றின எண்ணம் இல்லாமலிருந் தால் நான் அதே நேரம் அவனுக்குப் பாடம் கற்பித்திருப் பேன். எனக்கென்ன வந்தது? சர்தார்ஜீ! நான் அபின் சாப்பிட்ட பிறகு அதிகாலையில்தானே நன்றாகத் தூக்கம் வருகிறது. அதுதானே குறட்டைவிடும் நேரம். ஆனால் அவன் அப்பொழுதுதான் என் கழுத்தில் ஒரு ஆபத்தை மாட்டப் பார்க்கிறான் என்ன சொல்லட்டும் நான்!'

'அது என்ன ஆபத்து?'

'அவன் சொல்லுகிறான், ஐயா நீங்கள் வேலையில்லாமல் நாள் முழுவதும் கட்டிலைத் தேய்த்துக்கொண்டு இருக்கிறீர்கள். ஒரு வேலையும் இல்லாவிட்டாலும் கிராமத்துக் குழந்தைகளுக்கு படிப்புச் சொல்லிக் கொடுங்களேன் என்று.'

பாலாசிங் கோபத்தால் உதட்டைக் கடித்துக்கொண்டு கூறினான், 'படிப்புச் சொல்லிக் கொடுக்கவேண்டியது ஒன்று

மில்லை. அவன் பன்னிரண்டு ஆண்டுகள் படித்து அவன் என்ன பயனை அடைந்துவிட்டான் என்பது நமக்குத் தெரியும். நல்ல பையனாக இருந்தான். ஒழுங்காகப் பேசிக்கொண்டிருந்தான். இந்த இரண்டு எழுத்துக்களைப் படித்ததிலிருந்து அவன் மூளையே மழுங்கிவிட்டது. என்ன வேஷம் போட்டுக் கொண்டு வந்திருக்கிறான் என்பதைப் பார்த்தீர்களல்லவா? பஞ்சாபியனின் மகனாகப் பிறந்து பஞ்சத்தாண்டிபோல் வேஷம் போட்டுக்கொண்டிருக்கிறான். கால்சா கல்லூரியில் நன்றாகப் படிப்பு சொல்லிக் கொடுக்கிறார்கள் என்று கூறுகிறார்கள். சரி, அது போகட்டும். நீங்கள் என்ன கூறிகள்?'

'நான் ஒன்றும் கூறவில்லை. நான் என்ன அவன் வீட்டில் போய்ச் சாப்பிடப் போகிறேனா? நான் நாள் முழுதும் குழந்தைகளோடு அல்லல்பட முடியாது என்று கூறிவிட்டேன். நான் என்ன சொல்லட்டும் சர்தார்ஜீ! நடுப்பகலில்தானே அபின், பங்கி முதலியன சாப்பிடும் நேரமாகும். சாப்பிடும் நேரமும் அதுதானே! அப்படியிருக்க எனக்கு இந்தத் தொந்தரவுகளில் ஈடுபட நேரம் எங்கே இருக்கிறது? நான் என்ன சொல்லட்டும்?'

அபின் என்று சொன்னதும் அதைப் பிடித்துக்கொண்டு பாலாசிங் கூறினான், 'இப்பொழுதெல்லாம் நீங்கள் தனியாகவே ருசி பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறது. தியான்சிங், நரைன்சிங் இருவரும் இன்று காலையிலிருந்து என்னைத் துன்புறுத்திக் கொண்டிருக்கிறார்கள். பெரியவரின் வீட்டிற்குப் போய் பிரசாதம் வாங்கிக் கொள்ளலாம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.'

'ஐயா! ருசி பார்ப்பது எங்கே! அது கிடக்கட்டும். அந்தப் பையனிடம் பயந்துகொண்டு பங்கி அரைக்கக்கூட முடியவில்லை. பல நாட்களாகக் காய்ந்துபோய் உட்கார்ந்திருக்கிறேன்.'

'மறுபடியும் அதே பேச்சா? அந்தப் பையனைப் பற்றி கொஞ்சமும் கவலைப்படவேண்டாம் என்றுதான் சொல்லிவிட்டேனே! இன்று நீங்கள் கவலையில்லாமல் பங்கி அரையுங்

கள். அவன் என்ன செய்துவிடுவான்? நான் பார்த்துக் கொள்ளுகிறேன்'

'அப்படியென்றால் நல்லது. இன்று நான் பழைய குறையை யெல்லாம் தீர்த்துக் கொள்ளுகிறேன். நீங்களும் வருவீர்கள் இல்லையா?'

'ஆமாம் ஐயா! கட்டாயம் வருகிறேன்.'

'நல்லது, அப்படியென்றால் சீக்கிரம் வாருங்கள். அது கிடக்கட்டும். மாலை நிழல் மறைவதற்கு முன்னால் வந்து விடுங்கள். உங்களுடைய நண்பர்களும் வருவார்கள் இல்லையா?'

'ஆமாம் ஐயா! அவர்கள்தான் என்னை விடவே மாட்டே னென்கிறார்களே!'

'இது மகிழ்ச்சியான செய்திதானே!'

'நல்லது. குரு, தாங்கள் வாழ்க!' என்று சொல்லிக் கொண்டே பாலாசிங் போய்விட்டான். பெரியவர் மதகுருவின் துடைப்பம் வைத்தபடியே இருந்தது. அவர் பங்கி அறைக் கும் வேலையில் ஈடுபட்டுவிட்டார். அவர் காலையிலே தயாரித்த லேகியத்தின் இரண்டு மூன்று கவளங்களைப் போட்டிருந்தார். நல்ல மயக்கம் ஏறியிருந்தது. ஆனால், 'கைநிறையத் தின்னவன் விரலை நக்கினால் என்ன ருசியைக் காணப் போகி றான்' என்பதுபோல் அவருக்கு அது எவ்வாறு போதும்? குடிகாரர்களுக்கிடையில் உட்கார்ந்துகொண்டு முழங்கால் களில் முகவாயை வைத்தவாறு கடகடவென்று பங்கி போடு வதில் உண்டாகும் அந்த வேகம் இந்த இரண்டு மூன்று கவளங்களினால் உண்டாக முடியுமா?

## [12]

நடுப்பகல்; ஏறக்குறைய மூன்று மணி இருக்கும். குருத் வாரத்தின் மேலே உள்ள அறையில் பெரியவரின் கூட்டம் கூடி யிருந்தது. பெரியவர் ஒரு பக்கம் உட்கார்ந்து கொண்டு ஆர்வத்துடன் மெதுவாகத் தடியைச் சுத்தப்படுத்திக்கொண் டிருந்தார். ஏனென்றால் பல நாட்களாக பச்சன்சிங்கினிடம்

இருந்த பயத்தினால் தடியைச் சுத்தப்படுத்த வாய்ப்பே கிடைக்கவில்லை.

பாலாசிங் துப்பட்டியின் தலைப்பிலிருந்து கொஞ்சம் வெல்லத்தை எடுத்து ஒருபுறம் வைத்துக்கொண்டே சொன்னான், 'பெரியவரே! கொஞ்சம் சீக்கிரமாகவே துடையுங்களேன்!'

அங்கவஸ்திரத்தால் சிறிய தொட்டியையும் தடியையும் துடைத்துக்கொண்டு வந்தவாறே பெரியவர் கூறினார், 'ஐயா! நீங்கள் வெல்லத்தைப் பாத்திரத்தில் போட்டுக் கரைத்துக் கொண்டிருங்கள். நான் ஓடிப்போய் பங்கி வாங்கிக்கொண்டு வருகிறேன்'

கூட்டத்திலிருந்த ஓர் இளைஞன் வெல்லம் கரைக்க ஆரம்பித்தான். மற்றொரு இளைஞன் அம்மியைச் சுத்தப்படுத்த ஆரம்பித்தான். பெரியவர் ஈரக் கையைச் சட்டையில் துடைத்துக்கொண்டு கடைத் தெருவுக்குப் போகத் தொடங்கினார். அப்பொழுது பாலாசிங் துப்பட்டியின் முடிச்சில் வைத்திருந்த நாலணாக் காசை எடுத்து அவரிடம் கொடுத்துக்கொண்டு சொன்னான், 'அன்போடு தயாரித்துக் கொடுக்கும்படிச் சொல்லுங்கள். இரண்டணாவுக்கு பங்கி, இரண்டணாவுக்கு வாதாம்கொட்டை.'

கோபால்சிங் ஒரு அழுக்கான பொட்டலத்தைத் திறந்து கொண்டே சொன்னான், 'ஐயா! வாதாம் கொட்டை கொண்டு வராதீர்கள்.' இவ்வாறு சொல்லிக் கொண்டே அவன் தலைப்பிலிருந்து முக்கால் சேர் வாதாம் கொட்டைகளைக் கொட்டினான்.

'அப்படியென்றால் நாலணாவுக்கு பங்கி வாங்கி வாருங்கள்,' என்று பாலாசிங் கூறினான்.

'நல்லது' என்று சொல்லிக் கொண்டே பெரியவர் விரைவாகக் கடைத் தெருவை நோக்கிப் போய்விட்டார். இந்தப் பஞ்சாபிகளின் அறிவு மழுங்கிவிட்டது என்று அவர் எண்ணலானார். அவர் இரண்டணாவுக்கு பங்கியை வாங்கினார். இரண்டணாவைச் சட்டைப்பையில் வைத்துக் கொண்டார்.

அவர் மறுபடியும் தன் இடத்திற்கு வந்தபொழுது எல்லோருமாக வாதாம் கொட்டையை உடைத்துக் கொண்டிருந்தார்கள். தேவாசிங் கூறினான், 'பெரியவரே! நீங்கள் அங்கேயே போய்

உட்கார்ந்து கொண்டு விட்டீர்களே! அதை இங்கே கொண்டு வாருங்கள்!' அவன் பெரியவரின் பக்கம் கையை நீட்டினான்.

பெரியவர் சட்டைப் பையிலிருந்து பொட்டலத்தை எடுத்து சீக்கிரமாக நீட்டியவாறே கூறினார், 'அப்பா! நான் ஓட்டமாகத்தான் ஓடிச் சென்றேன்......'

இதைக் கேட்டு கூட்டம் முழுவதும் ஒரேயடியாக சிரிக்க ஆரம்பித்துவிட்டது. எல்லோரும் சிரித்துச் சிரித்து மாளவில்லை. பெரியவருக்கு காலையில் அடித்த பங்கியோ என்னவோ? பங்கிப் பொட்டலம் அவரது சட்டைப் பையிலேயே திறந்துகொண்டு விட்டது. அவர் வெறும் காகிதத்தை தேவாசிங் கையில் கொடுத்தார். காகிதத்தில் இருந்த பங்கி, காகிதம் கிழிந்ததும் தரையில் சிதறிவிட்டது.

பெரியவர் வெட்கமடைந்து தரையில் உட்கார்ந்து கொண்டார். சட்டைப் பையிலிருந்து அவர் பங்கியை எடுத்துப் பாத்திரத்தில் போட்டவாறு கூறினார், 'பாருங்கள் ஐயா! இந்த வியாபாரிகளின் மூளையில்லாத வேலையாட்கள் செய்ததை! பொட்டலம் கட்டக்கூட அறிவில்லை. தாயின் வயிற்றிலிருந்து வெளியே வந்ததும் கடையிலே வந்து உட்கார்ந்து கொண்டு விடுகிறார்கள்.'

கூட்டம் முழுவதும் பெரியவரைச் சுற்றி உட்கார்ந்து கொண்டது. எல்லோரும் மாற்றி மாற்றி தடியைப் பிடித்துக் கொண்டு அரைக்கத் தொடங்கி விட்டார்கள். அரைப்பதில் முக்கால் மணி ஆகிவிட்டது. அபின் மையைவிட மிருதுவாக அரைக்கப்பட்டுவிட்டது. லக்காசிங் கூறினான், 'இப்பொழுதாவது நிறுத்துங்கள், இரவு வரை இவ்வாறு அரைத்துக் கொண்டே இருக்கப் போகிறீர்களா?'

பெரியவர் அருகில் உட்கார்ந்து கொண்டு கண்ணாடி டம்ளர்களைக் கழுவிக் கொண்டிருந்தார். ஒரு கிண்ணத்தில் சிறிது எண்ணெய் பட்டிருந்தது. அதை விரல்களால் துடைத்து முழங்காலில் தேய்த்துக் கொண்டே கூறினார், 'இப்பொழுது கூடாது ஐயா! இன்னும் இரண்டு மூன்று முறை அரையுங்கள். பெரியோர்கள் பாடியிருக்கிறார்கள்— "பங்கியை

எவ்வளவுக் கெவ்வளவு அதிக நேரம் அரைப்பாயோ, அவ்வளவுக் கவ்வளவு, அதன் குணமும் அதிகரிக்கும்,'' என்று'

இன்று எங்கிருந்தோ நிர்மலா சம்பிரதாயத்தைச் சேர்ந்த ஒரு சன்னியாசியும் குருத்வாரத்திற்கு வந்திருந்தார். அவர் இந்தக் கூட்டத்திற்கருகில் ஒரு மூலையில் உட்கார்ந்தவாறு 'பாவரஸாமிருதத்தின்' வியாக்கியானத்தைப் படித்துக் கொண்டிருந்தார். பெரியவர் மதகுருவின் பாட்டைக்கேட்டதும் அவருடைய கவனம் புத்தகத்திலிருந்து அகன்றது. அவர் உடனே கூறினார், 'ஐயா! நீங்கள் புலவர் போலத் தோன்றுகிறீர்கள். ஆனால் பாட்டில் எதுகை மோனை சரியாக அமையவில்லையே!'

பெரியவர் அவரை அடக்குவதற்காகக் கூறினார், 'ஐயா! இதை சிர்கண்டி அதாவது தலைவெட்டிப் பாடல் என்று கூறுவார்கள். பெரிய பெரிய கவிகள் எல்லாம் இந்த முறையில்தான் பாடியிருக்கிறார்கள். பாருங்களேன், ஒரு கவி கூறியிருக்கிறார்,

"கைலாயபதி சிவனின் வாயினிலே கங்கை!
பூசனை செய்தால் இன்பம் பெறுவாய்
உளத்தால் சிவனை தியானம் செய்வாய்!"

மற்ற எவருக்கும் அது புரியவில்லை. ஆனால் அந்தச் சன்னியாசியால் மௌனமாக இருக்க முடியவில்லை அவர் சிரித்துக்கொண்டே கூறினார், 'ஐயா பெரியவரே! இதை சோரடா (இரண்டு வரிப்பாடல்) என்று கூறுவார்கள். பாடலை நீங்கள்தான் இயற்றியிருக்கிறீர்கள் போலத் தோன்றுகிறது. "வாயினிலே கங்கை!" ஆகா! என்ன அழகாகக் கூறினீர்கள்! கங்கை சிவனுடைய வாயிலிருந்து கிளம்பிற்று அல்லது தலையிலிருந்து கிளம்பிற்று?'

மயக்கத்தில் பெரியவருக்கு இந்த மண்டுகளுக்கிடையே ஒரு அறிஞனும் உட்கார்ந்திருக்கிறான் என்பது தெரியவில்லை. அவருக்குத் தன் மானத்தைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டுமென்ற கவலை உண்டாகிவிட்டது. அவர் கணுக்காலை நகத்தால் சுரண்டியவாறே கூறினார், 'ஐயா! அது போகட்டும். சோரடாவும் தலைவெட்டிப்பாவும் ஒன்றேதான்.

கவிகள் அவற்றின் பெயரை மட்டும் மாற்றி வைத்து விட்டார்கள்.'

சன்னியாசிக்கு இது கேட்டுச் சிரிப்பாக வந்தது. அவர் கூறினார், 'ஆமாம் அறிஞரே! நான் புரிந்துகொண்டு விட்டேன். இரண்டினுடைய எழுத்துக்களின் எண்ணிக் கையும் ஒன்றுதானே! தாங்கள் பெரிய அறிஞர்போல இருக்கிறீர்களே!'

தங்களுடைய பெரியவரின் வெற்றியைக் கண்டு அனைவரும் கைதட்டத் தொடங்கினார்கள். இந்தப் பேச்சுவார்த்தை யிலேயே அரைமணி நேரம் ஆகிவிட்டது. பியாராசிங் தொட்டியின் ஓரத்தில் ஒட்டிக்கொண்டிருந்த பங்கியை விரலால் எடுத்தவாறே கூறினான், 'பெரியவரே! போதுமா? அல்லது இன்னும் அரைக்கவேண்டுமா?'

'போதுமப்பா போதும்' என்று சொல்லிக்கொண்டு கொடியிலிருந்து மேல் துண்டை எடுத்துப் போட்டுக் கொண்டே பெரியவர் முன்னால் வந்து உட்கார்ந்துகொண்டார். உட்காரும்பொழுது அவருடைய முழங்கால் எலும்புகள் சுடக்கிக்கொள்ளும் சத்தம் கேட்டது. ஏதோ பட்டாசு வெடித்தமாதிரி இருந்தது. பாலாசிங் விரல்களால் பாத்திரத் தில் வெல்லத் துண்டுகளைக் கிள்ளிப் போட்டுக்கொண்டே சொன்னான், 'ஐயா பெரியவரே! இன்று ஒரு விஷயம் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள். இரண்டு விதமான பங்கியைத் தயார் செய்யுங்கள். ஒன்று அனுபவம் வாய்த்தவர் களுக்கு, மற்றொன்று புதியதாக பங்கி அடிப்பவர்களுக்கு. (சைகை காட்டி) இந்த சர்தார்ஜீ கண்டாசிங்கின் மாப்பிள்ளை. இவர் முதன் முறையாக மாமனாரின் வீட்டிற்கு வந்திருக்கிறார். எங்கேயாவது இவர் மறுபடியும் மாமனார் வீட்டிற்கு வருவதையே விட்டுவிடும்படி ஆகிவிடக்கூடாது. இந்த வசாவாசிங்கும் மான்சிங்கும் இந்தக் கூட்டத்திற்கு முதன் முறையாக வந்திருக்கிறார்கள்.'

'நன்றாகக் கூறினீர்கள்', என்று சொல்லிவிட்டு பெரியவர் தன் வேலையில் ஈடுபட்டார். சிறிது நேரத்தில் எல்லா வேலை யும் முறையாக முடிந்துவிட்டது.

கண்டாசிங்கின் மாப்பிள்ளை பட்டினத்தானாக இருந்தாலும் ஒன்றும் அதிகமாகப் படித்தவனில்லை. ஆனால் அவனது உடையையும் காலரையும் பார்த்தால் அவன் பீ.ஏ. எம்.ஏக்குக் குறைந்தவனாகத் தோன்றவில்லை. அந்த அப்பாவிக்கு இதற்கு முன் பங்கி அடிக்கும் பழக்கம் மிகக் குறைவாகவே இருந்தது. இன்று அவன் பங்கி அடிப்பதில் அனுபவம் வாய்ந்தவர்களின் கூட்டத்தில் வந்து சிக்கிக்கொண்டு யோசித்துக்கொண்டிருந்தான். 'ஆண்டவன் தான் இன்று நம்மைக் காப்பாற்ற வேண்டும்!'

எல்லோருக்கும் பங்கி கொடுக்கும்பொழுது பிரதாப்சிங்கின் முறை வந்ததும் அவன் பின்னால் உட்கார்ந்துகொண்டே பெரியவரின் முதுகை விரலால் சுரண்டிக்கொண்டு கூறினான், 'ஐயா! கால் பகுதி போடுங்கள்.'

பெரியவருக்கு பஞ்சாபிப் பேச்சுமுறை அதிகமாகத் தெரியாது. அவர் பின்புறம் பார்க்காமலேயே 'கால்பகுதி' என்பதை 'சிறிது அதிகமாக' எனப் புரிந்துகொண்டார். பங்கி அடிப்பவர்கள் இம்மாதிரி சொல்வதைப் பொறுக்கமாட்டார்கள். 'நான் அதிகம் குடித்தாலும் ஜீரணித்து விடுவேன்' என்று யாராவது கர்வப்பட்டால் அவர்களுக்குக் கோபம் வந்துவிடும். அப்பொழுது அவனுடைய கர்வத்தைச் சிதறியடிப்பதற்காக அதிகமாகவே பங்கி கொடுத்துவிடுவார்கள்.

பெரியவர் பிரதாப்சிங்கின் விஷயத்தில் இவ்வாறுதான் செய்தார். ரோஜாத் தண்ணீரை விட்டு விட்டு கோப்பை நிறைய பங்கியைக் கொடுத்துவிட்டார். பிரதாப்சிங் 'குறைத்து விடுங்கள், குறைத்துவிடுங்கள்' என்று பல முறை சொன்னான். ஆனால் பெரியவர் மிகவும் வேண்டிக்கொண்ட பிறகு ஒரு வாயளவு குறைத்துவிட்டு அவன் கையில் கோப்பையைத் திணித்துவிட்டார். பயந்துகொண்டே அவன் குடித்துவிட்டான். ஆனாலும் கால் பகுதியை வைத்துவிட்டான்.

பெரியவர் எல்லோருக்கும் பங்கி பிரசாதம் கொடுத்த பின்னர் மீதமிருந்த இரண்டு கோப்பைகளைத் தான் போட்டுவிட்டார்.

அதற்குப் பிறகு சிறிது நேரம்வரை ஏதோ பேச்சு பேசிக் கொண்டிருந்தார்கள். வாயைத் தடவிக்கொண்டு உஜாகர்சிங் கூறினன், 'ஐயா! இன்று சுவர்க்கத்திலே ஊஞ்சலாடுவது போலிருக்கிறது. பேசாமலிருப்பதே நல்லது. நான்கு புறமும் பூக்கள் பழுத்திருக்கின்றன'

முகத்தைச் சுளுக்கிக் கொண்டும் கண்களைச் சுருக்கிக் கொண்டும் இந்தர்சிங் கூறினன், 'என்ன சொன்னே? பூ பழுத்திருக்கிறதா? பையா! நீ இன்னும் வரட்டி தட்டத்தான் லாயக்கு! பூ மலருமா பழுக்குமா? காயல்லவோ பழுக்கும்!'

முயற்சி பண்ணிக் கண்களைத் திறந்துகொண்டு பான்சிங் சொன்னன், 'பாலாசிங்; என்ன விஷயம்? குடிச்ச உடனேயே மண்டையில் ஏறிவிட்டது போலிருக்கிறதே! நீ பழைய கேடி. இப்பொழுதே கண்ணைச் சுளிக்க ஆரம் பித்து விட்டாயா?'

பாலாசிங் வாயிலிருந்த எச்சிலைக் கஷ்டப்பட்டு விழுங்கி விட்டுக் கூறினன், 'பான்சிங்; நீ என்னைச் சொன்னயே! நீயே கண்களை மூட ஆரம்பித்து விட்டாயே!'

திடுக்கிட்டவாறு பான்சிங் விடை கொடுத்தான், 'என்ன கூறினய்? (அவனுக்கு மறுபடியும் தலை கிறுக்க ஆரம்பித்தது) எனக்குத் தெரியவில்லையே!'

'கொஞ்சம் இவன் சொல்வதைக் கேள். உன் கண்களே காட்டவில்லையா?'

'சரி இருக்கட்டும். உனக்கு நம்பிக்கை ஏற்பட்டால் சரி, உன் மனதில் தோன்றியதையெல்லாம் கேளு, நான் சரியாக விடை கொடுக்கவில்லையென்ருல் பிறகு சொல்லு.'

'நல்லது; அப்படியே செய்கிறேன்' என்று பாலாசிங் கூறி விட்டு சிறிது யோசித்தவாறு கூறினன், 'நல்லது, சொல்லு பார்க்கலாம். காமோகி காலாசிங்கின் வழக்கில் யார் யார் சாட்சியாக வந்தார்கள்?'

விடையை எதிர்பார்த்தவாறு பாலாசிங் பான்சிங்கைப் பார்த்தான். அவனுடைய கண்கள் மூடிக்கொண்டன. பாலா சிங் தன் வெற்றியில் பெருமிதம் கொண்டு அவனை ஏதோ சொல்லப் போகும் பொழுது அவனுக்குத் தான் சொல்ல வந்த

வார்த்தையே மறந்து விட்டது. அவன் மறந்ததை நினைவு படுத்திக்கொள்ள முயற்சித்த பொழுது பேச்சுவார்த்தையின் பொருளென்ன என்பதே நினைவுக்கு வரவில்லை. இன்னும் சிறிது யோசித்துப் பார்த்தான். அப்பொழுது அவனுக்கு தான் யாரிடம் பேசிக் கொண்டிருந்தோம் என்பதே மறந்து விட்டது. கடைசியாக பல முயர்சிகளுக்குப் பிறகு ஏதோ காணுமற்போன பொருள் கிடைத்து விட்டது போல மறந்த விஷயம் நினைவிற்கு வந்தது. அவன் வேகமாக, எங்கே மறுபடியும் மறந்துவிடுமோ என்று பயந்து கொண்டு கேட்டான், ‘ஆமாம் பான்சிங்! சொல்லு. யார் யார் சாட்சிக்கு வந்தார்கள்?’

பான்சிங்கின் உணர்வு நிலைக்கு வந்தது. ஆனால் பேச்சின் பொருளைப் புரிந்து கொள்ளாமல் அவன் கேட்டான், ‘என்ன சொன்னாய்?’

கண்களை இன்னும் முயன்று விரித்துக் கொண்டு பாலாசிங் கூறினான், ‘என்ன? நான் ஒன்றும் சொல்லவில்லையே! (சிறிது யோசித்து) ஆமாம், காளையைப் பூட்டாதே; அது பாவம், இரவு முழுவதும் நுகத்தடியில் பூட்டப்பட்டு கிணற்றைச் சுற்றிச் சுற்றி வந்திருக்கிறது என்று சொன்னேன்.’

நாவால் உதட்டைத் தடவிக்கொண்டு பான்சிங் கூறினான், ‘அட; போகட்டுமப்பா! விட்டுவிடு. நீதான் சொன்னாயே! நீதான் சொன்னாயே! (பேச்சை மறந்தவாறு) ஆமாம், கிடைத்து விட்டது. ஆனால் அவள் என்னிடமிருந்து கூலியாக இரண்டு ரூபாய் (சிறிது தயங்கி) போய்விட்டாள்.’ (சிரிக்கத் தொடங்கினான்).

பாலாசிங் கையால் முகத்தைத் தடவிக் கொண்டே கூறினான், ‘அப்பா, பான்சிங், இன்று எல்லை மீறிப் போய் விட்டது, எனக்கு இப்படி இருந்ததே இல்லை.’

பேசிக்கொண்டிருக்கும் பொழுது அவனுக்கு ஏதாவது சாப்பிடவேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. எதிரில் வைக்கப் பட்டிருந்த எஞ்சிய ஒரு சேர் வெல்லத்தைச் சாப்பிட்டு விட்டார்கள் என்று தெரிந்தது. அவன் கூறினான், ‘பெரியவரே! போங்கள், போய் சாப்பிடுவதற்கு ஏதேனும் வாங்கி வாருங்கள்.’

பெரியவர் மயக்கத்தில் ஆடிக்கொண்டிருந்தார். ஏதும் பேசாமல் ஒரு ரூபாயை எடுத்துக்கொண்டு அவர் வெளியே போய்விட்டார். சந்துத் திருப்பத்தில் திரும்பினதும் அவர் எதற்காகக் கிளம்பினேம் என்பதையே மறந்துவிட்டார். ஆனால் உடனே நினைவிற்கு வந்துவிட்டது. அவர் ஜாக்ரதை யாகக் கடைக்காரனிடம் போய்ச் சேர்ந்தார். எட்டணவிற்கு ரேவடி* வாங்கிக்கொண்டு தனது நினைவுச் சக்தியை நிலைக்குக் கொண்டுவந்தவாறு அவர் வீட்டிற்குத் திரும்பினர். அதற்குள் அங்கே பங்கியடிப்பதில் அனுபவம் இல்லாதவர்க ளெல்லோரும் மயங்கி விழுந்துவிட்டார்கள். அனுபவம் வாய்ந்தவர்களில் ஒருவன் மாடியைப் பார்த்துக்கொண்டிருந் தான், ஒருவன் சிரித்துக்கொண்டிருந்தான், மற்றொருவன் தானிருந்த இடத்தில் சிலையைப்போல் உட்கார்ந்திருந்தான், மற்றும் ஒருவன் முன்பக்கம் குனிந்தவாறு யாரையோ கூப்பிடத் தொடங்கிக்கொண்டே அப்படியே இருந்து விட்டான்.

தூங்கினவர்கள் தூங்கிக்கொண்டே இருந்தார்கள். ஆனால் விழித்துக்கொண்டு இருந்தவர்களுக்கு ரேவடி, பூதத்துக்குப் போட்ட சத்துமாவைப்போல் போதாமலிருந்தது. பாலாசிங் மேலும் ஒரு ரூபாயை எடுத்துப் பெரியவரிடம் கொடுத்தான். பெரியவர் மறுத்திருப்பார். ஆனால் அவர் எட்டணு மிச்சப் படுத்தலாம் என்ற ஆசையாலும் முதலில் வாங்கிவந்த ரேவடியில் தனக்குக் கொஞ்சம் கூடக் கிடைக்காததாலும் மறுபடியும் வாங்கிவரப் போய்விட்டார்.

இப்பொழுது அவர் தான் போகும் வேலையை மறந்துவிடக் கூடாது, வழியிலேயே வழிமாறிப் போய்விடக்கூடாது என்று நினைவுபடுத்திக்கொள்ள முயற்சி செய்துகொண்டிருந்தார். நீந்தத் தெரியாதவன் ஒரு பலகையைப் பிடித்துக்கொண்டு நீந்தும் பொழுது பலகை கையை விட்டு அகன்று விட்டால் தான் மூழ்கிவிடுவோம் எனப்பயந்துகொண்டு அந்தப் பலகை யோடு ஒட்டிக்கொண்டிருப்பது போலிருந்தது அவரது நிலை.

* எள், சர்க்கரை முதலியன சேர்த்துத் தயாரித்த தின்பண்டம்.

பெரியவர் தோளில் போட்டிருந்த துண்டை எங்கே விட்டு விட்டாரோ தெரியவில்லை. (துண்டில் ரேவடியைக் கட்டிக் கொண்டு வந்திருப்பதை மறந்துவிட்டார்.) அதைத் தேடு வதற்காகக் கட்டிலுக்கடியில் அவர் தடவத்தொடங்கினார்.

அதிக நேரம் ஆகிவிட்டபிறகும் பெரியவர் ரேவடியை வாங்கிக்கொண்டு திரும்பவில்லை. பாலாசிங்கிற்கும் ரேவடி யின் நினைவு வந்தது. அவன் எழுந்து பெரியவருக்குப் பின்னாலேயே போய்விட்டான். ஆனால் அவனும் திரும்ப வில்லை.

இந்த வேளையில் நிர்மலா சன்னியாசி கைதேர்ந்தவர்—ஒரு மணி நேரத்திற்குப் பிறகு அவருடைய மயக்கம் சிறிது தெளிந் தது. அப்பொழுது அவருக்கு ரேவடி வாங்கிவரச் சென்ற மூன்று பேர்களில் ஒருவன்கூடத் திரும்பவில்லை என்பது நினைவிற்கு வந்தது. அவருடைய உபகார உணர்வு அவரை வீட்டில் இருக்க விடவில்லை. அந்த உபகார உணர்விற்கு அடிப்படை ரேவடியிலுள்ள எள்ளின் நினைவாகவும் இருக் கலாம். அவர் எழுந்து அவர்களைத் தேடுவதற்காகப் போய் விட்டார். விளக்கு ஏற்றும் நேரம் ஆகிவிட்டது.

அவர் கடைத்தெருவை அடைந்தார். வெகு நேரம் தேடியும் மூவரில் ஒருவர்கூடக் கிடைக்கவில்லை. களைத்துப்போய் அவர் இருப்பிடத்திற்குத் திருப்பிக் கொண்டிருந்தபொழுது வழியில் கிணற்றுத் தண்ணீர் சேர்ந்து அழுக்குச் சாக்கடை யாக ஆகியிருந்த ஒரு இடத்தில் பாலாசிங் தலைகீழாக விழுந்து கிடப்பதைப் பார்த்தார். பல பேர் அவனை உலுக்கிக் கொண் டிருந்தார்கள். ஆனால் அவன் பிதற்றிக்கொண்டேயிருந் தான்—'அடடே! என்னை நெருப்பு பற்றிக்கொண்டுவிட்டது. என் துணிகள் எரிந்துகொண்டிருக்கின்றன. தண்ணீரைப் போட்டு வயிற்று நெருப்பை அணைத்து விட்டீர்கள். என் முதுகு இன்னும் எரிந்துகொண்டிருக்கிறது. முதுகின் வாளித் தண்ணீரைக் கொட்டுங்கள். ஐயோ நான் செத்துப் போய் விட்டேன்!'

சன்னியாசி எல்லாவற்றையும் பார்த்துவிட்டுப் பேசாமல் இருப்பிடத்திற்குத் திரும்பி வந்துவிட்டார். ஆனால் பெரியவரை

எங்கும் காணவில்லை. சன்னியாசி படுத்துக்கொள்வதற்காகக் கட்டிலில் உட்கார்ந்தபொழுது அவருடைய காலில் தட்டுப் பட்டது. கீழே குனிந்து பார்த்தார். அங்கே கட்டிலுக்கடியில் பெரியவர் சுருண்டுகொண்டு தூங்கிக் கொண்டிருந்தார். அவருடைய கைப்பிடியில் ரூபாய் இருந்தது.

சன்னியாசி பெரியவரை ஆட்டி உலுக்கி வெளியே இழுக்க முயற்சித்தார். ஆனால் அவர் இன்னும் சிணுங்கிக்கொண்டே பிதற்றிக்கொண்டிருந்தார், 'பிடி! பிடி! பசஙனப் பிடித்துக் கொள். சர்தார் பாலாசிங்! நீங்கள் அவனுக்குப் பாடம் கற்பிப்பதாகக் கூறினீர்களில்லையா! (திக்கித் திக்கிப் பேசிய வாறு) சீக்கிரம், சீக்கிரம். பாரு, இவன் என் கழுத்தை நெறிக்கிறான். இவன் என்னைக் (வேகமாக எச்சிலை விழுங்கிக் கொண்டு) கொன்று விடுவான். அடே! ஓடி வா. இவன் வாயில் மணலைத் திணிக்கிறான். ஐயோ! என்னுடைய வாய் காய்ந்து போய்க்கொண்டிருக்கிறது. அப்பா! இங்கே வந்து என்னுடைய வாயிலிருந்து மணலை எடு!'

எல்லோரும் மயக்கமாகக் கிடந்தார்கள். பெரியவரின் பிதற்றலைக் கேட்க யாருக்கு அக்கறை?

பிறகு சன்னியாசி 'இரவு கழிந்துகொண்டிருக்கிறது. இவர்களை என்ன செய்வது?' என எண்ணினார். அவர் எல்லோரையும் குலுக்கி எழுப்ப முயன்றார். மற்றவர்கள் எல்லோரும் எழுந்து விட்டார்கள். எழுந்து தட்டுத்தடுமாறிக் கொண்டே போய்விட்டார்கள். ஆனால் எத்தனை முயற்சி செய்தும் பிரதாப்சிங் எழுந்திருக்கவில்லை. சன்னியாசி அவனை உற்றுப் பார்த்தபொழுது பயந்தே போய்விட்டார். அவர் தன் படுக்கையையும் கமண்டலத்தையும் எடுத்துக் கொண்டு ஓட முயற்சித்தார். ஆனால் இந்த நிலையில் போவது கஷ்டம் என்று எண்ணியவாறு மறுபடியும் அங்கேயே படுத்துக் கொண்டுவிட்டார்.

அடுத்த நாள் நன்றாகச் சூரிய வெளிச்சம் வந்தபொழுது சன்னியாசி சோம்பல் முறித்துக்கொண்டு எழுந்து உட்கார்ந் தார். அவர் நான்கு புறமும் பார்த்தார். பெரியவரை எங்கும் காணவில்லை. அப்பொழுது அவர் நிலைமை மிகவும் மோசமாக

இருந்தது. பின்னர் அவருக்கு இரவு நடந்ததெல்லாம் நினைவிற்கு வந்தது. பெரியவர் கட்டிலுக்கடியில் தூங்கிக் கொண்டிருந்தார் என்பதும் நினைவிற்கு வந்தது. ஆனால் அப்பொழுது அவர் எங்கும் காணப்படவில்லை. இரவில் தரையில் தலைகீழாக விழுந்துகிடந்த இளைஞனையும் அப்பொழுது எங்கும் காணோம்.

சன்னியாசிக்குக் கிலி பிடித்துவிட்டது. அவர் அங்கிருந்து நழுவிவிட்டார். அவர் கிராமத்திலிருந்து அரை மைல் தூரம் தான் போயிருப்பார். அப்பொழுது பச்சன்சிங் பெரியவரை முதுகில் தூக்கிக்கொண்டு வந்துகொண்டிருப்பதைப் பார்த்தார். ஆனால் சன்னியாசி அவனுடைய பார்வையில் படாமல் அங்கிருந்து நழுவி விட்டார்.

## [13]

அந்தக் கிராமம் முழுவதிலும் ஒரே குழப்பமாக ஆகிவிட்டது. ஒவ்வொரு வீட்டிலும் பங்கியைப் பற்றிய பேச்சாகவே இருந்தது. மற்ற வீடுகளிலெல்லாம் திரை போடப்பட்டிருந்தது. ஆனால் கண்டாசிங்கின் வீடு அமர்க்களப்பட்டது. மாப்பிள்ளை முதன் முறையாக வந்திருந்தான். ஆனால் அவன் இரவு முழுவதும் கண்ணைத் திறக்கவேயில்லை. அவன் குருத்வாரத்திற்குப் போய் பங்கி அடித்தான் என்பது பச்சன்சிங் சொல்லி அவருக்குத் தெரிந்துவிட்டது. இரவில் அவனை முதுகில் தூக்கிக்கொண்டு வீட்டில் கொண்டு சேர்த்த பொழுது பச்சன்சிங், 'தான் குருத்வாரத்திற்குப் போன பொழுது பெரியவரை அங்கே காணவில்லை, ஆனால் ஒரு சன்னியாசி கட்டிலில் படுத்திருந்தார், பிரதாபசிங் கட்டிலுக்கடியில் விழுந்துகிடந்தான்' எனக் கூறியிருந்தான்.

கண்டாசிங்கின் குடும்பத்தார்கள் பல முயற்சிகள் செய்தார்கள். காதில் எண்ணெயை ஊற்றினார்கள், தலையில் எண்ணெயைத் தேய்த்தார்கள், மாங்காய் ஊறுகாயை வாயில் திணித்தார்கள். ஆனால் அந்த அப்பாவியின் தொண்டைக்குள் எதுவுமே போகவில்லை. பாலையும் நெய்யையும் கலந்து

கொடுத்தார்கள். ஆனால் அதுவும் வாயிலிருந்து கீழே வழிந்துவிட்டது.

கொஞ்சம் கொஞ்சமாகச் சிறுவனின் நிலைமை இன்னும் மோசமாக ஆரம்பித்தது. கண்கள் வெளிறிவிட்டன, முகத்தில் நீலம் தட்டிவிட்டது. உடல் மரக்கட்டையைப் போல விறைத்துவிட்டது. எல்லோருக்கும் பெருத்த பயமாக ஆகிவிட்டது. பக்கத்து கிராமத்தில் அரசாங்க ஆஸ்பத்திரி ஒன்று இருந்தது. காலையிலேயே போய் டாக்டரைக் கூப்பிட்டு வந்தார்கள். அவர் பையனுக்கு விஷம் கொடுக்கப்பட்டிருக்கிறது எனக் கூறினார். பிரதாப்சிங்கை அரசாங்க ஆஸ்பத்திரியில் கொண்டு சேர்த்தார்கள்.

மற்றொரு புறம் பாலாசிங், மற்றும் அவனைச் சேர்ந்தவர்களுடைய கை கால்கள் உதறலெடுத்தன. திருடனை அவனுடைய திருட்டு நினைவே பயமுறுத்துமல்லவா! பாலாசிங்குக்கு ஒரே கவலையாகப் போய்விட்டது. ஏனென்றால் போலீசுக்கு உதவியும் தொண்டும் புரிந்த பிறகு குற்றவாளிப் பட்டியலில் இருக்கும் ஆபத்திலிருந்து அவன் விடுபட்டான். பிரதாப்சிங்கின் நிலைமையைப் பார்த்துவிட்டு வந்ததிலிருந்து அவனுடைய பயம் பன்மடங்கு அதிகரித்துவிட்டது.

அவனுக்கு ஒரு உபாயம் தோன்றிற்று. ஒரே கல்லால் இரண்டு மாங்காய் ஏன் அடிக்கக்கூடாது என்று நினைத்தான். அவன் உடனே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் 'ஜீவாசிங்கின் மகன் பச்சன்சிங் கண்டாசிங்கின் மாப்பிள்ளைக்கு பங்கியில் விஷத்தைக் கலந்து கொடுத்துவிட்டான்' என்று புகார் எழுதிவிட்டு வந்தான்.

நடுப்பகலில் போலீஸ் ஸ்டேஷனே தடதட வென்று வந்துவிட்டது. போலீஸ் அதிகாரி ஒரு போலீஸ்காரனை ஜீவாசிங்கின் வீட்டு வாயிலில் நிறுத்தி வைத்துவிட்டு கண்டாசிங்கின் வீட்டை அடைந்தார்.

ஒரு போலீஸ்காரன் பச்சன்சிங்கின் வீட்டைச் சோதனை போட்டுக்கொண்டிருந்தான். மற்றொருவன் குருத்வாரத்தைச் சோதனை போடப் போய்விட்டான். அவனுடன் ஒரு பெரிய கூட்டமே சென்றது. குருத்வாரத்திற்குப் போய்ப் பார்த்த

பொழுது அங்கே பச்சன்சிங் பெரியவரின் தலையில் எண்ணெயை வார்த்துத் தேய்த்துக்கொண்டிருந்தான். பெரியவர் அவனுக்கு எதிரில் உட்கார்ந்து ஆடிக் கொண்டிருந்தார்.

போலீஸ் இருவரையும் கைது செய்தது. பின்னர் அந்த இடத்தைச் சோதனைபோட ஆரம்பித்தார்கள். அவர்கள் தேடிக்கொண்டிருந்த பொருள் உடனே கிடைத்துவிட்டது. அதிகம் கஷ்டப்பட வேண்டியிருக்கவில்லை. ஒரு மூலையில் துண்டு ஒன்று கிடந்தது. அதில் வாதாம் பருப்பு முதலியன வடிகட்டி பின்னர் மிச்சமான சக்கை காணப்பட்டது.

பங்கியை வடிகட்டிய பிறகு பெரியவர் சக்கையை அப்படியே போட்டுவிட்டார். அவசரத்தில் அவர் சக்கையை எறியவு மில்லை, துண்டைச் சுத்தப்படுத்தவுமில்லை.

டாக்டர் அழைக்கப்பட்டார். அவர் சக்கையைச் சோதனை செய்வதற்காக அதைத் தேய்த்தார். அதிலிருந்து தேய்ந்து போன இரண்டு செப்புக் காசுகள் கிடைத்தன அதிகமாகத் தேய்ந்துபோனதால் அந்தக் காசுகள் எடை பாதிகூட இல்லாமலிருந்தது.

அந்தக் காசுகளை பங்கியில் தேய்த்து பிரதாப்சிங்கிற்கு பங்கி கொடுக்கப்பட்டிருக்கிறது என்று புரிந்துகொள்ள டாக்டருக்கும் போலீசுக்கும் நேரம் பிடிக்கவில்லை. பச்சன் சிங்குக்கும் பெரியவருக்கும் விலங்கு மாட்டப்பட்டது. அப் பொழுது ஜீவாசிங்கின் வீட்டில் ஒரே குழப்பமாக ஆகி விட்டது.

அருகிலேயே பாலாசிங்கும் அவனுடைய கூட்டத்தார்களும் நின்றுகொண்டிருந்தார்கள். பங்கியின் வரட்சியினால் எல்லோ ருடைய தலையும் சுற்றிக்கொண்டிருந்தது; ஆனால் அந்த நேரத்தில் அவர்கள் எவ்விதத்திலும் அஜாக்கிரதையாக இருக்க விரும்பவில்லை. அவர்கள் சக்கையிலிருந்து காசுகள் வெளி யானதைப் பார்த்து திகைத்து நின்றுவிட்டார்கள். அந்தக் காசுகளை யார் போட்டார்கள் என்று அவர்களுக்குப் புரியாம லிருந்தது. என்ன இருந்தாலும் பச்சன்சிங்கை மாட்டி விடவும் தன்னை விடுவித்துக்கொள்ளவும் அவர்கள் செய்த

முயற்சியில் பச்சன்சிங்குக்கு எதிராகப் போலீசாருக்குச் சாட்சி கிடைத்துவிட்டதைப் பார்த்து அவர்களுக்குப் பெருத்த பூரிப்பு ஏற்பட்டது. ஒன்று அவன் அந்த இடத்தில் பிடிக்கப் பட்டுவிட்டான்; மற்றொன்று பிரதாப்சிங்கின் மாமனார் வீட்டுக் காரர்கள் இரவு ஒன்பது மணியளவிற்கு பச்சன்சிங், அவர்களுடைய மாப்பிள்ளையைத் தூக்கிவந்து வீட்டில் விட்டதாகவும், அப்பொழுது அவன் அதிகமாக பங்கி சாப்பிட்டுவிட்டதால் நினைவிழந்து விட்டான் என்று பச்சன்சிங் சொல்லிவிட்டுப்போனதாகவும் புகார் எழுதிக் கொடுத்திருந்தார்கள். அதனால் நிலைமை இன்னும் மோசமாகிவிட்டது. அதைத் தவிர பாலாசிங்கின் கூட்டத்தவர்கள் போலீசுக்கு ஏராளமாக லஞ்சமும் கொடுத்திருந்தார்கள்.

இரண்டு குற்றவாளிக்கு எதிராகக் குற்றப்பத்திரிகை தயாரிக்கப்பட்டது. நீதிமன்றத்திற்கு வந்தது. ஜீவாசிங்குக்கு இருமல் நோயாக இருந்தது. ஆனால் அவருடைய சார்பாக ஒரு வக்கீல் அமர்த்தப்பட்டார். எதிர்கட்சி சார்பில் கொண்டுவரப் பட்ட சாட்சிகளில் பாலாசிங் சாட்சியம் கூறினான்.

'நிகழ்ச்சி நாளன்று நான் என் வீட்டில் இருந்தேன். மாலை ஐந்து மணிக்கு நான் குருத்வாரத்திற்குப் போனேன். அங்கே பச்சன்சிங்கும் பிரதாப்சிங்கும் பங்கியை அரைத்துக் கொண்டிருந்தார்கள். பெரியவர் பூஜையில் ஈடுபட்டிருந்தார். நான் சிறிது நேரம் அங்கே உட்கார்ந்துவிட்டுத் திரும்பிவிட்டேன். இரவு ஒன்பது மணியளவிற்கு நான் தெரு வழியாகப் போய்க் கொண்டிருந்தபொழுது பச்சன்சிங்கைப் பார்த்தேன். அவன் பிரதாப்சிங்கை முதுகில் தூக்கிக்கொண்டு அவனுடைய மாமனார் வீட்டுப் பக்கம் போய்க்கொண்டிருந்தான். நான் அவனை பலமுறை குரல் கொடுத்துக் கூப்பிட்டேன். ஆனால் அவன் விடையே கொடுக்கவில்லை .........'

அவனுக்குப் பிறகு அவனுடைய கூட்டத்தவர்களில் சிலர் சாட்சியம் கொடுத்தார்கள். அவர்களும் ஏறக்குறைய இது போலவே கூறினார்கள்.

குற்றவாளிகள் தங்கள் சார்பில் பேசத் தொடங்கும்பொழுது முதலில் பெரியவர் தனக்குச் சொல்லிக் கொடுத்திருந்தபடி

கக்க ஆரம்பித்தார், 'வந்து........வந்து........பச்சன்சிங் என்னை பங்கியை அறைக்கும்படி கூறினன். வாதாம் பருப்பு முதலிய சாமான்கள் வாங்கி வருவதற்காக, வந்து......... அவன் நாலணுக் காசும் கொடுத்தான். நான்தான் வந்து...... இரண்டணுவுக்கு.........' என்று கூறிக்கொண்டே அவர் நின்றுவிட்டார்.

உயர் அதிகாரி ஒரு ஆங்கிலோ இண்டியன். அவர் அரசாங்க வக்கீலிடம் கேட்டார், 'இந்தக் குற்றவாளி "வந்து......... வந்து" என்று என்ன சொல்லுகிருன்?' வக்கீல் அதற்கு ஆங்கிலத்தில் விடை கொடுத்தார். அதிகாரி அதைக் கேட்டுச் சிரித்தார்.

தன் பேச்சை மேலும் தொடர்ந்தவாறு பெரியவர் கூறினர், 'ஐயா! நான் இரண்டணுவுக்கு பங்கிக்கான சாமான் வாங்கி வந்தேன். வந்து......வந்து......இதில் என்னுடைய குற்றம் ஒன்றுமில்லை. நான் எதையும் ஆணையிட்டுச் சொல்ல முடியும்.'

பச்சன் சிங்கின் வக்கீல் கைதேர்ந்தவராக இருந்தார். அவர் குறுக்கு விசாரணையின் பொழுது பெரியவரிடம் கேட்டார், 'நீங்கள் எந்தக் கடையிலிருந்து வாதாம் பருப்பு முதலிய சாமான்கள் வாங்கி வந்தீர்கள்?'

'தேவிதயாள் கடைக்காரனின் மகனிடமிருந்து.'

'அவனுக்கு நீங்கள் என்ன கொடுத்தீர்கள்?'

'நாலணுக் காசு.'

'அவன் உங்களுக்கு என்ன கொடுத்தான்?'

'இரண்டணு.'

'நல்லது. அவன் இரண்டணுவிற்கு எத்தனை பைசாக்கள் உங்களுக்குக் கொடுத்தான்?'

அப்பொழுது பின்பக்கம் நின்றுகொண்டிருந்த பாலாசிங் இரண்டு விரல்களைக் காட்டி எத்தனையோ சைகை செய்தான். ஆனல் பெரியவர் வெறும் அப்பாவிப் பசுவாக இருந்தார். அவருக்கு ஒன்றும் புரியவில்லை. அவர் கூறினர், 'எட்டு பைசாக்கள்.'

பிறகு வக்கீல் கேட்டார், 'அந்தப் பைசாக்களை நீங்கள் என்ன செய்தீர்கள்?'

'நான் வந்து...என்னுடைய சட்டைப் பையில் அவைகளைப் போட்டுக்கொண்டேன்.'

'சாமான் பொட்டலத்தை?'

'வந்து... அதையும் சட்டைப் பையிலேயே வைத்துக் கொண்டேன்.'

'தாங்கள் உங்களிருப்பிடத்திலிருந்துப் போன பிறகு அந்தப் பைசாக்களை எங்கே வைத்தீர்கள்?'

பெரியவருக்கு ஏதோ மறந்து போனது நினைவிற்கு வந்தது. அவர் பயந்துகொண்டே கூறினார், 'பிறகு என் பையிலிருந்து ஆறு காசுகள் தான் கிடைத்தன. ஒருவேளை இரண்டு காசுகள் தொட்டியில்...... இல்லை, இல்லை (யோசித்து) தரையில் விழுந்திருக்கும் போலிருக்கிறது.'

'சக்கையிலிருந்து காசுகள் வெளிவந்ததே (அதிகாரத்துடன்) அவைகள் எங்கிருந்து வந்தன?'

பெரியவரின் கால்களில் நடுக்கம் ஏற்பட்டது. முழங்கால்கள் நடுங்கிக்கொண்டே ஒன்றோடொன்று இடித்துக் கொள்ள ஆரம்பித்தன. விஷயம் வெளிவருவதைப் பார்த்து அவருக்கு ஒன்றும் புரியவில்லை. அவர் தயங்கி நிற்பதைப் பார்த்து வக்கீல் கடைக்கண்ணால் பார்த்தவாறு அவரிடம் கூறினார், 'உண்மையைக் கூறிவிட்டால் பிழைத்துக் கொள்வீர்கள். இல்லையென்றால் வாழ்நாள் முழுவதும் சிறைச்சாலையிலேயே செய்வினையை நினைத்துக்கொண்டு அழுது கொண்டிருக்க நேரும்.'

பெரியவரின் மீதமிருந்த தைரியமும் போய்விட்டது. அவர் வக்கீலிடம் கைகூப்பிக் கூறினார், 'ஐயா! நான் உண்மையைச் சொல்லிவிடுகிறேன். அந்தக் காசுகள் என்னுடைய சட்டைப் பையிலிருந்துதான் பங்கிக்கான சாமான்களோடு சேர்ந்து தொட்டியில் விழுந்துவிட்டன. அது எனக்குப் பிறகு தான் நினைவிற்கு வந்தது.'

பாலாசிங், அவனுடைய நண்பர்கள், எல்லோருடைய முகமும் வெளிர்த்து விட்டது. தங்களுடைய படகின் சுக்கானைப் பிடித்திருந்த படகோட்டியைப் பார்க்கும் பொழுது அவர்களுக்கு நாம் மூழ்கிவிடுவோம் என்று தோன்றலாயிற்று.

வக்கீல் பெரியவரைப் பார்த்து இனிமையான குரலில் கூறினார், 'சபாஷ்! நான் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன். சீக்கியர்கள்—அதிலும் தங்களைப் போன்ற மதகுருக்கள் பொய்யே பேசமாட்டார்கள்.' இந்தப் புகழ்ச்சி உரை பெரியவரை முற்றிலும் மாற்றிவிட்டது. அவர் முதலிலிருந்து கடைசிவரை எல்லா நிகழ்ச்சிகளையும் உண்மையாகக் கூறி விட்டார். அவர் இந்த நிகழ்ச்சியில் பச்சன் சிங்குக்கு எந்த விதத்திலும் சம்பந்தம் கிடையாது என்றும் கூறிவிட்டார்.

அதற்குப் பிறகு பச்சன்சிங் பேசத் தொடங்கினான், 'நிகழ்ச்சி நாளன்று நான் காலையில் ஏழு மணிக்கு வரி ஆபீசுக்குப் போயிருந்தேன். ஒரு நிலத்தின் பத்திரம் சம்பந்த மாக என் தந்தை என்னை அங்கே அனுப்பியிருந்தார். (இதற்கு சாட்சியாக தாசில்தார் விசாரிக்கப்பட்டார்.) இரவு எட்டு, எட்டேகால் மணிக்கு நான் கிராமத்திற்குத் திரும்பிக் கொண்டிருந்த பொழுது பெரியவரைச் சந்தித்துவிட்டுப் போகலாம் என்று நினைத்தேன். ஏனென்றால் கிராமத்து குருத்வாரத்தில் குழந்தைகளுக்காக ஒரு பள்ளிக்கூடம் திறப்பது பற்றி அவரிடம் பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருந்தது.

'நான் குருத்வாரத்தின் மேல் மாடியில் போய் பார்த்த பொழுது அங்கே பெரியவரைக் காணவில்லை. ஒரு நிர்மலா சன்னியாசி (அதற்குப் பிறகு அவர் காணப்படவில்லை) கட்டிலில் தூங்கிக்கொண்டிருந்தார். பிரதாப்சிங் கட்டிலுக் கடியில் கிடந்தான். நான் இருவரையும் எழுப்ப முயற்சித் தேன். ஆனால் அவர்கள் விழித்துக்கொள்ளவில்லை. அருகில் இருந்த பங்குப் பாத்திரத்தையும் தொட்டியையும் கழியையும் பார்த்து நான் இவர்கள் பங்கியடித்திருக்கிறார்கள் என்று அறிந்து கொண்டேன். பிரதாப்சிங்கின் நிலைமையைப் பார்த்து நான் பயந்துவிட்டேன். அவன் எங்கள் கிராமத்து மாப்பிள்ளை. ஆதலால் அவனைத் தூக்கிக்கொண்டு போய் நான் அவனுடைய மாமனார் வீட்டில் சேர்த்தேன்.

'காலையில் நான் வயற்பக்கம் போனபொழுது ஆற்றங் கரையில் யாரோ ஒரு சீக்கியர் இறந்துகிடப்பதாக ஒருவன்

கூறினான். நான் அப்பொழுதே அவன் கூறிய இடத்தை அடைந்தேன். அங்கே பெரியவர் மூர்ச்சையாக விழுந்து கிடந்ததைப் பார்த்தேன். அவரைத் தூக்கிக்கொண்டு நான் குருத்துவாரத்திற்குக் கொண்டுவந்தேன். பல முயற்சிகளுக்குப் பிறகு உணர்வு வந்தபொழுது அவர் கூறினார், "எப்பொழுது நான் பங்கியடித்த மயக்கத்தில் கட்டிடுக்கடியில் போய் நுழைந்துகொண்டேன் என்று தெரியவில்லை, மாலையில் ஏழரை மணி சுமாருக்கு எனக்குச் சற்று வெளியே போக வேண்டும் போலத் தோன்றிற்று. நான் அந்த நிலையிலேயே தட்டுத் தடுமாறிக் கொண்டு கிராமத்திற்கு வெளியே வந்தேன். அருகிலேயே ஆரியசமாஜிகளின் ஒரு தோட்டம் இருந்தது. அங்கே வெளிவாசல் போய்விட்டு நான் திரும்பியபொழுது, எங்கிருந்து வந்தேன், எங்கே போகவேண்டும் என்ற நினைவே யில்லாமலிருந்தது. பிறகு நான் எப்பொழுது எந்த வழியாக ஆற்றங்கரையை அடைந்து நினைவற்று விழுந்தேன் என்று எனக்கு நினைவேயில்லை.''

அதன் பிறகு ஆஸ்பத்திரியிலே இருந்த பிரதாப்சிங்கின் சாட்சியம் கேட்கப்பட்டது. அவன் மிகக் கஷ்டப்பட்டு பேசத் தகுந்தவனாக ஆகியிருந்தான். அவன் தனக்குச் சொல்லிக் கொடுத்திருந்தபடி பொய்யாக என்ன என்னவோ பிதற்றினான். ஆனால் வக்கீலின் குறுக்கு விசாரணைக்குமுன் அவனுடைய பொய்ச் சொற்கள் நிற்கமுடியவில்லை.

வழக்கின் போக்கே மாறிவிட்டது. பாலாசிங், மதகுரு (பெரியவர்), ஐந்து நண்பர்கள் முதலியோர் கைது செய்யப் பட்டார்கள். சில விசாரணைகளுக்குப் பிறகு வழக்குமன்றத்தில் தீர்ப்புக் கூறப்பட்டது.

பச்சன்சிங் விடுதலை செய்யப்பட்டான்; மதகுரு தசௌந்தா சிங்குக்கு அஜாக்கிரதையாக ஓர் உயிருக்கு ஆபத்து விளைவித்த குற்றத்திற்காக ஓர் ஆண்டு சிறைத் தண்டனை அளிக்கப்பட்டது. பொய்ப் புகார் செய்ததற்காக சட்டப் பிரிவு 177க்குக் கீழ் பாலாசிங்குக்கு இரண்டாண்டு சிறைத்தண்டனையும் மற்ற ஐந்து பேர்களுக்கு பொய்ச் சாட்சி

சொன்ன குற்றத்திற்காக சட்டப்பிரிவு 196க்குக் கீழ் ஆறு ஆறு மாதச் சிறைதண்டனையும் அளிக்கப்பட்டது.

[ 14 ]

பாலாசிங், அவனுடைய நண்பர்கள், பெரியவர் மதகுரு முதலியவர்களுக்குத் தம் செய்வினையின் பலன் கிடைத்து விட்டது. ஆனால் பாலாசிங்கின் நண்பர்களின் கூட்டம் பச்சன் சிங்கிடம் கோபப் கொண்டது. சிறப்பாக பாலாசிங்கின் சில நெருங்கிய நண்பர்கள், பாலாசிங் எப்பொழுது சிறையிலிருந்து வெளியே வருவான், எப்பொழுது பச்சன் சிங்கைப் பழிவாங்கலாம் என்று எதிர்பார்த்திருந்தார்கள். பச்சன்சிங் தான் பங்கியில் காசைப் போட்டு பாலாசிங்கை விரோதித்துக் கொண்டான்; அவன் பெரியவரின் சாட்சியத்தை மாற்றச் செய்து எல்லோரையும் மாட்டிவிட்டான் என்று அவர்கள் கிராமம் முழுவதிலும் பறைசாற்றி விட்டார்கள்.

பச்சன்சிங் எண்ணினான்; அறிவின்மையின் காரணமாகத் தான் நமது மதகுருக்களின் நிலைமை மோசமாகிவிட்டது; இதனால்தான் அவர்கள் குருத்வாரம் போன்ற புனிதமான இடங்களிலும் பங்கி, அபின் முதலியவற்றைப் பிரசாரம் செய்து தன்னையும் தன் வமிசத்தையும் அழித்துக்கொள்கிறார்கள். இவ்வாறு எண்ணி அவன் அந்த அறிவின்மையைப் போக்கவும் சகோதர மனப்பான்மையைக் கொண்டுவரவும் உறுதிப் படுத்திக்கொண்டு அதற்காக ஒரு திட்டம் போடத் தொடங்கினான்.

அம்ருத்சரிலிருந்து வரும்பொழுது பச்சன்சிங் அந்த வயதான மகாத்மாவிடம் (அறிஞர் தீதார்சிங்) அவர் அவனைச் சந்திக்க கிராமத்திற்கு வரவேண்டும் என்று உறுதிமொழி வாங்கிக் கொண்டிருந்தான். அதன்படி அவன் இப்பொழுது அறிஞரை அழைத்தான். அவரும் விரைவிலேயே வந்து விட்டார்.

அறிஞர் தீதார்சிங் சியால்கோட்டைச் சேர்ந்தவர். அங்கே அவருடைய இரண்டு பிள்ளைகள் சாதாரணமான தொழில்

பார்த்து வந்தார்கள். குடும்ப வாழ்வு பல நாட்கள் வாழ்ந்தாகி விட்டது, இனி மீதமுள்ள வாழ்க்கையை மக்கள் தொண்டில் கழிக்கவேண்டும் என அறிஞர் சில நாட்களாக முடிவுசெய்து கொண்டிருந்தார். அவருடைய இரண்டு பிள்ளைகளும் அறிஞருக்கு (அவர் எங்கே இருந்தாலும்) மாதம் பத்து—பத்து ரூபாய் அனுப்புவதாக ஒத்துக்கொண்டார்கள். அதைத் தவிர அவரிடம் சிறிது சேகரிக்கப்பட்ட பணம் இருந்தது.

அறிஞரைப் பார்த்து பச்சன்சிங் பெரிதும் மகிழ்ந்தான். அவன் தன் கிராமம், அதன் அக்கம் பக்கத்திலிருந்த பகுதியின் நிலைமையைப் பற்றி பெருத்த வேதனையோடு கூறியபொழுது அறிஞரின் கண்களில் கண்ணீர் நிரம்பி விட்டது. பின்னர் அவர் வழக்கைப் பற்றிக் கேள்வியுற்று பெரிதும் வருந்தினர். பச்சன்சிங் எவ்வளவு உண்மையான பயமற்ற வீர இளைஞன் என்பதையும், அவனுடைய வாழ்க்கையில் எத்தனை மாறுதல் ஏற்பட்டுவிட்டது என்பதையும் அவர் உணர்ந்தார்.

கடைசியில் பச்சன்சிங் அவரை அழைத்துக்கொண்டுபோய் குருத்வாரத்தின் நிலையைக் காட்டியபொழுது அவரால் பொறுக்க முடியவில்லை. அவர் சில நாட்கள் தீவான்புரியிலேயே தங்கிவிட்டார்.

அறிஞர் பெரிய பக்தராகவும், நேர்மையானவராகவும், கிரந்தசாகபை பூஜிப்பவராகவும் இருந்தார். அவர் பேச்சு இனிமையாக இருந்தது. அவர் தினசரி முறையாக விடியற் காலையில் எழுந்து நீராடிவிட்டு கிரந்தசாகபை படித்துவிட்டு அதனைப் பூஜை செய்துவந்தார். அறிஞர் வந்ததினல் பஞ்சாபியர்களுக்கு ஒரு நன்மை ஏற்பட்டிருந்தது. அவர் காலையில் எழுந்து கிணற்றிற்கு நீராடப் போகும்பொழுது ராட்டையின் சத்தம்கேட்டு தூக்கம்கலைந்து அவர்கள் கலப்பைகளை எடுத்துக்கொண்டு வயல்பக்கம் போக ஆரம்பித்து விட்டார்கள்.

சிறிது சிறிதாக, பஞ்சாபியப் பெண்மணிகளிடம் மாறுதல் காணப்படலாயிற்று. அவர்கள் கீரை பறிக்கவோ சாப்பாடு

கொடுக்கவோ வயலுக்குப் போகும்பொழுது கைநிறைய தானியத்தையும் பருத்திக் கதிரையும் சோளக்கதிரையும் கொண்டுவந்து கொடுத்துவிட்டு வணங்கிச் செல்வது வழக்கமாகிவிட்டது.

இன்னும் சில நாட்கள் கழிந்தன. இப்பொழுது பஞ்சாபி ஆடவர்களும் எப்பொழுதாவது அந்த வழியாகப் போகும் பொழுது கலப்பை முதலியவற்றை வெளியே சுவரோடு ஒட்டினற்போல் வைத்துவிட்டு மாடுகளை முன்னுல் போக விட்டுவிட்டு குருத்வாரத்திற்குள் வர ஆரம்பித்தார்கள்; சிலர் வெளியிலிருந்துகொண்டே வணங்கிவிட்டுப் போகத் தொடங்கினுர்கள்.

பச்சன்சிங்கின் முயற்சியால் அறிஞர் சிறுசிறு பஞ்சாபிப் பையன்களையும் பெண்களையும் கூட்டி அவர்களுக்குக் கல்வி கற்பிப்பதாகச் சபதம் எடுத்துக்கொண்டார். பச்சன்சிங் ஒரு தச்சனின் உதவியுடன் பத்துப் பதினைந்து மர எழுத்துப் பலகைகளைத் தயாரித்தான். அறிஞர் எழுதுகோலைத் தயாரிப்பதற்காக ஒரு நாணல் கட்டு வெட்டிக் கொண்டு வந்தார்; கிராமத்துக் குயவனிடமிருந்து சிறிது செம் மண்ணும் மண் விளக்குகளும் வாங்கிவந்து அவர் குழந்தை களுக்கெல்லாம் எழுதுவதற்கு வேண்டியதனைத்தும் கொடுத்து விட்டார். கெட்ட குணங்கள் நிறைந்த பஞ்சாபியப் பையன் களுக்கு துவக்கத்தில் நாள் முழுவதும் ஒரே இடத்தில் உட்கார்ந்திருப்பது பூமியில் புதைபட்டுக் கிடப்பதைவிடக் கஷ்டமாக இருந்தது. ஆனல் அறிஞரின் இனிமையான குணமும் அன்பான பேச்சும் குழந்தைகளின் உள்ளங்களைக் கவர்ந்துவிட்டது.

அறிஞருக்கும் அன்புடன் உழைக்க நல்லவேலை கிடைத்து விட்டது. அவர் நாள் முழுவதும் குழந்தைகளுக்குப் பாடம் கற்பிப்பதிலேயே ஈடுபட்டிருந்தார். ஒரு குழந்தைக்கு அவர் எழுது பலகையில் கோடு போட்டுக் கொடுத்ததும் மற்றொரு குழந்தை கத்தும், 'ஐயா! மங்கு என் பேனவை உடைத்து விட்டான்.' அறிஞர் அவனுக்குப் புது பேன செய்து கொடுப்பார். அதற்குள் மற்றொரு குழந்தை கத்தும்,

'ஐயா! பாருங்கள்; பந்தா என்னைக் கேலி செய்கிறான்.' அதற்குள் அருகிலேயே சாக்கில் உட்கார்ந்திருந்த பெண் குழந்தைகள் ஒருவருக்கொருவர் சண்டைபோடத் துவங்கி விடுவார்கள். அறிஞர் அவர்களுடைய சச்சரவிற்குத் தீர்ப்பு வழங்கத் துவங்கிவிடுவார். இந்தக் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக்கொடுப்பதிலேயே அறிஞர் நாள் முழுவதும் கழித்துவந்தார். இரண்டு மாதங்களில் அவர் கஷ்டப்பட்டு அவர்களுக்கு உட்காரும் பழக்கத்தைக் கற்பித்தார். அறிஞரின் வெள்ளைத்தாடி குழந்தைகளின் மார்பில் அசையும் பொழுது அவர்களால் சிரித்து மாளாது. அறிஞர் சிறிது நேரம் கண்களிலிருந்து மறைந்துவிட்டால் பெண்கள் உடனே தலையிலிருந்து துப்பட்டாவை நகர்த்திவிட்டு எழுது பலகையை இங்குமங்கும் வீசிக்கொண்டு 'தட்டு' விளையாட்டு விளையாடத் தொடங்கி விடுவார்கள். அல்லது ஒருவருக் கொருவர் தலை கேசத்தைக் கட்டிக்கொண்டு பாங்கடா நாட்டியம் ஆட ஆரம்பித்துவிடுவார்கள், ஆனால் அறிஞர் கற்பனைக் கோட்டைகள் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தார்; எப்பொழுதாவது தனக்கு வெற்றி கிடைக்கும் என எண்ணிக் கொண்டிருந்தார்.

ஒருநாள் அறிஞரும் பச்சன்சிங்கும் உட்கார்ந்துகொண்டு ஏதோ ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். எதிரில் ஒரு பாயில் பையன்களும் பெண்களும் உட்கார்ந்து கொண்டு படித்துக்கொண்டிருந்தார்கள். அவர்கள் இருவரும் 'தொண்டு' என்பது பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அறிஞர் கூறிக்கொண்டிருந்தார். 'தொண்டு செய்வது மிகக் கஷ்டமான காரியமாகும். தொண்டு என்று எதை நினைத்துக்கொண்டு மக்கள் செய்துகொண்டிருக்கிறார்களோ அது உண்மையிலேயே வெளிப்பகட்டாகும்... ..'

அறிஞரின் வாயிலிருந்து கிளம்பிய ஒவ்வொரு சொல்லும் பச்சன்சிங்கின் உள்ளத்தைத் தொட்டுக் கொண்டிருந்தது. பச்சன்சிங் இன்னும் ஏதோ கேட்க விரும்பினான். அப்பொழுது அவனுடைய கவனம் மற்றொரு புறம் சென்றது. அவன் வாயிலின் பக்கம் பார்க்கலானான். வாயிற்படிக்கு

வெளியே ஒரு பெண் நின்றுகொண்டிருந்ததை அவன் கவனித்தான். அவளுக்கு வயது பன்னிரண்டு பதின்மூன்று இருக்கும். அவளுடைய தலையில் ஒரு குப்பைக் கூடை இருந்தது. அதன் பாரத்தால் அவள் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள். நடு நடுவில் அவளுடைய கழுத்து களைத்துப்போனபோது அவள் கூடையை இரண்டு கைகளாலும் தூக்கிப் பிடித்துக்கொண்டு கழுத்தின் களைப்பைக் குறைத்துக்கொண்டாள். அவளுடைய திங்களைப் போன்ற முகம் ஏழ்மையின் மேகங்களுக்கிடையிலிருந்து பிரகாசித்துக் கொண்டிருந்தது.

கதவினருகில் உட்கார்ந்துகொண்டு படித்துக்கொண்டிருந்த பெண்கள் அந்தப் பெண்ணைப் பார்த்துவிட்டு ஒருவருக்கொருவர் பார்த்துச் சிரித்துக் கொண்டிருந்தார்கள். அவள் மீது ஒரு பெண் கரும்பின் எச்சில் சக்கையை எறிந்தாள். ஒருத்தி டாயிலிருந்து குச்சியை எடுத்து எடுத்து அவள் மேல் எறிந்து கொண்டிருந்தாள். மற்றொருத்தி அவளுடைய பக்கமாகப் போவதாகப் பாசாங்கு செய்தவளாய் அவள் மேல் எச்சில் துப்பினாள். இதையெல்லாம் பச்சன்சிங் கவனித்துக் கொண்டிருந்தான்.

ஆனால் அந்தப் பெண்ணின் கவனம் இவர்கள் மீது போகவில்லை. அவள் இமைகொட்டாது குழந்தைகளின் எழுது பலகைகளையும், எழுத்துப் புத்தகங்களையும் எழுதும் முறையையும் பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் ஒருமுறை மறுபடியும் இரண்டு கைகளாலும் கூடையை மேலே தூக்கினாள். அவள் தலையில் வைத்திருந்த கூடை திடீரென்று கீழே விழுந்துவிட்டது. பெண்களுக்கு இதைப் பார்த்து கேலிசெய்ய ஒரு புதுக் காரணம் கிடைத்துவிட்டது. அவர்கள் தங்கள் சிரிப்பை அடக்க எத்தனையோ முயற்சி செய்தார்கள். ஆனால் வாயை மூடத் தொடங்கும்பொழுதே இரண்டு மூன்று பெண்களின் சிரிப்பு சத்தமாக வெளிப்பட்டுவிட்டது. அறிஞரின் காதுகளிலும் அந்தச் சிரிப்பொலி விழுந்தது. அந்த அப்பாவிப் பெண் வெட்கமடைந்து விட்டாள். அவளால் அங்கே நிற்க முடியவில்லை.

அறிஞர் பெண்களை அடக்கினர். எல்லாப் பெண்களும் பலகைக்குப் பின்னால் தலையை மறைத்துக்கொண்டு மௌனமாகி விட்டார்கள். அதன் பிறகு எவ்விதம் இந்தப் பேய்ப் பெண்கள் அந்த அப்பாவிப் பெண்ணை நெடு நேரமாகத் துன்புறுத்திக் கொண்டிருந்தார்கள் என்பதை பச்சன்சிங் அறிஞருக்குக் கூறினான்.

அறிஞருக்குப் பெண்களின் சிரிப்பைப் பார்த்துத்தான் கோபம் வந்தது. அவர் மற்றவர்களைக் கவனிக்கவில்லை. அவர் கூறினர், 'ஜாக்கிரதை! இனிமேல் இம்மாதிரி உபத்திரவம் செய்யக்கூடாது. (பச்சன்சிங்கிடம்) பேசாமலிருப்பதே நல்லது. இவர்களால் பெரிய உபத்திரவம்தான். இவர்களுக்காக எத்தனையோ கஷ்டப்பட்டேன். ஆனால் என்னுடைய ஒரு சக்தியும் இவர்களிடம் பலிக்கவில்லை. உண்மையாகத்தான் சொல்லியிருக்கிறார்கள், "பெண்கள், பறவைகள், ஆடுகள் மூன்றும் ஒரு நிலையிலிருப்பதில்லை" என்று.'

இடையிலேயே பேச்சை மறித்து பச்சன்சிங் கூறினான், 'அறிஞரே! இவர்களுக்கு நான்கு எழுத்துக்களைக் கற்றுக் கொடுக்கிறீர்கள். இதுவே உங்களுடைய தைரியம்தான். இல்லையென்றால் (பையன்கள் பக்கம் பார்த்தவாறு) இந்தச் சோம்பேறிகளாவது படிப்பதாவது? இவர்களுக்கு மாடு மேய்க்கத்தான் தெரியும்'

சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டு பச்சன்சிங் போய்விட்டான்.

## [ 15 ]

கிழவன் ரோடு அன்று பிச்சையெடுத்துக்கொண்டு மாலையில் வீட்டிற்குத் திரும்பும்பொழுது அவனுக்கு, தான் பல நாட்களாக சுந்தரிக்கு ஒரு பொருளும் கொண்டுபோகவில்லை என்று நினைவிற்கு வந்தது. அவன் தலைப்பாகை முனையை அவிழ்த்தான். தலைப்பிலிருந்து மூன்று அரைக் காசுகளும் ஒரு காசும் கிடைத்தன. பிறகு அவன் இடுப்புத் துணியின் கரையைத் தடவிப்பார்த்தான். பையிலிருந்து ஒரு கிழிந்த

துணியை எடுத்து அதன் முடிச்சை அவிழ்த்தான். பிறகு அவன் ஒரு மேடையில் நின்று கொண்டு எல்லாக் காசுகளையும் எண்ணிப் பார்த்தான். மொத்தம் மூன்று அணுக்கள் இருந்தன. இந்தக் காசுகளைக் கொண்டு என்ன பொருள் வாங்கலாம் என்று அவன் நெடு நேரம் வரை உட்கார்ந்து கொண்டு யோசித்துக் கொண்டிருந்தான் சுந்தரி தினந் தோறும் பொம்மை வாத்தியம் வாங்கவேண்டும் என்று பிடிவாதம் பிடித்துக் கொண்டிருந்தது அவனுக்குக் கடைசியில் நினைவிற்கு வந்தது. அவன் பொம்மைக் கடைக்குச் சென்றான். இரண்டரை அணுவிற்கு பொம்மை வாத்தியம் வாங்கினான். பிறகு அல்வாக் கடைக்குப்போய் அரையணுவுக்கு பர்பி வாங்கிக்கொண்டு, சீக்கிரமாக வீட்டையடைந்தான்.

வீடு போய்ச் சேர்ந்து அவன் குரங்கைக் கதவினருகில் விட்டு விட்டு 'சுந்தரி! சுந்தரி!' என்று கூப்பிட்டவாறே அறைக்குள் சென்றான். ஆனால் மற்ற நாட்களிலெல்லாம் சுந்தரி அவனை வரவேற்பதற்காக முதலிலேயே குடிசைக்கு வெளியிலே வந்து நின்றுகொண்டிருப்பது வழக்கம். அன்று அவளைக் காண வில்லை.

அவன் விரைவாக வெளியே வந்து இங்குமங்கும் பார்த்தான், பல குரல்கள் கொடுத்தான். ஆனால் சுந்தரியை எங்கும் காணவில்லை. அவன் கோபத்தால் பொருமிக் கொண்டிருந்தான். அந்த கோபத்தில் கலந்திருந்த அன்பை யும் துடிப்பையும் அளவிடுவது என்பது மிகவும் கஷ்டமாகும்.

அவன் விரைவாகக் குடிசைக்குப் பின்புறம் சென்று பார்த்தபொழுது அங்கே சுந்தரி ஒரு கட்டிலை நிற்க வைத்து விட்டு அதன் பின்னே உட்கார்ந்துகொண்டு பூமியில் எதையோ எழுதிக் கொண்டிருந்தாள்.

அப்பாவி ரோடூவுக்கு அப்பொழுதுதான் உயிர் வந்தது. அவனைப் பார்த்ததும் சுந்தரி எழுதுவதை நிறுத்திவிட்டு அன்புடன் சிரிக்கத் தொடங்கினாள். அவள் ரோடூவின் இடுப்பைக் கையால் பிடித்துக்கொண்டு அவனைத் தன் பக்கம் இழுக்கத் தொடங்கினாள். 'அப்பா! இங்கே வா. உனக்கு ஒரு பொருள் காட்டட்டுமா! சீக்கிரமாக இங்கே வந்து

பாரேன்.' பிறகு அவள் ரோடுவை அழைத்துக்கொண்டு அந்த இடத்தில் உட்கார வைத்துவிட்டாள். பின்னர் அவன் பின்புறமாகப் போய் உள்ளங்கையால் அவனது முகத்தைத் தட்டியவளாய் கூறினாள், 'இங்கே பாரப்பா! இங்கே!' அவனுக்கு எதிரில் வந்து ஏதோ தனக்கு ரூபாய்கள் நிறைந்த ஒரு கூஜாவே கிடைத்துவிட்டது போல துள்ளிக் குதிக்கத் தொடங்கினாள்.

ரோடு சுந்தரியின் வேடிக்கையான விளையாட்டைப் பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தான். அவன் அன்புடன் சுந்தரியைத் தன் பக்கம் இழுத்து அவளுடைய தலையை முத்தமிட்டுவிட்டுக் கேட்டான், 'குழந்தே! இது என்ன? குதிரை பருந்து போட்டுக் கொண்டிருக்கிறாயா?'

சுந்தரி நகர்ந்து கொண்டு பூமியில் எழுதப்பட்டிருந்த எழுத்துக்களைக் காட்டி ரோடுவிடம் கூறினாள், 'இவைகள் குதிரை பருந்து ஒன்றும் இல்லே! (எழுத்துக்களில் விரலே வைத்து) இதைப் பாரேன்! இது ஊவன்றா! இதைப் பார்; இது ஸறா! இது (யோசித்து) நில்லு. எனக்குப் பேரே மறந்து போய் விட்டதே! ஆங், இதை பறா என்கிறாங்க.'

அப்பாவி ரோடுவுக்கு 'ஸ'றா என்றால் என்ன? 'ப'றா என்று எதைச் சொல்லுகிறார்கள் என்று என்ன புரியும்? அவன் சிரித்துக் கொண்டு சொன்னான், 'அடியம்மா! படிக்கிற டொண்றா? எப்படி எழுதுவது என்று உனக்கு என்ன தெரியும்?'

'ஆமாம் அப்பா! அவங்க இப்படித்தான் எழுதிக் கொண்டிருந்தாங்க.'

'யாரு?'

'அந்தப் பெண்கள் தான்! பின்னே யாரு?'

'எந்தப் பெண்கள்?'

'குருத்வாரத்தில் படிக்கிற பெண்கள் தான்!'

'மகளே! உனக்கு எப்படித் தெரியும் அவர்கள் இப்படித் தான் எழுதுகிறார்கள் என்று?'

'எனக்கு தெரியும். நான் தான் தினசரி பார்க்கிறேனே! எல்லாம் இன்றுகூடப் பார்த்தேனே! நான் குப்பைத்தொட்டி

யில் குப்பை கொட்டப் போகும்பொழுது அவங்க எழுதிக் கொண்டிருந்தாங்க.'

'எழுதிக்கொண்டிருக்கட்டுமே! உனக்கென்ன?' குழந்தைகளைப் போலப் பிடிவாதம் செய்துகொண்டு அழுவதுபோல் முகத்தை வைத்துக் கொண்டு சொன்னாள், 'முடியாது! நானும் எழுதப் போகிறேன்.'

சிரித்துக்கொண்டும் சிறிது வருத்தத்துடனும் ரோடு சுந்தரியின் முகவாயைப் பிடித்துக்கொண்டு கூறினாள், 'பெரிய படிப்புக்காரப் பெண்ணே! பாரு! பைத்தியக்காரி! எழுதுவதும் படிப்பதும் நமது வேலையா அம்மா?'

சுந்தரியின் உள்ளத்தில் அவநம்பிக்கை படர்ந்துவிட்டது. அவள் கேள்விக் குறியோடு ரோடுவைப் பார்த்துக்கொண்டு கூறினாள், 'அப்படியானால் யார் வேலை அது?'

'மகளே! அவர்கள் எல்லோரும் சர்தார் ஜீ, வியாபாரிகள் முதலியோருடைய பெண்கள். நாமோ ஏழைப் பிச்சைக்காரர்கள். நமக்கு இந்த வேலைகளினால் என்ன பயன்?'

பிச்சைக்காரர்கள் படிக்கக்கூடாது என்று கேட்டதும் சுந்தரியின் முகத்தில் வேதனை பரவிவிட்டது. அவள் எண்ணலானாள், நான் உண்மையிலேயே தவறான காரியம் செய்துவிட்டேன்.' குழந்தைகளைப் போல் பிடிவாதம் பிடித்துக் கொண்டு மறுபடியும் கூறினாள், 'அப்பா! நாம்...நமக்கு... நாம் படிக்கக் கூடாதா?'

'மகளே! பணக்காரர்கள் எதையும் செய்யலாம்! தாழ்ந்த சாதிக்காரர்கள் படிக்க ஆரம்பித்துவிட்டால் அவர்களுடைய தொழிலை யார் பார்ப்பது என்று சொல்லுகிறார்கள் இல்லையா?'

பெண்ணின் உள்ளம் அப்பொழுதும் ஏற்றுக் கொள்ளவில்லை. அவள் பிடிவாதம் பிடிக்கத் தொடங்கினாள், 'அப்படியில்லை அப்பா! நான் எழுதுவேன். உள்ளே உட்கார்ந்து கொண்டு எழுதுவேன். அவங்களுக்கு எப்படித் தெரியப்போகிறது? பகலில் குப்பை கொட்டப்போகும் பொழுது பெண்களுடைய எழுத்துக்களைப் பார்த்து வருவேன். பிறகு இரவில்......'

ரோடு இடையிலேயே கூறினான், 'விடு இந்த வீணை பேச்சை! இந்தா! இதை வாங்கிக்கொள்!' அவன்

சுந்தரிக்கு பொம்மை வாத்தியத்தையும் பணியாரத்தையும் கொடுத்தான்.

பல வாரங்களாக சுந்தரி கேட்டுக் கொண்டிருந்த வாத்தியம் அவளுக்குக் கிடைத்துவிட்டது. வாத்தியம் கிடைத்ததும் சுந்தரி மகிழ்ச்சியால் துள்ளிக் குதிப்பாள் என்று ரோடு நினைத்தான். ஆனால் சுந்தரி கவலையே படாமல் அந்த இரண்டு பொருள்களையும் எடுத்துக் கொண்டாள். உள்ளே போய் அவைகளை மூலையில் வைத்துவிட்டு வந்தாள்.

[ 16 ]

பச்சன்சிங் தினந்தோறும் முறைப்படி அறிஞரிடம் சென்று வந்தான். இருவரும் பலவேறு பொருள்களைப்பற்றி சர்ச்சை பண்ணுவது வழக்கமாக இருந்தது. பச்சன்சிங்குக்கு இந்தச் சர்ச்சையில் மிகுந்த மகிழ்ச்சி கிடைத்து வந்தது. அறிஞரின் சேர்க்கையினால் தினந்தோறும் அவனிடத்தில் மாறுதல் ஏற்படத் தொடங்கிற்று. அவனுடைய வாழ்வுப் பாதையே மாறிவிட்டது.

அந்தப் பெண் பிய்ந்த கூடையைக் கையிலேயோ தலையிலேயோ தூக்கிக்கொண்டு எத்தனையோ நேரம் வரை முற்றத்திற்கு வெளியே கதவிற்கருகில் நின்றவளாய் குழந்தைகள் எழுதுவதைப் பார்த்துக்கொண்டே இருப்பதை அவன் தினசரி கவனித்து வந்தான்.

ஒரு நாள் நடுப்பகல் நேரத்தில் அவன் குருத்வாரத்திற்குப் போனபொழுது அறிஞர் குழந்தைகளைப் படிக்கக் கூறிவிட்டு எங்கேயோ போவதற்குத் தயாராக நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தான்.

அங்கே வந்ததும் பச்சன்சிங் கேட்டான், 'இன்று எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள் !'

'நான் உங்களைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். துணிகள் அழுக்காகிவிட்டன. கிணற்றடியில் போய் தோய்த்துக் கொண்டு வரலாமென்று நினைத்தேன். நீங்களும்கூட வந்தால் நன்றாக இருக்கும், உலாவி வரலாம் என்று ஆசைப்பட்டேன்.'

'அப்படியானால் கிளம்புங்கள்,' என்று சொல்லிக் கொண்டே பச்சன்சிங் அவருடன் கிளம்பிவிட்டான். இருவரும் வெளியே வரும்பொழுது அதே பெண் வெறும் குப்பைக் கூடையை ஒருபுறம் வைத்துவிட்டு சுவரைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவள் பூமியில் எதையோ எழுதிக் கொண்டிருந்தாள். அவளுக்கருகில் ஒரு கிழிந்த காகிதத் துண்டு கிடந்தது. அதைப் பார்த்துக்கொண்டே அவள் எழுதிக் கொண்டிருந்தாள். அவளுடைய முத்தைப் போன்ற அழகான எழுத்துக்கள் அச்சடித்தவை போல் தோன்றின. அதைப் பார்த்து இருவருக்கும் வியப்பாக இருந்தது. அந்தக் காகிதம் பாலபோதினியின் முதற்பக்கமாக இருந்தது. அதில் பெரிய எழுத்துக்களில் பஞ்சாபியின் எழுத்துக்கள் அச்சிடப்பட்டிருந்தன. காகிதம் கிழிந்ததாகவும் குப்பைக் காகிதம் போலவும் காணப்பட்டது. அந்தப் பெண் காகிதத்தின் ஓரத்தில் மாவினால் கிழிந்த துணியை ஒட்டி வைத்திருந்தாள். அவள் அந்தக் காகிதத்தை அரசாங்கக் கட்டளைக் கடிதம் போல் மிகவும் ஜாக்கிரதையாகப் பிடித்துக் கொண்டிருந்தாள்.

இருவரும் நின்றவாறு ஒருவருக்கொருவர் பார்த்துக் கொண்டு அந்தப் பெண்ணின் எழுத்தைப் பார்த்து வியந்து கொண்டிருந்தார்கள். அந்தப் பெண் கடைசி எழுத்தை எழுதுவதற்காகக் காகிதத்தைப் பார்க்கத் தொடங்கியபொழுது தான் எதிரில் நின்று கொண்டிருந்த இரண்டு மனிதர்களைக் கவனித்தாள். அவள் ஒரேயடியாக பயந்து நடுங்கி கூடையை அங்கேயே விட்டுவிட்டு அந்த இடத்தை விட்டு ஓடத் தொடங்கினாள்.

பெண்ணின் கூர்மையான அறிவையும் அழகான எழுத்தையும் பார்த்து இருவருடைய உள்ளமும் தழுதழுத்துவிட்டது. அந்தப் பெண் நாலைந்து அடிகள்தான் போயிருப்பாள்; அதற்குள் அறிஞர் அவளைக் கூப்பிட்டார், 'பெண்ணே!'

அந்தக் குரலைக் கேட்டு முதலில் அப்படியே ஓடிப்போய் விடலாம் என்று அவளுக்குத் தோன்றிற்று. ஆனால் அவளுடைய கால்கள் மறுத்தன. அவள் உடனே நின்று

விட்டாள். இதற்குள் அறிஞர் மறுபடியும் கூப்பிட்டார், 'மகளே! பயப்படாதே. நான் உன்னை அடிக்கமாட்டேன். இங்கே வா. நான் கூறுவதைக் கேள்.'

பெண்ணிற்கு அப்பொழுதுதான் உயிர் வந்தது. அவள் தலை குனிந்தவாறே குற்றவாளியைப் போல மெதுவாக அவருக்கெதிரில் வந்து நின்று கொண்டாள். அறிஞர் அன்புடன் கேட்டார், 'மகளே! இந்த எழுத்துக்களை எழுத நீ எங்கே கற்றுக்கொண்டாய்?'

பெண் மறுபடியும் நடுங்கத் தொடங்கினாள். திருடனையே திருட்டை ஏற்றுக்கொள்ளும்படிச் செய்ய இந்த முறை கையாளப்படுகிறது என்று அவள் எண்ணினாள். அறிஞரின் கேள்விக்கு எந்த விடையும் அவளுக்குப் புரியவில்லை.

அறிஞர் அவளுடைய தலையை அன்பால் தடவிக்கொண்டே அவளைத் தன் அருகில் வைத்துக்கொண்டு கூறினார், 'மகளே! பயப்படாதே. நாங்கள் உன்னை ஒன்றும் சொல்ல மாட்டோம். உன்னுடைய அழகான எழுத்துக்களைப் பார்த்து எனக்கு சந்தோஷமாக இருக்கிறது. நீ இந்த எழுத்துக்களை யாரிடம் கற்றுக்கொண்டாய்?'

அந்தப் பெண்ணின் உள்ளத்திற்குச் சிறிது ஆறுதல் ஏற்பட்டது. இப்பொழுது அவளுடைய தயக்கம் சிறிது குறைந்தது. அவள் மெதுவாகக் கூறினாள், 'நான் தானாகவே எழுதுகிறேன்.'

பச்சன்சிங் இதுவரை வியப்போடு எல்லாக் காட்சிகளையும் பார்த்துக் கொண்டிருந்தான். அந்தப் பெண் கூறியதைக் கேட்டதும் அவன் திடீரென்று கூறினான், 'தானாகவே எழுதுகிறாயா? யாரிடமும் கற்றுக் கொள்ளவேயில்லையா?'

பெண் 'இல்லை' என்று சொன்னதைக் கேட்டதும் இருவருக்கும் எல்லையற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. அறிஞர் மறுபடியும் கேட்டார், 'உனக்கு இந்த எழுத்துக்களைப் படிக்கத் தெரியுமா?'

'தெரியுமே!'

'சொல்லு பார்க்கலாம்!'

அந்தப் பெண் தயங்காமல் எழுத்து வரிசையைக் கூறிவிட்டுச் சொன்னாள், 'ஐயா! எனக்கு மனப்பாடமாகவே தெரியுமே!'

அறிஞர் பச்சன்சிங்கைப் பார்த்துக் கூறினார், 'பச்சன்சிங்! இவள் இந்தக் காகிதத்தைக் கொண்டு எழுதக் கற்றுக்கொண்டு விட்டாள். ஆனால் படிப்பது!'

பெண் சொன்னாள், 'ஐயா! பையன்களும் பெண்களும் தினந்தோறும் மத்தியான நேரத்தில் மனப்பாடமாகப் படிக்கும்போது நான் கேட்டுக் கொண்டே இருப்பேன்.' அறிஞர் அவளுடைய முதுகைக் கையால் தடவிக் கொண்டே கூறினார், 'சபாஷ் மகளே! சபாஷ். நீ பெரிய கெட்டிக்காரி. நான் உனக்கு எழுது பலகையும் எழுத்துப் புத்தகமும் கொண்டு வந்து தருகிறேன். நீ நன்ருகப் படி. உன்னுடைய பெயர் என்ன குழந்தாய்!'

'ஐயா! சுந்தரி.'

பச்சன்சிங் கூறினான், 'அறிஞரே! இவள் தீண்டத்தகாத பெண்ணைப் போலிருக்கிருள். நீங்கள் சிறிதும் தயக்கமில்லாமல் இவளைத் தொட்டுக் கொண்டிருக்கிறீர்களே! நான் இதைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆனால் கிராமத்து மக்கள் குறுகிய மனப்பான்மை உடையவர்கள்.'

அறிஞர் கவலையின்றிக் கூறினார், 'இவளைப் போன்ற கெட்டிக்காரக் குழந்தைகளைத் தொடக்கூடாது என்றும் அவர்களுக்கு கல்வி அளிக்கக்கூடாது என்றும் கூறினால் அது அவர்கள் செய்யும் கொடுமையாகும். நான் அப்படிப்பட்ட ஜனங்களைப் பற்றிக் கவலைப்படுவதில்லை.'

பச்சன்சிங் ஒன்றும் கூறவில்லை. அறிஞர் உள்ளே போய் எழுத்துப் புத்தகமும் எழுது பலகையும் பேனாவும் மைக்கூடும் கொண்டு வந்தார். அவைகளை அவர் அந்தப் பெண்ணிடம் கொடுத்துக் கொண்டே கூறினார், 'இவற்றை வாங்கிக்கொள் மகளே! நீ தினந்தோறும் முறைப்படி படிக்கவும் எழுதவும் வேண்டும். நீ விரும்பினால் இங்கே வந்து படித்துவிட்டுப் போகலாம்.'

பெண் அந்தப் பொருள்களையெல்லாம் எடுத்துக் கொண்டாள். அன்பு நிறைந்த அவருடைய சொற்களைக் கேட்டாள்.

ஏதோ பிறவிக் குருடனுக்குக் கண்கள் கிடைத்துவிட்டனபோல் அவளுக்குத் தோன்றிற்று. அதற்குப் பிறகு எல்லோரும் தங்கள் தங்கள் பாதையிலே சென்று விட்டார்கள்.

சுந்தரியின் கால்களில் இறக்கை முளைத்துவிட்டது போலும். அவள் வேகமாக ஓடி வீட்டை அடைந்தாள்.

## [ 17 ]

'அப்பா! அப்பா! நான் என்ன கொண்டுவந்திருக்கிறேன்—பாரேன்!' என்று சொல்லிக்கொண்டு மகிழ்ச்சியால் பூரித்துப் போனவளாய் சுந்தரி ரோடுவுக்கு எல்லாப் பொருள்களையும் காட்டினாள். பிறகு அவள் சொன்னாள், 'அவங்க அடிப்பாங்க, படிக்கக்கூடாது என்று நீ சொன்னியே! ஆனால் அவங்களெல்லாம் நீ படி, நாங்க உனக்குச் சொல்லித்தரோம் என்று சொன்னாங்களே! இதைப் பாரு; எத்தனை அழகா இருக்கு இந்தப் பலகை! அதோடு ஒரு புத்தகம், இரண்டு பேனா, மசிக்கல்கூட கொடுத்திருக்காங்க. இங்கே கொண்டா! நான் மைக்கூட்டில் மசிக்கல்லை அரைச்சுப் போடறேன். பார்த்தியா? நான் பலகையிலே எழுதப்போறேன்'

அந்தப் பொருள்களையெல்லாம் பார்த்து ரோடுவுக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. யார் சுந்தரிக்கு இவைகளையெல்லாம் கொடுத்திருக்க முடியும் என்று நினைத்தான். அவள் யாருடைய பொருள்களையாவது எடுத்துக்கொண்டுவந்து விட்டாளோ என்று அவனுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. இவ்வாறு எண்ணிக்கொண்டே அவன் கேட்டான். 'யாருடைய சாமான்களையெல்லாம் எடுத்துக்கொண்டு வந்திருக்கே! மகளே! அவங்ககிட்டேயே கொடுத்துவிட்டுவா. எங்கேயாவது என் தலையை உடைக்கும்படியாகப் பண்ணிவிடாதே!'

'இல்லை அப்பா! தேவி ஆணையாக சொல்றேன்; அந்தப் பெரியவர்தான் எனக்கு இதையெல்லாம் கொடுத்தாரு, அவரையே சொல்லச் சொல்லட்டுமா?' இவ்வாறு கூறிக்கொண்டே அவள் ரோடுவின் கையைப் பிடித்து இழுக்கத் தொடங்கினாள்.

சுந்தரியின் முகத்தில் காணப்பட்ட உறுதியையும் தைரியத்தையும் பார்த்து ரோடுவுக்கு அவளுடைய சொற்களில் நம்பிக்கை உண்டாயிற்று. அதற்குப் பிறகு சுந்தரி எல்லா விஷயத்தையும் சொன்ன பொழுது ரோடுவின் மனத்திலிருந்த சந்தேசம் அகன்று விட்டது.

அந்த நாள் முதல் சுந்தரிக்கு எழுதவும் படிக்கவும் வசதி கிடைத்துவிட்டது. வேலைகளையெல்லாம் செய்து முடித்த பிறகு மிஞ்சும் நேரத்தில் சுந்தரி படித்துவந்தாள். இரவில் தூங்கும் பொழுது கூட அவளுடைய கவனம் படிப்பிலேயே இருந்தது. தினசரி ஒரு மணி இரண்டு மணி நேரம் அவள் அறிஞரிடம் பாடம் கற்கவும் போய்விட்டு வந்தாள். சுந்தரி மற்றப் பெண்களுடன் பள்ளிக்கூடத்தில் படிக்கவேண்டும் என்று அறிஞர் மனப்பூர்வமாக விரும்பினுர்; ஆனால் வழியிலிருந்த தடைகளை எண்ணி அவர் வாயிற்கதவுக்கு வெளியிலேயே அவளுக்கு ஒரு சாக்கை விரித்துப்போட்டுக் கொடுத்தார். அவளும் அதில் உட்கார்ந்துகொண்டு தனியாகவே படித்து வந்தாள். இதுவும் அவளுக்கு நல்லதாகத்தான் இருந்தது ஏனென்றால் அவள் மற்றப் பெண்களோடு உட்கார்ந்திருந்தால் அவர்களுடைய கூக்குரலில் அவளால் சிறிதுகூடப் படிக்க முடியாமல் போயிருக்கும். ஆனால் இப்பொழுது அவளுடைய தனிமைக்கும் தடை உண்டாகத் தொடங்கியது. பையன்களும் பெண்களும் அந்தப் பக்கமாக வரும்பொழுதும் போகும் பொழுதும் அவளை ஏதாவது தொந்தரவு செய்துகொண்டிருந்தார்கள். ஒரு பெண் மற்றொரு பெண்ணை இடித்து அவளை சுந்தரிமேல் விழவைத்து விட்டு பின்னர் விரல்களை மடித்துக் கொண்டு, 'பெண்ணே! பெண்ணே! நொண்டிப் பெண்ணே! யார் அடிச்சா உன்னை?' என்று சொல்லிக் கேலி செய்வதும், கீழே விழுந்த பெண் கோபத்துடன் மற்றப் பெண்களைத் தொடுவதற்காக ஓடுவதும் வழக்கமாகிவிட்டது. மற்றொரு பெண் மெதுவாகக் காலால் அவளுடைய மைக்கூட்டைத் தள்ளிவிடுவாள், மற்றொருத்தி அவளுடைய எழுதுகோலின் மேல் தோலை உரித்து இரண்டு விரல்களை வில்போல் செய்து கொண்டு அவளுடைய முகத்தில் குறிவைத்து அடிப்பாள்.

இந்த நிகழ்ச்சிகள் இடையருது நடந்துகொண்டிருந்தன. ஏனென்றால் சுந்தரி ஒருபொழுதும் யாருக்கும் எதிராக யாரிடமும் குறை கூறியதில்லை

இந்தத் தடைகளைப் பொருட்படுத்தாமல் சுந்தரி முழு மனதோடு தன் வேலையைக் கவனித்து வந்தாள். ஆனல் அவளுடைய பாதையில் மற்றுமொரு தடை ஏற்பட்டுவிட்டது. அந்தக் கிராமத்திலுள்ள பெரிய குடும்பத்து ஆடவர்களும் பெண்களும் இதுபற்றி மெள்ள மெள்ளப் பேச ஆரம்பித்து விட்டார்கள். இது அனைத்தும் பாலாசிங்கின் கூட்டத்தலைவர் கள் தூண்டிவிட்டதால் விளைந்தது. அவர்கள் எதையாவது ஒரு சாக்கை வைத்துக்கொண்டு அறிஞரைக்கூட பயமுறுத்தி வந்தார்கள். ஆனல் அறிஞர் சுந்தரிக்குப் படிப்பு சொல்லிக் கொடுப்பதை விடவில்லை.

போகப்போக விஷயம் பெரிதாகிவிட்டது: ஒரு நாள் சந்தா சிங்கன் மனைவியின் பாடை தூக்கப்படும் பொழுது அவனுடைய மாளிகையில் மக்கள் கூடினார்கள். அங்கேயும் இதே பேச்சாக இருந்தது. 'டாக்டர் கிராமத்து கிணற்றில் மருந்து போட்டுக் கொண்டிருக்கிறார்' என்று ஜ்வாலாசிங் சொன்னதைக் கேட்டு சுந்தர்சிங் கூறினன், 'மருந்து நமது நன்மைக் காகத்தான் போடப்படுகிறது. அன்று ஜீவாசிங்கின் மகன் பச்சன் "மருந்திருல் தண்ணீரில் இருக்கும் காய்ச்சல் பூச்சி கள் செத்துவிடும்" என்று சொல்லிக் கொண்டிருந்தான்.'

நத்தாசிங் தலைப்பாகையை கண்களுக்கு மேல் நகர்த்தியவாறு கூறினன், 'இன்னும் கேட்கப்போனல் மருந்திருல் தான் நோய்கள் பரவுகின்றன. போன ஆண்டிற்கு முந்தின ஆண்டு பிளேக் வியாதி ஏன் பரவிற்று என்று தெரியுமா? வெள்ளைக்காரர்கள் மாத்திரைகளைப் போட்டார்கள். அவைகளைத் தின்றுவிட்டு எலிகள் செத்துப் போய்விட்டன. அவைகளின் துர்நாற்றத்தால் பிளேக் பரவிற்று. அதனல் பல குடும்பங்கள் அழிந்துவிட்டன.'

சுந்தர்சிங் கூறினன், 'அப்பா! படிப்புவாசனையே இல்லாத நமக்கு இதெல்லாம் என்ன தெரியும்? எவன் எதைச் சொல்லு கிருனே அதைக் கேட்டு அப்படித்தான் இருக்கும் என்று

நினைத்துக்கொள்ளுகிறோம். படித்தவங்களுக்குத்தான் இதை யெல்லாம் பற்றித் தெரியும்.'

இதற்குள் பாபா பான்சிங் கூறத்தொடங்கினன், 'உங்கள் படிச்ச ஆளுகளையெல்லாம் பார்த்தாச்சு ஐயா! உண்மையைச் சொன்னு உங்களுக்குக் கோபம் வரலாம். ஆனல் இந்தப் பொல்லாத நாக்கு பேசாமல் இருக்கமாட்டேனென்கிறதே! ஜீவா சிங் பிள்ளைக்கு என்ன படிப்பைக் கொடுத்துவிட்டான். அதனல் அவன் மூளையே கெட்டுப்போயிடுத்தே! இந்தப் பசங்க ஆங்கிலம் படிச்ச உடனே பறையன், சக்கிலியன் எல்லோரையும் சேர்க்கிறதற்கு குத்தகையே எடுத்துக்கொண்டு விடுகிருங்க போலிருக்கிறது. பச்சன்சிங் வார்த்தையைக் கேட்டு சத்திரத்து அறிஞர் குரங்காட்டிக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணுக்குப் பாடம் சொல்லிக்கொடுக்கிருர் என்று நேற்று ராத்திரி பரியாமா கூறிக்கொண்டிருந்தான்.'

மற்றொருவன் கூறினன், 'பெரிய வார்த்தையைச் சொல்லி விட்டீர்களையா நீங்கள். நானே பல நாளாக அந்தப் பெண் குருத்வாரத்திற்கு எதிரில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து வருகிறேன். போய் ஜீவாசிங்குக்கு புத்தி சொல்லலாம், அந்த அறிஞரையும் கேட்கலாம் என்று பலமுறை நினைத்தேன். ஆனல் வழியிலே போகிற சண்டையை யார் விலைகொடுத்து வாங்குவார்கள் என நினைத்தவாறு பேசாமலிருந்துவிட்டேன். பாவம், ஜீவாசிங் முதலிலேயே கட்டிலில் விழுந்துகிடக்கிருன்; அவனிடம் சொல்வதனல் என்ன பயன்? ஆனல் இப்படியே எவ்வாறு காலம் தள்ளமுடியும்? இன்று அவள் குருத்வாரத்திற்குப் போகத் தொடங்கியிருக்கிருள்; நாளை கிணற்றடிக்கே போய்விடுவாள்.'

இரண்டாவது மனிதன்—'ஆமாம் ஐயா! இல்லையென்ருல் இந்தக் கீழ்ச்சாதி ஜனங்கள் நகருவார்களா என்ன? காணி கிராமத்தில் எப்படி கலவரம் நடந்தது தெரியுமா? கால்சா கூட்டத்தவர்கள் பரிந்து வந்தார்கள்; பறையர்களையும் சக்கிலியர்களையும் தூய்மைப்படுத்தப் போவதாகச் சொல்லத் தொடங்கினர்கள்.'

மூன்றுவது மனிதன்—'தம்பி! நான் உண்மையை உனக்கெதிரில் சொல்லுகிறேன். இப்பொழுதும் ஒன்றும் கெட்டுப்போகவில்லை. அந்த அறிஞரைத் தடுக்காது போனால் காணிச்சண்டை இங்கேயும் வந்துவிடும். ஒன்றையும் ஒன்றையும் சேர்த்து வைத்தால் பதினென்று ஆகுமென்று சொல்லுகிறார்களில்லையா? பச்சன் ஒருவனே போதாமலிருந்ததா? இப்பொழுது அவனேடு அவனைப் போலவே அறிஞரும் வந்து சேர்ந்துவிட்டார்.' மற்றொருவன் கூறினன், 'அதனல் தானே, நல்லோர் சேர்க்கை வாழவைக்கும், தீயோர் சேர்க்கை அழித்துவிடும் என்று கூறுகிறார்கள். பெரியவர் மதகுரு சாதுவாக இருந்தார். அவருக்கு மாறிப் பேசுவதே தெரியாது. நேரம் வரும்பொழுது பல வேலைகளைச் செய்து கொண்டிருந்தார். அவர் நல்ல மனிதராக இருந்தார். சொல்வதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தார்.'

இரண்டாவது மனிதன்—'அதனல் தானே பச்சன் கிராமத்திற்கு வந்தது முதல் அவருக்கு எதிரியாகி விட்டான். ஏதாவது காரணத்தை வைத்துக்கொண்டு அவரை விரட்டுவதற்காக, குழந்தைகளுக்குப் பாடம் கற்றுக்கொடு என்றும், கிரந்தசாகப் படி என்றும் இன்னும் என்ன என்னவெல்லாமோ செய்யும்படியும் சொல்லிக்கொண்டிருந்தான். ஆனல் பெரியவரா அவன் சொல்லுவதற்கெல்லாம் அசைந்து கொடுப்பவர். அவர்......'

மூன்றுவது மனிதன்—'வேறு என்ன? அதனல் தானே கோபமடைந்து பச்சன் அந்த அப்பாவியைக் கைது செய்யும்படிச் செய்தான். ஆனல் நமக்கு நடுவில் நடக்கும் இந்த விஷயங்களைப் பற்றி என்ன தெரியும்? அவன் (பச்சன்சிங்) தினசரி வந்து வந்து, குழந்தைகளைப் படிக்க அனுப்பு என்று சொல்லி வந்தான். நாங்களும் அவன் சொன்னதைக் கேட்டோம்.'

நான்காவது மனிதன்—'நீயே சொல்லு. இத்தனை நாளாக அவர் என்ன சொல்லிக் கொடுத்தார்! ஆனல் குழந்தைகள் சின்ன சின்ன வேலைகளைச் செய்து கொண்டிருந்தது போய் விட்டது. தம்பி, நான் என் பெண்ணை படிப்பதற்காக மறுபடியும் அந்தப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பமாட்டேன். காதைக் கடிக்கிற தங்கத்தை அடுப்பில் போடு என்று

பழமொழி உண்டல்லவா? இவ்வாறு கல்வி கற்றுத் தந்துதான் என்ன பயன்?'

ஐந்தாவது மனிதன்—'ஐயா! நீங்கள் அனுப்பவில்லையானால் மற்றவர்களும் தங்கள் குழந்தைகளை அனுப்பமாட்டார்கள். நான் போய் எழுது பலகைகளையெல்லாம் கிணற்றில் எறிந்து விடுகிறேன். என் பெண் நன்றாக வேலைகளையெல்லாம் செய்துவந்தாள். இந்தப் படிப்பில் மாட்டிக் கொண்ட நாளிலிருந்து எந்த வேலையையும் செய்வதில்லை. சோள ரொட்டி போன்ற ஒரு புத்தகத்தை எடுத்துக்கொண்டு மூலையில் உட்கார்ந்துவிடுகிறாள்.'

ஆறாவது மனிதன்—'இதுவரை இந்தப் பாய்களைச் சுற்றி எறிந்திருந்தால் பாலாசிங் சிறைக்கு வெளியே இருந்திருப்பான்.'

ஏழாவது மனிதன்—'தம்பி! எதையாவது சொல்லி விட்டால் அது பரவிவிடும். அதனால் நான் வாயைத் திறந்து ஒன்றும் சொல்வதில்லை. ஆனால் விஷயம் மக்களுக்குத் தெரியாதா? பாலாசிங் இன்னும்......'

மற்றொருவன் கூறினான், 'இருக்கட்டும் அப்பா! அந்த விஷயங்களையெல்லாம் கிளப்புவதால் என்ன பயன்? அவனை எங்கே சிறைப்படுத்திவிட்டார்கள்? அவன் அப்பீலில் விடுபட்டாலும் விடபடலாம், அவன் வந்ததும் தானாக உண்மை எது, பொய் எது என்று தெரிந்துவிடுகிறது. நமக்கு என்ன வந்திருக்கிறது?'

வெகுநேரம் வரை இதே பேச்சாக இருந்தது, ஆனால் ஒருவரும் எந்த முடிவுக்கும் வர முடியவில்லை. ஏனென்றால் கிராமத்துத் தலைவன் பாலாசிங்கும் அவனுடைய கூட்டத்தார்களும் சிறையிலே இருந்தார்கள்.

[ 18 ]

ஒரு வருஷம் ஒன்றரை வருஷம் வரை நோய்ப் படுக்கையில் கிடந்த பின்னர் ஜீவாசிங் தன் வாழ்வுப் பயணத்தை முடித்துவிட்டு இவ்வுலகைவிட்டே போய்விட்டார். வீட்டுச்

சுமை முழுவதையும் இப்பொழுதும் பச்சன்சிங் ஏற்றுக் கொள்ள வேண்டி வந்தது. பச்சன்சிங்கின் தாய் அவனைப் பார்த்துக் கொண்டிருந்ததால் உயிருடன் இருந்தாள். அவளுக்கு வேறு மகனோ மகளோ கிடையாது.

பாலாசிங்கும் அவனுடைய நண்பர்களும் சிறைத்தண்டனையை அனுபவித்துவிட்டு ஒவ்வொருவராக வெளியிலே வந்தார்கள். பெரியவர் தசௌந்தா சிங்கும் சிறையிலிருந்து வெளியே வந்துவிட்டார். பச்சன்சிங் குருத்வாரத்தில் வேறொரு மதகுருவைக் கொண்டுவந்து வைத்திருக்கிறான் என்று அவர் சிறையிலிருந்தபொழுதே கேள்விப்பட்டிருந்தார். அதனால் அவர் முதலில் அந்தப் புது மதகுருவை விரட்டி விட்டு பிறகு கிராமத்தில் அடி எடுத்து வைத்தால்தான் தன் மரியாதை நிலைத்திருக்கும் என்று கருதினார். பாலா சிங்கும் அவன் தோழர்களும் தசௌந்தா சிங்கின் வாக்கு மூலத்தால்தான் சிறைப்பட்டார்கள். ஆனால் பெரியவர் அறிவிழந்த நிலையில்தான் அவ்வாறு செய்துவிட்டார் என்று அவர்களுக்குத் தெரியும். ஆதலால் அவர்கள் அவருடைய இந்தக் குற்றத்தை மன்னித்துவிட்டார்கள். அத்துடன் பெரியவர் தங்களுக்கு எவ்வளவு உபயோக மானவர் என்பதையும் அவர்கள் அறிந்திருந்தார்கள். ஆகையால் அவர்கள் பெரியவரை மறுபடியும் கூப்பிட்டனுப்பினார்கள்.

பாலாசிங் சிறையிலிருந்து விடுபட்டு வந்த நாளன்று சில வீடுகளைத் தவிர கிராமம் முழுவதுமே அவனுக்கு வரவேற்பு அளித்தது. சிறப்பாக, பெரியவரின் மதிப்பும் மரியாதையும் முன்பைவிட பத்து மடங்கு அதிகமாகிவிட்டது. எல்லோரும் ஒரே மாதிரி கூறினார்கள், 'பார்த்தீர்களா? கடவுளைப்போன்ற பெரியவரைக் குற்றமில்லாமலேயே சிறைப் படச் செய்து பச்சன்சிங் என்ன அடைந்துவிட்டான்? அவனுக்கு எவ்வளவு பெரிய கஷ்டம் வந்தது! உடனே தகப்பன் இறந்துவிட்டான். ஆண்டவனின் கோபத்திற்கு அஞ்சவேண்டும். ஏழையின் வேதனை சக்தி வாய்ந்தது என்று கூறுவது பொருளற்ற கூற்று இல்லையே!'

இப்போது அறிஞர் மக்களுக்கு வேண்டாதவராக ஆகி விட்டார். ஏதோ சில குடும்பங்கள் அவருக்குச் சாதகமாக இருந்தன. அவைகளும் அவருக்கு எதிரியாக ஆகிவிட்டன. சிலர் தங்கள் குழந்தைகளை குருத்வாரத்துப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புவதை நிறுத்தி விட்டார்கள்.

அறிஞரும் இதனால் வருத்தமடைந்தார். கடைசியில் இந்தத் தலைவலியை விட்டு அகல்வதே நல்லது என்று அவர் கருதினார். ஒரு நாள் அவர் அந்த கிராமத்தை விட்டுப் போய் விட்டார். பச்சன்சிங் கூறியும் அவர் நிற்கவில்லை. கிராமத்தில் இருந்தால் சண்டை சச்சரவு வரை கொண்டு போய் விடும்; ஒரு வேளை அதன் முடிவு கிராமத்திற்கு ஆபத்தாகவும் வந்து சேரலாம் என்று அவருக்கு உறுதியாகத் தோன்றிற்று.

அறிஞரை விரட்டுவதற்கு அடிதடி செய்ய வேண்டியிருக்கும் என்று பாலாசிங்கின் நண்பர்கள் கருதியிருந்தார்கள். ஆனால் அதற்குத் தேவையே இல்லாமல் போய்விட்டது. பெரியவர் தசௌந்தாசிங் பேசாமல் வந்து குருத்வாரத்தில் உட்கார்ந்து கொண்டு விட்டார்.

அறிஞர் வந்து குருத்வாரத்தின் அழகைப் பெரிதும் வளர்த்து வைத்திருந்தது அவர்களுக்கு எல்லாவற்றையும் விட அதிகமான துன்பத்தை அளித்தது. எப்படியிருந்தாலும் நாம் இதைவிட அதிகமாக அதன் அழகை வளர்த்து அறிஞரின் திறமையைத் தோற்கடித்து விடுவோம் என்று அவர்கள் எண்ணினார்கள். இன்னும் கிராமத்தில் சிலர் அறிஞரைப் போற்றி வந்தார்கள். அவர்களுக்கு எந்தவிதமான குறையும் தோன்றக் கூடாது என்ற கருத்தும் அவர்களுடைய இந்த எண்ணத்தின் அடிப்படையில் இருந்தது.

குரு நானக் தேவரின் விழா அருகில் வந்து கொண்டிருந்தது. அவர்கள் குருத்வாரத்தை இன்னும் சோபையுறச் செய்வதற்காக அப்போது கீர்த்தனைக் காரர்களின் ஒரு கோஷ்டியை அழைக்க ஏற்பாடு செய்தார்கள்.

கிராமத்திற்கு வந்ததும் பச்சன்சிங் தான் எல்லோரிடமும் சொல்லி அதிகாரிகளுக்கு லஞ்சம் கொடுத்துத் தன்னை நீதி மன்றத்தில் எதிராக வாக்குமூலம் கொடுக்கச் சொன்னான்

என்றும் அதனால்தான் எல்லோரும் சிறைத் தண்டனை அனுபவிக்க நேர்ந்தது என்றும் பெரியவர் மதகுரு பறை சாற்றி விட்டார். இதனால் ஒருபுறம் பெரியவரிடத்தில் கிராமத்தாருடைய மதிப்பு அதிகரித்து விட்டது; மற்றொரு புறம் மக்கள் பச்சன்சிங்கிடம் வெறுப்புக் கொண்டார்கள். சாதியை விட்டு விரைவில் பச்சன் சிங்கை அகற்ற வேண்டும். ஏனெனில் குராங்காட்டியின் மகளுடன் அவனுடைய சேர்க்கை நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வருகிறது. அவளுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதாகச் சாக்குக் கூறிக்கொண்டு ரோடுவின் குடிசைக்குப் போகிறான், அங்கேயே பல மணி நேரம் இருக்கிறான் என்று எல்லோரும் ரகசியமாகப் பேசிக் கொள்ளத் தொடங்கினார்கள். அதனால் விழாவன்று கிராமத்து மக்களனைவரும் கூடும் போது இதைப் பற்றி யோசித்து ஒரு முடிவு செய்துவிட வேண்டும் என்று ஓரளவுக்கு நிச்சயம் செய்யப்பட்டது.

சுந்தரியும் இப்பொழுது முன்பிருந்த சுந்தரியாக இல்லை. இடைவிடாத படிப்பும், அறிஞர், பச்சன்சிங் இந்த இருவருடைய சேர்க்கையும் அவளுடைய அறிவைப் பெரிதும் வளர்த்து விட்டது. இப்போதெல்லாம் அவள் சீக்கிய மதக் கொள்கைகளையும், இலக்கியம், சரித்திரம் முதலியவைகளையும் பற்றி நன்கு அறிந்து கொண்டுவிட்டாள். பச்சன்சிங்கின் தாய் பழைய கொள்கைகளில் நம்பிக்கை கொண்டவள். பக்கத்து வீட்டுப் பெண்கள் தினசரி பச்சன்சிங்கைப் பற்றிப் பலவாறாகச் சொல்லி அவளுடைய மனதைக் கலக்க முயன்று கொண்டிருந்தார்கள். ஆனால் பச்சன்சிங், அறிஞர் இந்த இருவருடைய அறிவுரைகளாலும் அவர்களுடைய உள்ளத்தை அதிகமாகப் பாதிக்கவில்லை.

குருநானக் விழா தினம் அருகில் வந்துவிட்டது. சுந்தரியின் உள்ளத்தில் அந்த ஒப்பற்ற காட்சியைக் காண நானக் பரம்பரையின் விசித்திரமான செயல்களைப் பற்றியும் மதத்திற்காக உயிரைத் தியாகம்செய்த வீரர்களைப் பற்றியும் அறிஞர் சொல்லக் கேட்டதிலிருந்து குருபரம்பரை மீது அவளுடைய மதிப்பு கடலலையாகப் பெருகலாயிற்று. ஆனால் தான் அந்த

விழாக் காட்சியைக் காணமுடியாதே என்று நினைத்த மாத்திரத்தில் அவளுடைய உள்ளம் வருத்தத்தால் குமுறலாயிற்று. எல்லாவற்றையும் விட, ரோடு அவளுடைய மனதில் அதிகமான அச்சத்தை உண்டாக்கிவிட்டான். ஆயினும் குருவிழா வன்று மறைந்திருந்து கொண்டோ அல்லது வெளிப்படையாகவோ எப்படியாவது குருநானக்கை வழிபட வாய்ப்புக் கிட்டவேண்டுமே என்று அவளுக்கு மிகவும் பரபரப்பாக இருந்தது.

குருநானக் விழாவிற்கு இன்னும் ஒரு நாள்தான் இருந்தது. குருத்வாரத்தில் தடபுடலான ஏற்பாடுகள் நடந்துகொண்டிருந்தன. அடுத்த நாள் அதிகாலையில் பாடகர்கள், கீர்த்தனைகளைப் பாடப்போகிறார்கள் என்பது சுந்தரிக்குத் தெரியவந்தது. இரவு முழுதும் கண்விழித்தபடி கூழாங் கற்களை எண்ணிக் கொண்டேயிருந்தாள். அவளுக்குத் தூக்கமே வரவில்லை. உண்மையில் குரங்கோடு சேர்ந்திருந்ததால் அவளுடைய பழக்க வழக்கங்களும் குரங்குகளைப் போலவே ஆகிவிட்டன. அதிகாலையில் குருத்வாரத்தின் கதவு திறக்கப்படும் பொழுதே யாருக்கும் தெரியாமல் உள்ளேபோய் முற்றத்தில் இருந்த இலந்தைமரத்தில் ஏறி ஒரு அடர்ந்த கிளையில் உட்கார்ந்து கொண்டுவிடலாம் என்று ஒரு சமயம் அவள் நினைத்தாள். மற்றொரு சமயம் அப்படி உட்கார்ந்தால், யாராவது பார்த்து விடுவார்களோ, குருவின் தர்பாரில் அவரைவிட உயர்ந்த இடத்தில் நான் எப்படி உட்காருவேன்; அதனால் யாரும் பார்க்க முடியாதபடி ஒரு வழியைக் கண்டுபிடித்தாக வேண்டும் என்று நினைத்தாள்.

இரவு முழுவதும் அவள் இவ்வாறு யோசித்துக் கொண்டேயிருந்தாள். கடைசியில் கண்ணயர்ந்துவிட்டாள்.

தூக்கம் கலைந்தபொழுது பகல் ஒளி தென்பட்டது. பகல் வரும்வரை தான் நினைவிழந்து தூங்கிவிட்டதை நினைத்து அவளுக்குத் தன்மீது எரிச்சலாக வந்தது.

ஒரு விநாடிகூட வீட்டில் தங்குவது இப்போது அவளுக்குப் பெரிதும் கஷ்டமாக இருந்தது. ரோடு குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்ததை அவள் கவனித்தாள். மெதுவாக,

சத்தமே செய்யாமல் அவள் குடிசையை விட்டு வெளியே வந்தாள். நேராக குருத்வாரத்தை நோக்கி நடக்கலானாள்.

தொலைவிலிருந்தே வாத்தியங்களின் ஒலி கேட்கும் என்று அவள் நினைத்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் எண்ணியதற்கு மாறான நிலை காணப்பட்டது. குருத்வாரத்தின் கதவு இன்னும் மூடியே இருந்தது. இன்னும் பொழுது விடியவில்லை; நிலவினால் தனக்குப் பிரமை ஏற்பட்டுவிட்டது என அவள் நினைத்தாள். அவளுக்குப் பெரிதும் மகிழ்ச்சியாக இருந்தது.

அப்போது அவள் எப்படியாவது உள்ளே போவதற்கு வழியைக் கண்டுபிடிக்க முயற்சித்தாள்.

குருக்ரந்தசாகபை வழிபடும் குருத்வார அறையை ஒட்டினாற்போல் வைக்கோல் போடும் ஓர் இருண்ட அறை திறந்து கிடந்தது அவளுக்குத் திடீரென்று நினைவிற்கு வந்தது. அந்த அறையின் கதவைத் திறந்தால் குருக்ரந்தசாகபை வழிபடும் அறைக்குள் போய்விடலாம். பலமுறைகள் அவள் வெளியிலிருந்து கொண்டும் முற்றத்திலிருந்து கொண்டும் அறைகளை நன்றாகக் கவனித்திருந்தாள்.

முற்றத்துப் பக்கம் இருக்கும் கதவுவழியாக உள்ளே நுழைய வேண்டியதுதான் மீதமாக இருந்தது. நிலவு அவளுடைய பாதையில் தடையாக இருந்தது. மிகுந்த யோசனையில் ஆழ்ந்தவளாய் அவள் குருத்வாரத்தின் பின்புறமாகச் சென்றாள். அங்கே தரையிலிருந்து சற்று உயரமாக இருந்த ஒரு தொட்டியைப் பார்த்தாள். அவள் உடனே பாய்ந்து தொட்டியின் மீது ஏறிக்கொண்டாள். பிறகு ஒரு துவாரத்தில் காலை வைத்துக் கூறையின் மீது ஏறிவிட்டாள். சுண்ணம் பூசப்படாத அறையின் கூரை எவ்வளவு உயரமாக இருக்க முடியும்! அதுவும் இந்தக் குரங்கிற்கு! கூரையில் ஏறி அவள் முற்றத்திலிருந்த இலந்தைமரக் கிளையைப் பிடித்துக்கொண்டு தொங்கினாள்; பின்னர் முற்றத்தில் குதித்துவிட்டாள். அதன் பிறகு அவள் உடனடியாக வைக்கோல் அறையில் நுழைந்து ஒரு மூலையில் ஒளிந்துகொண்டு விட்டாள். குருக்ரந்தசாகப் வைக்கப்பட்டிருக்கும் அறை திறந்திருக்கிறதா இல்லையா என்று பார்ப்பதற்காக அவள் கதவைத் தள்ளிப் பார்த்தாள்.

கதவு திறந்துகொண்டு விட்டது. அந்தக் கதவு குருக்ரந்த சாகப் வைக்கப்பட்டிருந்த அறைப் பக்கம்தான் திறந்துகொள் கிறது என்று அவளுக்குத் தெரிந்துவிட்டது. அறையினுள்ளே வைக்கோல் போர் வைத்திருந்ததனால் கதவு வேகமாக வெளிப் பக்கம் திறந்துகொண்டு விட்டது. அத்துடன் ஏராளமான வைக்கோலும் குருக்ரந்தசாகப் வைத்திருந்த அறையில் போய் விழுந்துவிட்டது.

சுந்தரிக்கு ஒரே கவலையாகப் போய்விட்டது. ஆனால் அவள் நம்பிக்கை இடிக்கவில்லை. ஜமக்காளத்தில் மூன்று அல்லது நான்கு மனிதர்கள் தூங்கிக் கொண்டிருந்ததையும் ஒருவரும் அங்கே விழித்துக் கொண்டிருக்கவில்லை யென்பதையும் அவள் பார்த்தாள். அதைத் தவிர உள்ளே சிறிது இருளாகவும் இருந்தது. ஒரு சிறு துவாரத்திலிருந்து நிலவொளி உள்ளே வந்துகொண்டிருந்தது. அவள் வெளியே போய் ஒரு கிழிந்த கோணியை எடுத்துவந்தாள். அதில் வைக்கோலைப் போட்டு அறைக்குள் எறியத் தொடங்கினாள்.

இடைவிடாமல் ஒரு மணிநேரம் உழைத்தபிறகு அவள் தான் நிற்பதற்கு வேண்டிய இடத்தைச் செய்துகொண்டாள். அவளுக்குப் பின்புறம் தலைவரை வைக்கோல்போர் சேர்ந்து விட்டது. அதன்பிறகு அவள் மறுபக்கத்தில் இருந்த வைக்கோலை அகற்றி இடத்தைச் சுத்தப்படுத்திக் கொண்டாள், பின்னர் கதவை மூடிக்கொண்டு அதனருகில் உட்கார்ந்து கொண்டுவிட்டாள். உடனேயே அவளுக்குத் தூக்கம் வந்து விட்டது.

அப்போது பச்சன்சிங்கிடம் கேட்டிருந்த குருநானக்கின் பாடல்கள் ஒவ்வொன்றாக அவளுடைய நினைவிற்கு வந்தன. மெள்ள மெள்ள எல்லாக் காட்சிகளும் அவளுடைய கண் களுக்கு எதிரில் தோன்ற ஆரம்பித்தன. அந்த நிகழ்ச்சிகளைத் தன் கண்களால் பார்த்துக் கொண்டிருப்பது போல் அவளுக்குத் தோன்றிற்று. இன்றைய நாளில் இதே நேரத்தில் தான் வானத்துக் கடவுள்* அவதரித்தார். அவளெதிரில் இந்த

* இங்கு வானத்துக் கடவுள் என்று குருநானக் குறிப்பிடப்படுகிறார்.

எண்ணம் உருவெடுத்துத் தோன்றலாயிற்று. தல்வண்டி கிராமத்தில் (நானக் பிறந்த இடம்) ஒரே கோலாகலமாக இருந்தது. தலையாரி காலு (நானக்கின் தந்தை)வின் வீட்டில் ஏராளமான மின்னல்கள் ஒளி வீசிக் கொண்டிருந்தன. உலகிலுள்ள செடி கொடிகளெல்லாம் சேர்ந்து அந்த இடத்தில் மணம் பரப்பிவிட்டது. அன்னை திருப்தாவின் மடியில் இருண்ட உள்ளங்களில் ஒளி ஊட்டக் கூடியதும் குளிர்ந்த கதிர்களைப் பரப்பக் கூடியதுமான திங்கள் பிரகாசித்துக் கொண்டிருந்தது. அதை ஒருமுறை யார் பார்த்தாலும் அவருக்குள் ஒரு விசித்திரமான ஒளி பரவி அவரை இன்ப மயமாக ஆக்கிவிடும்.

பின்னர் அவள், குழந்தை ப்ரீதம் மற்ற குழந்தைகளோடு கண்ணாமூச்சி விளையாட்டு விளையாடுவதைப் பார்த்தாள். அந்தக் குழந்தை மரத்தடியில் குளிர்ந்த நிழலில் தூங்குவதையும், பாம்பு அதற்குக் குடை போலிருந்து நிழல் தருவதையும் பார்த்தாள். பலவிதமான எண்ணங்களில் மூழ்கியவாறே அவள் மெய்மறந்து போய் அதன் பாதங்களில் விழுந்து கண்ணீரால் அந்தப் பாதங்களை நனைத்துக்கொண்டு வேண்டிக் கொள்ளலானாள், 'அன்பரே! அமுதம் நிரம்பிய கண்களால் என்னையும் ஒரு முறை பார்க்கக் கூடாதா? தங்களுடைய பாதங்களில் தலைவைக்கக் கூடத் தகுதியற்றுப் போகும்படி துரதிருஷ்டசாலியான நான் என்ன தவறு இழைத்துவிட்டேன்? ஆண்டவனே! நான் எத்தனை கண்களிலிருந்து தப்பிக் கொண்டு இங்கே வந்திருக்கிறேன்! என் உள்ளத்துத் தலைவரே! நீங்கள் உங்கள் நண்பர்களுடன் கண்ணாமூச்சி விளையாட்டு விளையாடுங்கள். ஆனால் உங்களைத் தேடுவதற்குச் சக்தியற்ற எனக்கு ஒருவித சாமர்த்தியமும் கிடையாது. என்னிடம் கண்ணாமூச்சி விளையாட்டு விளையாட வேண்டாம். நான் உங்களிடம் வருவதையும் தடுக்க வேண்டாம்.'

அப்போது அவளுக்கு வானத்திலிருந்து ஒரு குரல் கேட்டது. அது முரசு அடித்த ஒலி போலிருந்தது. அத்துடன் ஏதோ ஒரு இனிமையான வாத்தியத்திலிருந்து இன்பமயமான ஒரு

ஒலி கிளம்பி எங்கும் எதிரொலித்தது. அந்த எதிரொலியுடன் உலகம் முழுவதிலும் ஒரு விசித்திரமான மணம் பரவிவிட்டது போல் தோன்றிற்று. அப்போது அந்த அழகுக் குழந்தை வானத்தில் இறங்கி வருவதையும் அதனுடன் மற்றும் இரண்டு உருவங்கள் இருப்பதையும் அவள் பார்த்தாள். காட்டு மலர்களைத் தாங்கிக் கொண்டு செடிகள் மெய்மறந்து அசைந்தாடிக் கொண்டிருந்த ஓர் அழகிய மலைப் பகுதியில் அந்தக் கடவுள் ஓர் ஆசனத்தில் வீற்றிருந்தது. அதனுடைய இரண்டு நண்பர்களும் இரு புறத்திலும் அமர்ந்து கொண்டுவிட்டார்கள்.

கனவு உலகில் சுந்தரி மறுபடியும் ஓடிப்போய் அன்பரின் பாதங்களைப் பிடித்துக்கொண்டு கண்ணீரால் அவருடைய பாதங்களை நனைத்தவளாய் வேண்டிக் கொண்டாள்—'என் இதய நாயகரே! இனி என்னை விட்டுப் பிரியாதீர்கள். நான் உங்கள் பாதத்தில் வந்து சேருவதைத் தடுக்காதீர்கள். யாராவது தடுத்தால் அவர்களை நீங்கள் அவ்விதம் செய்ய விடாதீர்கள். கருணைக் கடலே! என் உள்ளத்தை உடைத்து விடாதீர்கள்.'

வானத்துக் கடவுள் அவளுடைய தலையைக் கையால் தடவியவாறே, 'சுந்தரி, உன்னை யாராலும் தடுக்கமுடியாது. யார் தடுத்தாலும் நீ நிற்கமாட்டாய். எழுந்திரு. கேள்!' என்று கூறியது போல் அவளுக்குத் தோன்றிற்று.

அதன் பிறகு சுந்தரி பாதங்களிலிருந்து தலையைத் தூக்கினாள். அவளுக்கு உள்ளும் புறமும் ஒரு விசித்திரமான ஆனந்தத்தில் திளைத்திருப்பது போல் தோன்றிற்று. அவளுடைய ஒவ்வொரு உரோமத்திலிருந்தும் விசித்திரமான இன்ப ஊற்றுக்கள் பொழிந்து கொண்டிருந்தன. அவளுடைய செவிகளில் ஆன்ம இன்பத்தில் தோய்ந்த அந்தச் சொற்கள் எதிரொலித்துக் கொண்டிருந்தன. உலகிலுள்ள ராகங்களெல்லாம் சேர்ந்து ஒரு பெரிய இசை வடிவைப் பெற்று ஒலித்துக் கொண்டிருந்ததுபோல் தோன்றிற்று. அப்பொழுது அவருக்கு வலதுபுறம் உட்கார்ந்திருந்த மகாத்மா ஒரு பாடலைப் பாடிக் கொண்டிருந்தார்.

அவருடைய யாழிலிருந்து உள்ளத்தை உருக்கும் நாதம் கிளம்பி ஒலித்துக் கொண்டிருந்தது

'அமுத ரசத்தில் உள்ளம்
அன்பின் வடிவாயிற்றே!
ராமபக்தியில் உள்ளம் உறைந்து
ஒளிமயமாய்த் திகழ்ந்ததுவே!
என் உளமும் உடலும் குருவின் சொல்லால்
தன்மயமாகி மிளிர்ந்ததுவே!
அறிஞர் நானக் பரப்பிய ஒளியில் ஜீவனனைத்தும்
வாழ்வின் இன்பம் பெற்றதுவே!'

சுந்தரியின் கண்கள் திறந்தன. அவள் அந்த வைக்கோல் அறையில் தான் இருப்பதை உணர்ந்தாள். கீர்த்தனைக் காரர்கள் ஆரத்திப் பாடல் பாடத்துவங்கினர். முதலாரத்தி முடிந்த பிறகு அவர்கள்—'வார்சலோகாங் நால் சலோக் மஹல்லே பஹ்லே கே...' என்ற குருவின் பாடலைப் பாடிக் கொண்டிருந்தார்கள்.

சுந்தரி அங்கேயே மண்டியிட்டுக் கொண்டு உட்கார்ந்தபடி கீர்த்தனைப் பாடல்களின் அமுதத்தைப் பருகலானாள். அவள் இன்று முதன் முறையாக குருக்ரந்த சாகபைத் தரிசித்தாள். ஆனால் அவள் எவ்வாறு அதற்கு புன்னிலையில் சிரம் பணிந்து வணங்குவாள்? இந்த ஆசை அவளை வேதனையில் ஆழ்த்தியது. அவளால் அமைதியாக அங்கே உட்கார்ந்திருக்க முடியவில்லை.

கீர்த்தனைகளைக் கேட்கக் கேட்க சுந்தரியின் உள்ளத்தில் ஒரு புரியாத ஆர்வமும் ஆசையும் பெருகத் தொடங்கியது.

பகல் நேரம் அதிகரித்துக்கொண்டே வந்தது. அப்போது நான்கைந்து ஆரத்திப் பாடல்கள் பாடவேண்டியது தான் மிச்சம். அந்த நேரத்தில் ஓரிரு மனிதர்கள் குருத்வாரத்திற்குள் வரத் தொடங்கிவிட்டார்கள். இன்றைய நாள் ஓராண்டுக் காலமாக ஆகிவிட வேண்டும்; தனது உள்ளம் இதுபோன்றே குருவின் பாதங்களில் வணங்கியவாறு இருக்கவேண்டும்; தான் அந்த அமுத இன்பத்தில் திளைத்துக் கொண்டிருப்பதை,

பிரம்மா, விஷ்ணு போன்றவர்களால் கூடத் தடுக்க முடியாமற் போகவேண்டும் என்று சுந்தரியின் உள்ளம் ஆசைப்பட்டது.

பாவம், கிர்த்தனைக்காரர்கள் நம்பிக்கையிழந்தனர். ஆரத்தி முடியவேண்டிய நேரம்கூட ஆகிவிட்டது. ஆனால் இன்னும் மக்களின் கூட்டம் சேரவில்லை. இப்படியே இருந்தால் குரு நானக் விழா பயனற்றுப்போகும் என்று அவர்கள் எண்ணினார்கள்.

அவர்களில் ஒருவன் எழுந்து பெரியவர் மதகுருவினிடம் போய்க் கூறினான்—'ஐயா! ஆரத்தி முடியப்போகிறது. இன்னும் கூட்டம் வரவில்லையே!'

பெரியவர் கிரந்தசாகபின் அருகில் உட்கார்ந்துகொண்டு தூங்கி விழுந்துகொண்டிருந்தார். அவர் இதைக் கேட்டுத் திடுக்கிட்டெழுந்தார். கண்களைக் கசக்கிக்கொண்டு—'வந்து ......என்ன சொன்னாய்?' என்று கேட்டார்.

கீர்த்தனைக்காரன் மறுபடியும் தான் முன்னர் கூறியதைச் சொன்னான். அதைக் கேட்டு பெரியவர், 'வந்து......இவர்கள் எல்லோரும் கிராமத்து மக்கள்தானே? நான் போய் அழைத்து வருகிறேன்!' என்று கூறிக்கொண்டே மக்களை அழைத்து வரச் சென்றுவிட்டார்.

கீர்த்தனைக்காரர்கள், 'மக்கள் கூடட்டும். பிறகு ஆரத்தி முடிக்கலாம்' என்று எண்ணியவர்களாய் நேரத்தைக் கடத்திக் கொண்டிருந்தார்கள். பெரியவர் ஒருமுறை சென்றார், மறுமுறையும் சென்றார், மூன்றாவது முறையும் சென்றார்.

நடுப்பகல் நேரம்; பிரசாதத்தின் மணம் நான்குபுறமும் பரவத் தொடங்கியது. அவ்வளவுதான். ஆடவர்களும், பெண்டிரும், குழந்தைகளுட் குருத்வாரத்தில் வெகு விரைவாக வந்து கூடிவிட்டார்கள்.

கூட்டம் கூடிய சிறிது நேரத்திற்குள் மக்கள் கீர்த்தனைக் காரர்களைத் தொந்தரவு செய்யத் தொடங்கிவிட்டார்கள்—'சீக்கிரம் பிரசாதம் கொடுங்கள், நாங்கள் மற்ற இடங்களுக்குப் போகவேண்டும்!' என்ற கூக்குரல்கள் அவர்களுடைய செவிகளில் வந்து பாய்ந்தன. கடைசி ஆரத்தி ஆயிற்று. பெரியவர் பூரிப்போடு ஆண்டவனுக்கு நைவேத்யம் சமர்ப்

பிக்க முன்னே வந்தார். இன்று பிரசாதம் குவியலாக இருந்தது. பாலாசிங்கும் அவனுடைய கூட்டத்தவர்களும் பதினேறு ரூபாய்க்குப் பிரசாதம் சமர்ப்பித்திருந்தார்கள். அதைத்தவிர பஞ்சாயத்துக்காரர்களுடைய சார்பிலும் பிரசாதம் வைக்கப்பட்டிருந்தது.

'கிரந்தசாகபைப் படிப்பவர்களும், கேட்பவர்களும், அதைப் பற்றித் தியானம் செய்பவர்களும் வாழ்க! எல்லோரும் இன்புற்று வாழ்க! குருநானக்கின் திருநாமம் ஓங்குக! ஆண்டவனின் கருணையால் அனைவரும் நலம் பெற்றுத் திகழ்க!' என்று வாழ்த்துப் பாடிய பின்னர் மக்களனைவரும் தலை வணங்கினார்கள்.

அந்த நேரத்தில் திடீரென வைக்கோல் அறையின் கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டது. வைக்கோல் போர் முழுவதும் அறையில் வந்து விழுந்தது. அதனுடன் கூட நடுங்கும் கால்களுடன் ஒரு பெண் அங்கே வந்து நிலத்தில் விழுந்தாள். குருக்ரந்தசாகப் வணங்கப்படும் இடத்தில் அந்தப் பெண்ணின் தலை அடிபட்டது. அவள் பெரும்பாலும் வைக்கோலுக்கடியில் அழுந்திவிட்டாள்.

அந்தப் பக்கம் எல்லோருடைய கவனமும் சென்றது. அவள் அந்தக் குரங்காட்டியின் பெண் என்பதைப் பார்த்ததும் அவர்களுக்கு வியப்பும் கோபமும் வந்தது. அவர்கள் பொறுமையிழந்துவிட்டனர்.

ஆண்டவன் எதைக் கொடுத்தாலும் பக்தன் அதை ஏற்றுக்கொள்ள வேண்டியதுதானே! மக்கள் அந்த அப்பாவிப் பெண்ணின்மீது பாய்ந்தனர். குத்தும், உதையும், அறையும் அவளை உண்டு—இல்லை என்றாக்கிவிட்டன. அந்தப் பெண்ணின் காரணமாக அவர்கள் முதலிலேயே கலவரம் செய்யவிருந்தார்கள். இப்பொழுது இந்த அநீதம் வேறு நடந்துவிட்டது. தீண்டத்தகாதவள் உள்ளே நுழைந்துவிட்டதால் பிரசாதம் வீணாகிவிட்டது. அதை நாய்களுக்கும், காக்கைகளுக்கும் தான் போடவேண்டும்.

அவர்கள் அந்தப் பெண்ணிற்கு இன்னும் எத்தனை தண்டனைகள் கொடுத்திருப்பார்களோ! அதற்குள் பலருக்கு அவள்

இறந்துவிடப் போகிறுளே என்ற கவலை வந்துவிட்டது. இப்போதுதான் ஒரு வழக்கிலிருந்து கிராமத்தார்கள் உயிர் தப்பியிருக்கிருர்கள். மறுபடியும் ஏதேனும் ஆபத்து நேர்ந்துவிட்டால், என்ன செய்வது என்று கவலையாகிவிட்டது.

அவர்கள் சிறுமியைத் திட்டியவாறு அவளை முற்றத்திற்கு இழுத்து வந்தார்கள். பெண்ணின் மூக்கிலிருந்தும், வாயிலிருந்தும், தலையிலிருந்தும் இரத்தம் பெருகிக் கொண்டிருந்தது. அதனுல் அவளுடைய துணி முழுவதும் நனைந்துவிட்டது இப்போது அந்தச் சிறுமி இறந்துவிடுவாள் எனப் பலர் எண்ணினர். மற்றும் சிலர் கவலையோடு மெதுவாக ஒருவருக் கொருவர் பேசிக்கொண்டனர். அப்போது பச்சன் சிங்கும் அங்கே வந்து சேர்ந்தான்.

பச்சன்சிங்கைப் பார்த்ததும் அவர்களுடைய கோபம் இன்னும் அதிகமாகி விட்டது. அவர்கள் அவன் மீது கோபத்தைக் காண்பிக்க ஏதாவதொரு காரணத்தைத் தேடிக் கொண்டு தானிருந்தார்கள். இப்போது அதற்கு வாய்ப்புக் கிடைத்து விட்டது. இது மட்டுமல்ல; இதெல்லாம் தானுக நடந்ததில்லை, ஒழுக்கம் கெட்ட பச்சன்சிங்தான் இதற்குக் காரணம் என்று பலருக்குச் சந்தேகம் தோன்றலாயிற்று.

அப்போது பச்சன்சிங்கிற்கு யாரிடமும் எதுவும் கேட்கத் தோன்றவில்லை. இரத்தத்தில் மூழ்கி நினைவற்றுக் கிடந்த சுந்தரியைப் பார்த்ததும் அவன் ஆவேசம் கொண்டான்; அவனுடைய இரத்தம் கொதித்தது. அவன் இடி போன்ற குரலில் கத்தினுன்—'இவளை எதற்காக அடித்தீர்கள்? இவள் என்ன குற்றம் செய்தாள்?'

இந்தக் கேள்களுக்கு விடையாகப் பல குரல்கள் எழும்பின—'இவளுக்கு இங்கே என்ன வேலை?' 'இவளை இங்கே வரவழைத்தவர் யார்?' 'எங்களுக்கு எல்லாம் தெரியும்!' 'எங்கள் மதம் அழிந்து போய் விட்டது,' 'பாரப்பா! கலிகாலத்துக் கூத்தை!' 'எங்கள் வாழ்வே நாசமாகி விட்டது!'

மக்கள் இவ்வாறு சத்தமிட்டுக் கொண்டே சுந்தரியை விட்டுவிட்டுப் பச்சன்சிங்கைச் சூழ்ந்து கொண்டார்கள். எலியைப்

பிடிப்பதற்கு முன்னுல் பூனை எலியைப் பார்ப்பது போல் அவர்கள் அவனைப் பார்த்தனர்.

ஆனால் பச்சன் சிங்கின் கோபம் சிறிதும் தணியவில்லை. அவன் கோபத்தால் பொருமியவாறு கூறினான், 'இது பயங்கரமான கொடுமையாகும். இந்த அப்பாவி பக்திப் பாடல்களைக் கேட்பதற்காக அன்புடன் வந்து விட்டாள் அதில் என்ன தவறு ஏற்பட்டு விட்டது? பாவம், கருணையே இல்லாமல் இவளை இவ்வாறு அடித்திருக்கிறீர்கள்!'

அவனுடைய குரல் தழுதழுத்தது; கண்களிலிருந்து கண்ணீர் சுரக்கத் தொடங்கியது.

கள்ளுக்கடையில் உட்கார்ந்திருக்கும் குடிகாரனிடம் வேத மந்திரத்தைக் கூறினால் என்ன பயன் ஏற்படப் போகிறது. அதுபோலவேயே அவன் சொற்களுக்கு எந்தவிதமான பயனும் ஏற்படவில்லை. பச்சன்சிங் நினைவிழந்து ஏதோ பிதற்றிக் கொண்டிருப்பது போல் அவர்கள் அவனைப் பார்த்து ஏளன மாகச் சிரிக்கத் தொடங்கினார்கள். ஒருவன் எல்லோருக்கும் முன்னே வந்து சொன்னான், 'என்ன சொன்னீங்க! பக்திப் பாடல்களைக் கேட்க வந்தாளா? சர்தார் ஜீ' இந்தக் கில்லாடித் தனத்தை மற்றவங்க கிட்டே போய் காட்டுங்க.' மற்றொருவன் கூறினான், 'திருடனுக்கு சமார்த்தியம் வேறு?'

மூன்றாவது மனிதன் கூறினான், 'இவன் ஏதாவது கெட்ட பெயரைக் கொண்டு வருவான் என்று எங்களுக்கு முன்பே தெரிந்தது தான். பலநாள் திருடனுக்கு என்றால் நல்லவ னுக்கும் ஒரு நாள் உண்டு பாவத்தை எங்கேயாவது மறைக்க முடியுமா!'

நான்காவது மனிதன் கூறினான், 'இவனுடைய சொற்களில் மயங்குவதற்கு நம்மையும் அந்த அப்பாவி அறிஞர் என்று நினைத்து விட்டான் போலிருக்கிறது. நம்ம மதகுரு குருத் வாரத்தில் இப்படிப்பட்ட அக்கரமங்கள் நடக்க விட மாட்டார் என்பது இவனுக்குத் தெரியாது.'

இன்னும் பச்சன் சிங்குக்கு அவர்கள் கண்டபடி பேசும் வார்த்தைகள் புரியவில்லை. அவன் அவர்கள் விசித்திரமாக நடந்து கொள்வதைப் பார்த்து திடுக்கிட்டான்.

அவன் சுந்தரியின் பக்கம் திரும்பிப் பார்த்த பொழுது பயந்தே விட்டான். அவள் பிழைக்க மாட்டாளோ என்று நினைத்து அவன் அங்கே இன்னும் நின்று கொண்டிருந்தால் ஆபத்து விளையும் என்று எண்ணியவனாய் சுந்தரியைக் கைகளில் தூக்கிக் கொண்டான். அவன் அந்த இடத்தை விட்டு வெளியே போகும் போது கூறினான்! 'கருணையற்றவர்களே! நான் இவளை என்னுடைய வீட்டிற்கு எடுத்துப் போகிறேன். வேண்டுமானால் என்னை சாதியை விட்டு அகற்றி விடுங்கள். நான் உங்களை வெறுக்கிறேன்.'

எல்லோரும் கூக்குரலிட்டு அவனைக் கேலி செய்துகொண்டு சிரிக்கத் தொடங்கினார்கள். அவர்கள் வாயில் வந்ததைப் பிதற்றிக்கொண்டு மிருந்தார்கள்.

அவர்களுடைய கோபம் ஏறக்குறைய தணிந்துவிட்டது. தன்னுடைய எதிரி ஒரு புது ஆபத்தில் சிக்கிக்கொண்டு விட்டான் என்று ஒரு மனிதன் பார்க்கும்பொழுது அவனுக்குத் தான் அடையும் நஷ்டத்திலும் ஒரு இலாபமே தென்படுமல்லவா? இப்பொழுது பச்சன்சிங்குக்கு எதிராக எடுக்க நினைத்த நடவடிக்கைக்குத் தேவையே இல்லாமல் போய் விட்டது. அவர்களுடைய எண்ணம் தானாகவே நிறைவேறி விட்டது.

கூட்டம் மறுபடியும் குருத்வாரத்திற்குள் போய் உட்கார்ந்தது. பிரசாதம் அகற்றப்பட்டது. புது சாமான்கள் வரவழைத்து மறுபடியும் பிரசாதம் தயாரிக்கப்பட்டது. முதல் பிரசாதம் எங்கே போயிற்றோ? ஆண்டவனுக்குத் தான் தெரியும்.

பகல் கழியத் தொடங்கிற்று. மக்கள் அந்த இடத்தை விட்டுப்போக அவசரப்படத் தொடங்கினார்கள்.

அந்தநேரத்தில் தலையாரி நத்தாசிங்கின் இளைய மகன் குருத்வாரத்திற்குள் வந்தான். அவனுக்குப் பின்னாலேயே ஒரு பயங்கர நாயும் வாலை ஆட்டிக்கொண்டு உள்ளே வந்து விட்டது. தலையாரியைப் பார்த்ததும் நாய் அவனுடைய மடியில் போய் உட்கார்ந்துகொண்டது. அது வாலை ஆட்டிக் கொண்டு அவனுடைய முகத்தை நக்குவதற்காக நாக்கை

நீட்டியவாறு குதிக்கத் தொடங்கியது. ஒருவேளை அதற்குப் பிரசாதத்தின் மணம் எட்டிவிட்டதோ என்னவோ? தலையாரி அதனுடைய உடலைத் தட்டிக்கொண்டு அதன் நாக்கைப் பிடித்திழுத்து, குழந்தையோடு விளையாடுவதுபோல விளையாடத் தொடங்கினான்.

அருகில் உட்கார்ந்திருந்த ஜ்வாலாசிங் நாயின் முதுகைத் தட்டிக்கொடுத்துக்கொண்டு சொன்னான், 'அண்ணே! இந்த பிரசாதத்தை எங்கேயிருந்து கொண்டுவந்தே? நாய் அழகாகத் தான் இருக்கு '

தலையாரி நாயைப் பற்றிய புகழ்ச்சி உரைகளைக் கேட்பதற்காகத்தான் உட்கார்ந்திருந்தான். அவன் கூறினான், 'ஆமாம் ஜ்வாலாசிங்! இது பல சிபாரிசுகளுக்குப் பிறகு கிடைத்தது. தாசில்தார் டேக்சந்த் பல நாளாக எங்க அப்பாவிற்கு மிகவும் வேண்டியவர். போன வருஷம் வெளிநாட்டுக்குப் போகிற பொழுது தனது பெண் நாயை அவரிடம் கொடுத்துவிட்டுப் போனார். நாய் குட்டி போடுவதற்கு முன்பே அவரிடம் சொல்லி வைத்திருந்தார். ஐந்தாறு தடவை நானும் அவரிடம் போகவேண்டியிருந்தது. அப்படியும் இருபத்தைந்து ரூபாய் கொடுத்து மிகவும் வேண்டிக்கொள்ள வேண்டியிருந்தது. ஜ்வாலாசிங்! இது மிகவும் அறிவுள்ள நாய். ஒரு தடவை தாசில்தாருடைய எருமை மாடு திருட்டு போய்விட்டது. இந்த நாயின் தாய் திருடன் வீட்டிற்குப்போய் எருமையை முளையிலிருந்து அவிழ்க்கச் செய்தது என்று அப்பா கூறினார்.'

சிறிதுநேரம் பேசாமல் இருந்துவிட்டு அவன் மறுபடியும் கூறினான், 'இதற்காக அரைச்சேர் மாமிசம் தினசரி வாங்குகிறோம். இது எத்தனை பால் குடிக்க முடியுமோ அது வேறு தனியாகச் செலவாகிறது. (நாயின் வாயில் நான்கு விரல்களைப் போட்டு) பார்த்தாயா! இதை என்ன வேணுமானாலும் செய், கடிக்காது. ஆனால் வெளியாள் யார் வந்தாலும் வீட்டை அமர்க்களப்படுத்தி விடும். சங்கிலியை அறுத்துவிடும். அப்பொழுது, என்னை விட்டுவிடு. நான் அவனைப் போய்ப் பிடித்துக்கொள்கிறேன் என்று சொல்லுவது போலிருக்கும்.'

பிரசாதம் மறுபடியும் தயாராகி வந்துவிட்டது. அதன் பிறகு அதை வழங்க ஆரம்பித்தார்கள். தலையாரி நாயின் பங்கை நாய்க்குக் கொடுத்துவிட்டுத் தன்னுடைய தொன்னையிலிருந்தும் நாலில் மூன்று பகுதியை நாய்க்குக் கொடுத்தான். அவன் மீதமிருந்த ஒரு பகுதியைச் சாப்பிட்டான்.

பிரசாதம் வழங்கப்பட்ட பிறகு கீர்த்தனைக்காரர்களுக்கு தட்சணை கொடுக்கும் பிரச்சினை கிளம்பிற்று. கிராமத் தலைவன் லத்தாசிங் இதற்குத் தலைவனாக கருதப்பட்டான். ஆதலால் அவனை எல்லாருக்கும் முன்னால் உட்கார வைப்பது வழக்கம்.

எல்லோருக்கும் முன்னால் பெரியவர் எழுந்திருந்து கூறினார், 'கால்சாஜீ! கீர்த்தனைக்காரர்கள் இங்கே வந்து மிகுந்த அன்புடன் பிரசங்கம் செய்தார்கள். இப்பொழுது இவர்களுக்கு தட்சணை கொடுத்து தங்கள் வாழ்க்கையைப் புனிதப் படுத்திக் கொள்ளுங்கள்.'

எல்லோரும் லத்தாசிங்கையே பார்த்துக் கொண்டிருந்தார்கள். தலைவன் என்ன கொடுக்கப் போகிறான் என்று பார்க்கலாம் என்று எல்லோரும் ஒருவருக்கொருவர் பார்த்துக் கொள்ளத் தொடங்கினார்கள். பல நேரம் வரை 'முதலில் நீ! முதலில் நீ!' என்று ஒருவர் மற்றொருவரை நோக்கிச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். கடைசியில் லத்தாசிங் தலைப்பாகை முடிச்சை அவிழ்த்து எட்டணா காசு கொடுத்தான். இதைப் பார்த்து கீர்த்தனைக்காரர்களின் உள்ளம் சுருங்கி விட்டது. இதற்குள் பின் புறத்தில் நகர்ந்து உட்கார்ந்திருந்த தச்சன் தேவாசிங் எழுந்து ஒரு ரூபாயைக் கொடுத்துவிட்டு உட்கார்ந்து கொண்டான்.

இதைப் பார்த்ததும் லத்தாசிங்குக்கு எரிச்சல் தாங்கவில்லை. கிராமத்திலேயே கீழ்ச்சாதியைச் சேர்ந்த ஒரு தொழிலாளியாக இருந்தும் அவன் நம்மைவிட அதிகமாகக் காசு கொடுப்பதாவது? எழுந்து அவனை உதைக்க வேண்டுமென்று அவனுக்குத் தோன்றிற்று. ஆனால் ஏதோ நினைத்தவாறு அவன் வேறொரு சமயம் கவனித்துக் கொள்ளலாம் என்று இருந்து விட்டான்.

பாபா கரம்சிங் உண்மையானவனுகவும் வெளிப்படையாகப் பேசக்கூடியவனுகவும் இருந்தான். ஆகையால் உடனே அவன் கூறினுன், 'தம்பி! நீ மூக்கை அறுத்திட்டியே! கொடுக்கத்தான் நினைத்தாயே! நன்ருகக் கொடுக்கக் கூடாதா? வெறும் எட்டணு காசுதான் கொடுப்பதா? பாரு, தேவாசிங் கவலையே இல்லாமல் ஒரு ரூபாயை எறிஞ்சுட்டான்.'

முதலில் பட்ட காயத்தை தலைவன் எப்படியோ பொறுத்துக் கொண்டு விட்டான். மறுபடியும் அதன் மீது மற்ருெரு காயம் பட்டதும்—பொறுமைக்கும் ஒரு எல்லை உண்டல்லவா?—அவன் பொறுக்கமுடியாமல் கோபத்துடன் கூறினுன், 'கர்மா! பேசும் பொழுது யோசித்துப் பேசு என்று உனக்குப் பல முறை சொல்லியிருக்கிறேன். உனக்கு அறிவு இல்லை யென்ருல் மற்ருெருவனுடைய அறிவை வாங்கிக் கொள்ளுவது தானே! நீயும் எவ்வளவு பெரிய பணக்காரன் என்பது எனக்குத் தெரியும். அந்த வியாபாரி உன்னுடைய வீட்டு வாசலை ஜப்தி பண்ண வந்த பொழுது நீ என்னுடைய தந்தையின் காலடியில் தலைப்பாகையைக் கழற்றி வைத்து விட்டு அழுததை மறந்து விட்டாயா? அப்பொழுது என் தந்தை மத்யஸ்தம் பண்ண வில்லை யென்ருல் இன்று ஒருவரும் மதித்திருக்க மாட்டார்கள்.'

பாபா கரம்சிங்கின் இரண்டு பையன்களும் அங்கே உட்கார்ந்திருந்தார்கள். தன் தந்தை அவமானப் படுத்தப் போவதைப் பார்த்து பேலாசிங் கூறினுன், 'கேளய்யா பெரியவரே! வாயை அடக்கிப் பேசும். குயவன் பஜ்ஜூவின் காசைப் பிடுங்கிக் கொண்டு அவனை சிறைக்கு அனுப்பினீரே! அவனைப் போல எங்களை நினைத்துக் கொள்ளாதீர். இந்த முறை பேசி விட்டீர். மறுபடியும் எங்கள் தந்தையைப் பற்றி ஏதேனும் பேசினுல் எங்களை விடக் கெட்டவர்கள் யாரு மிருக்க முடியாது. ஜாக்கிரதை! அவரவர் மதிப்பு அவரவர் கையிலிருக்கிறது.'

தலைவன் பேசுவதற்கு முன்னுல் அவனுடைய சகோதரனின் மகன் பௌஜாசிங் கூறினுன், 'நிறுத்தையா! கிழிந்த செருப்பு போல அதிகம் நீட்டாதே. சின்னப் பல்லி மரக்கட்டையை அணைத்துக் கொண்டதாம்! நீ எதை வேணுமானுலும் பேசிக் கொள். நீ சொல்லக் கூடாது என்று சொன்னதை நாங்கள்

நூறு தடவை சொல்லுவோம். தரகன் கொடுத்து நாங்கள் ஒன்றும் சாப்பிட்டு விடவில்லை !'

கரம் சிங்கின் இளைய மகன் கீவாசிங் கூறினான், 'ஆமாம் ஐயா ! நீ ஏன் பேசமாட்டே ! தாத்தா ஒரு ரொட்டித் துண்டுக்கு ஏங்கிக்கொண்டு இறந்து விட்டார். பேரப் பிள்ளை பெருமை யடித்துக் கொள்வதில் ஒண்ணும் குறைச்சலில்லை !'

தலைவன் சொன்னான், 'நாங்கள் பெருமையடித்துக் கொள் வதை நீ என்ன பார்த்து விட்டாய் ?'

கரம்சிங்குக்கு வேண்டியவன் ஒருவன் கூறினான், 'ஆமாமையா ? நீ ஏன் பெருமையடித்துக் கொள்ளமாட்டாய் ? ஏதோ குழந்தைகுட்டி யில்லாத அ[illegible] [illegible]ாத்தா [illegible]ட்டுக் காரர்கள் சேர்த்து வைத்திருந்த சொ[illegible] [illegible]க்கு கிடைத்து விட்டது. குறைவாக இருந்ததை [illegible] விற்று சம்பா தித்துக் கொண்டாய். பிறகு ஏன் பெ[illegible] [illegible]ப்பட மாட்டாய் ! மூன்று சகோதரர்களும் கொள்ளைக் குற்றத்தில் பிடிக்கப்பட்ட பொழுது உன் தகப்பன் வீடு வீடாகப் போய் அழுது கொண் டிருந்த அந்த நாளை மறந்து விட்டாயா ? நாங்கள் அன்று உதவிக்கு வராமல் இருந்திருந்தால் மற்றவர்களெல்லோரும் சேர்ந்து உங்கள் வீட்டுப் பெண்கள் உடுத்தியிருந்த துணியைக் கூட ஏலம் போட்டிருப்பரர்கள்.'

'நிறுத்து நாயே !'

'வாயை மூடு, போக்கிரிப் பயலே !'

'பிடி இவனை. எங்கே போகப் பார்க்கிறாய் ?'

'என்னைப் பிடிப்பதற்கு இங்கே எவன் பிறந்திருக்கிறான் ?'

'அப்படியா ?'

'ஆமாம் ஐயா !'

'அப்படின்னா வா !'

'நீயும் வாடா !'

அவ்வளவுதான். இரண்டு பக்கத்திலும் மகாபாரதப் போர் மூண்டு விட்டது. ஒரு வினாடிக்குள் ஒரே அமர்க்களமாக ஆகி விட்டது. நல்ல வேளை ; எல்லோரும் குருத்வாரத்திற்குள் இருந்தார்கள். அதனால் யாரிடமும் தடியோ கோடாரியோ இல்லை. இல்லையென்றால் எத்தனை கொலைகள் நடந்

திருக்குமோ? ஆனால் கீர்த்தனைக்காரர்களின் வாத்தியங்களும் தபலாக்களும் ஓரளவிற்கு ஆயுதங்களைப் போல் உபயோகப் பட்டன. ஆனால் அவைகளாலும் அதிக நேரம் வரை ஈடு கொடுக்க முடியவில்லை. அவைகளைக் கொண்டு தலையில் அடிக்கப்பட்டது. ஆனால் தலை உடைவதற்கு முன்னரே வாத்தியங்கள் நொறுங்கிவிட்டன.

பெரியவர் ஆசன விரிப்புக்கு அடியிலே போய் ஒளிந்து கொண்டார். கீர்த்தனைக்காரர்கள் ‘தலை தப்பியது தம்பிரான் புண்ணியம்’ என்று வெறும் காலுடன் ஓட்டமாக ஓடி ரயிலடியைப் போய்ச் சேர்ந்தார்கள்.

மாலை ஆ[illegible]ம் போலீஸ்காரர்கள் வந்து பெரியவர்கள் சிறியவர்கள் எல்லோரையும் பிடித்துக் கொண்டு போய் விட்டார்கள்.

ஆனால் முடிவு என்ன ஆயிற்று? எப்பொழுதும் போன்ற ஒரே முடிவுதான், சில நாட்களிலேயே கிராமத்துச் சொத்தெல்லாம் வக்கீல்களின் சட்டைப் பைக்கும் நீதி மன்றத்து வேலையாட்களுக்கும் போலீஸ்காரர்களின் வாய்க்கும் போய் விட்டது.

## [ 19 ]

பச்சன்சிங் சுந்தரியை வீட்டிற்கு அழைத்து வந்து விட்டான். ஆனால் இதனால் அவனுக்குப் பெரிய ஆபத்தாகப் போய் விட்டது. அவனுடைய தாய் முதலிலிருந்தே சுந்தரியினால் கொஞ்சம் வருத்தமடைந்திருந்தாள். ஆனால் இப்பொழுது இந்த நிகழ்ச்சியினால் பெரிதும் பயந்து போய் என்ன செய்வதென்று புரியாது திகைத்து நின்று விட்டாள். அவளுக்கு இது ஒரு பெரிய இக்கட்டான நிலையாக இருந்தது. அவளுக்கு இது பற்றி பச்சன் சிங்கிடம் எதுவும் பேச தைரியம் வரவில்லை. குரங்காட்டி மகளிடமிருந்து பச்சன் சிங்கை விடுவிக்க அவள் எத்தனையோ உபாயங்களை யோசித்துக் கொண்டிருந்தாள். ஆனால் அந்தப் பெண்ணே இப்

பொழுது அவளுடைய வீட்டில் வந்து நுழைந்து கொண்டு விட்டாள்.

இது மட்டுமின்றி ஒவ்வொரு வீட்டிலும் பச்சன்சிங் செய்தைப் பற்றிய பேச்சாகவே இருந்தது. முடிவு என்னவென்றால் ஜனங்கள் தாய், மகன் இருவருடனும் பேசுவதையும், எந்தத் தொடர்பு வைத்துக் கொள்வதையும் ஏறக்குறைய நிறுத்தி விட்டார்கள்.

இதெல்லாம் பச்சன் சிங்குக்குத் தெரியாமல் இல்லை. அவன் தன் தாயின் வருத்தத்தையும் உணர்ந்திருந்தான். கிராமத்து மக்கள் இன்னும் என்னென்ன செய்வார்கள் என்பதையும் அவன் உணர்ந்துதான் இருந்தான். ஆனால் எல்லாம் அறிந்திருந்தும் அவன் சுந்தரியை வீட்டுக்கு அழைத்து வந்திருந்தான். வந்தவுடன் ஒரு மருத்துவனை அழைத்து சுந்தரிக்கு மருந்து போட்டுக் கட்டச் செய்தான். பிறகு அவன் பாபா ரோடுவிடம் சென்று எல்லாவற்றையும் அவனுக்குக் கூறி அவனைத் தன்னுடன் அழைத்து வந்தான்.

சுந்தரியின் நிலைமையைப் பார்த்தவுடன் ரோடுவுக்கு மயக்கமே வந்து விட்டது. நமக்காக ஏற்கனவே கிராமத்து மக்களின் அவதூறுகளனைத்தையும் பச்சன்சிங் தன் மீது ஏற்றுக் கொண்டிருக்கிறானே என்பது ரோடுவின் நினைவிற்கு வந்தது. இந்தக் குற்றத்திற்காக அவனுடைய சுற்றத்தார் இன்னும் என்ன தண்டனையை பச்சன் சிங்கிற்கு அளிக்கப் போகிறார்களோ! இன்னும் என்னென்ன பழியை அவன் தாங்கிக் கொள்ள நேரிடுமோ, யார் கண்டார்கள்?

அவன் பச்சன் சிங்கின் கால்களில் வீழ்ந்தான். அவனுக்கு மிகுந்த நன்றி செலுத்தியபடி சுந்தரி மூர்ச்சை தெளிவதற்கு முன்னமேயே வீட்டிற்கு எடுத்துச் செல்ல அனுமதி கேட்டான். அங்கு அவளுடைய உடல்நிலையைக் கவனித்துக்கொள்வதைப் போல் தன் குடிலில் முடியாது என்று அவன் அறிந்திருந்தான். இருந்தபோதிலும் பச்சன் சிங்கின் உயிருக்கு விபத்து நேரிடுவதைவிட சுந்தரியின் உயிருக்கு ஊறு விளைந்தால் பரவாயில்லை என அவனுக்குத் தோன்றிற்று.

ஆனால் அவன் ஆயிரம் முறை விண்ணப்பித்தும் பச்சன் சிங் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை.

சுந்தரியின் உடல்நிலை முற்றிலும் சரியாகும்வரை அவள் பச்சன் சிங்கின் வீட்டில் தானிருப்பாள் என்று முடிவு செய்யப் பட்டது. ஆனால் ரோடுவிற்கு மற்றுமொரு தொல்லை ஏற்பட்டு விட்டது. அவனால் சுந்தரியை விட்டுப் பிரிந்திருக்கமுடியாது. இங்கு இருந்துகொண்டு சுந்தரிக்கு ஒருவிதப் பணிவிடையும் செய்ய முடியாது என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். ஆனாலும் பாசத்திற்கெதிரே அவனால் ஒன்றுமே செய்யமுடிய வில்லை. கடைசியில் எப்படியோ மனதைக் கல்லாக்கிக்கொண்டு சில நாட்கள் அவளை விட்டுப் பிரிந்திருக்கத் தன்னைச் சித்த மாக்கிக்கொண்டான்.

பிறகு இரண்டு—மூன்று நாட்கள்வரை தினந்தோறும் சுந்தரி யைப் பார்க்கச் சென்றான். ஆனால் அதுவும் அவனுடைய நிலைமைக்கு ஏற்றதாகப் படவில்லையென அறிந்ததும், அவன் அங்கு செல்வதை நிறுத்திவிட்டான். அவன் தெருக்களைக் கடந்து செல்லும்போது மக்கள் அவனைப்பற்றிப் பேசிக் கொள்ளும் அவச் சொற்களால் அவன் பொறுமை யிழந்து விட்டான்.

இங்கு பச்சன் சிங்கின் நிலைமையும் அப்படித்தானிருந்தது. ஆனால் அவனுடைய உறுதி அவனைச் சிறிதும் மனந் தளரவிட வில்லை. ஒவ்வொரு கணமும் மக்களின் குத்தலான பேச்சுக் களும் தடைகளும் இருந்தபோதிலும் அவனுடைய கால்கள் தளர்ச்சி யடையவில்லை. அவனுடைய போக்குத் தடைப்பட வில்லை. அவன் சுந்தரிக்குச் சிகிச்சை யளித்து வந்தான்.

இரண்டு நாட்கள்வரை இடைவிடாமல் சுந்தரி சுயநினை விழந்து காணப்பட்டாள். இடையிடையே சற்றுக் கண்களைத் திறப்பாள். பிறகு உடனே மூடிக்கொள்வாள். மூன்றும் நாள் இரவு நேரம். சுமார் ஒன்பது மணியிருக்கும். ரோடுவும் மக்களின் கண்களில் படாமல் வந்து சுந்தரியின் தலைமாட்டில் உட்கார்ந்திருந்தான். அதே சமயத்தில் சுந்தரி புரண்டு படுத்தாள். அன்று பகல் வேளையில்கூட நான்கைந்து தடவைகள் இம்மாதிரி அவள் அசைந்து படுத்தாள்.

மெள்ள மெள்ள சுந்தரியின் இமைகள் திறக்க ஆரம்பித்தன. அவள் தன்னைச் சுற்றி உள்ள பொருட்களைக் காண முயற்சித்தாள். ரோடுவிற்குத் தன் உயிர் திரும்பி வந்தாற் போலிருந்தது. அவன் சுந்தரியின் நெற்றியில் கை வைத்த படியே உடைந்த குரலில் பேசினான்—

'சுந்தரி!'

சுந்தரி மென்மையான குரலில் பேசினாள்—'அப்பா!'

'கண்ணே! என்னைப் பாரும்மா!'

சுந்தரி புரண்டு படுத்தாள். தலைமாட்டில் உட்கார்ந்திருக்கும் தன் தந்தையைப் பார்த்தாள். தன்னை வளர்த்த அவரை நோக்கித் தன் கைகளை உயர்த்தினாள். ரோடு அவளருகே சென்றான். அவருடைய அணைப்பில் இருந்தபடியே சுந்தரி மெள்ளக் கேட்டாள், 'அப்பா, நான் எங்கே இருக்கிறேன்?'

'மகளே! நீ உன் வீட்டில்தானிருக்கிறாய்!'

'இல்லை அப்பா! இது நம் வீடில்லை. நம் வீட்டில் கட்டிலே கிடையாதே!' பிறகு அவள் வியப்புடன் சுற்றும்முற்றும் பார்த்தாள். தன் தலையிலும், முகவாய்க்கட்டிலும் கட்டுப் போடப்பட்டிருந்ததை உணர்ந்துகொண்டாள்.

பிறகு கையால் ரோடுவின் தலையைத் தடவியபடி கேட்டாள் —'அப்பா இங்கே என்னை யார்......?' அதற்கு மேல் அவள் ஒன்றும் பேசவில்லை. அவளுடைய கேள்விகள் எல்லாவற்றுக்கும் பதில் கிடைத்துவிட்டன. அன்று நடந்த நிகழ்ச்சி முழுவதும் அவளுடைய நினைவிற்கு வந்தது. மறுபடியும் அவள் கேட்டாள்—'அப்பா! நான் மூர்ச்சித்து விழுந்தேனா?'

'ஆமாம் கண்ணே!'

'கிளம்பு அப்பா, நாம் வீட்டிற்குப் போகலாம்!'

'போகலாம் கண்மணி? நீ இன்னும் சற்றுக் குணமடைய வேண்டாமா?'

'இல்லை அப்பா! நான் நன்றாகத்தானிருக்கிறேன்!' மெதுவாக எழுந்து அவள் கட்டிலின் மீது அமர்ந்தாள். அப்போது இரவு நேரமாகிவிட்டது. ரோடு அவளைப் பிடித்து மெள்ளப் படுக்கவைத்தான். அன்புடன் அவளுடைய தலையைத் தடவிக் கொடுத்தபடி கூறினான்—'கண்மணி!

படுத்துக் கொள்ளம்மா. காலையில் நான் உன்னை அழைத்துக் கொண்டு போகிறேன்.'

பச்சன் சிங்கும் அருகில் அமர்ந்திருந்தான். ரோடு மிகப் பணிவுடன் தன் கரங் குவித்தபடி அவனிடம் கூறினான்—'சர்தார்ஜி! சுந்தரிக்கு மூர்ச்சை தெளிந்துவிட்டது. நான் இனிக் கிளம்பட்டுமா? காலையில் வருகிறேன்.'

பச்சன் சிங், 'கவலைப்பட வேண்டாம். நீங்கள் சென்று வாருங்கள்' என்று பதிலளித்தான்.

சுந்தரி மறுபடியும் கண்ணயர்ந்துவிட்டாள். ரோடு மற்று மொரு முறை ஆவலுடன் அவளைப் பார்த்தான். பிறகு தடியை ஊன்றிக்கொண்டு வெளியே சென்றுவிட்டான்.

அவன் சென்று அரை மணி நேரங் கழித்து சுந்தரி மறு படியும் புரண்டுபடுத்தாள். அவள் தண்ணீர் கேட்டாள். பச்சன் சிங் அவளருகேயே அமர்ந்திருந்தான். அவன் தண் ணீரை எடுத்துவந்து டம்ளரை அவளுடைய உதட்டில் வைத்தான்.

சுந்தரி பச்சன் சிங்கை வெகு நேரம்வரை பார்த்துக் கொண்டேயிருந்தாள். பிறகு கேட்டாள்—'என்னை இங்கே நீங்களா எடுத்து வந்தீர்கள்?'

'ஆமாம்' என்று கூறியபடியே பச்சன் சிங் படுக்கை விரிப்பின் சுருக்கங்களைச் சீர்ப்படுத்தினான். 'சுந்தரி, கவலைப் பட வேண்டாம். நீ குணமடைந்துவிட்டாய். ஆனால் நீ அதிகமாகப் பேசக்கூடாது, அசையவும் கூடாது' என்று சொன்னான்.

சஞ்சலமான சுபாவமுடைய சுந்தரியால் அப்படி இருக்க முடியுமா? சிறிது விஷமமாக அவள் பேசினாள்—'இல்லை ஒன்றும். நான் முற்றிலும் குணமடைந்து விட்டேன்!' ரத்த மின்றி வெளுத்துக் கிடந்த தன் உள்ளங் கைகளை அவள் திருப்பித் திருப்பிப் பார்த்துக் கொண்டாள். மறுபடியும் அதே கேள்வியைக் கேட்டாள்—'நீங்கள் தான் என்னை இங்கு கொண்டு வந்தீர்களா?'

'ஆமாம்!'

'ஏன்?'

'மூர்ச்சையடைந்திருந்தாய், அதனுல்தான்.'

'என்னை நீங்கள் தொட்டு......'

'உன்னைத் தொட்டால் என்ன குறைந்து விடுமாம்?'

'நான் தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவள்.'

'இல்லை, என்னைப் பொறுத்த வரையில் உலகிலுள்ள எல்லோரையும் விடச் சிறந்த வகுப்பைச் சேர்ந்தவள் நீ. சுந்தரி, உன்னை நான் தாழ்ந்த குலத்தவளாக நினைக்க மாட்டேன்!'

'என்னை நீங்கள் தாழ்ந்த வகுப்பினளாக நினைக்கவில்லையா?'

'இல்லை.'

'பின்பு என்னவென்று நினைத்தீர்கள்?'

'என்னைப் போன்ற மனித குலத்தவள் என்றுதான் நினைத்தேன். அது கிடக்கட்டும். அன்று குருத்வாரத்திற்கு எப்படிச் சென்ருய், அதை முதலில் எனக்குச் சொல்!'

அவள் கேட்க விரும்பாத வார்த்தையை பச்சன்சிங் கூறக் கேட்டு அவள் பயந்து நடுங்கிப் போனுள். அவள் ஏற்கெனவே அது குறித்து மனம் நொந்து கொண்டிருந்தாள்.

'அன்று நான் எதற்காக குருத்வாரத்திற்குச் சென்றேன்? மனம் போன போக்கில் அன்று நான் நடந்து கொண்டு விட்டேன். அதனுல்தான் குருபாபா என் செயலுக்கேற்ற பலனை எனக்களித்து விட்டார். இன்று இந்த நிலையில் நான் இருப்பதற்குக் காரணம் அதுதான்!' அவள் நாணத்துடன் பேசினுள்—

'நான் தப்பிதமாக நடந்து கொண்டு விட்டேன்.'

'தப்பிதமா? இல்லை சுந்தரி! நீ அங்கு சென்றதை ஆட்சேபிக்கவில்லை. ஆனுல் எப்படி நீ அங்கு சென்ருய் என்றுதான் நான் கேட்கிறேன். உன்னை யாரும் தடுக்கவில்லையா?'

சுந்தரிக்குச் சற்று ஊக்கம் பிறந்தது. அன்றிரவு நடந்தவற்றை அவள் அப்படியே சொன்னுள். பிறகு இதெல்லாம் கூடக் கூறினுள்—'ராகி பாடிக் கொண்டிருந்தார். நான் வாயிலுக்குப் பின்புறம் நின்றபடியே கேட்டுக்கொண்டிருந்தேன். தீபாராதனை நடந்தது. நானும் கரங்குவித்தபடி

நின்றேன். அதைக் கண்களில் ஒத்திக்கொள்ள நான் முன்னே சென்று தலை குனிந்தேன். கால் சற்றே தடுக்கி விட்டது. கதவு முழுவதும் திறந்து கொண்டது. கதவின் பின்புறம் இருந்த வைக்கோல் போர் என்மீது வந்து விழுந்தது. நான் குருக்ரந்த் சாகப் (புனித நூல்) வைக்கப்பட்டிருந்த அறையில் போய் விழுந்தேன். எங்கு சென்று நான் சிரம் பணிய நினைத்தேனே, அங்கேயே போய் நான் விழுந்து விட்டேன். என் அந்த விருப்பம் பூர்த்தியடைந்து விட்டது. ஆனால் அத்துடன் கூட என் அதிகப்பிரசங்கித்தனத்திற்குத் தக்க தண்டனையும் கிடைத்து விட்டது.'

சுந்தரியின் பக்தி, அவளுடைய தியாக மனப்பான்மை, திட சித்தம் எல்லாவற்றையும் கண்ட பச்சன் சிங்கின் உள்ளம் அன்பால் நிரம்பியது. அவன் பரிவுடன் அவளுடைய கரத்தைப் பிடித்துக்கொண்டு கூறினான்—

'சுந்தரி! நீ மிகச் சிறந்த பெண்! என் உள்ளத்தில் உனக்கு மிகவும் மதிப்பு உண்டு.'

உலகில் கிழவன் ரோடு, குரங்கு இருவரைத் தவிர அவளிடம் யாருக்குமே அன்பு கிடையாது என்று தான் சுந்தரி அன்று வரை கருதி வந்தாள். உலகம் முழுதும் அவளை வெறுக்கிறது என்று தான் அவள் நினைத்தாள். அதனால் தான் அன்று வரை அன்பின் பெருமையை முற்றிலும் உணராதவளாக அவள் இருந்தாள். உயர்ந்த குலத்தவனாக இருந்த போதிலும் பச்சன் சிங் அவளை நேசிக்கிறான் என்று நினைத்த மாத்திரத்தில் சுந்தரியின் உள்ளத்தில் சொல்லொணா மகிழ்ச்சி தாண்டவமாடிற்று. ஒரு தனி ஊக்கம் பிறந்தது. பதினான்கு அல்லது பதினைந்து வயது சிறுமிதான் அவள். அன்பின் மதிப்பை அவளால் புரிந்துகொள்ள முடியாவிட்டாலும் அன்பின் தரத்தை அவள் புரிந்துகொண்டு விட்டாள்.

பச்சன் சிங் தன் முழுக் கவனத்துடன் சுந்தரிக்குச் சிகிச்சையளித்து வந்தான். சுந்தரியின் காயங்கள் வெகு விரைவில் குணமடைந்து விட்டன. அதற்குக் காரணம் மருந்தா, அல்லது பச்சன் சிங்கின் களங்கமற்ற அன்பா என்று கூற முடியாது. சுந்தரி குணமடைய அடைய அவளுடைய உள்

ளத்தில் அவன் குடிப்புக ஆரம்பித்தான். அவளுக்காக முழு கிராமத்தின் சீற்றத்திற்கும் இரையானவனுயிற்றே அவன்!

பதினைந்து வயது சிறுமியின் இளம் உள்ளத்தில் இயற்கை எத்தகைய சிறந்த மென்மையான இதயத்தைப் படைத்திருக்கிறது, என்று ஒவ்வொரு கணமும் பச்சன் சிங் வியப்படைவான். சுந்தரியால் அவன் மிகவும் கவரப்பட்டு விட்டான்.

பெண்ணின் இதயம் சில சமயங்களில் கருங்கல்லைப் போல் கடினமாக இருப்பினும், வேறு சில சமயங்களில் அதே இதயம் பாகாய் உருகுவதும் உண்டு. சதா கௌர் முதலில் அந்தக் கிழவனின் பெண்ணை வெறுத்தாள். ஆனால் காயமடைந்த சுந்தரியை பச்சன் சிங் எடுத்துக்கொண்டு வீடு வந்த தினமே, பச்சன் சிங்கின் வாயிலிருந்து சுந்தரியின் குருத்வாரத்துச் சோகக் கதை கேட்ட தினத்திலிருந்து அவள் சுந்தரியை அன்புடன் நேசிக்கத் துவங்கினன். சமூகத்தை அவள் அது வரை ஒரு கொலைகாரனின் கண் கொண்டுதான் பார்த்து வந்தாள். அதனுல் அவளுடைய ரத்தமும் சுண்டி அவள் உலர்ந்து கிடந்தாள்.

சுந்தரியின் மெல்லிய, சிவந்த, அழகான உடலையும், அவளுடைய உணர்ச்சி ததும்பும் கண்களையும், களங்கமற்ற முகத்தையும் பார்ப்பவர் ஆடவரோ, பெண்டிரோ சுந்தரியை வெறுத்துவிட முடியுமா என்ன?

பதினைந்து நாட்கள் கழிந்தன. சுந்தரி மெள்ள குணமடைந்து வந்தாள். அவளுடைய காயங்கள் உலர ஆரம்பித்தன. தலையில் பலத்த அடிபட்டிருந்ததால் அதன் கட்ட விழ்க்க இன்னும் இரண்டு அல்லது மூன்று நாட்கள் காத்திருக்க நேர்ந்தது.

பச்சன் சிங்கின் கவனம் முழுதும் சுந்தரியின் காயங்கள் பேரில் இருந்தது. காயம் பலமாக இருந்தது அதற்குக் காரணமல்ல. பெரிய வடுபட்டு சுந்தரியின் அழகிற்குப் பங்கம் விளைவித்துவிடக் கூடாதே என்று அவன் கவலை கொண்டான்.

ஆனல், நடந்தது வேறு. ஒரு நாள் கட்டவிழ்த்துவிடப் பட்டது. நெற்றியில் ஒரு சிறு பிறைச் சந்திரனைப்போல் தழும்பு காணப்பட்டது. அது சுந்தரியின் அழகுக்கு அழகு

செய்தாற்போலிருந்தது. அந்தச் சிறு தழும்பில்தான் சுந்தரியின் அழகு முழுவதுமே இருப்பதுபோல் பச்சன்சிங்கிற்குத் தோன்றிற்று.

இரவு நேரம் சுமார் பத்து மணியிருக்கும். முற்றத்துச் சிறு மேடை மீது சுந்தரியின் கட்டில் போடப்பட்டிருந்தது. சதாகௌர், பச்சன்சிங் இருவருடைய கட்டில்களும் பின் கட்டிலிருக்கும் வராந்தாவில் இருந்தன. வேலைசெய்த களைப்பில் சதாகௌர் தூங்கிவிட்டாள்.

அன்று சுந்தரி மிகவும் சுவஸ்தமாகக் காணப்பட்டாள். கட்டிலில் படுத்தபடியே ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் அவள் மூழ்கிக் கிடந்தாள். கதவருகே ஒன்றிய அவளுடைய செவிகள் யாரையோ எதிர்நோக்கிக் காத்திருந்தன. நாளைக்கு அவள் தன் இருப்பிடத்திற்குச் சென்றாக வேண்டும். ஆகையால் மனம்விட்டு இன்று அவள் பச்சன்சிங்குடன் பேச விரும்பினாள். என்ன பேச விரும்பினாள்? அது அவளுக்கே தெரியாது. ஆயினும் உடலைவிட்டு உயிர் பிரிந்தால் எப்படி தேவையாக இருக்குமோ பச்சன்சிங்கை விட்டு பிரிவதும் அவளுக்கு அப்படித்தானிருந்தது.

இன்னும் பச்சன்சிங் ஏன் வரவில்லை? எல்லோரும் நலமாக இருக்கிறார்களா? இப்படியே சிந்தித்துக் கொண்டிருக்கும் அவள் முணுக்கென்று சிறு ஓசை கேட்டாலும் ஓடிப்போய் வாசற்கதவண்டை நின்றாள். சதாகௌர் இதுபற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. அவள் பச்சன்சிங்கின் சுபாவத்தை நன்கு அறிந்திருந்தாள். பச்சன்சிங் சிற்சில சமயங்களில் நள்ளிரவு நேரத்தில்கூட வீடு திரும்புவதுண்டு.

மணி பதினொன்றும் அடித்துவிட்டது. சுந்தரியால் படுக்கவும் முடியவில்லை, உட்காரவும் இயலவில்லை. அவள் எழுந்து முற்றத்தில் உலாவ ஆரம்பித்தாள். மனதில் எழும் எண்ணங்களெல்லாம் அப்போது நினைவிற்கு வருமா? அதே கவலையில் அவள் அல்லலுற்றாள்.

அதே நேரத்தில் யாரோ கதவைத் தட்டும் ஓசை கேட்டது. அவள் சென்று கதவைத் திறந்தாள். வெகு விரைவாக பச்சன்சிங் உள்ளே நுழைந்தான்.

பச்சன்சிங் வேகத்தைப் பார்த்து சுந்தரியின் முகத்தில் குழந்தையைப் போன்ற புன்சிரிப்பு தவழ்ந்தது. 'இன்று நீங்கள் இவ்வளவு நேரங்கழித்து வந்திருக்கிறீர்களே?' என்று அவள் கேட்டாள்.

பச்சன்சிங்கினால் உடனே அதற்குப் பதிலளிக்க இயலவில்லை. சுந்தரியின் கட்டிலருகே போடப்பட்டிருந்த நாற்காலியில் போய் அவன் அமர்ந்துகொண்டான். அவனைத் தொடர்ந்து சுந்தரியும் சென்றாள். கட்டிலில் அவள் உட்கார்ந்து கொண்டாள்.

அப்போது காற்று வேகமாக வீசத்துவங்கியது. சுந்தரிக்குக் குளிரும் என்று பச்சன்சிங் நினைத்தான்.

அவளுடைய கேள்விக்குப் பதிலளிப்பதற்குப் பதிலாக அவன் கூறினான்—'சுந்தரி! உனக்குக் குளிருகிறது என்று நினைக்கிறேன். எழுந்திரு. உன் கட்டிலை உள்ளே கொண்டு போடுகிறேன்!' சுந்தரியின் கையைப் பிடித்து அவளை எழுந்திருக்கச் செய்தான். சுந்தரியின் கை பனிக்கட்டியைப் போல் 'சில்'லென்றிருந்தது.

'சுந்தரி! இந்தக் குளிரில் அலைந்தால் காய்ச்சல் வராமல் என்ன செய்யும்?' என்று கூறியபடியே சுந்தரியின் கட்டிலை உள்ளே எடுத்துச் சென்றான். அதன் பிறகு படுக்கையையும், நாற்காலியையும் கொண்டு உள்ளே போட்டான்.

அவளைக் கட்டிலில் அமரச்செய்து, கம்பளியால் பச்சன்சிங் அவளைப் போர்த்தினான். பிறகு கோபத்துடன்—'இப்படியே இருந்தால் உனக்கு மறுபடியும் காய்ச்சல் வந்துவிடும்!' என்றான்.

சுந்தரி அதற்கும் ஒரு பதிலும் சொல்லவில்லை. பச்சன்சிங் அவளுடைய தோளை உலுக்கி—'என்ன விஷயம் சுந்தரி?' என்று கேட்டான். அப்போது சுந்தரியின் கண்களினின்றும் நீர்த்துளிகள் உதிர்ந்தன.

பச்சன்சிங் தன் வறண்ட குரலை நினைந்து வருத்தமுற்றான். அவன் நாற்காலியினின்றும் எழுந்திருந்து கட்டிலில் உட்கார்ந்து கொண்டான். அவன் சுந்தரியின் கைகளைத் தன் இரு கைகளாலும் இறுகப் பிடித்தபடி கூறினான்—'சுந்தரி, என் மீது கோபமா?'

சுந்தரி அப்போது எங்கிருந்தாள்? வேறு எந்த உலகிலோ அல்லவா இருந்தாள்! கனவுலகில் அல்லது கற்பனை நகரில். பச்சன்சிங்கிற்குத் தன்மீது எவ்வளவு அக்கறை, எவ்வளவு பாசம், எவ்வளவு அன்பு என்று அவள் மனதிற்குள் வியந்து கொண்டிருந்தாள். 'கை சற்று 'சில்'லென்று இருந்தது, உடனே பயந்து போய்விட்டானே! நான் எவ்வளவு அதிருஷ்டசாலி!......இல்லை அதிருஷ்டக்கட்டை......'

இவ்வாறு பலவகையாக சுந்தரி எண்ணிக்கொண்டிருந்தாள். பச்சன்சிங்கின் கேள்விக்கு விடையளிக்காமல் அவள் அழத் துவங்கிவிட்டாள்.

பச்சன்சிங் அவளுடைய கரங்களை இன்னும் இறுகப் பற்றி ஞன்—'சுந்தரி!' அதற்கு மேல் அவனால் ஒன்றும் பேச இயல வில்லை. சொல்லொணுத ஓர் உணர்ச்சியில் அவன் மூழ்கி விட்டான். அவனுடைய நா பேசும் திறனை இழந்துவிட்டது. அதனால்தான் அவன் சுந்தரியின் கரங்களை இன்னும் இறுகப் பற்றிக்கொண்டான்.

பச்சன் சிங் சுந்தரியின் கண்ணெதிரேதான் இருந்தான். ஆயினும் அவளுக்கு அவன் தென்படவில்லை. தன் குடிசையில் உணர்வற்றுக் கிடக்கப்போகும் அவளுடைய உடல்தான் அவளுடைய நினைவிற்கு வந்தது. ஏனென்றால் நாளைக்கு அவளை அனுப்பிவிடும்படி அப்பா ரோடு சொல்லிச் சென்றுரே!

தனக்குள் ஏதோ சூனியமாகிக்கொண்டு வருவதை அவள் உணர்ந்தாள். அவளுடைய எதிர்காலத்தில் பச்சன் சிங் புகுந்துவிட்டான். இனி அவனைவிட்டு அவளைப் பிரித்தாலும் அவளால் பிரிந்திருக்க முடியாது. அப்படி அவள் பிரிந் திருக்க நேர்ந்தால் அவளால் உயிர் தரித்திருக்க முடியாது.

இம்மாதிரியான வெத்து வார்த்தைகளை பச்சன் சிங்கிடம் கூறுவதா?

சுந்தரி இம்மாதிரி பலவிதமாகச் சிந்தித்துக்கொண் டிருந்தாள். இறுகப் பற்றப்பட்ட அவளுடைய கைகளி லிருந்து அமுத தாரை கிளம்பி அவளுடைய உடல் முழுவதற் குள்ளும் பிரவேசித்துவிட்டாற் போன்றதோர் உணர்ச்சி

அவளுக்கு. உடனே ஒரு குரல் கேட்டது—'சுந்தரி! என் சுந்தரி! சுந்தரம்! நீ பேசமாட்டாயா? இன்று உன்னிடம் எத்தனை எத்தனையோ பேச நினைத்தேனே!'

அவள் எத்தனையோ முறைகள் அவன் தன்னை சுந்தரி யென்றும், என் சுந்தரம் என்றும் கூப்பிடக் கேட்டிருக்கிறாள். அப்போதெல்லாம் அவள் ஒரு சொல்லொணு போதையில் மூழ்கிவிடுவாள். 'சுந்தரம்' எனும் வார்த்தையைக் கேட்டதுமே மகிழ்ச்சிக் கடலில் சுந்தரி நீந்த ஆரம்பித்தாள்.

அவள் முகத்தை உயர்த்தி பச்சன் சிங்கைப் பார்த்தாள். மிகவும் ஆழ்ந்த கருத்துக்கள் கொண்ட கட்டுரையே அவன் கண்களில் வரையப்பட்டிருப்பதைப் போல் அவள் உணர்ந்தாள். சுந்தரி பச்சன் சிங்கின் கண்களுடன் ஒன்றிப் போய் அதனைப் படிக்க முயன்றாள். ஆனால் தன் கண்கள் கூறும் கதையைப் படிக்கிறாளா, அன்றி அவனுடைய கண்கள் வரையும் கட்டுரையைப் படிக்கிறாளா என்றே அவளுக்குத் தெரியவில்லை.

அந்தக் கட்டுரையின் தலைப்புதான்—'காதல்'. எவ்வளவு நேரம் ஒருவரையொருவர் இவ்விதம் பார்த்துக்கொண்டிருந்தனரோ! பச்சன் சிங் தான் கையில் கட்டிக்கொண்டிருந்த கடிகாரத்தைப் பார்த்தான். ஒன்றரை மணி நேரம் எப்படிக் கழிந்தது? பன்னிரண்டரை மணியாகிவிட்டது.

ஒருவழியாக இந்த மோனக் கதை முடிவுற்றது. பச்சன் சிங் மறுபடியும் தன் பேச்சைத் துவக்கினான்—'என் சுந்தரமே,' இன்று உன்னுடன் நிரம்பப் பேச வேண்டுமே!'

'பேச வேண்டும்!' சுந்தரி புன்சிரிப்புடன் பேசினாள்—'இப்போது பேச வேண்டாமா?'

'இரவு வேளை, நேரம் அதிகமாகிவிட்டதே சுந்தரி!'

'சரி, உங்களுக்குத் தூக்கம் வந்தால்......'

'எனக்குத் தூக்கம் வரவில்லை. உனக்கு வருமே என்றுதான் கவலை!'

'எனக்கா தூக்கம்? இன்று எனக்குத் தூக்கமே வராது!'

'ஏன்? ஏன் வராது?'

சுந்தரி பதில் பேசவில்லை.

பச்சன் சிங் மறுபடியும் கூப்பிட்டான்—'சுந்தரி!'

'உம்!'

'நீ சென்றுவிடுவாயா?'

சுந்தரி ஒன்றும் பேசவில்லை. கையின் ஆள்காட்டி விரலை வாயில் வைத்துக் கடித்தபடி இருந்தாள்.

'சுந்தரி! போகத்தான் வேண்டுமென்றால், பின்பு ஏன் வந்தாயாம்?'

சுந்தரி பெருமூச்செறிந்தாள்.

பச்சன் சிங் கூறினான்—'சுந்தரி! நீ என் வாழ்வில் அமுதத்தைப் பெருகச் செய்துவிட்டாய்.'

மறுபடியும் மௌனம். பேசாமலிருந்தபோதிலும் அவள் பச்சன் சிங்கின் எல்லாப் பேச்சிற்கும் விடையளித்துக்கொண்டிருந்தாள். வாய்ப் பேச்சால் அல்ல, மனத்தின் எண்ணங்களால். அவள் பேசியும் பதிலளிக்கத்தான் விரும்பினாள். ஆனால் அது அவளால் இயலவில்லை. பச்சன் சிங்கின் பேச்சை அவளால் புரிந்துகொள்ள முடிந்தது, புரிந்துகொண்டுதானிருந்தாள், ஆனால் தன் எண்ணங்களை வெளியிட அவளுக்குத் தெரியவில்லை. சொற்கள் அவளுக்கு உதவவில்லை. ஆகையால் பேசாமல் இருந்துவிட்டாள்.

பச்சன் சிங் மறுபடியும் கேட்டான்—'சுந்தரி! நீ பேச மாட்டாயா? சரி, அப்படியானால் நான் சென்று வருகிறேன்!' என்று கூறியபடியே கட்டிலைவிட்டு எழுந்தான்.

சுந்தரி அவனுடைய சட்டையைப் பிடித்துக்கொண்டாள். அவனை உட்காரச் செய்ய முயற்சித்தபடி பேசினாள்—'இன்று நீங்கள் இவ்வளவு நேரங்கழித்து ஏன் வந்தீர்கள்?'

சுந்தரி பச்சன் சிங்குடன் பேசத் துடித்துக்கொண்டிருந்தாள். வாய்ப்புக் கிடைத்ததும் பேச்சை மாற்றி வேறு பேச்சைத் துவக்க ஆரம்பித்தாள். ஆகையால் பச்சன்சிங்கின் கேள்விக்குப் பதிலளிக்காமல், புதிய பேச்சைத் துவக்கினாள்—'ஏன் நீங்கள் நேரங் கழித்து வந்தீர்கள்?'

உண்மையில், சுந்தரி எந்த எண்ணங்களை வெளிப்படுத்த விரும்பினாளோ, அவற்றையேதான் பச்சன் சிங்கும் தெரிவித்துக்கொண்டிருந்தான். ஆனால் இயற்கை பெண்ணின்

இதயத்தை எவ்வளவு விசாலமாகப் படைத்துவிட்டது!—அவளுக்கு எத்தகு வியக்கத்தக்க பொறுமையை அளித்திருக்கிறது! கடலைப்போன்ற ஆழ்ந்த கருத்தையும், மலைபோன்று கடினமான எண்ணங்களையும் தன் சின்னஞ்சிறு இதயத்திற்குள் மூடிவைத்துக் கொள்ளமுடிகிறது அவளால்.

பச்சன் சிங்குடன் தன் காதல் பொருத்தமற்றது என்ற ஒரே எண்ணத்தினால் அவள் தன் நாவைப் பூட்டி வைத்துவிட்டாள். பொங்கி யெழும் புயலை நெஞ்சிற்கு மேலே அவள் எழும்பிவர விடவில்லை.

பேச்சை மாற்றவென்றே சுந்தரி கேள்வி கேட்டபோதிலும், பச்சன் சிங் அதே பேச்சை மறுபடியும் திருப்பிக் கொணர்ந்து விட்டான். அங்கேயே உட்கார்ந்தபடி கூறினான், 'உன் காரணமாகத்தான் நேரமாகிவிட்டது. மாலை நேரத்தில் ரொட்டி தின்றுவிட்டுக் கிணற்றடியில்போய் உட்கார்ந்தேன். உன்னைப்பற்றிய எண்ணத்திலேயே மூழ்கிவிட்டேன். மணி பத்தடித்துவிட்டது.'

'என்னைப்பற்றிய எண்ணத்திலா?' வியப்புடன் முகத்தை வைத்துக்கொண்டு சுந்தரி மறுபடியும் கேட்டாள்,—'என்னைப் பற்றிய எண்ணத்திலா?'

'ஆமாம் என் சுந்தரமே! உன்னைப் பற்றிய எண்ணத்திலேயேதான்!'

'சுந்தரியை வீட்டிற்கு அழைத்துவந்தாலும் வந்தோம், பெரிய தொல்லையை விலைகொடுத்து வாங்கிக்கொண்டோம் என்று நினைத்திருப்பீர்கள்.'

'இல்லை, அப்படி நினைக்கவில்லை.'

'பின்பு,'

'நாளைக்கு நீ சென்று விடுவாயே என்று நினைத்தேன்!'

'அப்புறம்?'

'சுந்தரி, நான்......'

'சொல்லுங்கள்,' ஏன் வெட்கப்படுகிறீர்கள்?'

'என்றால் உன்னை விட்டுப் பிரிந்திருக்க முடியாது. என் உள்ளம்......'

'உங்கள் உள்ளம்?......ஆமாம், உங்கள் உள்ளம்—பிறகு?'

'சுந்தரி! உனக்கு வயது குறைவு. உனக்குக் காதல் என்றால்

என்னவென்று தெரியாது. அன்பு எப்படிப்பட்டது என்று உனக்குமட்டும் தெரிந்திருந்தால், சொல்லாமலேயே நீ என் நிலையைப் பற்றிப் புரிந்துகொண்டிருப்பாய்!'

'புரியாமல் என்ன? நீங்களும் ஞானியும் தான் எனக்கு எல்லாம் கற்றுக் கொடுத்திருக்கிறீர்களே! அன்பு என்றால் எப்படி இருக்கும் என்று எனக்கா தெரியாது? நாம் எல்லோரிடமும் அன்புடன் இருக்கவேண்டும் என்று எனக்கு நன்றாகத் தெரியுமே? "அன்பு செய்தவன் இறைவனை அடைவான்" என்று குருவாணியில் கூட எழுதப்பட்டிருக்கிறதே!'

இந்த எளிய வார்த்தைகள் பச்சன்சிங்கைப் பேசவிடாமல் செய்துவிட்டன. சற்று வருத்தமும் அடைந்தான் அவன். மறுபடியும் தன் சிந்தனையைச் சீர்படுத்தியபடி கூறினான்—'அதாவது நான் கூறும் அன்பு வேறுவிதமானது!'

'வேறுவிதமானதா!' மறுபடியும் வியப்புடன் சுந்தரி பச்சன்சிங்கைப் பார்த்துப் பேசினாள்—'அது எப்படிப்பட்ட அன்பு? நீங்கள் சொல்லிக் கொடுக்கும்போது இதுபற்றிக் குறிப்பிடவே யில்லையே?'

'இவையெல்லாம் சொல்லிக் கொடுத்து அறிய வைப்பவை யல்ல.'

'அப்படியா? பள்ளிக்கூடத்திலும், கல்லூரியிலுமா?'

'இல்லை, அசடே! நீ சரியான......'

'பின்பு ஏன் நீங்கள் எனக்குச் சொல்லமாட்டேன் என்கிறீர்கள்?'

அவளை அறிவுறுத்தும்படி பேசுவது இயலாத காரியம் என்று அறிந்த பச்சன்சிங் எளிய நடையில் பேச முற்பட்டான்: 'சரி, விடு அந்தப் பேச்சை. இதைப்பற்றிச் சொல். நாளைக்கு நீ சென்றுவிடுவாயா?'

'ஆமாம், அப்பா சொல்லியனுப்பினரே!'

'அவர் சொல்லியனுப்பவில்லை யென்றால்?'

'அப்போது போகமாட்டேன்.'

'சரி, அங்கு போய் எப்போதாவது என் நினைவு உனக்கு வருமா?'

'நீங்கள் வரமாட்டீர்களா?'

'மாட்டேன்.'

'மாட்டீர்களா?' சுந்தரிக்குத் தாங்கமுடியாத வேதனை உண்டாயிற்று. 'எனக்குப் பாடம் யார் கற்றுத் தருவார்களாம்?'

'பாடம் கற்றுக் கொடுக்க நான் வேறு ஏற்பாடு செய்து தருகிறேன்.'

'நான் வேறு ஒருவரிடமும் படிக்கமாட்டேன்.'

'அதிகம் படித்து நீ என்ன செய்யப்போகிருய்? குருமுகி எழுத்தை நன்ருக எழுதப் படிக்க நீ கற்றுக்கொண்டு விட்டாயல்லவா? வாணியும் நிரம்பத் தெரியுமே உனக்கு மனப் பாடமாக?'

'என்னைப் பத்தாவது வரை படிக்கவைக்கப் போகிறேன் என்று நீங்கள்தானே கூறினீர்கள்?'

'நீ மேலே படிக்கவேண்டும் என்னும் எண்ணமிருந்தால் பட்டணத்துப் பெண்டிர் பள்ளிக்கூடத்தில் உன்னைச் சேர்த்து விடுகிறேன்.'

'நீங்களும் அங்கு வந்து இருப்பீர்களா?'

'நானு? நான் வீட்டைவிட்டு வேறு எங்கே இருக்கமுடியும்?'

சுந்தரி மௌனமாகிவிட்டாள். ஏதோ தவருன கேள்வி கேட்டுவிட்டோம் என்று அவளுக்குத் தோன்றிற்று.

பச்சன்சிங் மறுபடியும் அதே கேள்வியை ஆரம்பித்து விட்டான்—'சுந்தரி, என்னிடம் இருக்க உனக்கு விருப்ப மில்லையா?'

'உங்களிடமா? உங்களிடமிருக்க என்னை எல்லோரும் அனுமதிப்பார்களா?'

'சரி சுந்தரி, உனக்கு என்னிடம் ஆசை கிடையாதா?'

'ஆசை' என்ற வார்த்தையைக் கேட்டதுமே சுந்தரியின் உதடுகளில் அன்பு கலந்த புன்முறுவல் தவழ்ந்தது. அவள் பச்சன்சிங்கின் தோளில் தன் தலையைச் சார்த்திக்கொண்டு கூறினுள்—'நீங்கள்......உங்களிடம்......நான்......' முயற்சி செய்து பார்த்தாள், அப்படியிருந்தும் முழு வாக்கியமாக அவளுடைய வாயினின்றும் வரவில்லை.

ஆனுல் பச்சன்சிங் தன் கேள்விக்கு முழு பதிலையும் பெற்றுவிட்டான். சுந்தரியின் ஒவ்வொரு அங்கத்திலிருந்

தும் அன்பு பெருக்கெடுத்து ஓடி அவனை திளைக்கச் செய்து விட்டது.

காதலனும் காதலியும் ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ள வேண்டியதெல்லாம் உள்ளங்களுக்குள்ளேயே கிடந்துவிட்டது. அவற்றை இனி வெளிப்படையாகச் சொல்லிக்கொள்ளத் தேவையும் இல்லை. இருவரும் தாங்கள் தனித்தவரல்ல, ஒருவர் தான் என்று உணர்ந்து கொண்டனர்.

இதன் பிறகு பச்சன்சிங் கடிகாரத்தைப் பார்த்தான். இரண்டரை மணியாகிவிட்டது. அவன் கூறினான்—'சரி சுந்தரி, நீ போய்த் தூங்கு. இரவு இரண்டரை மணியாகி விட்டது.' பிறகு அவன் சுந்தரியின் கையை முத்தமிட்டான். பச்சன்சிங்குடைய உதடுகளின் பரிசம் சுந்தரியை சுயநினை விழக்கச் செய்துவிட்டது. பச்சன்சிங் அங்கிருந்து எப்போது சென்றான் என்றே அவளுக்குத் தெரியவில்லை.

## [ 20 ]

அந்திப் பொழுது. மெள்ள மெள்ள இருள் திசை யெங்கும் பரவிக் கொண்டிருக்கிறது. மார்கழி மாதத்துக் குளிர் விர் என்று வீசுகிறது. அப்படியிருந்தும் தீவான்பூரிற்கு வெளியே இருக்கும் கிணற்றடியில் ஒரே அமர்க்களம். ராட்டினத்தில் கயிற்றைப் போட்டுத் தண்ணீர் இறைக்கும் ஓசை கேட்கிறது. மேட்டின்மீது உட்கார்ந்து கொண்டு பதினொரு வயது சிறுவன் ஒருவன் ஒவ்வொரு கணமும் சவலைக் கிணற்று எருதுகளை 'ஹை ஹை' என்ற ஓட்டிக்கொண்டிருக்கிறான். 'கிரீச்' சப்தம் கேட்க இனிமையாக இருக்கிறது.

கிராமத்துப் பெண்டிர் பலர் கிணற்றின் விளிம்பில் உட்கார்ந்து கொண்டிருக்கின்றனர். கும்பலாக உட்கார்ந்திருக்கும் அவர்களருகேயே அவர்களுடைய குழந்தைகளும் உட்கார்ந்து கொண்டிருக்கின்றனர். கற்களைப் பொறுக்கி விளையாடிக் கொண்டிருக்கின்றனர்.

கிணற்றுக்கருகே ஒரு பருத்தித் தோட்டம் இருக்கிறது. ஆனால் இப்போது முட்புதர் என்று சொன்னால் சரியாக இருக்கும். ஏனென்றால் ஒரு செடியிலும் இலை என்ற பேச்சே கிடையாது. மலரும் கிடையாது. ஆனால் பருத்தியினால் செடிகள் அத்தனையும் நிரம்பிக் கிடந்தன. காற்று வீசும் போதெல்லாம் அவற்றிலிருந்து 'கடகட'வென்று ஓசை கிளம்பிக் கொண்டிருந்தது.

கீழே நல்ல முள்ளங்கிப் பாத்திகள் பச்சைப் பசேலென்று வளர்ந்திருந்தன. சிவப்பு முள்ளங்கிகள் சற்றே தெரிய, அவற்றின் மீது பசும் இலைகளைப் பார்த்தால் அரச குமாரர்களுக்கு யாரோ சாமரம் வீசுவது போலிருந்தது.

உலர்ந்த பருத்தித் தோட்டத்தில் இந்தப் பசும் பாத்திகள் எவ்வளவு அழகாக இருந்தன! கிழத் தந்தையின் மடியில் அவருடைய இளங்குழந்தை விளையாடுவதுபோல் இருந்தது.

வேகமாக வீசும் காற்றிற்கிடையே முள்ளங்கிச் செடிகள் வளைந்து பருத்திக் கொம்புகளுடன் வளைந்து காணப்படுவதைப் பார்த்தால் குழந்தை பயந்து தன் தந்தையிடம் கைகளை உயர்த்துவது போலிருந்தது.

இந்த வேளையில் முள்ளங்கிப் பாத்தியின் முனையில் மூன்று பேர் அமர்ந்திருக்கின்றனர். ஒருவன் அருகேயிருந்த இளம் முள்ளங்கியை எடுத்து மண்ணை ஊதியபடியே கூறினான்—

'இவனுடைய தொல்லைக்கு ஒரு முடிவு வரப் போகிறதா, இல்லை, நம்மை இப்படித்தான் தொல்லை கொடுத்துக்கொண்டே இருக்கப் போகிறானா?'

மற்றவன்—'ஆனால் பாலா சிங், இதில் நம் குற்றம் என்ன இருக்கிறது? ஒன்று இந்தப் பக்கம் வரவேண்டும், அன்றேல் அந்தப் பக்கம் செல்ல வேண்டும், என்று நான் உன்னிடம் முதலிலேயே சொன்னேனல்லவா?'

பாலாசிங்—'வீரு! யார் அப்படிச் செய்ய மறுத்தவர்? உங்களைப் போன்ற வெத்து மனிதர்களால் ஒரு பயன் கிடையாது. நேற்றைய பயல் அந்த பச்சன்! அவனை ஒரு வழிக்குக் கொண்டு வர முடியவில்லை என்றால் உங்களால் வேறு என்ன தான் முடியப் போகிறது?—மண்ணாங்கட்டி!'

மூன்றும் மனிதன்—'பாலாசிங் பெருங் கொள்ளைக்குக் கூட அஞ்சாதவனுயிற்றே. அவன் போய் இந்தப் பயல் பச்சனிடம் ஏன் நடுங்குகிறன் என்றுதான் எனக்குப் புரியவில்லை.'

இரு நண்பர்களின் குத்தல் பேச்சும் பாலாசிங்கை அம்பு போல் துளைத்தன. அவன் ஆவேசத்துடன் கூறினன்—'யார்? நானு பயப்படுகிறேன்? குருவின் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். என்னல் முடிந்தால் ஒரு நொடியில் அவனை வழிக்குக் கொண்டு வந்து விடுவேன். ஆனல் அந்தச் சிறுமி அவனிடம் எப்படி உயிரையே வைத்திருக்கிறள் பார்; பச்சன் சிங்கை நாம் ஏதாவது செய்து விட்டு, எந்தப் பெண்ணிற்காக நாம் இவ்வளவு சிரமப்பட்டோமோ, அவளே இறந்து போய் விட்டால், பிறகு என்ன செய்வது என்றும் பயமாக இருக்கிறது. சவாயாசிங், ஒரு கல்லில் இரண்டு மாங்காயையும் அடித்து விடலாம் என்றுதான் யோசிக்கிறேன். ஏதாவது ஒரு வழி கண்டு பிடித்தாக வேண்டும். அதன்படி செய்தால், பச்சன் சிங்கும் நம்மிடம் சிக்கிவிடுவான், அந்த அழகியும் நம் வசப்பட்டு விடுவாள்.'

வீரு—'அப்புறம் அந்த ஒற்றைக் கண்ணனை ஒழிக்க வேண்டாமா?'

பாலா—'அவனைப்பற்றிக் கவலைப்படாதே. நாம் முதலில் நம் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். அந்தக் கிழத்தை நான் ஒரு நொடியில் சட்டினியாக்கி விடுவேன். அப்புறம் யார் ஏன் என்று நம்மைக் கேட்பவர்கள். இன்று செத்தால், நாளைக்கு இரண்டாம் நாள்!'

சவாயா—'சரி! அந்தக் கதை கிடக்கட்டும். என்னை ஏன் கூப்பிட்டாய், அதை முதலில் சொல். குளிர் ஒரே கடுமையாக இருக்கிறது!'

பாலா—'குளிராவது! கசப்பு மருந்து வேண்டும் என்று நேரடியாகக் கேட்பது தானே?'

பாலாசிங்கின் வார்த்தைகளைக் கேட்டு அவனுடைய மற்ற இரு நண்பர்களும் நாவால் உதட்டைத் தடவிக்கொண்டு சிரித்தனர்.

பாலாசிங் தன் பேச்சை மேற்கொண்டு தொடர்ந்தபடி கூறினன்—'குளிருக்கும் சிகிச்சையுண்டு. ஒன்றரை புட்டி இருக்கிறதே. அன்றைய மிச்சம்!'

'ஒன்றரை புட்டி' என்றதுமே அவனுடைய இரு நண்பர்களின் முகங்களிலும் செவ்வறி ஓடத் துவங்கிற்று. வீர்சிங் கூறினன்—'அண்ணே! நாங்கள் உனக்கு அன்னியர்களா என்ன? உன்னை மாப்பிள்ளையாக்கி விட்டுத்தான் நாங்கள் ஓய்வு எடுத்துக்கொண்டு உட்காருவோம்!'

சவாயா—'அண்ணி வந்ததும் அரசனைக் கண்டதும் புருசனைப் பிடிக்கல்லேங்கிற கதையாகிவிடப் போகிறதே!'

தன் நண்பர்களின் பேச்சைக் கேட்ட பாலாசிங் மது அருந்தாமலேயே போதையடைந்து விட்டான். அவன் கூறினன்—'குடிக்கத் தண்ணீரில்லே, பெயரோ கங்கா பவானி! அப்படித்தானிருக்கிறது கதை! ராணி பச்சன் வீட்டிலே சிறையிருக்கிருள், இங்கே அண்ணியைப் பற்றிய கற்பனையா உங்களுக்கு?'

வீர்சிங் பரபரப்புடன் கூறினன்—'யார் சொன்னது? கிழவன் அவளை வீட்டிற்கு அழைத்துப்போய் ஐந்து நாட்களாகிவிட்டன.'

'அப்படியா?' பாலாசிங் வியப்புடன் கேட்டான். 'போயிருப்பாள். உனக்குத் தெரியுமா? நான்தான் ஏழு நாட்களாக ஊரில் இல்லையே!'

'வீரு, அப்படியானல் காயமடைந்த பிறகு நீ அவளைப் பார்க்கவில்லையா?'

'இல்லை.'

'அண்ணே! குருவின்மேல் ஆணை! அவள் பார்க்கத் தகுந்தவள்தான். என்ன நிறம் என்ன நிறம்! மைதாவும் குங்குமமும் கலந்தாற்போல. கொஞ்சம் நாட்களுக்குள்ளேயே கொடி மாதிரி வளர்ந்து விட்டாள். இந்த முயற்சியிலே மட்டும் வெற்றி கிடைத்ததோ, உன்னைப்போல அதிருஷ்டக்காரனே கிடையாது.'

பாலா—'என்னை முதலிலேயே மயக்கிவிட்டாள்! இப்போது சோறுகூட தொண்டைக்குக் கீழ் இறங்காதுபோலிருக்கிறது.

உன் ஆட்சியிலே இந்த முயற்சிகூட பலிக்காவிட்டால், உங்களிருவரெதிரேயும் நான் என் உயிரை விட்டுவிடப் போகிறேன்!'

சவாயா—'அட போ அண்ணே! இது ஒரு பெரிய காரியமா என்ன? கடவுளுடைய அருள் மட்டும் இருந்தால் ஒரு நொடியிலே எல்லாம் நடந்து விடும்! ஆனால் முதலில் பச்சனைப் பற்றிக் கவலையிருக்கட்டும். அவன் இருக்கும்வரை அவளை நம் வசப்படுத்த முடியாது.'

பாலா—'உனக்கென்ன தோன்றுகிறது சவாயாசிங்? பச்சன் அவளைக் கட்டிக்கொள்ளப் போகிறானா?'

வீரு—'இல்லாவிட்டால் அவளைப் படிக்க வைத்துவிட்டுத் துறவியாக்கவா போகிறான்?'

பாலா—'ஆனால் எனக்கு ஒரு விஷயம்பற்றி ஒரே வியப்பாக இருக்கிறது. பச்சன் மணந்துகொள்ள உறவுப் பெண்களுக்கா குறைச்சல்? பன்னிரண்டாவதுவரை படித்திருக்கிறான். பெரிய பெரிய சர்தார்களின் வீட்டிலிருந்து அவனை மணம் முடிக்கப் பெண்கள் காத்திருக்கிறார்களாமே. அந்தப் பெண் என்னைப் போன்ற ஆசாமிக்குத்தான் சரியான ஜோடி! கடந்த காலத்தைப்பற்றியும் கவலையில்லை, வருங்காலத்தைப்பற்றிய எண்ணமும் கிடையாது!'

சவாயா—அண்ணே! நீ சொல்வது உண்மைதான்! ஆனால் உம்' மின்னு மூட்டையை ஒருத்தரும் தூக்கிவிட மாட்டாங்க! அது தெரியுமில்லே! போர்க்களத்திலே இறங்கியாகணும்! வெற்றி யாருக்கோ, அவனுக்குத்தான் பெண்!'

வீரு—'அட பசங்களா! நீங்கள் வெத்துப் பேச்சிலேயே காலம் முழுவதையும் கடத்திவிடுவீர்கள்! ஏதாவது பயனுள்ள பேச்சிருந்தால் பேசுங்கள், இல்லாவிட்டால் ஆளை விடுங்கள். குளிரில் என் கால்கள் கட்டையாகப் போய்விட்டன போ!'

யோசித்து யோசித்துப் பாலாசிங் கூறினான்—'ஏதாவதொரு வழக்கில் பச்சன் சிங்கைச் சிக்கவைத்தால், பிறகு எளிதில் அவன் பிடிபட்டு விடுவான்!'

வீரு—'எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது!'

சவாயா—'எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது. நான்

உங்களிருவரிடமும் சொல்ல ஆரம்பித்தேன்.....ஆனால் அந்தக் கிழவன் ?'

பிறகு பாலாசிங் இருவருடைய காதருகிலும் சென்று ஏதோ கூறினான். சற்று நேரம் வரை 'குசுகுசு' வென்று ஏதோ பேச்சு நடந்தது. முடிவில் எல்லோரும் ஒரு முடிவிற்கு வந்தனர். அப்புறம் எழுந்து ஒரே திசையை நோக்கி நடந்தனர்.

## [ 21 ]

சுந்தரி பச்சன்சிங்கின் வீட்டைவிட்டுச் சென்று பல நாட்களாகிவிட்டன. இதற்கிடையே பச்சன்சிங் ரோடுவின் வீட்டிற்கு அடிக்கடி சென்றுகொண்டிருந்தான். அவனுடைய உதவியால் சுந்தரியின் படிப்பும் சரிவர நடந்து வந்தது. அன்று பகல் வேளையில் பச்சன்சிங் கிணற்றடியிலிருந்து வீடு திரும்பினான். அவனுடைய தாய் மிகுந்த வருத்தமாக இருப்பதைக் கண்டான். பச்சன்சிங் அதற்குக் காரணம் கேட்டான். சதாகௌர் பெருமூச்செறிந்து கூறினாள்— 'என்னத்தைச் சொல்ல மகனே? உனக்குத் தெரியாததா?'

'என்னம்மா? சொல்லேன்!'

சதாகௌர்—' மகனே இந்த வீட்டில் இருபத்து நான்கு மணி நேரமும் யாராவது வந்து போய்க்கொண்டேயிருப்பார்கள் என்பது உனக்குத் தெரியும். இப்போதெல்லாம் யாரும் இந்தப் பக்கம் எட்டிக்கூட பார்ப்பதில்லை. விடுமுறைக்கு ஹோஷியார்பூரிலிருந்து சுரேனுடைய மகன் வந்திருந்தான். காலையில் என்னை வணங்கிவிட்டு ஒரு டம்ளர் மோர் குடித்துவிட்டுச் சென்றான். யாரோ அவன் மோர் குடிப்பதைப் பார்த்திருக்கிறார்கள். அவன் வீட்டிற்குப் போன உடனேயே எல்லோரும் அவனைச் சூழ்ந்து கொண்டனர். 'அந்த வீட்டில் ஏன் மோர் குடித்தாய்?' என்ற அவனைக் கேட்டனர். 'ஒருவருமே அவர்களுடைய வீட்டில் தொடர்பு வைத்துக்கொள்வது கிடையாதே!' என்று அவனைத் தொந்தரவு

செய்தனர். பிறகு பிராம்மணர் தீறுநாத் தன் வீட்டிலிருந்து கங்கை நீரை எடுத்து வந்து அவனைக் குடிக்கச் செய்தார். பிறகு தான் அவனைப் படி ஏறி உள்ளே செல்ல அனுமதித்தனர்.'

தன் மீது மக்களின் போக்கு மாறிக்கொண்டு வருவதை வெகு நாட்களாக பச்சன்சிங் கவனித்து வருகிறான். ஆயினும் விஷயம் இவ்வளவு தூரத்திற்கு முற்றிவிடும் என்று அவன் கனவிலும் நினைக்கவில்லை. மக்களின் கொடுஞ் செயலையும், தாயின் வருத்தத்தையும் நினைத்து அவன் உள்ளம் மிகவும் வருந்திற்று. ஆனால் வெளிப்படையாக உற்சாகத்துடன் அவன் பேசினான்—'போகட்டுமே. நம்முடன் தொடர்பு வைத்துக் கொள்ளாவிட்டால் போகட்டுமே. நாம் யாருடைய வீட்டிற்கும் சாப்பிடப்போய் உட்காரப் போவதில்லையே!'

'மகனே! சாப்பிடப்போய் நாம் உட்காரப் போவதில்லை. ஆனால் சுற்றத்தாருடன் ஒத்து வாழ்வதில் தானே அழகு இருக்கிறது? தனி மரம் தோப்பாகுமா மகனே! சுற்றத்தாரைப் பகைத்துக்கொண்டு தனித்து வாழ முடியுமா? சாவோ, வாழ்வோ, துக்கமோ சுகமோ எல்லோருடனும் சேர்ந்து அனுபவிக்க வேண்டும். மனிதனைப்போல் மரத்தால் இருக்க முடியுமா? புதிய புதிய இடங்களிலிருந்து பெண்ணைக் கொண்டுவந்து உனக்குக் கொடுக்க எத்தனை பேர் நம் வீட்டிற்கு வந்தனர்? ஆனால் இப்போது நம் வீட்டுப்பக்கம் யாருமே எட்டிக்கூடப் பார்க்க மாட்டேன் என்கின்றனர். நீயே சொல், நான் எங்கே செல்வேன்?'

அதுவரை பச்சன்சிங்கு தன் மனம் போனபடி எல்லாம் செய்து கொண்டிருந்தான். ஆனால் தன் தாயின் உள்ளம் இவ்வளவு வேதனையுற்றிருக்கிறது என்பதை அன்றுதான் அவனால் அறிந்துகொள்ள முடிந்தது. தாயின் வார்த்தைகளுக்கு அவன் என்ன பதில் சொல்வான்? அவனிடம் ஒரு பதிலும் இருக்கவில்லை. இங்குமங்கும் பார்த்துவிட்டு அவன் கூறினான்—'இனி என்ன செய்ய வேண்டும்?'

'என்னத்தைச் செய்வது? உற்றார் உறவினர்களை விட்டுவிட முடியாது. மகனே, அந்தப் பரதேசியின் மகளில்லாமல் நம்மால் இருக்க முடியாதா? அதனால் நமக்கு என்ன குறைந்து

விடப்போகிறது? அவள்தான் எல்லாச் சண்டை சச்சரவு களுக்கும் காரணம். சனியன் இந்தக் கிராமத்திற்கு வந்திரா விட்டால், நமக்கும் இப்படி ஒரு ஆபத்து வந்திருக்காது.'

பச்சன்சிங் சற்று ஆவேசத்துடன் கூறினுன்—' அம்மா அந்த ஏழைப் பெண்மீது பழி சுமத்துவதால் நமக்கு என்ன லாபம்? தாயில்லாத ஒரு ஏழைப் பெண்ணின் உயிரைக் காப்பது இவ்வளவு பெரிய பாவச் செயல் என்ருல், நான் நூறு முறைகள் அந்தச் செயலைப் புரிந்து அதற்குண்டான தண்டனையை ஏற்கத் தயார்!'

மகன் ஆத்திரமடைவதைக் கண்ட தாய் எழுந்து வீட்டு வேலைகளில் ஈடுபட்டாள். பச்சன்சிங்கும் தன் கோபத்தைத் தணித்துக்கொள்ள வெளியே சென்றுவிட்டான். முடிவில் இங்குமங்கும் சுற்றியபடி ரோடுவின் குடிசைப் பக்கம் சென் ருன். அங்கு ரோடு இருக்கவில்லை. சுந்தரி ஏதோ கவலையில் மூழ்கிக்கிடந்தாள். பச்சன்சிங் வாயிற்படியில் நின்றுகொண்டு குரல் கொடுத்தான்—' சுந்தரி!'

சுந்தரி வியப்புற்ருள்—' இதோ வந்தேன்!'

' இன்று என்ன ஆழ்ந்த கவலையில் மூழ்கிவிட்டாய்?'

' நீங்கள் வந்து விட்டீர்களா? நான் உங்களைத்தான் எதிர் பார்த்திருந்தேன்!'

பச்சன்சிங் அவளுடைய முகத்தை உற்றுப் பார்த்தான். சுந்தரி சற்று முன்புதான் அழுதிருக்கிருள் என்பது தெரிய வந்தது. அவன் தாங்க முடியாமல் கேட்டான்—' சுந்தரி! நீ அழுதுகொண்டிருந்தாய்போல் தெரிகிறதே!'

சுந்தரி பதிலொன்றும் பேசவில்லை, பச்சன்சிங்கின் பரபரப்பு இன்னும் அதிகரித்தது. அவன் மறுபடியும் கேட்டான்— ' கேட்கக்கூடாது என்ருல் கேட்கவில்லை. ஆனல்...'

'உங்களுக்குக்கூடச் சொல்லக்கூடாது என்று ஏதாவது இருக்கிறதா என்ன?' சுந்தரி மிகவும் சிரமப்பட்டுச் சிரிக்க முயன்ருள். பச்சன் சிங்கைப் பார்த்துக்கொண்டே அவள் பேசினுள்—'நம் லச்சோ எங்கோ காணுமற் போய்விட்டது!'

' காணுமற்போய்விட்டதா? எப்படி? அது எங்குமே போகாதே. அக்கம்பக்கத்தில்தானே சுற்றிக்கொண்டிருக்கும்!'

'எப்படியோ தெரியவில்லை' பெருமூச்செறிந்தபடி சுந்தரி கூறினாள்—'எங்கும் போகாது. ஆனால் யாரோ அதை எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். நேற்றிரவிலிருந்து அதைக் காணோம். அப்பா இரவில் ரொட்டி தின்னவில்லை. இரவு முழுவதும் அழுதுகொண்டேயிருந்தார். காலையிலிருந்து அதைத் தேடக் கிளம்பியிருக்கிறார். பிறகு......'

'உம், பிறகு என்ன?'

'அப்பா உங்கள் வீட்டிற்குக் கிளம்பிக்கொண்டிருந்தார். நான்தான் வேண்டாம் என்று சொன்னேன். நீங்கள் இங்கு வருவீர்கள் என்பது எனக்குத் தெரியும்.'

'ஏன்?' பச்சன் சிங் பரபரப்புடன் கேட்டது—'ஏதாவது அவசியமான வேலை இருந்ததா?

சுந்தரியின் முகத்தில் மறுபடியும் வேதனை படர்ந்துவிட்டது. அவளுடைய கண்களில் நீர் ததும்பிற்று. பச்சன் சிங்கின் உள்ளம் சற்று பயமுற்றது. அவன் சட்டைப் பையிலிருந்து கைக்குட்டையை எடுத்து அவளுடைய கண்களைத் துடைத்தான்—'சுந்தரி! சீக்கிரம் சொல்லேன், என்ன நடந்தது?'

அவனுடைய கையிலிருந்து கைக்குட்டையை வாங்கித் தன் கண்களைத் துடைத்துக்கொண்டே சுந்தரி கூறினாள்—'நாம் இங்கிருந்து போய்விடலாம் என்று அப்பா சொல்லிக்கொண்டிருந்தார்!'

'போய்விடுவதா?' வியப்புடன் பச்சன் சிங் அவளைப் பார்த்துக் கேட்டான்—'எங்கே?'

'வேறு ஏதாவது கிராமத்தில் போய் வசிப்போம்.'

'ஆனால் ஏன் போகவேண்டும்?'

கைக்குட்டையின் ஓரத்தை மடித்து விரலில் சுற்றியபடி சுந்தரி உள்ளத்து வேதனையை மறக்க முயன்றாள். 'ஏன்' என்று பச்சன் சிங் கேட்டதற்குப் பதிலளிக்க முகத்தைச் சற்று உயர்த்தினாள். ஆனால் வார்த்தை அவளுடைய தொண்டைக்குள்ளேயே தங்கிவிட்டது.

பச்சன் சிங் அவளுடைய விரலை லேசாகத் தட்டியபடி கூறினான்—'சொல் சுந்தரி, சீக்கிரம் சொல்.'

இந்தத் தடவை தன் மனதில் உள்ளதை மிகவும் சிரமப்பட்டு வெளியிட முயன்றபடி சுந்தரி பேசினாள்—'மக்கள் எங்களை இங்கு வசிக்க விடமாட்டார்கள்.'

'உம்? வசிக்க விடமாட்டார்களா? ஏன்?'

'தினமும் எங்களைத் துன்புறுத்துகிறார்கள்.'

பச்சன் சிங் இன்னும் அந்த வார்த்தைக்கு முழுப் பொருளையும் அறிந்துகொள்ளவில்லை. ஆனால் அதற்கு மேல் கேட்க அவனிடம் துணிச்சலில்லை. சுந்தரியின் உள்ளத்திற்கு ஆறுதலளிக்கும் முறையில் அவன் கூறினான்—'ஆனால், உன் குரங்கை எடுத்துச் சென்று யார் என்ன செய்யப் போகிறான்?'

சுந்தரி பச்சன் சிங் வேறு கேட்டதைக் குறித்து மன நிம்மதியடைந்தாள். 'என்ன செய்யப் போகிறானோ, யாருக்குத் தெரியும்?'

அதே சமயத்தில் தந்தை ரோடு உள்ளே வந்தான். பச்சன் சிங் 'சத்ஸ்ரீ அகால்' என்று கூறி தலை குனிந்து வணங்கினான். சற்றுத் தள்ளிச் சென்று அவன் உட்கார்ந்துகொண்டான். குரங்கைப்பற்றி ஏதாவது தகவல் தெரிந்ததா என்று பச்சன் சிங் கேட்டான். அதற்கு ரோடு ஒரு பதிலுமளிக்காமல் விம்மி விம்மி அழுதான்.

சுந்தரி விரைந்தெழுந்தாள். ரோடுவின் கழுத்தில் தன் கைகளைப் போட்டபடியே அவள் கேட்டாள், 'என்ன விஷயம் அப்பா?' அவளுக்கு மூச்சு வாங்கிற்று

'சுந்தரி' ரோடு வேட்டியின் நுனியால் தன் கைகளைத் துடைத்துக்கொண்டே கூறினான்—'சுந்தரி! உன் லச்சோ இறந்துவிட்டது!'

'இறந்துவிட்டதா?' சுந்தரி அலறிவிட்டாள். அவனுடைய தோளைப் பிடித்து உலுக்கியபடியே அவள் கேட்டாள்—'எப்படி அப்பா இறந்தது?'

'யாரோ அதைக் கிணற்றில் பிடித்துத் தள்ளிவிட்டார்கள்!'

'அடடா! கிணற்றிலா? நான் ஏன் சாகவில்லை?' ஒரு தூர தரிசிக் கண்ணாடியால் இரண்டு காட்சிகளை ஒரே சமயத்தில் பார்ப்பது போல், பச்சன்சிங் ஒரே உள்ளத்தால் இருவருடைய

வேதனையையும் உணர்ந்து கொண்டிருந்தான்—இருவரும் அழுதுகொண்டிருந்தனர்.

சற்றுநேரங் கழித்து கிழவனின் வருத்தம் சிறிது தணிந்தது. அவன் கரங்களைக் கூப்பியபடி பச்சன்சிங்கிடம் கூறினான்— 'சர்தார்ஜி! நீங்கள் எங்கள்மீது மிகவும் கருணை கொண்டிருக்கிறீர்கள். நூறுதடவை பிறவி எடுத்தாலும் என்னால் உங்களுடைய உதவிக்கு ஈடுசெலுத்த முடியாது. நீங்கள் என் மகளை மிருகத்திலிருந்து மனித தத்துவம் வாய்ந்தவளாகச் செய்தீர்கள். அவளுடைய உயிரைக்காக்க நீங்கள் பட்ட சிரமத்தை நான் எப்படி என் நாவால் கூறுவேன். இத்தனை நாட்கள் உங்களுடைய காலடியில் கிடந்தமாதிரி எஞ்சிய சிலநாட்களையும் கழித்துவிடலாமே என்றிருந்தேன். ஆனால் இனி இங்குள்ள சோறும் தண்ணீரும் எங்களுக்குக் கிடையாதுபோல் தோன்றுகிறது. நாங்கள் இங்கிருந்து வேறு எங்காவது சென்று விடுகிறோம்......'

பச்சன்சிங்கின் உள்ளத்தில் அம்புமாரி பொழிந்தாற் போலிருந்தது. அவனுடைய தொண்டையை யாரோ இறுக நெறித்தாற் போல் அவனுக்குத் தோன்றிற்று. 'ஆனால் பாபாஜி! ஏன் இப்படிப் பேசுகிறீர்கள்?' என்று அவன் கேட்டான்.

'சர்தார்ஜி! நான் என்னவென்று சொல்வேன்? இந்தக் குழந்தையை நான் எத்தனைவித அல்லல்களுக்கிடையே வளர்த்துப் பெரியவளாக்கினேன். நான் இவளைக் கொண்டுவந்த போது குருவிக் குஞ்சைப் போல் சிறியவளாய் இருந்தாள். ஒரு உள்ளங்கைக்குள் அடங்கிவிடுவாள்!'

அதற்குப் பிறகு தன் சோகக் கதை முழுவதையும் கூறினான். 'தான் பெற்ற குழந்தைகளிடம் மக்கள் எவ்வளவு பாசம் வைத்திருப்பார்களோ எனக்குத் தெரியாது. ஆனால் இவளிடம் எனக்குள்ள பாசத்தைப் பற்றி வார்த்தையால் கூற இயலாது. ஒன்றுமறியாத குழந்தையாக அவள் இருந்தபோது அவளை எப்படியப்பா வளர்க்கப் போகிறோம் என்ற கவலைமட்டும்தான் எனக்கிருந்தது. ஆனால் இப்போதோ, உங்களுக்குத் தெரியும், அவள் குழந்தையில்லை. சர்தார்ஜி! நானோ ஒன்றுக்கும்

உதவாத ஒரு ஆசாமி. ஆம். தெருவில் கிடக்கும் துரும்பால் கூட இங்கும் அங்கும் அசையமுடியும். ஆனால் என்னால் ஒன்றுமே முடியாது. நீங்களே சொல்லுங்கள், என்னால் யாருக்கு என்ன தீமை நேரிடமுடியும்?'

பிறகு அவன் விசித்து விசித்து அழுதான். பிறகு சொன்னான்—'நானும் பல மாதங்களாகப் பார்த்துக்கொண்டு தானிருக்கிறேன். கிராமத்து மக்கள் எங்களுடன் சரியானபடி நடந்துகொள்வதில்லை. இரவுநேரத்தில் பல இளைஞர்கள் சேர்ந்துகொண்டு எங்கள் குடிசைக்கெதிரே கூத்தாடுகிறார்கள், கண்டபடி பேசிக்கொண்டு சிரிக்கிறார்கள். எங்களுக்குக் கேட்க வேண்டும் என்று அவர்கள் பேசிக்கொள்ளும் வார்த்தைகள்! அப்பப்பா! அவற்றைக் கேட்டு உள்ளம்பதைத்துப் போகிறது. உங்களுடைய பெயரையும் குறிப்பிட்டபடியே......'

பச்சன்சிங் தன் தாயின் சொற்களைக் கேட்டு ஏற்கெனவே மனம் வெதும்பியிருந்தான். இதிலிருந்து தப்ப வழி எங்கே யிருக்கிறது என்று சிந்தித்தவண்ண மிருந்தான். ஆனால் ரோடுவின் நிலையைக் கேட்டறிந்ததும், அவனுக்குத் தன் வருத்தம் முழுதும் மறந்து போய்விட்டது. வெகுநேரம் வரை சிந்தித்தபடி இருந்தான் அவன். பிறகு கேட்டான்—'இதைக் கேட்டு எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. இதற்கு என்ன உபாயம் செய்யலாம் என்றே புரியவில்லை. சரி, நீங்கள் ஏதாவது யோசித்து முடிவு செய்திருக்கிறீர்களா?'

'போய்விடுகிறோம்!' ரோடு கண்ணீரைத் துடைத்துக் கொண்டே கூறினான்—'சர்தார்ஜி! சுந்தரியைப் பற்றிய கவலையில்லையென்றால், நான் இந்த இடத்தைவிட்டுப் போக மாட்டேன். சாகும்வரையில் இங்கேயே இருந்துவிடுவேன்.' இந்த இடத்தின்பேரில் வைக்கோலான இந்தக் குடிசையின் பேரில் எனக்கு ரொம்பவும் மோகம் சர்தார்ஜி. இதைவிட்டுச் சென்றால் என் நிலை என்னவாகுமோ, தெரியாது. ஆனால் என்ன செய்வது? வயதுவந்த பெண்ணை வீட்டில் வைத்துக் கொண்டிருக்கும்போது இத்தகைய விஷயத்தை எப்படிப் பொறுத்துக்கொள்வது, நீங்களே சொல்லுங்கள். சுந்தரியைப் பற்றியும் அக்கறை எடுத்துக்கொள்ளவேண்டாமா? என்னைப்

பற்றிக் கவலையில்லை. குப்பையைக் குப்பையோடு தானே போடவேண்டும்!'

சற்று நேரங் கழித்து ரோடு மறுபடியும் கூறினான்—'சர்தார்ஜி, இந்த ரத்தினத்தை நான் செல்லாத காசுக்களோடு சேர்த்து வைப்பதும் முடியாத காரியம். உங்கள் கிருபையால் அவள் நன்ருகப் படித்துவிடுவாள். பிறகு அவளை செப்பிடு வித்தைக்காரனிடமோ, அல்லது குரங்காட்டியினிடமோ எப்படி ஒப்படைப்பேன்? என்ருல் தாங்கமுடியாது. சுந்தரிக்கேற்ற ஒருவனைத் தேடித் தாருகவேண்டும். ஆனல் நான் எங்கே சென்று தேடுவேன்?'

அப்போது பச்சன்சிங் வேறு சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். ஒரு முடிவிற்கு வந்தபிறகு—'பாபாஜி! நான் உங்களை எங்கும் போகவிடமாட்டேன்!' என்று கூறினான்.

ரோடு அதற்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை. மறுபடியும் பச்சன்சிங் கூறினான்—'சுந்தரி மண்ணோடு மண்ணாக அழிந்து போவதற்காகப் பிறந்தவளல்ல. அவள் இன்னும் கொஞ்சம் படிக்கட்டும்.'

வாழ்நாள் முழுதும் சிறைவாசமிருக்கும்படி தண்டனை பெற்ற கைதியைத் திடீரென்று வழக்கறிஞர் ஒருவர் வந்து, 'நான் உன்னை விடுதலை செய்யும் பொறுப்பை ஏற்றுக்கொள்கிறேன்' என்ருல் எப்படியிருக்கும்? ரோடுவிற்கு அவ்வளவு மகிழ்ச்சி ஏற்பட்டது. அவன் உள்ளத் துடிப்புடன் கேட்டான்—'சர்தார்ஜி! நீங்கள் எங்களுக்கு நன்மை செய்வதில் ஏதாவது குறைவிட்டா வைத்திருக்கிறீர்கள்? எங்களால் ஏற்கெனவே நீங்கள் எவ்வளவோ தொல்லையைச் சகித்துக்கொள்ள நேர்ந்திருக்கிறது. நீங்கள் நீடூழி வாழவேண்டும். நீங்கள் பிள்ளை குட்டிகளுடன் மகாராஜாபோல் வாழவேண்டும். ஆனல் எனக்காக நீங்கள் ஏன் இவ்வளவு அக்கறை கொள்கிறீர்கள்? பரவாயில்லை, என் தலைவிதிப்படி நடக்கட்டும். நீங்கள் கவலைப்பட வேண்டாம். எங்களைச் செல்ல அனுமதித்துவிடுங்கள்!'.

பச்சன்சிங் பரபரப்புடன் கூறினான்—'ஆனல், பாபாஜி! நான் மக்கள் செய்யும் கொடுமையை எவ்விதம் பார்த்துக் கொண்டிருப்பேன்?'

ரோடு தழுதழுத்த குரலில் பேசினான்—'உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள். ஆனால், நான்...நீங்கள் எதைப்பற்றிக் கேட்டீர்களோ...'

'இதெல்லாம் சுந்தரி இங்கிருப்பதால்தானே நடக்கிறது? நான் சுந்தரியை ஏதாவது பள்ளிக்கூடத்தில் சேர்த்து விடுகிறேன்!'

வாழ்க்கையிலேயே நம்பிக்கையிழந்த ஒரு நோயாளிக்கு யாராவது உயிர்ப்பிச்சையளித்துவிட்டால் எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கும்? இதுவரை வாய் திறக்காமல் உட்கார்ந்திருந்த சுந்தரிக்கு பச்சன் சிங்கின் வார்த்தைகளைக் கேட்டதும் அவ்வளவு மகிழ்ச்சி யுண்டாயிற்று. அவள் புன்முறுவலுடன் பச்சன் சிங்கைப் பார்த்தாள். பச்சன் சிங்கும் புன்சிரிப்பால் பதிலளித்தபடியே அங்கிருந்து சென்றுவிட்டான்.

தந்தை ரோடுவின் வார்த்தை உண்மையாகிவிட்டது. தொல்லை முழுவதற்கும் காரணம் சுந்தரிதான். தீவான்பூரிலிருந்து சுந்தரி சென்ற நாள் முதல் எல்லாவிதமான பேச்சுக்களும் மெள்ள மெள்ள நின்று போயின. ஆனால் பாலாசிங்கின் உள்ளம் சொல்லொணா வேதனையை அடைந்தது. சுந்தரியைத் தட்டிக்கொண்டு போய்விடலாம் என்று அவன் எத்தனை உபாயங்கள் செய்தான். ஆனால் அவளுடைய நிழலைக்கூட காண்பது இப்பொழுது அரிதாகிவிட்டதே.

பாலாசிங் ஏற்கெனவே பச்சன்சிங்கை நினைத்து எரிந்து கொண்டிருந்தான். அவனுடைய இரையை பச்சன்சிங் பறித்துக் கொண்டான் என்று தெரிந்ததுமே அந்த எரிச்சல் இன்னும் அதிகமாகிவிட்டது. சுந்தரியை இனி அவன் எப்படிக் கொண்டுவரப் போகிறான்? இதைத்தவிர அவனுக்கு வேறு எண்ணமே கிடையாது. ஆனால் அவளை எப்படி திருப்பிக் கொண்டு வருவது? எண்ணக் குதிரைகளைப் பறக்கவிட்டுப் பார்த்தான். ஆயினும் ஒருவழியும் தோன்றவில்லை.

ரோடுவிற்காவது பச்சன் சிங்கிற்காவது ஏதாவது இன்னல் வந்தால் அன்றி சுந்தரி தன் படிப்பை விட்டுவிட்டு வருவதோ, அவனிடம் சிக்குவதோ கடினம். இதை பாலாசிங் பன்முறை சிந்தித்துப் பிறகு உணர்ந்து கொண்டான். மெள்ள மெள்ள

அவன் தன் முயற்சியை இயங்கச் செய்தான். ஆனால் அதற்கு உடனே பலன் கிட்டவில்லை. மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு தான் கிடைத்தது.

சுந்தரியை லாஹோரிலுள்ள கன்னிமாடத்தில் சேர்த்து விட்டு பச்சன்சிங் ஒரு பெரிய பொறுப்புச்சுமை தன்னை விட்டு நீங்கியதுபோல் உணர்ந்தான். அது மட்டுமல்ல, எதிர்காலத் தில் வரவிருந்த பல இன்னல்களிலிருந்தும் தான் தப்பித்துக் கொண்டதாகக் கருதினன். ஆனல் அவனுடைய எதிரிகள் மறைந்திருந்தபடியே என்ன எண்ணுகின்றனர் என்பதும், என்ன செய்கின்றனர் என்பதும் அவனுக்குத் தெரியாது. மேலாகப் பார்த்தால் பிரச்சினைகள் முடிவடைந்து விட்டாற் போல் காணப்பட்டது.

சுந்தரியை விட்டுப் பிரிந்த பச்சன் சிங்கிற்கு உலகில் அவனுடைய உடைமை ஏதோ காணமற்போனதுபோல் தோன்றிற்று. ஒவ்வொரு மாதமும் சுந்தரியின் படிப்பிற்கு வேண்டிய செலவை அனுப்பிவைத்தான். கூடவே ரோடூவின் நலனைப்பற்றியும் விசாரித்துக்கொண்டான். தினமும் ஓரிரு முறை அவனுடைய குடிசைக்குச் சென்று அரை மணி நேரம் உட்கார்ந்திருந்தான். சுந்தரியைப் பிரிந்து துடிக்கும் மனதைப் பலவித ரசமானப் பேச்சுக்களின் வாயிலாக மகிழ் வித்து வந்தான். காலச் சக்கரம் தன் போக்குப்படி சுழன்று கொண்டிருந்தது.

சுந்தரி மூன்று வருடங்கள் படித்தாள். பத்தாம் வகுப்புப் பரீட்சையில் தேர்ச்சி பெற்றுப் பிறகு தீவான்பூருக்கு வர நேர்ந்தது. அவள் எப்படி வந்தாள்? ஏன் வந்தாள்? காதலர் இந்த மூன்று ஆண்டுகளையும் எவ்விதம் கழித்தனர்? இதைப் பற்றி அவர்கள் எழுதிக்கொண்ட கடிதங்களின் வாயிலாக நாம் தெரிந்துகொள்ளலாம். அவர்கள் எழுதிக்கொண்ட கடிதங்கள் கணக்கில் அடங்கா. புனிதமான லட்சியக் காதல் எனும் வண்ணத்தில் அழகுபெற்ற கடிதங்களை ரசமற்றவை என நாம் கூறிவிட முடியாது. நாவலின் கதையை மேற்கொண்டு செலுத்துவதற்கு முன்பு அந்தக் கடிதங்களை வாசகர்களின் கண் பார்வைக்குக் கொண்டுவருதல் அவசியம் என்று தோன்று

கிறது. கதையைப் படிக்கும் ஆர்வம்கொண்ட வாசகர்களில் சிலர் இந்தக் கடிதங்களை வீண் என்று கருதக்கூடும். அவர்களிடம் நாம் ஒன்றே ஒன்று கூறிக்கொள்ள விரும்புகிறோம். அவர்களுக்குக் கடிதங்களைப் படிக்க விருப்பம் இல்லாவிட்டால், சில பக்கங்களைப் படிக்காமல் புரட்டிவிடலாம். ஆனால் இந்தக் காதலர்களின் ஒருசில கடிதங்களைப் படிக்காமல் விடுவது நம்மால் முடியாத காரியம்—காரணம் அவர்களுடைய உள்ளம் அவற்றில் பேசுகிறது. அன்பின் துடிப்பு அதில் தெரிகிறது. எண்ணங்கள் அவர்களையும் அறியாமல் பீறிட்டுக்கொண்டு எழுகின்றன. மனிதப் பண்புள்ள எந்த உள்ளமும் அவற்றால் கவரப்படாமல் இருக்காது.

[முதல் கடிதம்]

கன்னிமாடம்,
லாஹோர்

மதிப்பிற்குரியவரே! எந்தன்......

இங்குள்ள ஆசிரியைகள் அனைவரும் என் பேரில் உயிரை வைத்திருக்கிறார்கள். என் வகுப்பு மாணவிகள் என்னைத் தம் சொந்த சகோதரியைப்போல் நேசிக்கின்றனர். மாணவர் விடுதியின் மேலதிகாரி என்னைச் சற்றுகூட விட்டுப் பிரிந்ததில்லை. இங்கு எனக்கு ஒருவித சிரமமும் கிடையாது. ஆனால் எல்லாம் இருந்தும் மனதில் ஒவ்வொரு கணமும் ஒரு வேதனை அரித்துக்கொண்டே இருக்கிறது. ஒன்றுமே பிடிக்கவில்லை. சூனியமான ஒரு உணர்வு, எதையோ இழந்துவிட்டாற் போன்ற ஏக்கம். உள்ளத்துச் சக்திகள் அனைத்தும் அதனைத் தேடுவது போன்ற உணர்ச்சி. அப்படி ஏன் இருக்கிறது என்று உங்களால் சொல்ல முடியுமா? இந்நிலையிலிருந்து விடுபட நான் என்ன செய்யவேண்டும்?

ஒவ்வொரு கணமும் மனதில் வருத்தம் இருந்துகொண்டே இருக்கிறது. ஆனால் இப்பொழுது உங்களுக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருக்கிறேன். மனதிற்குச் சிறிது ஆறுதலாக

இருக்கிறது. எழுதிக்கொண்டே இருக்கலாம் என்று தோன்று கிறது. ஆனால் மறுபடியும் எதையோ எண்ணிச் சும்மா இருந்துவிடுகிறேன். உங்கள் கடிதத்தை மிகவும் ஆவலுடன் எதிர்பார்க்கிறேன். அப்பாவிற்கு என் வணக்கத்தைச் சொல் லவும். குரு, நீங்கள் இருவர்தான் அப்பாவிற்கு ஆதாரம் என்று சொல்லத் தேவையில்லை.

இப்படிக்கு,
சுந்தரி

[இரண்டாவது கடிதம்]

சுந்தரி,

தீவான்பூர்,

உங்களையே நினைத்து நான் கவலைப்பட்டுக்கொண் டிருந்தேன். சரியாக அதே சமயத்தில் உங்கள் கடிதம் கிடைத்தது. கடிதத்தைப் படித்து மனதிற்கு மகிழ்ச்சி ஏற் பட்டதா வருத்தம் வந்ததா என்று சொல்ல முடியாது. எனக்கே புரிந்தால்தானே சொல்வதற்கு? கடிதம் எழுதும் போது உங்கள் நிலைமை எவ்விதமிருந்ததோ, அதே நிலைமை தான் அதைப் படிக்கும்போது எனக்கும் இருந்தது. உங்க ளுக்கு வருத்தமாக இருந்ததைக் கேட்க எனக்கும் வருத்தமாக இருந்தது. ஆனால் இது ஒன்றும் புதிதல்லவே! புதிய இடத் திற்குச் சென்றால் நம்மைச் சேர்ந்திருந்தோரின் நினைவு வரும். அப்பொழுது மனம் வருத்தமடையத்தான் செய்யும். இத்தனை ஆண்டுகள் வீட்டைவிட்டு எங்குமே செல்லாமல் இப்பொழுது புதிய இடத்திற்குச் செல்வோரின் மனம் வருத்தமடைவது இயற்கைதான். நீங்கள் வெகு விரைவில் தீவான்பூரின் தெருக் களை மறந்துவிடுவீர்கள் என்று நினைக்கிறேன். போதாத தற்கு உங்கள் வளர்ப்புத் தந்தையிடம் உங்களுக்கு எல்லை மீறிய பாசம் உண்டு. ஆகையால் நீங்கள் மன வருத்த மடைவது சகஜம்தான்.

ஆயினும் நீங்கள் மனம் ஒன்றிப் படிக்கவேண்டும் எனக் கேட்டுக்கொள்ளுகிறேன். சுந்தரி, நீங்கள் சிறு குழந்தையல்ல,

உங்கள் லாப நஷ்டத்தை நீங்கள் நன்கு அறிவீர்கள். கல்வியிலும் நீங்கள் கூடிய சீக்கிரம் வல்லமை பெற்றுவிடுங்கள். நாளைக்கு நீங்கள் எந்த வீட்டிற்குச் செல்கிறீர்களோ, அவ்வீட்டார் உங்களை அடைந்து உண்மையான மகிழ்ச்சி பெறுவார்கள். உங்களைத் தன் உடைமையாக்கிக் கொள்பவன், சுந்தரி அழகிமட்டுமல்ல, கலையிலும் வல்லவள், அறிவிலும் செறிந்தவள் என்றறிந்து பூரித்துப் போவான்.

உங்கள் தந்தை மிகவும் சுகமாக இருக்கிறார். நீங்கள் எதையும் நினைத்துக் கவலைப்பட வேண்டாம்.

இப்படிக்கு,
பச்சன்சிங்

[மூன்றும் கடிதம்]

கன்னிமாடம்
லாஹோர்

மிகவும் ஆவலுடன் எதிர்பார்த்த பிறகு உங்கள் கடிதம் கிடைத்தது. என் கடிதத்தைத் தபால் பெட்டியில் போட்டவுடனேயே நான் உங்கள் பதிலை எதிர்பார்க்கத் துவங்கி விட்டேன். உங்கள் கடிதத்தைப் படித்துப் படித்து என் உள்ளம் என்ன நிலையையடைகிறது என்று நான் உங்களுக்கு எப்படிக் கூறுவேன். கடிதம் எழுத உட்காருவேன். இன்று பக்கம் பக்கமாக வரைந்து தள்ள வேண்டும் என்று நினைத்துக் கொள்வேன். ஆனால், இப்பொழுது எழுத உட்கார்ந்திருக்கிறேன். பாருங்கள். எழுத விரும்புவதைக்கூட எழுத முடியவில்லை. எது வந்து பேனாவைப் பிடித்துக்கொள்கிறதோ தெரியவில்லை. பல பக்கங்கள் எழுதி எழுதிக் கிழித்து விட்டேன்.

உங்களுக்கு என்னைப் பற்றிய கவலை இருக்கிறதா? எது பற்றிய கவலை என்று சொல்லமாட்டீர்களா? நீ குழந்தையல்ல என்று நீங்கள் எழுதினதுபோல நான் ஒன்றும் அறியாதவள் அல்ல. உங்கள் கவலையை நான் நன்றாகப் புரிந்து

கொண்டிருக்கிறேன். பார்த்துக்கொண்டே இருக்கிறேன். ஒரு அனாதைப் பெண்ணின் உயிரைக் காப்பாற்ற, அஞ்ஞான மென்னும் சகதியிலிருந்து அவளை விடுவித்து அறிவு என்னும் உயர்ந்த ஆசனத்தில் அமரச் செய்ய நீங்கள் பட்ட பாடு, அப் பப்பா! அதற்கு நான் பதிலாக ஒன்றுமே செய்யமுடியாது என்பது ஒருபுறமிருக்க, அதை வர்ணிக்கக்கூடச் சக்தியற் றவள். அதுவும் உங்களுக்கு எதிரிலேயே! என்னை நீங்கள் எந்தெந்த விபத்துக்களினின்றும் காப்பாற்றினீர்களோ அவற்றைவிடப் பத்துமடங்கு விபத்துக்கள் உங்களைச் சூழ்ந்து கொண்டிருக்கின்றன. இன்னும் என்னென்ன விபத்துக்கள் உங்களுக்கு நேரவிருக்கின்றனவோ! எனக்கு இந்த விஷயங் கள் எல்லாம் புரியாதா என்ன? இந்நிலைகளில் கூட நீங்கள் கவலைப்படவில்லை என்றால் வேறு யார் கவலைப்படப் போகிறார்கள்?

இவற்றைப் பற்றியெல்லாம் நினைத்துப் பார்த்தால் பூமிதேவி என்னைத் தன்னுள் ஏந்திக்கொண்டுவிட மாட்டாளா; நான் உங்கள் கவலைகளுக்கும் வருத்தங்களுக்கும் ஒரேயடியாக முடிவு கண்டுவிட மாட்டாளா என்று எண்ணத் தோன்று கிறது. ஆனால் என்ன செய்வேன். ஒரே பிடிவாதமாக நான் உயிர் வாழ்கிறேன்!

இடம் புதிதாக இருப்பதால்தான் நான் வருத்தமாக இருக் கிறேன் என்று நீங்கள் குறிப்பிட்டிருக்கிறீர்கள். இது தவறு. எரிமலையின் சிகரத்திலிருந்தாலும் சரி, உங்கள் நிழல் என்னுட னிருந்தால் அதுவே எனக்குச் சுவர்க்கம். என் வருத்தத் திற்குக் காரணம் அதுவல்ல என்று நான் உங்களிடம் தெரி வித்துக் கொள்ள விரும்புகிறேன்.

என்ன சொன்னீர்கள்? தீவான்பூரின் தெருக்களை மறந்து விடுவேனா? மன்னிக்கவும். இதை நீங்கள் வேண்டுமென்றே என் உள்ளத்தைப் பரீட்சித்துப் பார்ப்பதற்காக எழுதியிருக் கிறீர்கள். தீவான்பூரின் தெருக்களை என்னால் இந்தப் பிறவி முழுவதும் மறக்க முடியாது. ஆனால் தீவான்பூரின் சம்பவங் களை நூறு பிறவிகளெடுத்தாலும் நான் மறக்க மாட்டேன்.

வளர்ப்புத் தந்தையின் மீதுள்ள பாசம் கொஞ்ச நஞ்சமல்ல. ஆனால்......

உங்கள் கடிதத்தின் கடைசி வரிகளைப் படித்து என் உள்ளம் வருத்தத்தில் மூழ்கிவிட்டது. இன்று வரை நான் என் திரு மணத்தைப் பற்றிச் சிந்தித்ததே கிடையாது. என் ஆசை களின் மீது பேரிடி விழும் அந்த நாளை நான் காண நேரிடுமா? ஒன்று மட்டும் நான் உங்களுக்கு உறுதியுடன் கூறுவேன். அந்த நாள் வருவதற்கு முன்பு நான் இந்த உலகிலிருந்து சென்று விடுவேன். உயிருடன் நெருப்பிலிடுவதற்கா நீங்கள் இன்றுவரை இந்த அதிருஷ்டக்கட்டைக்கு இத்தனை உதவிகள் அளித்து வந்தீர்கள்?

ஐயோ! இதைப்பற்றி எழுத ஆயத்தமாகி விட்டேன். ஆனால் இன்னும் நான் என் சுய அறிவை இழக்கவில்லை. அம்மாதிரி முட்டாள்தனமான காரியத்தைச் செய்யமாட்டேன். கடிதத்தை இத்துடன் முடித்துக்கொள்கிறேன்.

இப்படிக்கு,
சுந்தரி.

## [நான்காம் கடிதம்]

சுந்தரி,

உங்கள் கடிதம் கிடைத்தது. என் அறியாமையால் உங் களுக்கு எவ்வளவு வருத்தம் உண்டாகி விட்டது. அதை நினைத்து நினைத்து இப்பொழுது நான் பாகாய் உருகுகிறேன். வெட்கித் தலை குனிகிறேன். நாம் நீதமற்ற நாகரீகமற்ற காரியம் செய்கிறோமே என்றுதான் நான் இன்று வரை கருதி வந்தேன். இதென்ன என் உள்ளம் விபரீதமான திசையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறது. இம்மலரை யாராவது கொய்தால் அதன் அழகு போய்விடுமே என்று அஞ்சி ஒரு வரையும் அதைக் கொய்ய அனுமதிக்கவில்லை. எந்தக் கொடியை நான் நீர் வார்த்து வளர்ப்பதில் என் முழுச் சக்தி யையும் செலவிட்டேனோ, அதன் மலர்களின் ஒரு சிறு மணம் என்னை ஏன் இப்படிப் பித்தனுக்குகிறது? அதன்பேரில் என் உரிமையைச் செலுத்த முற்பட்டு விட்டேனே?

சுந்தரி! மனிதனின் உள்ளம் எவ்வளவு உறுதியற்றது! சஞ்சலமானது தெரியுமா? ஒருகணம் விண்ணகத்தே பறக்கிறது. மறுகணம் யாருடைய காலடியிலாவது வீழ்ந்து கிடக்கிறது! உண்மையில் இந்த உள்ளத்தின் பலவீனத்தை நான் உங்களிடமிருந்து மறக்கப் பார்க்கிறேன். என்னிடமிருந்தே கூடத்தான் ஒளிக்கப் பார்த்தேன். காரணம், நான் என்னைக் கல்லாக்கிக் கொண்டுதான், உங்களுக்கு அப்படி எழுதினேன். என்னைக் கடையன் என்றும் எத்தகைய அநாகரீகமான மனிதனுடன் நாம் நட்புக் கொண்டிருக்கிறோம் என்று நீங்கள் உங்களை நொந்து கொள்ள வேண்டும் என நினைத்துத்தான் அப்படி எழுதினேன்.

என் இதயத்திலெழும் உணர்ச்சிகளை உங்களிடம் ஒரு நாளும் தெரிவிக்கக்கூடாது என்று நினைத்துத்தான் முழு கவனத்துடன் அவற்றை மறைத்து வந்தேன். ஆனால் நான் என் கோட்பாடுகளுக்கு மாறாக நடந்து கொண்டு விடப் போகிறேனே—அப்படிச் செய்தால் இதுவரை நான் நடந்து கொண்ட முறை முழுதும் பயனற்றுப் போகுமே என்ற கவலை என்னைக் கவ்விக்கொண்டே இருந்தது. என் கடிதத்தில் நான் தான் கவலையைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தேன். நீங்கள் அதற்கு வேறு பொருள் கொடுத்து விட்டீர்கள். நான் பெரிய உதவி செய்ததாகக் கூறித் தாங்க முடியாத சுமையை என் உள்ளத்தில் சுமத்துகிறீர்கள். இது மாபெரும் அநியாயம். நீங்கள் செய்யும் குற்றத்தை நான் ஒருபோதும் மன்னிக்க மாட்டேன். மனிதன் செய்ய வேண்டிய கடமைக்கும் மேலாக நான் ஏதாகிலும் உங்களுக்குச் செய்ததுண்டா?

ஆனால் சுந்தரி! எந்தப் பொருளை அடைவதற்கு நான் துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறேனோ, அந்த பொருள்தானே என்னை தேடிக்கொண்டு வருகிறது. அது மட்டுமா! நான் ஏதோ நினைத்துக்கொண்டு பின்னால் தங்கிவிட நினைத்தேன். ஆனால் அது கவலைப்பட்டுத் தவிக்கப்போகிறதே, அதன் சுகங்கள் பாழாகிவிடப் போகின்றனவே என்று என் சுய ரூபத்தை அப்படியே வெளிப்படுத்த வேண்டியிருக்கிறது.

சுந்தரி! உங்கள் சுபாவம் என்னை அன்றே கவர்ந்து விட்டது. குருத்துவாரத்திற்கெதிரே உட்கார்ந்து கொண்டு எழுத்துக்கள் எழுதிக்கொண்டிருந்த அன்றே நான் என்னை மறந்து விட்டேன். ஆனால் இப்பொழுது உள்ளத்தின் அழகு என்னைக் கவருகிறது. இனி நான் எவ்வளவு முயற்சி செய்தாலும் உங்களை விட்டுச் செல்ல முடியாது.

அப்படியிருந்தும் நம்மிருவருக்கிடையிலும் ஒரு பெரிய தடை இருந்து கொண்டே வருகிறது. அதை நினைத்துப் பார்த்தால் விதி நம்மிருவரையும் சேர்த்து வைக்காது போல் தோன்றுகிறது. நாம் இருவரும் எப்பொழுதும் ஒருவரை விட்டொருவர் பிரிந்துதான் வாழ வேண்டுமோ என்று படுகிறது. இந்தப் பாதையில் இனி முன்னேறுவதை விட்டு விட்டுத் தனித் தனிப் பாதையை நாம் மேற்கொண்டால் என்ன ?

இப்படிக்கு,
உங்கள் பச்சின் சிங்.

[ஐந்தாவது கடிதம்]

கன்னிமாடம்,
லாஹோர்.

என் ஆருயிரே !

உங்களுடன் நான் பழகியதன் பயனாக என் வாழ்க்கையே புதிய உருப் பெற்றுவிட்டது.

இந்தத் தடவை நீங்கள் எனக்கு எழுதினதையே நானும் உங்களுக்கு நேற்று எழுதி அனுப்பியிருக்கிறேன். நீங்கள் இந்தக் கடிதத்தை எழுத உட்கார்ந்தபொழுது நானும் அதை எழுத ஆரம்பித்திருப்பேன், போலிருக்கிறது. உங்கள் உள்ளக் கண்ணாடி தன் சுய ஒளியில் வெளிப்பட்டுக் காகிதத்தில் தன் கிரணங்களை எப்போது வீச முற்பட்டதோ, அதே நேரத்தில் என் உள்ளத்து வெள்ளம் கரை புரண்டு ஓட ஆரம்பித்துவிட்டது. அதில் எல்லாவித சந்தேகங்களும் சஞ்சல

மான எண்ணங்களும் மூழ்கிவிட்டன. இப்போது உள்ளத்து உண்மையான உணர்ச்சிதான் எஞ்சி நிற்கிறது.

நான் உங்களுக்கு என்ன எழுதினேன் என்று கேட்க விரும்புகிறீர்களா? கேளுங்கள் சொல்லுகிறேன். என் கடிதத்திற்குப் பதிலை எதிர்பார்ப்பதற்கு எழுத ஆரம்பித்து விட்டேன்.

என் உயிரே! உங்களை விட்டுப் பிரிந்து என்னால் வாழ முடியாது. மனத்திற்குள் ஒருவிதமாகவும் வெளிப்படையாக வேறு விதமாகவும் என்னால் இருக்க முடியாது. இது தவறு. இந்தத் தவற்றை என்னால் இழைக்க முடியாது. என் உள்ளம் இவ்வுலகில் உங்களைத்தான் நேசித்தது. இது எப்போது ஆரம்பித்ததோ எனக்குத் தெரியாது. ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம். இந்த இதயத்தில் இனி, இப்பிறவியில் வேறு ஒருவருக்கும் இடம் கிடையாது.

மலையின் எந்த உச்சிவரை ஏற நான் ஆசைப்படுகிறேனோ அதுவரை என்னால் அடைய முடியுமா? அங்கு அடைவது ஒருபுறமிருக்கட்டும். அடைய விரும்புவதுகூட என்னால் இயலாத காரியம் என்பதை நான் நன்கு அறிவேன்.

இதெல்லாம் அறிந்திருந்தும் நான் நம்பிக்கை இழக்கவில்லை. என் எண்ணத்தில், என் உயிர்நாடியின் கேந்திரத்திற்கு என் உடல் போய்ச் சேராவிட்டாலும் என் உள்ளம் போய் சேர்ந்து விட்டது. அந்தச் சந்தனக் காட்டின் மணத்தினால் என்னையும் நான் சந்தனமாக்கிக் கொள்வேன். இந்தக் கடிதத்தின் சாரம் இதுதான்.

நீங்கள் என்ன சொன்னீர்கள்? நம் இருவருக்கிடையிலும் தடங்கல், இடைஞ்சல் இருக்கிறது என்றீர்களா? அன்பே! இதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். தடங்கல் என்றால் நம் இருவருக்கும் திருமணம்......ஒன்றுமறியாத என் காதலரே! அந்த எண்ணத்தை உள்ளத்திலிருந்து அகற்றி விடுங்கள். நான் சற்று முன்பு எழுதிய வார்த்தைகள்தான் அதற்குப் பதில். ஆனால் ஒன்றுமட்டும் உங்களை நான் கேட்டுக் கொள்ளுகிறேன். நீங்கள் கூடிய சீக்கிரம் திருமணம் செய்து கொள்ளுங்கள். சீக்கிரம் உங்கள் தாயின் ஆசைகளைப்

பூர்த்தி செய்யுங்கள். உங்களுக்குத் திருமணம் நடக்கப் போகும் செய்தி எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியைத் தரும் என்பது பற்றி அந்த நேரம்தான் கூறும்.

இப்படிக்கு
உங்கள், சுந்தரி.

[ஆறும் கடிதம்]

சுந்தரி,

உங்களைப் போன்ற தெய்வீக சுபாவமுள்ள பெண்ணின் அன்பைப் பெற்ற நான் எவ்வளவு பாக்கியசாலி! சுந்தரி! உங்கள் சிறந்த எண்ணங்களும் தெய்வீகக் காதலும் என் இருள் சூழ்ந்த உலகை ஒளிபெறச் செய்துவிட்டன. என் உள்ளத்து இனிய உலகை ஒளிமயமாக்கிவிட்டன. என் உள்ளத்துள்ளே எதோ ஓர் இனிய கீதம் இசைப்பது போல் நான் உணர்கிறேன். என் உடலின் ஒவ்வொரு அணுவும் மெய்சிலிர்த்து இருக்கிறது. அமரமான நாதம் ஒவ்வொரு அணுவிலும் நிறைந்து கிடைக்கிறது. உங்கள் கடிதத்தின் ஒவ்வொரு சொல்லும் எனக்குச் சொர்க்கத்துப் பூங்காவில் மலரும் மலர்போலிருக்கிறது. அது என் உள்ளத்தையும் அறிவையும் மணக்கச் செய்கிறது. இதற்கு எதிரே உலகின் எந்த நிதியும் எந்தச் சுகமும் எனக்குப் புல்லெனத் தோன்று கிறது சுந்தரி! உங்கள் கருத்துக்கள் மிகவும் உயர்ந்தவையே. உங்கள் உள்ளத்தினின்றும் எழும் உணர்ச்சிகளில் இந்த பிரம்மாண்டத்து அன்பு முழுவதும் அடங்கிக் கிடக்கிறது. உங்கள் சின்னஞ்சிறு உள்ளத்தில், அன்பின் எவ்வளவு பெரிய நிதியம் கிடைக்கிறது! இதுவரை எனக்கு இதுபற்றித் தெரியவில்லை.

நம்மிருவருக்கிடையிலும் மிகப் பெரிய இடைஞ்சல் இருக் கிறது என்றுதான் எழுதினேன். இதைப் படித்துவிட்டு நான் உற்றார் உறவினரிடம் பயந்துகொண்டு உங்களை மணக்க விரும்பவில்லை என்று தவருக நினைத்துவிட்டீர்கள். நான் இந்த அச்சத்தை என்றோ உதறி எறிந்துவிட்டேன். நான்

கூற நினைத்தது வேறு. ஞானிஜியின் உபதேச மொழிகளை யும் என் கடமைகளையும் எண்ணிப் பார்த்து என் வாழ்க்கை முழுவதையும் சமூகச் சீர்திருத்தத்திற்காக அர்ப்பணித்துவிடப் போகிறேன். அம்மா உயிருடன் இருக்கும் வரையில்தான் நான் இங்கு உட்கார்ந்து கிடப்பேன். அதன் பிறகு வீடு வாசல் என்ற மோகத்தை உதறிக் களைந்துவிட்டு இப்பணியில் என்னை நான் ஈடுபடுத்திவிடுவேன்.

சுந்தரி! நான் என் சமூகத்தின் நிலையைக் கண்டு வருந்து கிறேன். அது எவ்வளவு அறிவிலியாகவும் இதயமற்றதாகவும் மாறிக்கொண்டு வருகிறது! ஒவ்வொரு நாளும் மென்மை யான வாழ்க்கை எத்தனை அதில் ஆகுதியாகிக்கொண்டு வருகிறது. அதனால்தான், திருமணத்தளையில் கட்டுண்டால் என் லட்சியத்தினின்றும் நான் நழுவிவிடுவேன் என்று எனக்குத் தோன்றுகிறது. நான் இந்தப் பணியினின்று பின் வாங்கினால் உங்கள் வாழ்வின் சுகங்கள் அனைத்தும் பாழாகி விடும். நீங்கள் எப்பொழுதும் என்னைப் பிரிந்து வாழ நேரிடும். அல்லது என்னுடன் சேர்ந்து பசி, தாகம், சுற்றுவ தால் உண்டாகும் ஆயாசம், நிம்மதியற்ற வாழ்க்கை, இத்தனை யும் வரிக்க நேரிடும்.

ஆனால் உங்கள் கடிதத்தைப் படித்தவுடன் என் உள்ளத்தில் இருந்த சந்தேகங்கள் எல்லாம் நீங்கிவிட்டன. ஆனால் கூட்டல் கழித்தல் கற்றுக்கொண்டிருக்கும் மாணவன் தன் வகுப்பில் மிகவும் திறமையாகப் படிக்கும் தன் சட்டாம்பிள்ளை யைப் பார்த்து உனக்கும் எனக்கும் ஒத்து வராது, ஏனென்றால் இன்னும் ஒரு வருடத்தில் நான் வாய்ப்பாடு முழுவதையும் மனப்பாடம் செய்வதாக வாக்குறுதி பூண்டிருக்கிறேன் என்று சொன்னால் எப்படியிருக்கும்? அப்படியிருக்கிறது என் நிலைமை. இதை நினைந்து எனக்கு மிகவும் வெட்கமாக இருக் கிறது.

சுந்தரி! என் கேள்விகளனைத்திற்கும் திருப்திகரமான பதில்கள் கிடைத்து விட்டன. சமூக ரீதியாகவும் சொந்த முறையில் நீங்கள் என் உடமை என்று சொல்லிக்கொள்ளும் படி எந்த நாள் நான் உங்களை அடைவேனோ அன்றுதான்

நான் என்னைப் பாக்கியசாலி எனக் கருதுவேன். உலகம் முழுதும் சேர்ந்து இதிலிருந்து என்னை தடுத்தாலும் நான் தயங்கமாட்டேன். இதற்காக நான் எத்தனை இன்னல்களை எதிர்நோக்க நேரிட்டாலும் சரி, எவ்வளவு வருத்தம் அனுபவிக்க நேரிட்டாலும் சரி, நான் எதையும் தாங்கிக் கொள்வேன். இதில் தான் நான் என் பெருமையும் கௌரவமும் இருப்பதாகக் கருதுவேன்.

இப்படிக்கு,
பச்சன் சிங்.

[ஏழாம் கடிதம்]

என் வாழ்வின் ஆதாரமே!

என் வாழ்க்கை நதி உங்களருகே வரவர ஏதோ ஒரு தெய்வீக ராஜ்யத்திற்கருகே சென்று கொண்டிருப்பது போல் நான் உணர்கிறேன். உள்ளத்தினின்று அன்பின் புதுப் புது நீரருவிகள் பெருக்கெடுக்கின்றன.

நாம் இதையெல்லாம் சந்தேகக் கண் கொண்டு பார்க்கிறோம். ஒருவரை ஒருவர் இதற்குப் பதில் வேறு கேட்கிறோம். சந்தேகம் என்று எது தோன்றிற்றோ அது உலகில் எதனுடனும் ஒப்பிட்டுக் கூற முடியாத உள்ளத்து ஆசைதான், உணர்ச்சி தான் என்று இப்பொழுது புரிந்து கொண்டு விட்டோம்.

என் ஆருயிரே! உங்கள் உதாரத் தன்மை என் நம்பிக்கையினும் ஆயிர மடங்கு மேலான சுகத்தை அளித்துவிட்டது. என்னை அதிர்ஷ்டக்காரியாக ஆக்கிவிட்டது. நான் எவ்விதம் மகிழ்ச்சி யடைந்தேன் என்று எப்படி உங்களுக்கு எடுத்துக் கூறுவேன்!

ஒரு எல்லையை யடைந்த பிறகு ஒவ்வொரு பொருளும் தன் உயரத்தினின்றும் பின் தங்கி விடுகிறது என்று சொல்லுகிறார்கள். சற்றும் முன் பின் யோசியாமல் எவனாவது சிரித்தால் அவன் அழ நேரிடும் என்று கூறுகிறார்கள். இதில் உண்மையிருப்பின் அதை நினைத்து மனம் அஞ்சுகிறது—பயத்தால் பதைத்துப் போகிறேன். என் உள்ளும்

புறமும் நடுக்கங் கொள்கிறது. என் மகிழ்ச்சியும் எண்ணங் களும் எல்லையைக் கடந்து விட்டதை நான் உணர்கின்றேன். உள்ளத்தில் அவற்றை அடக்கி வைக்கும்படி அங்கு அவ் வளவு இடம் கிடையாது. நிரம்பிய குடத்தில் மேன் மேலும் நீர் ஊற்றினுல் எப்படி வழிந்தோடும்! அப்படியேதான் இந்த மகிழ்ச்சியும் பொங்கி வழிகிறது. ஐயோ! அன்பே! இங்கு வந்திருக்கிறேன் நான். எங்கிருந்தோ ஒரு சொல் லொணு வேதனை வந்து கவ்விக்கொண்டு என்னை அல்லலுக் குள்ளாக்குகிறது. சிற்சில சமயங்களில் இந்த வேதனை பயங்கர உருப்பெற்று விடுகிறது. அப்போது என் உள்ளத்து மகிழ்ச்சிகளெல்லாம் அடித்தளத்தில் போய் அமிழ்ந்து விடு கிறது. சஞ்சலமடைந்த என் உள்ளம் பலவிதமான எண்ணங் களை எண்ணத் துவங்கிவிடுகிறது. என் மனம் இப்படியும் எண்ணுவதுண்டு—காலை இளந்தென்றல் பூங்காவின் மொட் டுக்கள் தலை குனிந்த வண்ணம் தன்னை நோக்கிப் புன்முறுவல் புரிவதைப் பார்க்கிறது. மணம் நிறைந்த பெருமூச்சு விடு கின்றன அந்த மொட்டுக்கள். அன்புப் போதையில் அப் பொழுது தென்றல் தன்னைத்தான் மறந்து போகிறது. மொட் டுக்களுடன் விளையாட ஆரம்பித்து விடுகிறது. இந்தக் காதல் விளையாட்டை மென்மையான மொட்டின் உள்ளம் தாங்கிக் கொள்ள முடியாமல் மகிழ்ச்சியால் சுய நினைவிழந்து விடு கிறது. அது மலரத் துவங்குகிறது. மதம் பிடித்த காற்றின் காதல் அந்த மென்மையான மலரிதழ்களைச் சூறையாடி விடு கின்றது. மொட்டின் வாழ்வு அத்துடன் முடிவடைந்து விடுகிறது.

என் உயிரின் இருப்பிடமே! இந்தக் கற்பனைக் கலையின் பிடியினின்றும் என்னை விடுவிக்க மாட்டீர்களா? என்னை உங் களுக்குள் ஒளித்து வைத்துக் கொள்ளுங்கள். இம்மாதிரியான சூனிய எண்ணமே என்னிடம் அண்டாதபடி என்னை மறைத்து வைத்துக் கொள்ளுங்களேன்!

கடிதத்தில் என்ன எழுத ஆரம்பித்தேன், என்ன எழுதிக் கொண்டிருக்கிறேன் என்பதே தெரியவில்லை. எழுதுவதற்கு ஒன்றுமே மிச்சமில்லை போலிருக்கிறது. அல்லது வாழ்நாள்

முழுவதும் எழுதினால்கூட முடியாத அளவிற்கு அவ்வளவு
இருக்கிறது போலும் தோன்றுகிறது. நான் எழுத ஆரம்பிப்ப
தற்கு முன்பே அந்தப் பொருள் பற்றிய எண்ணம்
உங்கள் உள்ளத்தில் பளிச்சிடுவதை நான் காண்கிறேன்.
சொன்னதையே திரும்பத் திரும்பச் சொல்வானேன்?
அன்பே! நீங்கள் திருமணத்தைப் பற்றி அடிக்கடி குறிப்பிடு
கிறீர்கள். திருமணம் ஒன்றுதான் மனிதனின் வாழ்வைச்
சுகமயமாகவும் தெய்வீகமாகவும் ஆக்கக்கூடியது என்று மக்கள்
கூறுகின்றனர். இது உண்மையானால், நான் அதனின்று
வெகு தொலைவில் இருக்க விரும்புகிறேன். ஏனென்றால் உங்கள்
உதாரத்தன்மையினாலும் அன்பினாலும் நான் அடையும்
மகிழ்வும் சுகமும் இருக்க வேறு சுகத்தை அடைய
விரும்புவேனா என்ன? இதைக் கற்பனைகூடச் செய்து பார்க்க
என்னால் இயலாது. முன்னமேயே கூறியபடி இந்த உள்ளத்தில்
வேறெதற்கும் இடம் கிடையாது. காதலரே! நீங்கள் உங்கள்
வாழ்க்கைப் பாதையை மாற்றியமைத்துக் கொள்வது பற்றிக்
குறிப்பிட்டிருந்தீர்கள். ஆனால் நினைவிருக்கட்டும். தனிமை
யாக உங்களால் அந்தப் பாதையில் முன்னேற முடியாது.
ஆம், ஒரு அடிகூட எடுத்துவைக்க முடியாது. உங்களிடம்
எவ்வளவு உறுதியும் உதாரத்தன்மையும் உள்ளது. உங்களை
இந்த நிலைக்கு ஆளாக்கிய சமுதாயத்திடம் உங்களுக்கு
இன்னும் இரக்கம் இருக்கிறதா? நீங்கள் சென்ற பிறவியில்
ஒரு முனிவராகத் தானிருந்திருக்க வேண்டும். இந்த
சமுதாயத்தைப் பற்றி நான் கொண்டிருந்த கருத்தையே
தகர்த்தெறிந்துவிட்டன, நீங்கள் எழுதியிருந்த இரண்டு
வரிகள்! குற்றமற்ற என் இதய மன்னனைப் படாத பாடு
படுத்திய இந்தச் சமுதாயத்தைப் பற்றி நான் கசப்பான
எண்ணத்தைத்தான் என் உள்ளத்தில் வைத்திருந்தேன்.
உலகம் ஒருமுறை என்னை நினைவுகொள்ளும்படி இதன்
தலைவர்களையும் வெளி வேஷக்காரர்களையும் பழிவாங்காமல்
நான் விடப்போவதில்லை என்று உறுதிபூண்டிருந்தேன்.
உங்களையும் இம்மாதிரி செய்யத் தயாராக்குவேன் என முடிவு
செய்திருந்தேன்.

ஆனால் என் அன்பே! இனி என் வாழ்க்கை உங்கள் வாழ்க்கையுடன் பிணைந்துவிட்டது. இதனை நீங்கள் எந்தப் பக்கம் திருப்பினாலும் அதன்படிதான் செல்லும். ஆனால் இன்னும் ஒருமுறை உங்களிடம் கேட்டுக் கொள்கிறேன். மிகவும் கடினமான பாதை அது. அதில் தனித்துச் செல்ல முடியாது. என்னையும் உங்கள் கூட்டாளியாக ஆக்கிக் கொள்ளுங்கள். நான் உங்கள் பாதையில் இடைஞ்சலாக ஒரு நாளும் இருக்கமாட்டேன். இதுபற்றி உங்களுக்கு ஒரு சிறிதும் ஐயம் வேண்டாம்.

ஆம், மறுபடியும் கூறுகிறேன். திருமணத்தைப் பற்றிய எண்ணத்தையே உள்ளத்தினின்றும் அகற்றிவிடுங்கள். திருமணத்திற்காக நாம் தியாகம் செய்யநேரிடும். அதற்காகப் பெருந் தவமிருக்க நேரிடலாம். அதன்பிறகு நாம் ஒன்று சேர்ந்திடுவோம். பின்பு நம்மை ஊழிகாலம் வரையிலும், அதற்குப் பிறகும், யாராலும் பிரிக்கமுடியாது. நான் மேலே குறிப்பிட்ட சந்தேகத்தைப் பற்றி நினைவிருக்கட்டும். காரணமின்றி, ஆதாரமின்றி நான் கூறவில்லை. இவ்வளவு மகிழ்ச்சியை, இப்படிப்பட்ட பேரானந்தத்தை நாமென்ன, வேறெவராலும் தாங்கிக் கொள்ளமுடியாது.

இப்படிக்கு
தங்கள் சுந்தரி

## [எட்டாம் கடிதம்]

தீவான்பூர்

சுந்தரி,

நான் உங்களுக்கு இன்று தெரிவிக்கப் போகும் வருத்தகர மான செய்தியை உங்களால் எப்படித் தாங்கிக்கொள்ள முடியும்? இதை நினைத்தமாத்திரத்தில் நான் துக்கக் கடலில் மூழ்கிவிடுகிறேன். எழுதும்போது கைநடுங்குகிறது. இந்த வருத்தமளிக்கும் செய்தியை வேறு யாராவது உங்களுக்குத் தெரிவித்தால் நன்றாக இருக்கும். ஆனால் நான் செய்த வினைப் பயன் இந்த வேலை எனக்களிக்கப் பட்டிருக்கிறது. எப்படி

எழுதுவேன்! சுந்தரி! உங்கள் தந்தை! அந்தோ! எப்போதும் உங்களுடைய பெயரையே ஜபித்துக்கொண்டிருந்த உங்கள் வளர்ப்புத் தந்தை உங்களுக்குக் கடைசி அன்பை அளித்து விட்டு—உங்களைப் பார்க்கும் ஆசையை உள்ளத்திலேயே வைத்துக்கொண்டு—இந்த உலகைவிட்டுச் சென்றுவிட்டார்.

எவ்வளவு பயங்கரமான நிலையில் அவருடைய உயிர் பிரிந்தது என்பதுதான் உள்ளத்தை உருக்கும் உண்மை. சுந்தரி! உங்களுக்கு நான் எவ்விதம் கூறுவேன்? குடிசையி னின்றும் வெளியே வரமுடியாமல் சில தினங்களாக அவர் மிகவும் பலவீனமடைந்து விட்டார். எப்போதும் போல் மாலை நேரத்தில் நான் அவருக்கு ரொட்டி எடுத்துச் செல்வேன், அப்போது அவர் அழுவார். ஏனென்று கேட்டால், 'சுந்தரி யைக் காணவேண்டும் என்று என் உள்ளம் துடியாய்த் துடிக்கிறது' என்பார். 'எத்தனை நாட்கள் உயிருடனிருக்கப் போகிறேனே, ஒருமுறை சுந்தரியைப் பார்த்தால் நன்றாக இருக்கும்' என்று கூறுவார்.

ஒரு நாள் நான் கூறினேன்—'அவ்வளவுதானே! நான் ஒரு நாள் காலை போய் சுந்தரியை அழைத்து வருகிறேனே.'

ஆனால் என்னை அப்படிச் செய்ய அனுமதிக்கவில்லை— 'அவளுடைய படிப்பு கெட்டுவிடும். இங்கு அழைத்து வருவது அவளுக்கு அபாயத்தை விளைவிக்கும். கிராமத்துப் போக்கிரி பாலா சிங் என்னையே சுற்றிக்கொண்டிருக்கிறான். சுந்தரியை எனக்குத் திருமணம் செய்துகொடு என்று கேட்டுக் கொண்டிருக்கிறான். முதலில் அவன் எனக்குப் பலவித ஆசைகளைக் காட்டி மோசம் செய்யப் பார்த்தான். நான் வழிக்கு வரவில்லையென்று தெரியவே, பலவிதமாகப் பய முறுத்த ஆரம்பித்தான். "நான் சொன்னபடி கேட்காவிட்டால் என் ஆசாமிகளைக் கொண்டு உன்னைத் தீர்த்துக்கட்டி விடுவேன். நீ இறந்த செய்தியைக் கேட்டு சுந்தரி இங்கு வருவாள். நான் உடனே அவளைக் கடத்திக் கொண்டுசென்று விடுவேன்" என்றும் சொன்னான்.'

சுந்தரி! அப்பா இவ்வார்த்தைகளைச் சொன்னபொழுது, எப்படி இருந்தார் தெரியுமா? அவருடைய நிலை பற்றி

என்னுல் எழுதவே முடியாது. என் உடலும் கோபத்தால் நடுங்கிற்று. நான் அவருக்கு ஆறுதல் அளிக்கும்வகையில் கூறினேன்—'பாப்ஜி! நானிருக்கையில் உங்களையாவது, சுந்தரியையாவது ஏறெடுத்துப் பார்க்கும் துணிச்சல் யாருக்கு இருக்கப் போகிறது?'

நான் அவரை என்னுடன் அழைத்துப் போவதாகக் கூறினேன். ஆனுல் அவர் ஒப்புக்கொள்ளவில்லை—'சர்தார்ஜி! நான் என்ன? ஏற்கெனவே மணல் வீடுதான். எப்போது சரிந்து வீழ்வேனே என்றிருக்கிறேன்! கை கால்களில் தெம்பு இருக்கும்போதே என்னை அழைத்துக்கொண்டுவிடு என்று தான் கடவுளை வேண்டிக்கொள்கிறேன், உடல் இப்போது ஒன்றுக்கும் உதவாமல் போய்விட்டது. சுந்தரியைப் பற்றிய கவலை சற்று இருந்தது. இப்போது உங்கள் தயவால் அதுவும் இல்லை.'

பிறகு நான் கூறினேன்—'பாபாஜி! என்னுடன் லாஹோருக்கு வாருங்கள். சுந்தரியைப் பார்த்துவிட்டுத் திரும்பலாம்.' அவர் அதற்குச் சம்மதித்துவிட்டார். அடுத்த நாள் கிளம்புவதாக நிச்சயம் செய்திருந்தோம்.

அதே தினத்தன்று நள்ளிரவு நேரம். ஒரே கூக்குரல் சத்தம் கேட்டது. என் தூக்கம் கலைந்துவிட்டது. 'தீப் பிடித்துக் கொண்டது' என்ற இரைச்சலைக் கேட்டவுடனேயே நான் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தேன். வெளியே வந்தேன்—'பாபா ரோடுவின் குடிசை தீப்பற்றிக்கொண்டது' என்ற கூக்குரல் காதில் விழுந்தது. நான் குடல் தெறிக்க ஓடிவந்தேன். குடிசையில் மக்கள் திரளாகக் கூடியிருந்தனர். எரிந்து கருகிப் போயிருந்த பாபாவின் உடலை மக்கள் எடுத்து ஒரு புறம் வைத்தனர், குடிசை எரிந்து சாம்பலாகிவிட்டது. குடிசையின் மீது தண்ணீரை ஊற்றியதால் பாதி எரிந்துவிட்ட மூங்கில்கள் இன்னும் எரிந்துகொண்டிருந்தன. நான் கூட்டத்தை விலக்கிக்கொண்டு பாபாவிடம் சென்றேன்.

ஐயோ! சுந்தரி! அப்போதைய காட்சி எப்படியிருந்தது என்பதை உங்களுக்குக் கூறி வருத்தத்தால் எரிந்துகொண்டிருக்கும் உங்கள் உள்ளத்தில் எண்ணெய் ஊற்ற விரும்ப

மாட்டேன். அந்தக் காட்சியைக் காண என் உள்ளத்தில் தெம்பு கிடையாது. நான் எப்படியோ என்னை உறுதிப் படுத்திக்கொண்டு அவருடைய உடலைத் தேட ஆரம்பித்தேன். போலீஸ்காரரும் ஓரிரு சிப்பாய்களும்கூட அங்கு இருந்தனர். முதலில் எல்லோரும் பாபா எரிந்து சாம்பலாகி விட்டார் என்றே நினைத்தனர். ஆனால் சிறிது நேரங்கழித்து அவருடைய உடல் சற்று அசைய ஆரம்பித்தது. நான் பல முறைகள் அவரைக் கூப்பிட்டேன். ஒருமுறைக் கண்களைத் திறந்து அவர் பேசுனர்—'சர்தார்ஜி !'

'இதோ இருக்கிறேன் !' என்று கூறியபடி நான் அவரிடம் ஏதோ கேட்க முயற்சித்தேன். இந்த வாய்ப்பைப் பயன் படுத்திக்கொண்டு போலீஸ்காரர் அவரை விசாரணை செய்ய ஆரம்பித்துவிட்டார். சற்றே அவருக்குப் பிரக்ஞை வந்தது. போலீஸ்காரர் கேட்டார்—'பாபா !'

அவர் தலையை அசைத்தார்.

போலீஸ்காரர் கேட்டார்—'தீ வைத்தவர் யார் ?'

உங்கள் அப்பா, அவருக்குப் பதிலளிக்கும்வகையில் மேலே ஒரு முறைப் பார்த்தார். அந்தக் களங்கமற்ற உள்ளம் கொலை காரப் பாவியைக்கூடக் காட்டிக்கொடுக்க விரும்பாமல், 'இறை வனது திருவருள்' என்று கருதி அமைதியுடனிருக்க விரும் பியது போலும் !

அதன்பிறகு காவலருக்கு ஒரு பதிலுமளிக்கவில்லை. இனி அவருக்குச் சமிக்ஞை செய்யக்கூடத் தெம்பிருக்கவில்லை. தன்னைச் சுற்றி நின்றுகொண்டிருந்த கூட்டத்தை ஒருதடவை பார்த்தார். பிறகு அவருடைய பார்வை என்னை வந்தடைந்தது. அவரைப் பார்த்துக் குனிந்தவண்ணம் —'பாபாஜி ! ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா ?' என்று கேட்டேன்.

அவரால் ஒன்றும் பேச முடியவில்லை. அவருடைய கண் களினின்றும் கண்ணீர் தளும்பிற்று. ஏதோ அவர் பேச விரும்புவதுபோல் தோன்றிற்று. ஆனல் பேச இயலவில்லை. என்னல் அவருடைய எண்ணத்தைப் புரிந்துகொள்ளவும் முடியவில்லை. அவர் என்னை அருகில் வரும்படி சமிக்ஞை

செய்தார். அவருடைய உதட்டிற்கருகே காதைச் சாய்த்துக் கேட்டேன். மிகவும் முயற்சிசெய்து பார்த்தேன்...'சு...ந்தரி' எனும் ஒரு வார்த்தையைத்தான் என்ருல் புரிந்துகொள்ள முடிந்தது.

'பாபாஜி! சுந்தரியைப் பார்க்க விரும்புகிறீர்களா?' என்று கேட்டேன். உடுக்கையடிப்பவன் கையைச் சுழற்றுவதுபோல் அவர் சுழற்றிஞர். அதன் பொருளை நான் புரிந்து கொண்டேன். 'இனி ஆட்டம் முடிந்து விட்டது. நான் சுந்தரியைப் பார்க்க முடியாது!' என்று சொல்ல விரும்பிஞர் அவர். மறுபடியும் நான்—'சுந்தரியிடம் ஏதாவது சொல்ல வேண்டுமா?' என்று கேட்டேன்.

அவர் பதிலொன்றும் சொல்லவில்லை. ஆஞல் நீர் தளும்பிய அவருடைய கண்கள் என்னையே உற்று நோக்கிக் கொண்டிருந்தன—என்னிடம் எதற்கோ பதிலை எதிர்பார்ப்பது போன்றிருந்தது அந்தப் பார்வை. நான் அவருடைய மனதைப் புரிந்துகொண்டு கூறினேன்—'பாபாஜி! சுந்தரியைப் பற்றிக் கவலைப்படவேண்டாம். நான் அவளை மணந்து கொள்கிறேன்!'

நான் இவ்வாறு கூறியதுதான் தாமதம். அவருடைய கண்களினின்றும் ஒளி வீசியது. உதடுகளில் மெல்லிய புன்னகை தழுவிற்று. தன் இரு கைகளையும் கூப்புவதற்காக அசைக்க முயற்சித்தார். ஆஞல் அருகே வந்து சேருவதற்குள் மார்பகத்தில் வந்து தளர்ந்து அக் கைகள் வீழ்ந்து விட்டன. கழுத்து தளர்ந்துபோய் தோளில் சாய்ந்தது. என்னிடமிருந்த அந்த வார்த்தைகளைக் கேட்பதற்கென்றே உயிருடனிருந்தார் போலத் தோன்றிற்று. என்ன சொல்வேன் சுந்தரி! அப்பா மீளாத் தூக்கத்தில் ஆழ்ந்து விட்டார்.

போலீஸ், பாலாசிங் மற்றும் அவனுடைய நான்கு தோழர்கள் சவாயாசிங், வீர்சிங் முதலியவர்கள்மீது சந்தேகங்கொண்டு அவர்களைக் கைது செய்தது. அப்பா! அது எத்தகைய பயங்கரமான நிகழ்ச்சி தெரியுமா? இன்னும் அவருடைய உருவம் என் கண்ணெதிரே நிற்கிறது. என் அம்மாவிற்கு இதைப் பற்றிக் கூறியதிலிருந்து அவளுடைய கண்ணீர்

வற்றியபாடில்லை. அவளுடைய மனதில் ஒரு மாபெரும் மாற்றம் கண்டு விட்டாற்போல் நான் உணர்கிறேன்.

சுந்தரி! கடவுளின் கருணையை அளவிட முடியாது. நாம் யாரையும் பழிவாங்கும் எண்ணம் கொள்ளக் கூடாது. பழி வாங்குவது இறைவனின் சக்திக்குட்பட்டது. உலகின் எந்தச் சக்தியும் நம்மை நம் குறிக்கோளினின்றும் வழுவச் செய்து விடக் கூடாது. இதில்தான் நம் வீரம் இருக்கிறது.

இன்றைய கடிதத்தைப் படித்து நீங்கள் எந்நிலையை யடைவீர்கள் என்பதை நான் நன்கறிவேன்—அதனால்தான் இன்னும் விவரமாக எழுதவில்லை. நான் உங்களிடம் ஒன்று கேட்டுக் கொள்கிறேன். உள்ளத்தை அதிகமாக நலிவடையச் செய்ய வேண்டாம். உறுதியுடனும் உற்சாகத்துடனும் இந்தத் துக்கத்தைச் சகித்துக் கொள்ளுங்கள்.

கடிதம் எழுதிக்கொண்டிருக்கையில் ஒரு செய்தி வந்தது. பாலாசிங், மற்றும் அவனுடைய தோழர்களனைவரும் விடுவிக்கப்பட்டிருக்கிறார்கள். போலீஸ் ஒரு சிறு தொகையை அவர்களிடமிருந்து பெற்றுக்கொண்டு இவ்விதம் செய்திருக்கிறது. இதற்குக் காரணம் பணத்தின் வலிமையாக இருக்கலாம். அல்லது கிராம மக்களின் தயாளச் சித்தமாக இருக்கலாம் என்று கூறப்படுகிறது. கிராமத்து மக்கள் அவர்களை விடுவிக்க அரும்பாடுபட்டு வருகின்றனர் என்று தெரியவருகிறது. நான் முன்னமேயே இவ்விதம் நடக்கும் என்று நினைத்தேன்.

இப்படிக்கு
உங்கள், பச்சன்சிங்

[ஒன்பதாம் கடிதம்]

கன்னிமாடம்
லாஹோர்

ஆருயிர்க் காதலரே!

கடிதம் கிடைத்தது. ஐயோ! அப்பாவின் மரணம் என் உள்ளத்தை எவ்விதம் அமைதிகுலையச் செய்துவிட்டது என்று என்னால் கூறவே முடியாது. அப்பாவைக் கடைசி முறையாகக் காண முடியவில்லையே என்று உள்ளம் துடிக்கிறது.

என்னை அவர் அன்புடன் தடவிக் கொடுப்பார். நான் அன்புடன் அவருடைய கழுத்தைக் கட்டிக் கொள்வேன்! இது இனி எங்கே எனக்குக் கிடைக்கப் போகிறது? உள்ளம் அழுகிறது. ஆயிரம் முயன்று பார்த்தாலும் எனக்கு மன நிம்மதி கிடைக்கவில்லை. ஒவ்வொரு கணமும் உள்ளம் வருத்தத்தால் கொதித்தெழுகிறது. ஆனால் உங்களை நினைத்த மாத்திரத்தில் உள்ளம் ஒரு பெரும் ஆதாரத்தைப் பெற்றுவிட்ட அமைதியை அடைகிறது.

ஒரு ஏழை, அதிலும் தெருவில் கிடக்கும் துரும்பிற்குக்கூடத் தீங்கிழைக்க அஞ்சுபவர், எவரிடமும் ஒருவிதத் தொடர்பும் இல்லாதவர்—அப்படிப்பட்ட ஒரு உயிரை இந்தக் கொடு நெஞ்சம் படைத்தவர்கள் வாழ விடவில்லை. அப்படிப்பட்டவர்களைக் கொலை செய்யாமல் அவர்களைக் காக்க ஏன் இந்த மக்கள் முயற்சிக்கின்றனர்? சமுதாயத்தில் அப்படிப்பட்ட கொலைகாரர்களின் எண்ணிக்கை இன்னும் அதிகரிக்கட்டும் என்று கருதியா?

என் தலைவரே! நீங்கள் இத்தகைய சமுதாயத்தையா சீர் திருத்த முயற்சிக்கிறீர்கள்? இதனைச் சீர் திருத்திவிட முடியும் என்ற நம்பிக்கையும் கொண்டிருக்கிறீர்கள்? பாவ எண்ணங்கள் நிறைந்த உள்ளத்தை மாற்ற வழி கிடையாது என்பதை இன்னுமா நீங்கள் உணரவில்லை? நீங்கள் அவர்களைச் சரிப்படுத்தி விடலாம் என்று கனவு காண்கின்றீர்கள்? அவர்களுடைய உள்ளம் பொறாமைத் தீயினால் வெந்திருக்கிறது, அறிவு அசந்தையாய் வதங்கிப் போயிருக்கிறது, தோள்கள் வெண் குருதியினால் உயிரற்றுப் பிணமாகி விட்டன. அப்படிப் பட்டவர்களையா நீங்கள் திருத்தப் போகிறீர்கள்? இந்தக் கட்டாந்தரையில் விதை விதைத்துப் பயிர் கிளம்புவதை நாம் காணலாம் என்று நம்பிக் கொண்டிருக்கிறீர்கள்?

இல்லை, இல்லை, என் அன்புத் தெய்வமே! இந்த எண்ணத்தை மனதினின்றும் அகற்றிவிடுங்கள். எந்த மலையை நீங்கள் உங்கள் தலையால் மோதித் தகர்த்தெறிந்து விடலாம் என்று நினைக்கிறீர்களோ, அது ஒருக்காலும் உடை

யாது. நீங்கள் தான் உங்களை இழப்பீர்கள். இப்படிப்பட்ட மலையைத் தகர்த்தெறிய ஒரே ஒரு உபாயம்தான் உண்டு. முதலில் அதன் அடிப்புறத்தைப் பலமற்றதாகச் செய்ய வேண்டும்; அல்லது அந்த மக்களின் உடலிலிருந்து வெண் குருதியை எடுத்து நிலத்தில் பாய்ச்ச வேண்டும். இந்த வெண் குருதியின் ஒரு துளிகூட எஞ்சியிருந்தால், இனி வரப் போகும் சந்ததிகளின் இரத்தத்தை இது கெடுத்துவிடும்.

அடடா! நான் சினத்தால் என் வசமிழந்து ஏதேதோ எழுதிக்கொண்டு செல்கிறேன். அன்பே! என் பிழையை மன்னித்துவிடுங்கள். இப்போது நான் சுய நினைவிலில்லை. அறிவின்மையின் காரணமாக நான் இவ்விதம் ஆவேசத்துடன் பேசுகிறேன். இப்படிப்பட்ட எண்ணங்களை நான் என் உள்ளத்தினின்றும் தகர்த்தெறியத்தான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். அப்படிச் செய்ய இயலாவிட்டாலும் சரி, அல்லது என் கோபத்தைச் சிறிது செயலில் காண்பித்து விட முயற்சித்தாலும் சரி, அது உங்களெதிரே என்னால் முடியவே முடியாது. பழிவாங்கும் எண்ணம் உங்களெதிரே என் உள்ளத்தில் உதிக்காது, உதித்தாலும் நொடியில் அது பறந்துவிடும்.

உங்கள் விருப்பப்படி நடந்து கொள்ளத்தான் நான் விரும்பு கிறேன். என் உள்ளத்தில் ஏதேனும் தீய எண்ணமிருந்தால் அதைப் பாம்பின் தலையைக் கிள்ளி எறிவது போல் களைந் தெறிந்துவிட்டு உங்கள் கோட்பாடுகளின்படி நடக்கத்தான் நான் ஆசைப்படுகிறேன். இப்படிச் செய்ய நீங்கள்தான் எனக்கு உள்ளத் தெம்பளிக்க வேண்டும்.

என் மணிமகுடமே! என் இந்தச் சஞ்சலமான மனதின் பேரில் எனக்கே நம்பிக்கை கிடையாது. இது என்னை எந்தப் பாதையிலோ அழைத்துச் சென்றுவிடுகிறது. சிற்சில சமயங் களில் பழிவாங்கும் எண்ணம் என்னையே மறந்துவிடுமளவுக்கு அவ்வளவு தீவிரமாகிவிடுகிறது. நீங்கள் உங்களுடைய அதி காரத்திற்குக் கீழ் என்னை வைத்திருக்க வேண்டும். உங்கள் அரவணைப்பில் என்னை வைத்துக் கொள்ளவேண்டும். இது தான் உங்களிடம் எனது வேண்டுகோள்.

இன்று எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது. ஆகையால் அதிகமாக எழுதப் போவதில்லை. இதுவரை எழுதியதைக்கூட அனுப்ப விருப்பமில்லை, ஆயினும் அனுப்புகிறேன். உங்கள் உள்ளம் எவ்வளவு பரந்தது என்பதை நன்கறிவேன். எவ்வளவு உறுதி அதில் இருக்கிறது என்பதும் எனக்குத் கதரியும். நான் செய்யும் ஒவ்வொரு பிழையையும் நீங்கள் மன்னித்து விடுவீர்கள். நீங்கள் இங்கு வந்து என்னை அழைத்துச் செல்லுங்கள். நான் ஏன் வளர்ப்புத் தந்தையின் எரிந்து போன குடிசையைப் பார்க்க விரும்புகிறேன். அதைக் காண என் உள்ளத்தில் ஒரே துடிப்பாக இருக்கிறது. என் படிப்பும் பெரும்பாலும் முடிந்துவிட்டது என்றே சொல்லலாம்.

இப்படிக்கு
உங்கள், சுந்தரி.

[பத்தாம் கடிதம்]

சுந்தரி,

இவ்வளவு தவிப்பு ஏன்? இவ்வளவு கோபம் எதற்கு? ஆனால் உங்கள் பேனா முனை மிகவும் சாமர்த்தியமாக இயங்குவதால் நான் எல்லாவற்றையும் மறந்துவிடுகிறேன். ஒன்றுமறியாத என் சுந்தரி! நீங்கள் மலையை உதாரணமாகக் குறிப்பிட்டதைப் படித்து எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. ஆனால் இதில் நீங்களே சிக்கிக்கொண்டு விட்டீர்கள்! 'இதில் தலையை மோதிக்கொண்டால் இது உடையாது, அதன் அடித்தளத்தை பலமற்றதாக்க வேண்டும்'—என்று நீங்களே எழுதியிருக்கிறீர்கள். இதுபற்றி உங்கள் ஆலோசனை மண்டையை மோதிக்கொள்வது போன்றதுதான். இரத்தத்திற்குப் பழி இரத்தம் என்று கொள்வது மண்டையை மோதி உடைத்துக் கொள்வது போலாகும். இதற்குப் பதிலாக உண்மையான பிரசாரம், உயர்ந்த எண்ணங்கள் இவற்றின் இவற்றின் வாயிலாக சமுதாயத்தைக் கவருவதென்பது அந்த மலையை வேருடன் கவ்வுவது போலாகும்.

ஆனால் உங்கள் தாராள மனப்பான்மைக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். நீங்கள் உங்கள் எண்ணத்தை இன்னும் உறுதிப்படுத்திக் காண்பித்தபடியே என் எண்ணப் படி நடக்க விரும்புகிறீர்கள். என்னுடன் வாழ்க்கைப் பாதை யில் நீங்கள் ஒன்று சேரும்போது, பகலை இரவு என்று கூறு வது எவ்வளவு தவறோ, அவ்வளவு தவறு இன்றைய உங்கள் எண்ணமும் என்பது தெள்ளத் தெரியும்.

நம் சமுதாயத்தின் இரத்தம் உண்மையில் நாளுக்கு நாள் வெண்மையாகி வருவதை நான் காண்கிறேன். ஆனால் அதைச் சீர்திருத்தியமைக்க நீங்கள் கூறும் சிகிச்சை முறை எப்படி இருக்கிறது தெரியுமா? பைத்தியம் பிடித்த நாய் ஒரு வனைக் கடித்துவிட்டது என்று வைத்துக் கொள்ளுங்கள். அவனை நன்கு ஸ்நானம் செய்யச் சொன்னால் அதுவே அதற் குச் சிகிச்சை என்று கூறுவது போலிருக்கிறது.

சுந்தரி! நாம் பிரசாரத்தின் வாயிலாக வெண்குருதி படைத்த மக்களினுள்ளே சிறந்த மருந்தைப் புகுத்தியாக வேண்டும். அப்போதுதான் (உயிரற்ற) வெளுத்த ஜீவ அணுக்கள் விலகி, அவற்றிற்குப் பதிலாக சிவந்த (உயிருள்ள) அணுக்கள் பிறக்க இயலும்.

இதற்காக நான் என் கச்சையை வரிந்து கட்டிக்கொண்டு விட்டேன். 'இந்தப் பணியில் நாம் இருவரும் இணை பிரியாமல் ஈடுபடவேண்டும். இன்னும் நான்கைந்து நாட்களில் நான் உங்களை அழைத்துச் செல்ல அங்கு வருகிறேன். அம்மாவை நான் சம்மதிக்கச் செய்து விட்டேன். என் வேலையில் அவர்கள் இடைஞ்சலாக இருக்கவே மாட்டார்கள். உங்களுடனும் ஒத்துழைத்து வேலை செய்பவர்கள். இதற்காக அவர்களுடைய ஒரே ஒரு நிபந்தனையை நான் ஏற்றுக்கொள்ள நேர்ந்தது. அவர்கள் உயிருடனிருக்கும் வரை அவர்களை விட்டு எங்கும் தொலைவில் சென்றிருக்கக்கூடாது என்பதுதான் அந்த நிபந் தனை. ஆகையால், இப்போதிலிருந்தே நீங்கள் ஆயத்தமாக இருப்பீர்கள் என்று நம்புகிறேன்.

இது பற்றி நாம் என்ன செய்யலாம் என்று நேரில் கலந்து நிச்சயிக்கலாம். ஆனால் தற்போதைக்கு நாம் இருவரும்

வீட்டிலிருந்தபடியே ஒரு சிறு வேலையில் ஈடுபடவேண்டும். இங்கிருந்துதான் நம் புது வாழ்வு துவங்கப் போகிறது. சில தினங்களுக்குப் பிறகு நம் கிராமத்து சேட் லாலா ரலா ராமின் மகளுக்குத் திருமணம் நடக்கவிருக்கிறது. இதில் பலவிதமான ஆட்டம், பாட்டம், மதுபானக் களியாட்டம் முதலிய வெட்டிச் செலவுகள் இருக்கப் போவதாகத் தெரியவருகிறது. பணம் தண்ணீரைப் போல் செலவாகப் போகிறதாம்.

சுந்தரி? எவ்வளவு வெட்கக்கேடான விஷயம் பார்! நம் கிராமத்துக் கிழவர்கள் எல்லோரும் கும்பலாக வேசியின் ஆடல்—பாடலை ரசித்துக் கொண்டிருக்க, அவர்களுடைய சகோதரிகளும், பெண்களும் மாடியின் ஜன்னல் வழியாக இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருப்பார்கள். நாக்கைப் பிடுங்கிக்கொண்டு ஏன் அவர்கள் சாகக்கூடாது என்று நான் கேட்கிறேன்! நாம் அவர்களுக்கு அறிவுறுத்தினுல் இத்தகைய ஈனச் செயலிலிருந்து விடுபடுவார்கள் என்று நான் நினைக்கிறேன். போதும், இனி என்ன எழுதுவது? இன்னும் ஐந்தே நாட்களில் நான் உங்களிடம் வந்து விடுவேன்.

இப்படிக்கு,
உங்கள், பச்சன் சிங்.

இன்னும் ஒரு விஷயம்—கடிதத்தை முடித்த பிறகு நினைவிற்கு வந்தது. உங்களுக்கு என் நல்வாழ்த்துக்கள். இப்போதெல்லாம் பஞ்சாபிப் பத்திரிகைகளில் இடைவிடாமல் உங்களுடைய கதைகள் வெளி வருகின்றன. அன்று பட்டணத்திற்குச் சென்றிருந்தேன். பார்த்து அப்படியே வியப்பில் மூழ்கிவிட்டேன். நீங்கள் மிகவும் அமர்க்களமாக எழுதியிருக்கிறீர்கள். சமுதாயத்தின் இதயமற்ற தன்மையை உங்களைப் போல் யாராலும் வருணிக்க முடியாது. என் சுந்தரி ஒரு நாள் மிகவும் சிறந்த எழுத்தாளர்களில் ஒருத்தியாகத் திகழ்வாள் என்று என் உள்ளம் கூறுகிறது.

ஆனுல் சுந்தரி! நான் உங்களுடைய எழுத்துத் திறமையைப் பாராட்டுவதோடு கூட ஒரே ஒரு வார்த்தைக் கூற

விரும்புகிறேன். உங்கள் படைப்பில் சற்று மென்மையான சுபாவமும், பொறுமையும் சிறிது அதிகமாகத் தேவைப்படுகிறது. சமுதாயத்தின் கொடுமைக்கு ஆளான ஒரு கையிலிருந்து இந்த எழுத்துக்கள் பிறந்திருக்கின்றன என்பதை நான் ஒப்புக்கொள்கின்றேன். ஆயினும் கடுமை, இம்சை முதலிய உணர்ச்சிகளுக்கு உங்கள் படைப்புக்களில் இடம் இருக்கக்கூடாது. இரக்கத்தால் இரத்தத்தைத் துடைக்க முடியாது. இனி எழுதப் போகும் எழுத்துக்களில் இந்த மாற்றத்தை நீங்கள் கொண்டு வருவீர்களா? அப்படிச் செய்ய முயற்சிப்பீர்களா?

## [ 23 ]

சுந்தரி முதலில் தீவான்பூருக்கு வந்ததும் தன் அன்புத் தந்தையின் எரிந்துபோன நினைவுச் சின்னத்திற்கு அஞ்சலி செலுத்தினாள். அந்தத் தூளியைச் சிரத்தில் எடுத்து வைத்துக்கொண்டாள். அணைந்த மரக்கட்டைகளில் இன்னும் கொஞ்சம் சாம்பல் அங்கு எஞ்சியிருந்தது. சுந்தரியைப் பொறுத்தவரையில் அது சாதாரணமான சாம்பல் அல்ல— அதில் கடந்த காலத்து அவளுடைய வாழ்க்கைச் சித்திரம் முழுவதும் இருந்தது. அவளுக்கு நினைவு தெரிந்த நாள் முதல் லாஹோர் சென்ற நாள்வரை, நீண்ட நெடுங்காலம் வரை இருந்த காட்சி அவளுடைய கண்களுக்கெதிரே வந்தது. ரோடுவின் பாசம், அதன் ஒவ்வொரு கணமும் அவளுடைய நினைவிற்கு வந்தது. அவளுடைய உள்ளத்தை அந்த நினைவு உலுக்கியது. எவ்வளவு நேரம் வரை அங்கு சிலைபோல் உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தாளோ தெரியாது. பிறகு பச்சன் சிங் அடிக்கடி வற்புறுத்தியதன் பேரில் அவள் அங்கிருந்து எழுந்தாள்.

சுந்தரி தங்குவதற்கான ஏற்பாட்டை பச்சன் சிங் முதலிலேயே செய்துவிட்டான். தன் வீட்டிற்கு அவளை அழைத்துச்சென்று தன் தாயின் மனதிற்கு வருத்தமளிக்க அவன் விரும்பவில்லை.

ரவாணி கிராமத்து மக்கள் சிலர் அங்கு ஒரு பெண்டிர் பாடசாலையை ஆரம்பித்தனர். இங்கிருந்த சில மக்கள் பச்சன் சிங்கிடம் மிகவும் மரியாதையாக நடந்துகொண்டனர். நான்கைந்து பேர்களின் உள்ளத் துணிவால் அங்கு நல்ல விழிப்பு ஏற்பட்டுவிட்டது. ஆகையால் அங்கு பச்சன் சிங் என்றால் எல்லோருக்கும் மரியாதை அதிகம். தான் பிரசாரம் செய்ய அந்த இடத்தைக் கேந்திரமாக வைத்துக்கொள்ளலாம் என்று பச்சன் சிங் நினைத்தான்.

சுந்தரி அந்தப் பள்ளியின் ஆசிரியையாக நியமிக்கப் பட்டாள். தன் அன்புக்குரிய அவளை ஒரு நல்ல இடத்தில் அமர்த்தியதால் பச்சன் சிங்கின் பெருங்கவலை தீர்ந்து விட்டது. தீவான்பூரிலிருந்து ரவாணி கிராமம் வெகு தொலைவில்லை, முக்கால் மைல்தானிருக்கும்.

சேட் ரலாராமின் வீட்டில் திருமண ஊர்வலம் கிளம்ப விருந்தது. அந்தச் சமயத்தில் நடக்கப்போகும் அமளி துமளியை நிறுத்தவேண்டும் என்று பச்சன் சிங் பல தினங் களாக முயற்சித்துக்கொண்டிருந்தான். ஆனால் இதுவரை அவன் அதில் வெற்றி பெறவில்லை. காரணம், கிராமம் முழுவதும் பச்சன் சிங்கிற்கு எதிராக இருந்தது. அதுமட்டு மன்றி, எப்போது அந்த நேரம் வரும், ஓரிரு மணி நேரம் மறந்து களிக்கலாமே என்று மக்கள் ஏங்கிக்கொண்டிருந்தனர். மேலும் சேட் ரலாராம் கிராம மக்கள் அனைவருக்கும் மிகப் பெரிய விருந்து வேறு அளித்திருந்தார். தில்லியிலிருந்து நாட்டியக்காரி வேறு வரப்போகிறாள் என்று கேட்ட மாத்திரத் தில் கிராமத்து மக்களின் மகிழ்ச்சிக்கு எல்லையே கிடையாது. அவர்களுடைய முகங்கள் மலர்ந்து காணப்பட்டன. மிகவும் கஷ்டப்பட்டு ஒவ்வொரு கணமாக அவர்கள் கழித்துக் கொண்டிருந்தனர்.

ரவாணி போய்ச்சேர்ந்த சுந்தரி வீட்டில் எல்லாப் பொருட் களையும் சீர்படுத்தி வைத்துக்கொண்டிருந்தாள். பகல் முழுதும் அலைந்துவிட்டு பச்சன் சிங் அங்கு வந்து சேர்ந் தான். வெளியே யிருந்தபடியே குரல் கொடுத்தான்.

சுந்தரி வேலையை அப்படியே போட்டுவிட்டு அவனருகே வந்தாள்—'காலையில் எழுந்து சென்றவர், எட்டியே பார்க்க வில்லையே?' என்று கேட்டாள்.

அன்பு கனிந்த முறுவலுடன் பச்சன் சிங் பதிலுரைத் தான்—'என்னத்தைச் சொல்வேன், சுந்தரி? நான் திரிந்து அலுத்துவிட்டேன்.' பிறகு உள்ளே சென்று கட்டிலின் மீது அவன் அமர்ந்துகொண்டான். சுந்தரி மிகவும் பயத்துடன் கேட்டாள்—'ஏன் அப்படி?'

சட்டைப் பித்தானைக் கழற்றிவிட்டு வியர்வையைத் துடைத்துக்கொண்டே பச்சன் சிங் கூறினான்—'ரலாராமின் வீட்டில் வெள்ளிக்கிழமை திருமண ஊர்வலம் வரப்போகிறது என்று உங்களிடம் நான் சொன்னேனல்லவா?'

'ஆமாம், சொன்னீர்கள்.'

'இன்று வியாழக்கிழமை.'

'பிறகு?'

'நாளைக்கு ஊர்வலம் வரும்!'

'அதற்காக?'

'நாம் வேலை செய்தாக வேண்டுமே!'

சுந்தரி அன்புடன் அவனுடைய முகத்தைப் பார்த்துக் கேட்டாள்—'அப்படியானால் ஏன் தாமதிக்கவேண்டும்?'

'எனக்கு இந்தக் காரியத்தில் வெற்றி கிடைக்காதோ என்று எனக்குத் தோன்றுகிறது.'

'ஏன்?'

'தனிமையில் ரலாராமை மட்டும் சரிபடுத்துவது சிரமமல்ல. ஆனால் இங்கு நிலைமை அப்படியில்லையே. "எல்லாம் ஒரு குட்டையில் ஊறிய மட்டை" என்பார்களே அப்படியிருக் கிறது கிராமம் முழுவதும்—கிராமத்து மக்களனைவரும் ஒன்று சேர்ந்தல்லவா நாட்டியக்காரியை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர்!'

'அப்படியானால் நாம் எடுத்தடி வைத்த முதல் முயற்சியே தோல்வியா?'

'தோல்வி மட்டுமா! படுநஷ்டம் என்று நினைத்துக்கொள்.'

'அப்படியானால் நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்?'

'ஒருமுறை ரலாராமின் பக்கமே சேர்ந்துகொள்ளலாமா என்று பார்க்கிறேன். அப்போதுதான் வலையில் பறவை சிக்கும்!'

'இப்போது நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?'

'ஒரு இடமாக இருந்தால் சொல்லமுடியும். எத்தனையோ இடங்களில் படுதோல்வியடைந்துவிட்டு வருகிறேன்!'

'என்ன பதில் கிடைத்தது?'

'ஒரே சாக்குப் போக்குத்தான்!'

'வரும்போதே ரலாராமைச் சந்தித்துவிட்டு வருவது தானே! இப்போது போகவேண்டுமானால் ஒரு மைல் தூரம் நடக்கவேண்டுமே!'

'உங்களைப் பார்க்க மட்டும் வரவில்லை. இன்னும் ஓரிரு பெரிய மனிதர்களையும் அழைத்துக்கொண்டு செல்லலாம் என்று நினைக்கிறேன்.'

சிறிது நேரம் வரை பேசிக்கொண்டிருந்துவிட்டு பச்சன் சிங் சென்றுவிட்டான். சுந்தரி மிகப் பெரிய கவலையில் மூழ்கியவளாய் உட்கார்ந்து விட்டாள்.

சிறிது நேரங்கழித்து பச்சன் சிங் தீவான்பூர் சென்று விட்டான். நேராக ரலாராமின் வீட்டைச் சென்றடைந்தான். ரவாணி கிராமத்திலிருந்து ஒருவரும் அவனுடன் செல்லத் தயாராக இருக்கவில்லை. திருமணத்திற்கான ஏற்பாடுகள் மும்முரமாக நடந்து கொண்டிருந்தன. ஒரு புறம் தையற் காரர்கள் துணிகளைத் தைத்துக் கொண்டிருந்தனர். மறுபுறம் கிராமத்துப் பஞ்சாயத்துத் தலைவர்கள் கட்டளைக்குக் காத்துக் கொண்டிருந்தனர். ஷாவின் மகன் த்ருநாத் எல்லா வேலை களையும் அவர்களுடைய பொறுப்பில் விட்டிருந்தான். உள்ளே இனிப்புப் பண்டங்கள் மணம் வீசிக் கொண்டிருந்தன. பெண்கள் டோலக் வாசிப்பதில் ஈடுபட்டிருந்தனர்.

கிராமத்துப் பிரமுகர்களிடையே பாலாசிங்கும் அவனுடைய தோழர்களும் கூட அமர்ந்திருந்தனர். அவர்களைக் கண்ட பச்சன் சிங்கின் இரத்தம் முதலில் கொதித்தது. ஆனால் அவன் அந்நிலையை வெளிக் காண்பித்துக் கொள்ளாமல் மறைக்க முயன்றான். அவன் உள்ளே நுழைந்ததும் அவர்கள் ஒருவருக்கொருவர் சாடை காண்பித்துக் கொண்டனர்.

அவன் 'ஸத் ஶ்ரீ அகால்' என்று கூறி எல்லோருக்கும் வணக்கம் தெரிவித்தான். பிறகு ஒரு ஓரத்தில் அமர்ந்து கொண்டான். யாருக்கும் மூச்சுவிடக் கூட அவகாசம் கிடையாது. எல்லோரும் தத்தம் வேலையில் ஈடுபட்டிருந்தனர். பச்சன் சிங்கின் உள்ளத்தை யாரோ முறிப்பது போலிருந்தது. அவன் வந்த வேலை வெற்றிகரமாக முடியவில்லை என்பது ஒரு புறமிருக்க, அதைப்பற்றி வாய்திறக்கக் கூட வாய்ப்புக் கிடைக்காமல் அவன் தவித்தான்.

அவன் வெகு நேரம் வரை ஏதாவது வாய்ப்புக் கிடைக்குமா என்று பார்த்தான். இதற்குள் மதகுரு 'டக்டக்' என காலணிகள் ஒலிக்க உள்ளே வந்துவிட்டார். பச்சன் சிங்கிற்கு அவருடைய அட்டகாசங்களைப் பற்றித் தெரியாமலில்லை. ஆயினும் தன் வார்த்தைகளை நிச்சயமாக அவர் ஆமோதிப்பார் என அவன் உறுதி பூண்டிருந்தான்.

மக்களனைவரும் மிக அன்புடனும், பணிவுடனும் பெரியவரை 'ஸத் ஶ்ரீ அகால்' என்று கூறி, வணங்கி 'இங்கு உட்காருங்கள்' 'இங்கே அமருங்கள் ' என்று உரக்கக் கத்தினர்கள். ரலா ராமிற்குச் சற்று ஓய்வு நேரம் கிடைத்தது. அவன் வந்து மதகுருவிடம் பேச ஆரம்பித்தான். சமயம் பார்த்து பச்சன் சிங் தன் நெஞ்சத்தை உறுதிப் படுத்திக்கொண்டு 'ஷாஜி' என்று மெள்ளக் கூப்பிட்டான்.

அலட்சியமாக முகத்தை சுளித்துக்கொண்டு ஷா அவனைப் பார்த்தார். பிறகு—'என்ன பச்சன் சிங், என்ன செய்தி?' பச்சன் சிங்கைப் பற்றி அவர் பாலா சிங்கிடம் நிரம்பக் கேட்டு விட்டாற் போலிருந்தது.

அவருடைய குரூரமான பார்வை பச்சன் சிங்கின் எஞ்சியிருந்த தெம்பையும் பறக்கடிக்கச் செய்துவிட்டது. அவன் நடுங்கி விட்டான். சரிந்து விழும் குடிசையைச் சில கணங்கள் வரை தன் தோளின் பலததால் நிறுத்தி வைப்பது போலிருந்தது பச்சன் சிங்கின் நிலைமை. எப்படியோ மனதை உந்தித் தள்ளியபடி பச்சன் சிங் ஆரம்பித்தான்—'நான் அதைப் பற்றித்தான் உங்களிடம் கேட்டுக் கொள்ள வந்திருக்கிறேன்.'

'உம் சொல்லுங்கள்.'

'இதில் எனக்கு ஒருவித லாபமும் கிடையாது என்பதை நீங்கள் நன்கு அறிவீர்கள். இதில் நம் உற்றார் உறவினரின் லாப-நஷ்டம் தான் நேர இருக்கிறது. வேறு ஒன்றும் முடியாது என்றாலும் கிராமத்தில் அந்த நாட்டியப் பெண்ணை வர அனுமதிக்க வேண்டாம். இம்மாதிரி நிகழ்ச்சியால் நம் வீட்டுப் பெண்களின் உள்ளம் கெட்ட வழியில் சிந்திக்க வாய்ப்பு ஏற்பட்டு விடும்.'

ஷாவின் புருவங்கள் சினத்தால் நெளிந்தன. அவர் ஆத்திரத்தில் கத்த ஆரம்பித்தார்—'பச்சன் சிங்! எங்கள் மகிழ்ச்சிகரமான செயல்களில் நீங்கள் தலையிட வேண்டாம் என்று உங்களிடம் முன்னமேயே கூறியிருக்கிறேன். மேலும், என் கையிலில்லாத ஒரு செயலை நான் எப்படித் தடுத்து நிறுத்துவேன்? சம்பந்திகளின் அன்பு நனைந்த நாரைப் போன்றது என்று உங்களுக்குத் தெரியும். உள்ளத்தில் சற்று மனஸ்தாபம் ஏற்பட்டதோ, அவ்வளவுதான், வாழ்நாள் முழுவதும் சண்டை தான், பூசல் தான், பகை தான் "சம்பந்தியின் உறவு மணம் வரையில், திருமணத்தின் உறவு சாகும் வரையில்" என்று சொல்வார்களே, தெரியாதா?......'

பேச்சை முடிப்பதற்குள் அருகிலிருந்த ஒருவன் ஆரம்பித்து விட்டான்—'இது ஒரு பேச்சா என்ன? நாட்டியமும் ஆடல் பாடல் களியாட்டங்களும் செல்வந்தர்களுக்கு அணிகலன்கள். பச்சன் சிங்! மகனே! மகிழ்ச்சியான நிகழ்ச்சி நடக்கும்போது அதற்கு முட்டுக் கட்டை போடாதேயப்பா! ஷாஜியின் வீட்டில் அந்த நான்கு குடும்பங்களுக்கும் சேர்த்து இருப்பவள் ஒரே ஒரு மகள் தான். இப்போது மகிழ்ச்சியுடன் கொண்டாடா விட்டால் பிறகு எப்போது தான் இம்மாதிரி நாட்களைக் காணப் போகிறோம்! பெரியவரே! (மதகுருவிடம்) நான் சொல்வது உண்மைதானே!'

பல்லினால் நகத்தைக் கடித்துக் கொண்டும் பிறகு அதைச் சட்டையில் துடைத்துக் கொண்டுமிருந்தார் பெரியவர். வெளியே நீட்டிக் கொண்டிருந்த பல் வரிசையை நாவால்

தடவியபடியே அவர் பேசினுர்—'மிகவும் சரியான வார்த்தை தான்—இப்படிப்பட்ட நாள் எப்போதுமா வரப் போகிறது?'

பச்சன் சிங் நடுங்கிய படியே கூறினுன்—'பெரியவரே, இதுதான் குரு சம்பிரதாயத்தின் சித்தாந்தமா? உங்களைப் போன்றவர்கள் இம்மாதிரியான இடங்களில் உட்கார்ந்து கொண்டு மதுபானத்தையும், நாட்டியக் கேளிக்கைகளையும் பற்றிப் பிரசாரம் செய்வது தகுமா? நீங்கள் குருத்வாரத்தின் மதகுரு. நீங்கள் இவ்விதம் உங்கள் கடமைகளினின்றும் நழுவலாமா? இது உங்களுக்கு அழகா?'

பெரியவர், தடுமாறிப் போனுர். ஆனுல் பாலாசிங்கினுல் சும்மா இருக்க முடியவில்லை—'பாவம், சாப்பாட்டிற்கு வழி யில்லாத பெண்களுக்கு நடனமாடும் வாய்ப்புக் கொடுக்காமல் அவர்களுடைய வயிற்றில் அடிப்பது சரியாகுமா? சும்மா, ஒன்றும் செய்யாமல் அவர்கள் காசு வாங்கிக் கொள்வதில்லை. நூற்றுக் கணக்கான மக்களைத் தங்கள் ஆடல் பாடல்களால் மகிழ்வித்துப் பிழைக்கின்றனர். பிறகு மதுபானத்தைப் பற்றிக் கூறினீர்கள். அதில் கெட்ட பொருள் என்ன இருக் கிறது? மரப் பட்டையும் வெல்லமும் தானே?'

பாலாசிங்கிற்குப் பச்சன் சிங் பதிலேதும் சொல்லவில்லை. எப்படிச் சொல்வான்? அங்கு தான் தடி எடுத்தவன் தண்டல் காரன் எனும் நிலைமையாயிற்றே! பாலா சிங்கின் ஆமோதிப் பினுல் பெரியவருக்குத் தெம்பு வந்து விட்டது. அவர் பைஜாமாவின் நுனியைப் பிடித்துச் சொறிந்த படியே கூறினுர்—'மதுபானம் கெடுதல் விளைவிக்க கூடியதல்லவே! அதுதான் மருந்தாயிற்றே. ஆனுல் அதிகமாகக் குடிக்கக் கூடாது.'

பச்சன் சிங்கின் இளமை நிரம்பிய உடலின் இரத்தம் கொதித்தது. இவர்களிடம் சூடு சுரணை இருந்தால்தானே நாம் பேசுவது புரியப்போகிறது என்று அவன் நினைத்தான். ஆனுலும் அவனுல் மதகுருவின் வார்த்தைக்குப் பதிலளிக் காமல் இருக்க முடியவில்லை. அவரை முறைத்துப் பார்த்த படியே கூறினுன்—'சரி, கெட்ட பொருளில்லை. மிகவும் நல்ல

பொருள்தான். மது அருந்த வேண்டாம் என்று நல்லுரை கூறுகிறதே, அதற்கு என்ன சொல்லப் போகிறீர்கள் ?'

சற்று நிதானித்துக்கொண்டு, காதைக் குடைந்தபடியே கூறினர்—'ஆமாம், கூடாது என்றுதான் சொல்லப்பட்டிருக்கிறது! ஆனால் வேறு வழி கிடையாது என்றால் மனிதனால் என்னதான் செய்ய முடியும் ?'

கோபத்திலும்கூட பச்சன் சிங்கால் சிரிக்காமலிருக்க முடியவில்லை. எல்லாரும் இவ்விரு செயல்களிலும் ஒருவிதமான தீமையும் கிடையாது என்று நிரூபிக்கத் துவங்கினர்.

பச்சன் சிங் பலவிதமாக அவர்களுடைய பேச்சுக்களை எதிர்க்க முயற்சி செய்தான். ஆனால், இவர்களிடம் நம் திறமை பலிக்காது என்று கருதிப் பேசாமலிருந்துவிட்டான்.

அட்டகாசம் இன்னும் அதிகரிக்கவே பேசாமலிருப்பதே சரி என்று கருதிய அவன் எழுந்து வெளியே சென்றுவிட்டான். அவன் வெளியே அடி எடுத்து வைத்ததுமே எல்லோரும் அவனைப் பரிகசிக்கத் துவங்கினர்.

இதே சமயத்தில் பாலா சிங் தன் நண்பன் ஒருவனுடைய காதருகே சென்று, 'வீரு! இந்தக் கழுதையின் அறிவைப் பார்த்தாயா ?' என்று கேட்டான்.

'அறிவாவது ? அவன் வேண்டுமென்றே போக்கிரித்தனம் செய்கிறன். அவனை இவ்வளவு அவமானப்படுத்தியும் வெட்கமில்லாமல் நடந்துகொண்டானே !'

'இவன் அவ்வளவு சுலபமாக வழிக்கு வந்துவிட மாட்டான். வளைந்த ஆணியைச் சுத்தியால் தட்டினால்தான் நேராக ஆகும் !'

'எனக்குத் தோன்றுகிறது.........இவனுடைய தினசரி......'

விரலை வாயில் வைத்து அடக்கியபடியே பாலாசிங் கூறினன்:—'சும்மா இரு ! நான் செய்யும் சூழ்ச்சியிலே இவன் இருந்த இடம் தெரியாமல் பறந்துபோகாவிட்டால் என் பெயரென்ன என்று கேள். இவனை ஒருமாதிரியாகச் சரிப்படுத்தினலன்றி அந்தச் சின்னக்குட்டி நம் வழிக்கு வந்துவிடுவாளா என்ன ?'

[24]

மாலை நேரம். தில்லியிலிருந்து புகழ்பெற்ற நாட்டியப் பெண் 'மிஸ் அன்வர்ஜான்' வந்திருக்கிறாள் என்ற செய்தி கிராமத்துக் வந்ததோ இல்லையோ, அவ்வளவுதான், குழந்தைகள், காளைகள், கிழவர்கள் எல்லோருமே திரள் திரளாகக் கிளம்பிவிட்டனர். அந்தக் கிராமம்மட்டுமா என்ன, அக்கம்பக்கத்துக் கிராமங்களிலிருந்தும் மக்கள் வந்து கூடி விட்டனர்.

சேட் ரலாராமின் வீட்டில் திருமணம் என்றால் சாமானியமான காரியமா என்ன? சீர்வரிசை கொண்டுவரும் சம்பந்திகளும் சாமானியமானவர்களல்ல. தங்கள் மாகாணத்தின் மிகப் பெரிய சேட் ஆயிற்றே!

மாலை ஐந்து மணி வண்டியில் மக்கள் இறங்கினர். அழகான ஜோடனையுடன் ஊர்வலம் கிராமத்தை அடைந்தது. அன்வர்ஜானைக் கண்ட ஆண்களெல்லோரும் காதலன் மஜ்னுவின் கதிக்கு ஆளாகிவிட்டனர். முப்பது அல்லது முப்பத்தைந்து வயதிற்குக் குறையாத அன்வர் கடைகளில் விற்கும் ஒப்பனைப் பொருள்களின் உதவியால் இருபது வயதிற்குக்கூட மதிக்கமுடியாத நங்கையாகத் தோற்றமளித்தாள். அவளுடைய உடலமைப்பு, ரோஜா நிறத்துப் பவுடரால் நிறம் மாற்றப்பட்ட அவளுடைய முகம், மையிடப்பட்ட கண்கள், சிவந்த உதடுகள், நீண்ட பின்னல், இவை யாவும் எல்லோருடைய உள்ளங்களையும் கொன்று வதைப்பதென்று உறுதி பூண்டுகொண்டன போலும்!

ஊர்வலத்து மக்கள் கிராமத்திற்கு வெளியே ஒரு தோட்டத்தில் வந்து இறங்கினர். மக்கள் எல்லாவற்றையும் மறந்து நடனத்தைக் காணத் துடித்தனர். முன்பின் தெரியாதவரிடம்கூட எப்போது நடனம் ஆரம்பிக்கும் என்று கேட்கத் துவங்கிவிட்டனர். வந்திருந்த சம்பந்திகளுக்கும் ஆசை குறைவாக இருக்கவில்லை. மணமகனின் சகோதரனைப் பிடித்து எப்படியோ ஒரு நடன அரங்கிற்கு மக்கள் ஏற்பாடு செய்துவிட்டனர்.

ஒரு திறந்த வெளி மைதானம். அங்கு கம்பளங்கள் விரிக்கப் பட்டன. இடையிடையே அழகான விரிப்புக்களில் வாத்திய இசை வாசிக்கும் கலைஞர்கள் அமர்ந்திருந்தனர். முதல் வரிசையில் மணமகன், அவனுடைய அண்ணன், அவர் களுடைய வீட்டுப் பெரியவர், ஒரு பண்டிதர் இவர்களனைவரும் உட்கார்ந்திருந்தனர். இவர்களுக்கருகில் பத்துப் பதினைந்து பிரமுகர்களிருந்தனர். பிறகு மீதமிருந்த வரிசைகளில் பிள்ளை வீட்டார் தத்தம் பதவிக்கும் அந்தஸ்திற்கும் ஏற்றவாறு உட்கார்ந்திருந்தார்கள். சம்பந்திகள் உட்கார்ந்திருந்த இடத்தில் சற்று ஜோடனை அதிகமாக இருந்தது. மற்ற இடத்தில் சாதாரணமாக இருந்தது. பார்த்தவுடனேயே தெரிந்துகொள்ளும்படி அமைக்கப்பட்டிருந்தது அந்த இடம்.

எல்லாவிதமான ஏற்பாடுகளும் முடிந்துவிட்டன. அப்போது மணமகனின் சகோதரர் தம் அருகே அமர்ந்திருந்த பெரியவ ரிடம் அனுமதி கேட்டார். அன்பு நிறைந்த வார்த்தை களில் பெரியவர் கூறினர்—'அப்படியே ஆகட்டும்!' வாழ்க் கையின் இறுதிப் படியில் இருந்தார் அந்தப் பண்டிதப் பெரியவர். அவருடைய இடுப்பு வளைந்துவிட்டது. கழுத்து முன்புறம் தள்ளியிருந்தது. நடக்கும்போது நிலமகளுக்கு நமஸ்காரம் செய்துகொண்டே செல்வதுபோல் தோன்றும். அவருடைய தொந்தி நழுவித் தொடைக்கருகே வந்துவிட்டது. கண்கள், கன்னங்கள் இவற்றில் குழிகள் விழுந்துவிட்டன. தலையிலிருந்த தோல் சிற்சில இடங்களில் தலையைவிட்டு மறைந்துவிட்டது.

தபலாவில் மேக கர்ஜனை ஒலித்தது. அத்துடன்கூட ஆகாயத்தில் சந்திரன் பிரகாசித்தது! அன்வர்ஜானின் முதல் பாடலைக் கேட்டதுமே மக்கள் சொக்கிப்போய் சிலைகளாய் இருந்துவிட்டனர்.

இடையை வளைத்துப் பின்னலை நெளிய வைத்து, பரந்து விரிந்த கண்களில் காம வெறியூட்டும் உணர்ச்சிகளைக் காண் பித்து அன்வர்ஜான் ஆடிய ஆட்டம் மக்களை மதி மயங்கச் செய்தது—அவள் கவ்வாலி பாடலை ஆரம்பித்தாள்—

'இறைவா! உன் திருவிளையாடலை
நானும் தான் பார்க்கிறேன்!
எத்தனை பேர் உயிரிழப்பார்கள்
எத்தனை பேர் உயிர் பிழைப்பார்கள்
என்று—
நானும் தான் பார்க்கிறேன்!'

அவளுடைய அங்க நெளிவுகள் எல்லோரையும் பித்தர்களாக்கி விட்டன. ஆனால் மணமகனின் அண்ணன், அவளுடைய வீட்டுப் பெரியவர் இருவரையும் அன்பு எனும் மின்னலை ஆட் கொண்டு விட்டாள் போல் தோன்றிற்று. நடனமாடுவதோடு கூடத் தன் அன்பு வீச்சால் காயமடைந்தவர் எத்தனை பேர் என்பதையும் அன்வர்ஜான் கவனித்துக் கொண்டிருந்தாள். யாருக்குக் காயமதிகம், யார் தன் தாகத்தைத் தணித்துக் கொள்ள எப்படிப்பட்ட பானம் அருந்துகின்றார் என்பதை யெல்லாம் அவள் கண்காணித்துக் கொண்டுதானிருந்தாள். சரியான இடத்தில்தான் அவள் குறி பார்த்து அம்பை வீசி யிருக்கிறாள் என்று அறிந்தவுடன், அவளுக்கு தான் வெற்றி யடையப் போவதில் நம்பிக்கை இன்னும் அதிகரித்தது. உடனே அவள் அவ்விருவர் பேரிலும் இன்னும் கூரான பார்வைக் கணையை வீசினாள். புன்முறுவலுடன் மறுபடியும் பாட ஆரம்பித்தாள்—

'உயிர் போகிறதே' என்றேன் நான்
அந்தப் படுகொலை செய்யும் கொடியோன்
—'நாளை மரிப்பதை இன்றே இறந்து விடேன்
உன் சடல ஊர் வலத்தை
நான் காண வேண்டாமா!' என்றான்!

கரம் சந்த் (மணமகனின் அண்ணன்) தன் நிலையிழந்து காணப்பட்டான். பண்டிதர் அதற்கும் மீறிய நிலையை அடைந்து விட்டார். கரம்சந்த் ஒரு பத்து ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினான். அன்வர்ஜான் அந்த நோட்டை ஒரு நெளிப்பு நெளித்துக் கொண்டு பிடித்தாள். அதைக் கண்ட கரம்சந்த் இன்னும் மோசமான பித்த நிலையை அடைந்து விட்டான். அருகே அமர்ந்திருந்த மணமகன் தன் அண்ண

னுடைய நிலைமையைக் கவனித்துக் கொண்டிருந்தான். பண்டிதரின் சமிக்கைப்படி கரம்சந்த் சில ரூபாய் நோட்டுக்களை பின்புறமாகப் பண்டிதரின் கையில் வைத்து அமிழ்த்தினான். பண்டிதர் ஒரு நோட்டை உடனே எடுத்து அன்வர்ஜானிடம் கொடுத்தார்.

நோட்டை வாங்கிக் கொள்ளும்போது அவள் சற்றே பண்டி தருடைய விரலின் நுனியைத் தொட்டு விட்டாள். இதற்குள் பண்டிதர் தன்னை மறந்து பரவச நிலையை எய்தி விட்டார்.

இப்போது எல்லாத் திசைகளினின்றும் பணம் மழையெனப் பொழிய ஆரம்பித்து விட்டது. அன்வர்ஜான் அவற்றை யெல்லாம் திரட்டியெடுக்க இயலாமல் தத்தளித்தாள். ஆடவும் பாடவும் அவளுக்கு நேரமே கிடைக்காது போலாகிவிட்டது. பண்டிதர், கரம்சந்த் இருவரையும் ஒரு கள்ளப் பார்வை பார்த்துவிட்டு அவள் பாட ஆரம்பித்தாள் —

'உன் பார்வைக் கணையை
வீசு பார்ப்போம்!
இதோ உள்ளம், நெஞ்சு
இரண்டும் வைத்து விட்டேன்!
எப்படி நீ என்னைக் குறிபார்த்து வதைக்கிறாய்
என்றும் பார்த்து விடுவோம்!'

தன்னை மறந்த நிலையில் பண்டிதர் துடியாய்த் துடித்தார். கையிலிருந்த எல்லா நோட்டுக்களையும் அவள்மீது வீசிவிட்டார் அவர். கரம்சந்த் நிறுத்தாமல் பணத்தை வீசியபடியிருந்தான். இருவருடைய தாராள மனப் பான்மையைப் பார்த்து மக்கள் பரவசமடைந்தனர். அன்வர்ஜானுடைய இந்த அசாதாரண மான மேதாவித்தனத்தைப் பாராட்டிக் கொண்டிருந்தனர்.

இப்போது அன்வர்ஜான் இரண்டாவது பாட்டைப் பாட ஆரம்பித்தாள் —

'அன்பனே! மேகம் இருண்டு வருகிறதே!
அமுதக் கிண்ணம் போன்ற
இனியாள்
பூங்காவில் வந்து காத்துக்
கிடக்கிறாளா என்ன?'

இந்தப் பாடலுடன் மதுபானத்தையும் எடுத்து ஊற்றி அன்வர் ஜான் எல்லோருக்கும் பரிமாற ஆரம்பித்தாள். பண்டிதருக்குத் தான் முதலில் கொடுத்தாள்.

'ஆகா! சபாஷ்! என்னத்தைச் சொல்வது!' என்றெல்லாம் குரல்கள் கிளம்பின.

மதுபானம் ஒருபுறம், இசையின் இனிமை மறுபுறம். இவற்றிற்கிடையே பணம் 'கிண் கிண்' என்று ஒலித்தது. எல்லையை மீறிவிட்டது மதுபானம். ஏழையிலிருந்து செல்வந்தர் வரை, சிறியோரிலிருந்து பெரியோர் வரை எல்லோருக்கும் மனமாறச் சுவைக்க மதுபானம் கிடைத்தது. பூனை டம்ளரை உருட்டி விட்டதும் எலிகளுக்குக்கூடத் தன்னை நினைத்துக் கொள்ளத் தெரிந்து விட்டதாம்! மது என்றால் எப்படியிருக்கும் என்று கண்ணால் கூடக் காணாதவர் இன்று சும்மாக் கிடைத்தவுடன் ஒருகை பார்த்து விட்டனர். பெண் வீட்டாரின் தலைவர் பாலாசிங், அவருடைய நண்பர்கள் அனைவரும் அங்கு இருந்தனர். அவர்களுடன் மதகுரு பெரியவரும் சேர்க்கப்பட வேண்டும்.

மக்கள் மதுவின் போதையில் ஆடத் துவங்கினர். சபையின் பின் புறத்திலிருந்து சில குரல்கள் கேட்டன—

'பஞ்சாபிப் பாடல்கள் கொஞ்சம் பாடுங்களேன்!'—

'தாமரை மலர்களைப்
போன்ற கண்களை யுடையவன் நீ
என் உள்ளத்தில் உறையும் நீ
அழகே வடிவெடுத்தவன்
நான் அமுதத்தைத் தர
இருக்கிறேன் — நீ பருக
மாட்டாயா?
மலர் மொட்டுக்களால்
படுக்கையை அலங்கரித்
திருக்கிறேன்—நீ
வர மாட்டாயா?'

பாடலைப் பாடிக் கொண்டே மது கிண்ணத்தில் ஊற்றி யளிக்கும் பெண்ணை மாறி விட்டாள். அவள் கொடுக்கப்

பருகாத—அதனால் தன் நினைவிழக்காத அதிருஷ்டக் கட்டை அங்கே யாரிருக்க முடியும்!

பாலாசிங்கும் அவனுடைய தோழர்களும் ஏற்கெனவே மது அருந்தும் புழுக்கள் தான். ஆனால் பெரியவருக்குமட்டும் பாதி டம்ளருக்கு மேல் கிடைத்ததே இல்லை. ஆனால் இன்று தான் அதில் மூழ்கி எழுந்திருக்கலாமே! அப்படிப்பட்ட வாய்ப்பு இன்று கிடைத்திருந்தது. ஆகவே பெரியவர் மதகுரு மனம் லயித்துப் பருகினார்.

கரம்சந்த், பண்டிதர்—இருவரும் இன்றுதான் பிறவிப் பயனை முழுமையாகப் பெற்றோம் என்று கருதி விட்டனர். மற்ற எல்லோருக்கும் அன்வர்ஜான் டம்ளரில் ஊற்றி மட்டும் கொடுத்தாள். ஆனால் இவ்விருவருக்கும் அவர்களுடைய உதடுகளில் வைத்து அருந்தச் செய்தாள்.

அன்வர்ஜான் மெள்ள மெள்ள ஒரு பிடி அதிகமாக நடந்து கொள்ள ஆரம்பித்து விட்டாள். இரண்டு டம்ளர்களில் மதுவை ஊற்றித் தான் ஒரு வாயளவு அருந்தி விட்டுப் பிறகு அவர்களுடைய வாயருகே கொண்டு வைத்தாள்; அதுவும் எப்படிப்பட்ட அசைவு நெளிவுகளுடன்! இருவரும் முழுமை யாகக் காயமடைந்து விட்டனர்.

மெள்ள மெள்ளக் களியாட்டம் வேறு உருக்கொண்டு விட்டது. மக்களனைவரும், ரசிகர்களனைவரும் வேறு ஒரு தனிப்பட்ட உலகையடைந்தனர். சிலர் கண்களை மூடிக் கொண்டு ஆடி விழுந்தனர். இன்னும் சிலர் தாறுமாறான சொற் களில் அன்வர்ஜானுடன் காதல் பேச்சுப் பேசிக்கொண்டிருந் தனர். தம் நினைவை முற்றிலும் இழந்தவர்கள்தான் அதிகம்.

அன்வர்ஜான் இவ்விதம் ஒருவாறாகத் தன் லீலைகளை முடித்துக்கொண்டாள். இசைக் கருவிகளை வாசித்து வந்த கலைஞர்களிடம் அவற்றை எடுத்துக் கட்டும்படி கூறி விட்டாள். சாரங்கி இன்று நினைத்ததற்கும் மேல் இசையைப் பொழிந்து தள்ளி விட்டது. கலைஞர்கள் தம் சாமான்களைக் கட்டிக் கொண்டு தங்களுக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த இடத்தை நோக்கிச் சென்று விட்டனர். ஆடி விழுந்து கொண்டே ரசிகர்களும் ஒருவாறு எழுந்துவிட்டனர். எல்லை மீறிக்

குடித்தவர்கள்தான் அநேகர். அவர்களெல்லோரும் அங்கேயே படுத்து விட்டனர்.

[25]

இரவு எட்டு மணி. பச்சன் சிங் ரவாணி கிராமத்திலிருக்கும் சுந்தரியைக் காண அவளுடைய வீட்டிற்குச் சென்றான். அவன் மன அமைதியிழந்து காணப்பட்டான். அவனுடைய நிலை கண்டு சுந்தரி நடுங்கிப் போனாள். அன்புடன் அவனது கரத்தைப் பற்றியபடி கேட்டாள்—'என்ன, நலம்தானே?'

ஒரு நீண்ட மூச்செறிந்த பச்சன் சிங் கட்டிலில் அமர்ந்தான்—'சுந்தரி! நான் தோல்வியடைந்து விட்டேன்!' என்றான். நேற்று அவன் பகல் முழுவதும் சுற்றித் திரிந்தது, எங்குமே அவனுக்கு வெற்றி கிடைக்காதது முதலியவை பற்றிக் கூறினான். இன்று அங்கு நடக்கும் நடனத்தைப் பற்றிக் குறிப்பிட்டான். தீவான்பூரில் மது வெள்ளமாக ஓடுவதையும், செல்வம் மழை யெனப் பொழிவதையும் விளக்கினான்.

சுந்தரியின் தாமரை போன்ற முகம் வெளுத்து விட்டது. தன் காதலனுடைய முயற்சிக்குத் தான் ஒரு சிறிதும் கைகொடுத்துதவ முடியவில்லையே என்று அவள் மனம் வெதும்பினாள். இருவரும் சேர்ந்து எந்தச் செயலில் ஈடுபடுவதாக இருந்தனரோ, அதே செயலைச் செய்வதில் பாவம், பச்சன் சிங் மட்டும் ஈடுபட்டு அலைந்து கொண்டிருந்தான்.

அதிக நேரம் வரை சிந்தித்த பிறகு அவளுடைய மனக் கவலையைப் போக்கும்படியான எண்ணம் ஒன்று சுந்தரிக்குத் தோன்றிற்று. அவளுடைய முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. அவள் தன்னையுமறியாமல் பேசினாள்—'சரி, இனி என் முறை! நான் பார்த்துக் கொள்கிறேன்!'

'உங்கள் முறையா?' பச்சன் சிங் வியப்புடன் கேட்டான்—'சுந்தரி! உங்களால் இந்த வேலையை எப்படிச் சமாளிக்க முடியும்? இத்தனை தினங்கள் முயற்சி செய்த பிறகு கூட என்னால் வெற்றியடைய முடியவில்லையே, அதில் நீ எப்படி தனித்து வெற்றியடைவாய், சொல் பார்க்கலாம்?'

சுந்தரி உற்சாகத்துடன் கூறினாள்—' வெற்றியடைய முடியா விட்டால் என்ன? நானும் திரும்பி விடுகிறேன். அவ்வளவு தானே! நம் கடமை முயற்சி செய்வது. வெற்றி தருவதும் தராததும் குருவின் சித்தம்!'

' வேண்டாம் சுந்தரி! இந்த அபாயகரமான செயலில் நீங்கள் இறங்குவதை நான் விரும்பமாட்டேன்!'

' நான் கூறுவதைக் கேளுங்களேன்!'

' உம்!'

' எனக்கு ஒரு உபாயம் தோன்றுகிறது!'

' என்ன?'

' கிளைகளை விட்டு விட்டு அடி மரத்தையே ஒரு கை பார்த்தால்?'

' அப்படி யென்றால்?'

' அதாவது அந்த நடனப் பெண்ணையே சந்தித்து, அவளிடம் சொல்லிப் பார்த்தால்?'

பச்சன்சிங் குலுங்கக் குலுங்கச் சிரித்தான். ' சபாஷ்! சுந்தரி! எந்த மந்திரத்தால் குளவிக் கூட்டையே நம் வசத்திற்குக் கொண்டுவர முடியவில்லையோ, அதே மந்திரத்தைக்கொண்டே நீ பாம்பைப் பிடிக்க விரும்புகிறாய்! இது முடியுமா?'

' முயலைச் சுட முடியாத துப்பாக்கி குண்டு, சில சமயங்களில் சிங்கத்தைச் சுட்டுக் கொல்ல உதவுகிறது. ஆகையால் நீங்கள் எனக்கு அனுமதி கொடுங்கள்.'

' உங்கள் விருப்பம் இதுவானால், நான் தடை செய்ய விரும்பவில்லை. ஆனால் இது நீரைக் கடைவது போலத்தான்!'

' எப்படியிருந்தாலும் சரி!'

' சரி, உங்கள் விருப்பப்படியே நடக்கட்டும்!'

' சரி, அப்படியானால், என்னை இப்போதே தீவான்பூருக்கு அழைத்துச் செல்லுங்கள். நானும் ஒரு முறை என் திறமையைப் பயன்படுத்திப் பார்க்கிறேன்!'

' ஆனால் இரவு, இவ்வளவு நேரமாகி விட்டதே. எப்படித் திரும்பிச் செல்வீர்கள்?'

' திரும்பிச் செல்லத் தேவையில்லை. இரவு நேரத்தை நான் உங்கள் வீட்டில் தங்கிக் கழித்து விடுகிறேன்.'

'சரி, அப்படியானால் கிளம்புங்கள்.' என்று கூறியபடி பச்சன் சிங் சுந்தரியை உடனழைத்துக் கொண்டு தீவான் பூருக்குக் கிளம்பினான்.

[26]

இரவு நேரம்; பத்து மணியடித்து விட்டது. அன்வர்ஜான் தங்கியிருந்த வீட்டுத் திண்ணையில் பெரிய மனிதர்களின் கூட்டம் இன்னும் குறைந்தபாடில்லை. தலைவலி என்று சாக்குச் சொல்லிஅவள் பலரிடமிருந்து தப்பித்துக் கொண்டு விட்டாள். அவளுடைய வேலைக்காரி அன்வர்ஜானுக்குப் படுக்கையை விரித்து விட்டாள். அவள் சென்று படுத்து விட்டாள்.

சற்றே அவள் கண் அயர ஆரம்பித்தாள். அதற்குள் யாரோ கதவைத் தட்டும் ஓசை கேட்டது. அவளுக்கு அலுப்புத்தட்டி விட்டது—'சனியன் பிடித்தவர்கள், ஒரு மணி நேரம்கூடக் கண்அயர விடமாட்டார்கள் போலிருக்கிறதே!' என்று முணுமுணுத்தாள்.

வேலைக்காரியிடம் 'அன்வர் தூங்கி விட்டாள்' என்று சொல்லச் செய்தாலென்ன என்று முதலில் அவள் நினைத்தாள். பிறகு வேலைக்காரியிடம் கதவைத் திறக்கும்படி கூறினாள்.

அடியோசை கேட்ட அன்வர்ஜான் எழுந்து உட்கார்ந்தாள். வேலைக்காரியைப் பின் தொடர்ந்து பதினாறு—அல்லது பதினேழு வயது சிறுமி வந்து கொண்டிருந்தாள்—கொடி போன்ற மெல்லிய உடல். அழகிய கண்கள். அன்வர்ஜான் வியப்படைந்தாள். 'இந்தச் சிறுமிக்கு இங்கு என்ன வேலை'—என்பது தான் அவளுடைய வியப்பிற்குக் காரணம். அன்புடன் சிறுமியை அருகில் வரும்படி சமிக்ஞை செய்தாள் அன்வர்—'மகளே! வாம்மா! இந்த வேளையில் நீ எங்கிருந்து வருகிறாயம்மா?'

தன் வாழ்நாள் முழுவதும் ஒரு பெண்மணி தன்னை 'மகளே' என்று கூப்பிட சுந்தரி கேட்டதே கிடையாது. அவள் குழந்தையாக இருக்கும்போது மற்ற குழந்தைகளின் தாய்மார்கள்

அவர்களை 'குழந்தாய், கண்ணே!' என்றெல்லாம் கூப்பிடும் போது அவளுக்கு என்னமோ போலிருக்கும். 'என் அம்மாவும் உயிருடனிருந்தால், என்னையும் அவள் இப்படித்தானே அழைப்பாள்!' என்று எண்ணிக் கொள்வாள். பிறந்த நாளிலிருந்து இந்தச் சிறு சொல்லை அவள் கேட்கத் துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தாள். நெருப்பு எரியத் துவங்கியவுடன் புகை இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடுவதுபோல், வருவதற்கு முன்பு அன்வரைப் பற்றி சுந்தரி கொண்டிருந்த கருத்துக்கள் 'மகளே' என்னும் வார்த்தையை அவளுடைய வாயினின்றும் வரக் கேட்டதும், இருந்த இடம் தெரியாமல் பறந்தோடி விட்டன.

வந்து கொண்டிருக்கும்போது வழியில்—'பெண் குலத்திற்கே இழுக்குத் தேடித்தரும் இந்தக் கெட்ட நடனக்காரியின் எதிரே நான் எவ்விதம் சென்று நிற்பேன்' என யோசித்துக் கொண்டிருந்தாள் சுந்தரி. 'அவளிருக்கும் அறையின் ஒவ்வொரு பொருளும் பாவச் செயலையும் நடத்தைகெட்ட அவளது நிலையையும் பறை சாற்றுவதாக இருக்குமே, அப்படிப்பட்டவளை நான் எப்படித் தீண்டுவேன்? தொலைவில் நின்றபடியே அவளுடன் பேசலாம்' என்றெல்லாம் சுந்தரி நினைத்துக் கொண்டிருந்தாள். ஆனால் இங்கு வந்ததும் தன்னையுமறியாமல் சுந்தரியே அவளருகே ஈர்க்கப்பட்டுக் கட்டிலின் பக்கத்தில் போய் நின்றாள்

அன்வர்ஜானின் வேலைக்காரி அந்த இடத்தை விட்டுச் சென்று விட்டாள். சுந்தரி பேசாமல் நின்று கொண்டிருந்தாள். 'குழந்தாய்! என்னிடம் உனக்கு ஏதாவது ஆக வேண்டிய வேலை இருக்கிறதாம்மா?' என்று அன்வர்ஜான் மறுபடியும் கேட்டாள்.

முதல் வார்த்தையே அவளுடைய உள்ளத்திலிருந்த வெறுப்பு உணர்ச்சியைப் பறந்தோடச் செய்து விட்டது. இரண்டாவது வார்த்தை 'குழந்தாய்' அவளுடைய செவிகளில் விழுந்ததுமே சுந்தரியின் உள்ளத்தில் பாசமெனும் சாளரம் திறந்து கொண்டது. அவள் தலை குனிந்தபடியே—'ஆமாம் அம்மா! வேலையிருக்கிறது!'

அன்வர்ஜானுக்கு அவள் நடந்து கொள்ளும் விதம் மிகவும் பிடித்திருந்தது. 'அம்மா' எனும் சொல் அவளுடைய செவிகளில் தேனைப் பாய்ச்சியது போலிருந்தது. சுந்தரியின் கரத்தைப் பிடித்து அவளைக் கட்டிலில் உட்காரவைத்து 'சொல்லம்மா!' என்றாள் அன்வர்.

சற்றும் தயங்காமல் சுந்தரி கட்டிலின் மீது அமர்ந்து கொண்டாள். அவளையே பார்த்தபடி சுந்தரி கூறினாள்—'அம்மா! நான் உங்களிடம் ஒன்று கேட்டுக் கொள்ள வந்திருக்கிறேன். ஆனால்...'

சுந்தரி மௌனமாகி விட்டாள். அவளுடைய முகத்தை அன்வர்ஜான் உற்று நோக்கி அவளுடைய எண்ணத்தைத் தெரிந்து கொள்ள முயற்சித்தாள். ஆனால் அவளால் ஒன்றுமே புரிந்துகொள்ள முடியவில்லை. தன் கரத்தை நீட்டிச் சுந்தரியின் முதுகைத் தடவியபடி அவளைத் தன் பக்கம் இழுத்தாள் அன்வர்—'குழந்தாய்! சொல்லம்மா! ஏன் சொல்ல மாட்டேன் என்கிறாய்?'

விலைமாதின் எந்தக் கரத்தை அவள் புனிதமற்றதாக, வெறுக்கத்தக்கதென நினைத்தாளோ, அதே கரத்தின் பரிசம் பட்டதும் ஒரு இனிய உறவின் வெதுவெதுப்பை உணர்ந்தாள். சுந்தரி அவளுடைய மற்றொரு கரத்தைத் தன் கரத்தால் எடுத்தாள். தன் தலையை அவளுடைய தோளருகே சாய்த்துக் கூறினாள்—'அம்மா, நான் வந்தவேலை மிகவும் கடினமானது. சொல்ல நாணமாக இருக்கிறது!'

அன்வர்ஜான் மெதுவாகத் தன் கையை அவளுடைய கையினின்றும் விடுவித்துக் கொண்டு அவளது இடுப்பில் தன் கையைக் கொடுத்து அணைத்துக் கொண்டாள்—'கூடாது! என் மகளே! வெட்கப்பட என்ன இருக்கிறது? நீ எது சொன்னாலும் நான் அதன்படி நடக்கிறேன்!' ஆனால் அவசரப்பட்டு அன்வர்ஜான் இவ்விதம் கூறிவிட்டாள் போலும்! 'விஷயம் என்ன என்று கேட்காமல் அதன்படி நடப்பதாக வாக்குக் கொடுப்பது தவறாயிற்றே' என்று பிறகு நினைத்தாள்.

சுந்தரி அவளருகே அமர்ந்து கொண்டாள். அவள் 'அம்மா!...' என்றாள். அதற்குமேல் அவளது வாயினின்றும்

ஒரு வார்த்தைகூட வரவில்லை. 'அம்மா' என்று சொன்னவுடனேயே அமுதத்தைப் பருகினாற் போன்ற பேரின்பத்தை அவள் அடைந்தாள். அவளுடைய ஒவ்வொரு நரம்பிலும் பாசமும் அன்பும் பரவி விட்டாற்போல் அவள் உணர்ந்தாள். மணம் கமழும் மலரை ஒருமுறை முகர்ந்தால் மட்டும் மனிதன் திருப்தியடைந்து விடுவதில்லை. மறுமுறையும் முகருகிறான். அதேபோல் சுந்தரியின் உள்ளமும் அடிக்கடி அந்த ஒரே சொல்லை உச்சரித்துக் கொண்டிருக்க ஆசைப்பட்டது. அவள் மறுபடியும் 'அம்மா' என்றாள்.

அன்வர்ஜான் ஒருவேளை இந்தத் தடவை சுந்தரி கூப்பிட்டதைக் கேட்கவில்லை போலும். அவளை மறுபடியும் தன்னுடன் அணைத்து மடியில் உட்கார வைத்துக் கொண்டாள். அன்புடன் அவளுடைய தலையைக் கோதிவிட்டாள். சுந்தரி அவளை என்ன கேட்கவந்திருக்கிறாள் என்ற நினைவே அன்வர்ஜானுக்கு இருக்கவில்லை. இயற்கை எனும் கலைஞனால் நிறுவப்பட்ட அந்த எழில்மிகு பொம்மை, மென்மையான பொம்மை அவளுக்கு மிகவும் பிடித்திருந்தது. அதைத் தன்னருகே வைத்துக்கொள்வதில் அன்வருக்கும் பேரானந்தமாக இருந்தது—ஒருவேளை அதுதான் தாய்ப்பாசம் என்பதோ?—இந்த ஆனந்தமின்றிதான் அவளுடைய உள்ளம் எப்போதும் வெதும்பிக்கொண்டே யிருந்தது.

சுந்தரி அவளுடைய மார்பில் சாய்ந்துகொண்டாள். அவளை உற்று நோக்கியபடி 'அம்மா' என்றழைத்தாள்.

அன்வர்ஜான் உற்றுக் கவனித்தாள். சுந்தரியின் கண்கள் கண்ணீரால் நனைந்திருந்தன. தலையணைக்கடியிலிருந்த கைக்குட்டையை அவள் எடுத்தாள். சுந்தரியின் கண்களைத் துடைத்தாள். அப்போது தன்னையுமறியாமல் அவளுடைய உதடுகள் சுந்தரியின் உச்சியை அன்புடன் முத்தமிட்டன.

சுந்தரி தன் இரு கரங்களையும் அவளுடைய கழுத்தில் போட்டாள்.

அன்வர்ஜான் உணர்ச்சிவசப் பட்டுவிட்டாள். பிறகுதான் சுந்தரி அவளை ஏதோ கேட்கப்போகிறாள் என்பது நினைவிற்கு வந்தது. அவள் அன்புடன் சுந்தரியின் முதுகைத் தடவிக்

கொடுத்தபடி கேட்டாள்— 'மகளே! ஏதோ சொல்ல விரும்பினுயே! சொல். நீ என்ன சொன்னுலும் தான் அதனை ஒப்புக்கொள்கிறேன்'

அவள் பேசிய அந்த வாக்கியத்தின் உண்மையை அவளுடைய முகத்தினின்றும் கண்டுபிடித்தவளாய் சுந்தரி கூறினுள்—'அம்மா, உங்களுக்கு இந்த தொழிலை செய்ய வெறுப்பாக இல்லையா?'

'வெறுப்பா?' அன்வர்ஜான் சுந்தரியின் கண்களினின்றும் எதையோ தேடமுயன்றவளாய்ப் பதிலளித்தாள்—'இந்தத் தொழிலில் உனக்குள்ள வெறுப்பு எனக்கும் உண்டாகிறது!'

'அப்படியானுல் ஏனம்மா, இதை நீங்கள் விட்டுவிடவில்லை?'

'ஏனென்ருல் இந்த உலகில் எனக்கு வேறு புகலிடம் கிடையாது.'

களங்கமற்ற குற்றவாளியின் உணர்ச்சி அன்வர்ஜானின் கண்களிலிருந்தும் புலப்பட்டது.

'அப்படியென்ருல்?' சுந்தரி கேட்டாள்.

'இதற்கு அர்த்தத்தை உன்னுல் புரிந்துகொள்ள முடியாதம்மா, குழந்தாய்!'

'ஏனம்மா?'

'நீ இன்னும் திருமணமாகாதவள்—ஏன், நான் சொல்வது சரிதானே?'

'ஆமாம்!' கண்களைக் கீழே தாழ்த்திக்கொண்டு சுந்தரி பதிலளித்தாள்.

'அதனுல்தான் என் நிலைமையை உன்னுல் புரிந்துகொள்ள முடியாது, இதன் காரணங்களையும் அறிந்துகொள்ள முடியாது என்கிறேன். திருமணமான பெண், திருமணம் முடிந்ததுமே கைம்பெண்ணுக ஆகிய பெண், அப்படியானவுடனேயே பாலில் விழுந்த எறும்பைப்போல் உற்ருர் உறவினரால் உதறித் தள்ளப்பட்ட பெண்—அதுவும் போக்கிரிகள், நடத்தை கெட்டவர்களின் உலகில் வீசி எறியப்பட்ட பெண்—இப்படிப்பட்ட நிலைக்கு ஆளான பெண்களால்தான் என் வார்த்தைகளின் பொருளைப் புரிந்துகொள்ள முடியும்......'

இதைக் கூறக் கூற அன்வர்ஜானுடைய முகத்தில் ஒரு தீவிரமான புரட்சி நிரம்பிய கொடூரமான உணர்ச்சி பிரதி பலித்தது. அவளுடைய நெற்றிப் பக்கத்தின் நரம்புகள் புடைத்துக்கொண்டன. கண்களில் இரத்தம் நிரம்பிவிட்டாற் போல் சிவந்து காணப்பட்டன.

பசியால் ஆவேசம் நிரம்பிய சிங்கம் தன்னெதிரே இருந்து கொண்டு கர்ஜனை செய்வது போலிருந்தது சுந்தரிக்கு. அன்வரைப் பார்த்ததும் அவள் நடுங்கிவிட்டாள். மார்பு படபடத்தது. எப்படியோ அவளிடமிருந்து தப்பி ஓடி விட்டால் என்ன என்றுகூட நினைக்க ஆரம்பித்துவிட்டாள்.

அன்வர்ஜானுடைய வார்த்தைகளில் நெருப்பு மழை பொழிந்தது—' இவ்வுலகில் எடுத்து அடிவைத்த இடமெல்லாம் மனித உருக்கொண்டு ஏமாற்றும் கள்ளர் நிறைந்திருக் கின்றனர். நண்பருக்குத் துரோகம், நாணயமின்றி நடந்து கொள்ளுதல், இவைதான் நிரம்பியிருக்கின்றன. இப்படிப்பட்ட உலகில் என்னைப்போன்ற அதிருஷ்டக்கட்டை தன் வயிற்றைக் கழுவ, தன்னை விற்பதைவிட வேறு வழியே கிடையாதம்மா— தந்தை, சகோதரன் முதலிய உறவுகொண்ட மனிதர்கூட என்னைத் தம் சிற்றின்ப விளையாட்டுப் பொருளாகக் கருது கின்றனர்......

'...உயிரைக் கொடுத்துப் பெற்ற குழந்தையை...அப்பா!... பால் குடிக்கும் குழந்தையைத் தாயிடமிருந்து பிரித்துக் காக்கை, நாய்களுக்கிடையே எறியும் இந்த உலகில் என்னைப் போன்றவர்களால் வேறென்ன தொழிலம்மா செய்யமுடியும்? நான் இந்தத் தொழிலை வெறுக்கிறேன் என்றல்லவா சொல்லி விட்டேன்!...இல்லை...இல்லை...எனக்கு இந்தத் தொழிலில் முற்றிலும் வெறுப்புக் கிடையாதம்மா. பெரிய செல்வாக்குள்ள வர்களும், செல்வந்தர்களும் நகரத்துப் பிரமுகர்களும் இன்று எந்தத் தொழில் காரணமாக என்னை இவ்வளவு மதிக் கின்றனரோ, என் வீட்டில் வந்து என்னைக் காணத் தவிக் கின்றனரோ, அந்தத் தொழிலை நான் வெறுக்கலாமா? இந்தத் தொழிலை, நான் கலை, கவுரவம், இறைவனின் கருணை எல்லா மாக நினைக்கிறேன். இந்தத் தொழில் எனக்கு எதைத்தான்

அளிக்கவில்லை? மதிப்பு, செல்வம், மனக்களிப்பு, கவுரவம்—எல்லாவற்றையு மளித்திருக்கிறது. ஒன்றே' ஒன்று...அதிலிருந்துதான் நான் வஞ்சிக்கப்பட்டிருக்கிறேன்—பிறந்த பச்சிளங் குழந்தையை எந்தக் கொடியவனோ, எந்த அரக்கனோ எடுத்து வஞ்சக எண்ணத்துடன் பிடுங்கி...உம்! உள்ளே தணலைப்போல் எரிகிறதே...என் வயிறு...நான் அந்தக் கொடுமை!...ஐயோ!...' என்று அலறி அழுதாள் அன்வர். அவளுடைய உடல் வெடித்து அங்கம் அங்கமாகத் தெறித்து விழுந்துவிட்டதுபோல் தவித்தாள். அவள் தலையணை மீது கவிழ்ந்து விழுந்தாள். விம்மி விம்மி அழுதாள்.

இந்தக் காட்சியைக் கண்ட சுந்தரியின் தலை சுற்ற ஆரம்பித்துவிட்டது. பயம், மனக்குழப்பம் இவை காரணமாக அவளுடைய கண்களுக்கெதிரே தாரகைகள் பளிச்சிடத் துவங்கின. ஒன்றுமே பேசாமல், தோல்வியால் மனமுடைந்தவளாய் அவள் விரைந்து சென்றுவிட்டாள். அன்வர்ஜானை அதே நிலைமையில் விட்டுவிட்டுத் தப்பினால் போதும் என்று செல்பவளைப் போல் கிளம்பிவிட்டாள்.

கீழே இறங்கியதும், அவள் எங்கிருந்து வந்தாளோ, அந்த இடத்தை ஒருமுறை திரும்பிப் பார்த்தாள். ஆனால் பத்துப் பன்னிரண்டு அடிகள் நடந்ததும் மறுபடியும் நின்றுவிட்டாள். மறுபடியும் அவள் எப்படி எப்போது அன்வர்ஜானுடைய இருப்பிடத்தை அடைந்தாள் என்பது அவளுக்கே தெரியவில்லை. ஏன் அப்படிச் செய்தாள்! அதற்குக் காரணம் என்ன என்று அவளுக்கே தெரியாது.

வாசற்கதவு இன்னும் திறந்துதான் இருந்தது. உள்ளே அடிவைத்ததும் இருளில் யார் மீதோ அவள் மோதிக் கொண்டாள். பயத்தின் மிகுதியால் இளங்குழந்தை தன் தாயை அணைத்துக் கொள்வதுபோல் சுந்தரி அந்தப் பொருளை அணைத்துக்கொண்டாள்.

சுந்தரி சென்றவுடன் தன் மனக்கவலையைக் கண்களின் வாயிலாக அன்வர்ஜான் வெளிப்படுத்தினாள். தலையைத் தூக்கிக் கண்களைத் திறந்து அவள் பார்த்தபோது அங்கே அந்தப் பெண் இருக்கவில்லை. அவளுடைய இதயத்தை யாரோ

இழுப்பதுபோல் தோன்றிற்று. காரணமின்றி அவள் ஓடினாள். ஏதோ ஒரு பொருளுடன் அவள் ஓடியபோது மோதிக் கொண்டாளே அது வேறொன்றுமில்லை. சிறுமி சுந்தரிதான். அவள் இப்போது மார்புடன் இணைந்துவிட்டாள்.

இருவரும் அதே அறைக்கு வந்து சேர்ந்தனர். சிறிது நேரத்திற்குப் பிறகு சுந்தரி அன்வரின் மடியில் இருந்தாள். சிறிது நேரங் கழித்து அன்வர் சுந்தரியின் கண்களை உற்றுப் பார்த்தபடி, 'மகளே! உன் பெயரென்ன?' என்று கேட்டாள்.

'சுந்தரி.'

'நீ எங்கேயிருக்கிறாய்? காரணமின்றி உன்னை என் உள்ளம் நேசிக்கிறது. நீ வாசற்படியருகேயே இருந்திராவிட்டால், உன்னைத் தேடிக்கொண்டு நான் வெகு தூரம் வந்திருப் பேனம்மா! உன் அப்பா என்ன வேலை செய்கிறாரம்மா?'

'அவர் இறந்துபோய்விட்டார்' என்றாள் சுந்தரி.

'என்ன வேலை செய்து வந்தார்?'

'குரங்காட்டி!'

'அப்படியா?'

'ஆமாம்.'

அன்வர்ஜான் மறுபடியும் கண் நிறைய அவளைப் பார்த் தாள்—'குரங்காட்டியின் வீட்டில் இவ்வளவு சிறந்த அழகா?' என்று யோசித்தபடியே கேட்டாள்—'உன் அம்மா?'

'எனக்கு அம்மா கிடையாது.'

'அட பாவமே! தாய் தந்தையரற்ற அனாதைக் குழந்தையா நீ? உன் தாய் இறந்து எத்தனை நாட்களாகின்றன, மகளே?'

'தெரியாது.'

'தெரியாதா?'

'எனக்கு அம்மாவே யிருக்கவில்லை!'

அந்தப் பதிலைக் கேட்டு அன்வருக்குச் சிரிப்பு வந்து விட்டது. பிறகு கேட்டாள்—'நீ குழந்தையாக இருக்கும் போதே இறந்துவிட்டாளா?'

'இல்லை.'

'பின்பு?'

'அவள் இருக்கவேயில்லை.'

'அப்படியானால் நீ எப்படிப் பிறந்தாய்?'

'நான் பிறக்கவேயில்லையே!' யோசிக்காமல் வாயில் வந்ததைப் பேசிவிட்டாள் சுந்தரி. ஆனால் இந்த முட்டாள் தனமான பதிலை நினைத்துப் பிறகு அவள் வெட்கமடைந்தாள். பிறகு அவள் கூறினாள்—'உண்மையாகத்தான் சொல்கிறேன். அப்பா என்னைப் புதரிலிருந்து எடுத்துவந்தார்.'

அன்வருடைய முகத்தில் பலவித உணர்ச்சிகள் அலைமோது வதைக் கண்டு சுந்தரி, 'நான் இவளுடைய தூக்கத்தைக் கெடுத்துக் கொண்டிருக்கிறேன். இங்கிருந்து விரைவில் சென்றுவிட வேண்டும்' என்று நினைத்தவளாய் அவள் எழுந் தாள்—'சரி அம்மா, நான் செல்ல அனுமதியுங்கள். நான் உங்களுடைய நேரத்தைப் பாழ்ப்படுத்திவிட்டேன். நீங்கள் மன நிம்மதியிழந்து காணப்படுகிறீர்கள். பிறகு எப்போ தாவது சந்திக்கலாம்!' என்றாள் சுந்தரி.

அன்வர் அவளுடைய தோளைப் பிடித்து உட்கார வைத்த படியே கேட்டாள், 'மகளே! அவர் உன்னை எந்தக் கிராமத்தி லிருந்து எடுத்து வந்தார்?'

சுந்தரி பதிலுரைத்தாள்—'வேறு எந்த கிராமத்திலிருந்து மில்லை. இந்தக் கிராமத்திலிருந்து தான் அவருடைய குடிசைக்கு வெளியேயிருந்த புதரிலிருந்து கொண்டுவந்தார்.'

பிறகு சுந்தரி அந்த இடத்தைப் பற்றி விவரமாகக் கூறினாள். இன்றுவரை நடந்த நிகழ்ச்சிகளனைத்தையும் ஒவ்வொன்றாக அவளிடம் எடுத்துரைத்தாள். அன்வரை அவள் பார்த்தபோது விம்மி விம்மி அவள் அழுதுகொண் டிருந்ததைக் கண்டு திடுக்கிட்டாள்.

'இவளுடைய மகனாவது மகளாவது இவ்விதம் காணமற் போயிருக்க வேண்டும். அதை நினைத்துக்கொண்டுதான் இப்படி அழுகிறாள்' என்று சுந்தரி நினைத்தாள். அன்புடன் அன்வரின் தோள்களைப் பிடித்து 'அம்மா! ஏன் அழுகிறீர் கள்?' என்று சுந்தரி கேட்டாள்.

அன்வரால் வருத்தத்தை அடக்க முடியவில்லை. இறுக சுந்தரியைக் கட்டிக்கொண்டு இன்னும் அதிகமாக அழத் துவங்கினாள். ஏதோ கூற நினைத்தாள் அன்வர், ஆனால்

அவளுடைய வாயினின்றும் சொற்கள் எழும்பவேயில்லை. மிகவும் சிரமப்பட்டு அவள் கூறினாள்—'என் கண்ணே! நான் தான் உன் அதிருஷ்டமற்ற தாய்! என்னிடமிருந்து தான் நீ பிரிக்கப்பட்டுக் காட்டில் எறியப்பட்டிருந்தாய்!'

'உண்மையாகவா?' என்று கேட்ட சுந்தரி மயக்கம் வந்து விழுந்துவிடுவாள் போலாகிவிட்டாள். இருவரும் வெகு நேரம் வரை ஒருவரையொருவர் தழுவிக்கொண்டிருந்தனர்.

இருவருடைய கண்களிலிருந்தும் கண்ணீர் இனி வர வழியில்லை என்று ஆகிய பின்பு ஒருவரையொருவர் பித்தரைப் போல் பார்த்துக்கொண்டே யிருந்தனர். சுந்தரி திடீரென்று உணர்ச்சியை அடக்க முடியாமல் அன்வரை இறுகத் தழுவிக் கொண்டு 'அம்மா! அம்மா!......நீங்கள்......நீங்கள்' என்று அரற்றினாள்.

அப்போது அன்வருக்கு என்ன தோன்றிற்றோ, உடனே சுந்தரியின் பிடியிலிருந்த தன்னை விடுவித்துக்கொண்டு எழுந்தாள். பின்னே ஓர் அடி எடுத்து வைத்துச் சற்றுத் தொலையில் நின்றுகொண்டு கூறினாள்—'அப்பப்பா! என் குழந்தாய்! இந்தக் களங்கமடைந்த பாவியின் உடலைத் தீண்டி நீ பெருந் தவறு செய்துவிட்டாயம்மா. பாவி பெற்ற மகளே! இழிவான என்னை நீ வெறுக்கவேண்டும். பாவச் செயலெனும் சேற்றில் எந்த இடம் அமிழ்ந்து கிடக்கின்றதோ, அங்கே ஒரு கணம் கூட நீ தங்கக்கூடாது கண்ணே! நீ புனிதமானவள் குழந்தாய்! உடனே இங்கிருந்து விரைந்து செல்......' தன் முகத்தைக் கைகளால் அன்வர் மூடிக் கொண்டாள். காற்றின் உருக்கொண்டு எங்காவது பறந் தோடி விடமாட்டோமா என்றிருந்தது அவளுக்கு. அன்பு அலைமோதிக் கொண்டிருந்த அவளுடைய உள்ளத்தில் திடீரென்று வெட்கம், பச்சாத்தாபம் மற்றும் அவமானம் குடிப்புகுந்தன. தான் ஒரு விலைமாதிற்குப் பிறந்த பெண் என்று தெரிந்துகொண்ட என் மகள் என்னைப் பற்றி என்ன நினைப்பாள்? பைத்தியத்தைப்போல் ஒரு மூலைக்கு ஓடிப்போய் மறைந்துகொண்டு வாயில் அடித்துக்கொண்டு அலறினாள்.

தான் என்ன பார்க்கிருள் என்றே சுந்தரியால் சிறிது நேரம் வரையில் நம்ப முடியவில்லே. அவளுக்கு எல்லாமே ஒரு கனவுபோலத் தோன்றிற்று. மறுபடியும் அவளுக்கு அன்வரின் குரல் கேட்டது. பரீட்சையில் தேருத மாணவன் தன் பெற்ருேரின் சீற்றத்திற்குப் பயந்து, ஏதோ சாக்குப் போக்குச் சொல்லி உளறும் இக்கட்டான நிலேபோலிருந்தது அன்வரின் நிலே. அவளுடைய குரல் நடுங்கிற்று.

சுந்தரியின் பக்கம் தன் இரு கரங்களேயும் நீட்டியபடி அன்வர் விம்மினுள்—' இல்லே, இல்லவே யில்லேயம்மா, இதில் நான் செய்த தவறே ஒரு சிறிதுமில்லே. நான் வேண்டு மென்றே ஒன்றும் செய்யவில்லே. என்னேச் செய்ய வைத்தவன் வேருருவன். என் நிலேமை பற்றிய முழு விவரமும் அறிந்த பிறகு நான் ஒரு பிழையும் செய்யாதவள் என்பதை நீயே அறிந்துகொள்வாய்.'

சுந்தரியின் உடலிலுள்ள நரம்புகள் யாவற்றையும் யாரோ நசுக்குவது போலிருந்தது. அவளுடைய நெஞ்சில் ஈட்டிகள் பாய்ந்தாற்போல் வலித்தது. உடனே எழுந்து அவள் அன்வரின் மீது விழுந்தாள். அவளேத் தேற்றியபடி கூறினுள்—' அம்மா! நீங்கள் ஒரு குற்றமும் செய்யாதவர்கள் என்பதில் எனக்கு ஒரு சிறிதும் சந்தேகமேயில்லேயம்மா! ஆனுல் எந்தப் பாதகன் உங்களே இந்நிலேக்குள்ளாக்கியவன், அதை முதலில் சொல்லுங்கள்!'

மகளின் கேள்விக்குப் பதிலளிப்பதற்காக அன்வர் தன்னேத் தான் சமாளித்துக்கொண்டாள். முன்புபோல் கட்டிலில் வந்து அமர்ந்துகொண்டாள். அதன் பிறகு ஆரம்பத்தி லிருந்து அந்த நாள் வரை நடந்த கதை முழுவதையும் சுந்தரிக்குக் கூறினுள். அந்தப் பச்சிளங் குழந்தையைக் கானகத்தில் விட்டுச்சென்ற விருத்தாந்தம் முழுவதையும் ஒன்றுவிடாமல் சுந்தரிக்கு அன்வர் எடுத்துரைத்தாள்.

கேட்டுக்கொண்டிருந்த சுந்தரியின் உள்ளம் நெருப்புப்போல் எரிந்தது. சமுதாயத்தின் குரூரச் செயலின் காரணமாக ஏற் கெனவே அவளது உடலின் ஒவ்வொரு அணுவும் வேதனேயால் தவித்துக் கொண்டிருந்தது. எந்த சமுதாயம் அவளுடைய

காதலனையும், வளர்ப்புத் தந்தையையும் துன்புறுத்திற்றே, அதே சமுதாயம்தான் அன்பே உருக்கொண்ட அவளுடைய தாயையும் இந்த அவல நிலைக்குள்ளாக்கியிருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்ட அவளுடைய உள்ளம் நெருப்பைப் போல் எரிந்தது. அப்போது பச்சன் சிங்கின் உபதேச மொழிகளனைத்தும் காற்றோடு காற்றாய்ப் பறந்து போயின. அவளால் அங்கு உட்கார்ந்திருப்பது கடினமாகி விட்டது. நீராவி ரயில் வண்டியைப் போல் அவள் பெருமூச்செறிந்தபடி எழுந்தாள். அவளுடைய உடல் நடுங்கிற்று. ஆனால் இன்னும் அன்வரின் கதை முற்றுப் பெறவில்லையே எனக் கருதி தன்னைத்தான் எப்படியோ சமாளித்துக்கொள்ள முயற்சித்தாள் சுந்தரி—'பிறகு என்ன நடந்ததம்மா?' என்று கேட்டாள்.

அன்வர் கூற ஆரம்பித்தாள்—'குழந்தாய்! உன் சின்னஞ் சிறு உடலின் மீது எனக்கிருந்த பாசத்தை என்னால் உனக்கு எடுத்துக் கூற முடியாது. கழுகு, ஓநாய் முதலியவற்றிற்கு உணவாக ஆக்கத் திறந்த வெளியில் நீ வீசி எறியப்பட்டாய். நெஞ்சில் ஈரமில்லாத உன் தந்தை (தாராசந்த்) நோய்வாய்ப் பட்டிருந்த என்னை உதறித் தள்ளிவிட்டுச் சென்றபோது என் கையில் ஒரு காசு கூட இருக்கவில்லை. சமையல் செய்யும் பாத்திரங்கள் இரண்டு—மூன்றைத் தவிர வேறு ஒருபொருளும் இருக்கவில்லை. எஞ்சியிருந்த பொருள்களைத்தான் அவர் முதலிலேயே சுருட்டிக்கொண்டு போய் விட்டாரே!'

கொலை செய்வதற்கு முன்பு கொலைகாரனின் முகத்தில் எத்தகைய உணர்ச்சியிருக்குமோ, அப்படி இருந்தது அன்வரின் முகபாவனை. தாராசந்தைப் பற்றிக் கூறும்போது அவளுக்கு மூச்சு வாங்கிற்று. மார்பு கருமானின் துருத்தியைப் போல் வீங்கி வெடித்துவிடும் போலிருந்தது. பேசிக் கொண்டிருக்கும் போதே மறதி அவளை ஆட்கொள்ள ஆரம்பித்தது. அவள் எழுந்தாள்—ஒரு டம்ளர் தண்ணீர் அருந்தி விட்டு மறுபடியும் கூறினாள்—'அவர் சென்று விட்டார். நான் மன நிம்மதியிழந்து தவித்துக்கொண்டிருந்தேன். இரவு இரண்டு மணியிருக்கும். இந்துக்களின் வீடே அருகில் ஒன்றும் இருக்கவில்லை. இந்த வீட்டின் மாடியிலிருந்து

இரண்டு பெண்கள் எப்படியோ குதித்து வந்தனர். என் குழந்தை அழும் ஒலி அவர்களுடைய செவிகளில் விழுந்ததோ என்னமோ! என்னைப் பாதுகாத்த அவர்கள் நன்ருக இருக்கட்டும். இவ்வளவு மோசமான நிலையிலும் என் உயிர் போகவில்லை. நான் உயிர் பிழைத்து விட்டேன். அவர்களில் ஒருத்தி பிரசவ நேரத்தில் செய்ய வேண்டிய உதவிகளைக் கற்றிருந்தாள். அவள் மனம் ஒன்றி எனக்கு உதவி செய்தாள்.

'இரண்டாம் நாள் அந்தப் பெண்களின் கணவன்மார் இருவரும் அருகேயுள்ள இந்துக்களிருக்கும் ஒரு பேட்டையில் என்னைப் பற்றிய செய்தியைத் தெரிவித்தனர். அந்தப் பேட்டையின் தலைவன் வந்தான். என் உயிரைக் காப்பாற்றிய பெண்மணியின் கணவன் "நாங்கள் நேற்றிரவிலிருந்து இந்தப் பெண்மணிக்கு உதவி செய்து கொண்டிருக்கிறோம்" என்று கூறி விட்டான். தன் மனைவி முதலில் இவளுக்குக் குடிக்கத் தண்ணீர் கொடுத்தாள். அதன் பிறகு தான் இவள் தன் சுய நினைவிற்கு வந்தாள் என்றும், பிறகு சூடான பால் முதலியன கொடுத்து மிகவும் முயற்சி செய்ததன்பேரில் இவள் உயிர் பிழைத்தாள் என்றும் சொல்லி விட்டான்.

'முஸ்லீமுடைய கையிலிருந்து தண்ணீர் சாப்பிட்டேன் என்று கேட்டதுமே, பேட்டைத் தலைவன் தன் காதுகளை இறுகப் பொத்திக்கொண்டான். "முஸ்லிமிடம் தண்ணீரும் மற்றவையும் வாங்கிச் சாப்பிட்ட பிறகு இவளை எங்களுடன் சேர்த்துக்கொள்ள முடியாது. தன் செயல் காரணமாக இவள் மதத்தினின்றும் விலக்கப்பட்டு விட்டாள்"—என்று கூறியபடியே அவன் ஓடிவிட்டான்.

'பாவம், முஸ்லீம் அன்பர்கள் என்ன செய்வதென்றே புரியாமல் திகைத்து நின்றனர். தாம் செய்த செயலுக்காக வருந்தினர். அப்போது நான் சுய நினைவில் தானிருந்தேன். ஏற்கெனவே இத்தகைய கொடுமையை அனுபவித்து நான் பழக்கப்பட்டவள்தான். மேலும் பேட்டைத் தலைவனது இதயமற்ற செய்கை என்னை இன்னும் கல் நெஞ்சத்தவளாக்கிற்று. நான் உணர்ச்சி வசப்பட்டு முஸ்லீம் அன்பர்களிடம் கேட்

டேன்—" சகோதரர்களே! இந்துக்கள் எனக்குப் புகலளிக்கா விட்டாலென்ன. நீங்கள் என்னை உங்கள் வீட்டில் பத்து தினங்கள் வரை தங்க அனுமதிக்க மாட்டீர்களா?"

'அவர்களில் ஒருவன் கூறினான்—" சகோதரி! நீங்கள் பத்து தினங்களென்ன, பத்தாண்டுகள் வேண்டுமானாலும் எங்களுடன் இருக்கலாம். எங்கள் உடன் பிறந்த சகோதரிகளும், எங்கள் மக்களும் சாப்பிடும் உணவை உங்களுடன் நாங்கள் பகிர்ந்து கொள்ளுவோம். முதலில் உங்களுக்களித்து விட்டுப் பிறகு உண்போம்! ஆனால் என்ன செய்வோம்! இங்கு இருந்தால் உங்கள் இந்து சமூகம் அதை எதிர்க்குமே என்றுதான் பயமாக இருக்கிறது!"

'நான் சீற்றம் கொண்டு துடித்தேன்—" இந்து சமுதாயமா? தெருவில் கிடக்கும் துரும்பிற்கும் கடையான நிலைக்கு என்னைக் கொண்டு வந்த இந்து சமூகம்! குற்றமே செய்யாத ஒரு அபலையை மண்ணோடு மண்ணாக்கக் கங்கணங் கட்டிக் கொண்ட சமூகம்! இந்த சமூகத்தை நீங்கள் மனிதர்களின் சமுதாயம் என்று மதிக்கிறீர்களா? முடியாது. என்னால் முடியாது. இப்படிப்பட்ட சமுதாயத்தை நான் வெறுக்கிறேன். நான் இறக்கும் வரையில் வெறுப்பேன். தெய்வத்திடம் பக்தி கொண்ட ஒரு ஜீவனிடம் உங்களுக்குச் சிறிதேனும் இரக்கம் இருந்தால் என்னை இங்கேயே சில தினங்கள் வரை இருக்க அனுமதியுங்கள் "—என்றேன் நான்.

'இதற்குப் பிறகு மற்றொருவன் கூறினான்—" சகோதரி! நீ எங்கள் தாய் பெற்ற எம் உடன் பிறப்பை விடப் பிரியமானவளம்மா. எங்களால் இயன்றவரை நாங்கள் உன்னைச் சுகமாக வைத்துக் கொள்கிறோம் அம்மா! ஆனால் என்ன செய்வோம் அம்மா? நாங்கள் கூலி வேலை செய்து பிழைப்பவர்கள். உனக்காக இந்து சமையல்காரனை நியமிக்குமளவு எங்களிடம் பணமில்லை. நாங்கள் மிகவும் ஏழைகள்!" நான் உடனே அவர்களுக்கு உறுதியளித்தேன்—" எனக்குத் தேவையில்லை. உங்கள் கையால் சமைக்கப்பட்ட உணவையே சாப்பிடுகிறேன், எனக்கு இந்து மதம் என்றாலே வெறுப்பாக இருக்கிறது."

'அன்று முதல் அவர்கள் தங்கள் சக்திக்கும் மீறி என்னைக் கவனித்துக் கொண்டார்கள். என் உடலில் ஒவ்வொரு அணுவும் அவர்களை வாழ்த்திற்று. சுமார் இரண்டு வாரங்கள் வரை நான் அவர்களுடைய வீட்டிலேயே இருந்து வந்தேன்.'

அன்வர்ஜான் தொடர்ந்து கூறினள்—'நீ பிறந்து பதினைந்து தினங்களானதுமே அந்தப் பேட்டையின் தலைவன் மறுபடியும் என்னிடம் வந்தான். அன்புடன் கூறினன்—"அம்மா, நான் அன்றிலிருந்து ஒரே கவலையிலாழ்ந்து கிடந்தேன். இப்போது உன்னை தில்லியிலுள்ள ஒரு அநாதை விடுதியில் கொண்டு சேர்க்க ஏற்பாடு செய்திருக்கிறேன். அங்கு நீ மிகவும் சவுக்கியமாக இருக்கலாம். கல்வியும் கற்கலாம்!"

'முதலில் நான் ஒப்புக்கொள்ளவில்லை. ஏனென்றல் அன்று அவன் நடந்து கொண்ட முறையை இன்னும் என்னல் மறக்க முடியவில்லை. ஆனல் என் முஸ்லீம் சகோதரர்கள் அவ்விதமே செய்யும்படி என்னை வற்புறுத்தினர். அதனல் முடிவில் நான் அங்கு செல்லத் தயாராகி விட்டேன்.

'மறுநாள் அவன் வந்தான். என்னை ஒரு ஜட்கா வண்டியில் உட்கார்த்திக் கொண்டு அழைத்துச் சென்றன். அன்றே நாங்களிருவரும் தில்லிக்கு டிக்கட்டு வாங்கிக் கொண்டு வண்டியில் ஏறினேம். அவன் அளித்த ஆறுதலினலும் இனிய பேச்சினலும் என் மனம் சற்று அமைதியுற்றது.

'வண்டி வேகமாகச் சென்று கொண்டிருந்தது. நான் ஜன்னல் பக்கம் சாய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்தேன். அவன் என் எதிரேயிருந்த பெஞ்சின் மீது உட்கார்ந்திருந்தான். அந்த விடுதியின் அழகிய ஏற்பாடுகளைப் பற்றிப் பல விதமாக அவன் என்னிடம் கூறினன். முடிவில் சற்று கவலையுடன்—"ஆனல், ஒரு விஷயத்தைப்பற்றி இதுவரை என் நினைவிற்கே வரவில்லை" என்றன்.

"என்ன?" என்று கேட்டேன் நான்.

"விடுதியில் சேருபவரிடம் பச்சைக் குழந்தை இருப்பதை விடுதியினர் அனுமதிப்பதில்லை," என்றன் அவன்.

'கண்ணே! அப்போது நான் உனக்குப் பால் கொடுத்துக் கொண்டிருந்தேன். நான் ஆசையுடன் உன் முகத்தைப் பார்த்தபடியே—" பிறகு?" என்று கேட்டேன்.

'அவன் சொன்னான்—" அடுத்த ஸ்டேஷனுக்கருகே என் உறவினரின் வீடு இருக்கிறது. நீ சம்மதித்தால் தற்சமயம் அவர்களிடம் அந்தக் குழந்தையை ஒப்படைத்து விடலாம். குழந்தை தாய்ப்பாலை மறக்கும் நிலைக்கு வந்தவுடன் அதைத் திரும்பப் பெற்றுக் கொண்டு விடலாம்." நான் அவனுடைய வார்த்தைகளைக் கேட்டு நடுங்கிப் போனேன். என் உள்ளத்தில் என்னென்ன எண்ணங்களெல்லாம் அப்போது தோன்றிற்று என்று என்னால் சொல்லவே முடியாதம்மா. இறுதியில் பலவித மான சூழ்ச்சிகள் செய்து என்னை அவனது வழிக்கு இசையும் படி பண்ணிவிட்டான். பிறகு அடுத்த ஸ்டேஷனில் அவன் இறங்கி விட்டான். என்னையும் இறங்கும்படி கூறினான்—ஒரு ஜட்காவை வாடகைக்குப் பேசிக் கொண்டு நாங்கள் ஒரு கிராமத்தை யடைந்தோம்—அந்தக் கிராமம் தான் இந்த தீவான்பூர். அதைப்பற்றி எனக்கு பிறகு தான் எல்லாம் தெரிய வந்தது.

'என்னை இந்தக் கிராமத்திற்கு வெளியே ஒரு மரத்தடியில் உட்காரச் செய்துவிட்டு அவன் சென்று விட்டான். சிறிது நேரங்கழித்து, "நான் என் உறவினரிடம் அந்தக் குழந்தையை ஒப்படைந்து விட்டு, அதைப் பத்திரமாகக் காப்பாற்றும்படி கூறிவிட்டு வந்திருக்கிறேன்" என்றான். 'நீ அந்தப் புதரில் சென்று, அந்த முனையிலுள்ள உயரமான மரங்களுக் கருகே குழந்தையை வைத்துவிட்டு வந்துவிடு. அவர்களே வந்து குழந்தையை எடுத்துச் செல்வார்கள். உன்னை நான் அவர் களிடம் அழைத்துச் செல்வது உசிதம் என்று நினைக்கவில்லை" என்றும் கூறினான். நான் கல்நெஞ்சத்தவள் தான். முறிந்து கொண்டிருந்த உள்ளத்தை எப்படியோ சமாளித்துக் கொண் டேன். அவன் கூறியபடியே செய்யவும் செய்தேன். அவன் மாபெரும் தவறு செய்திருக்கிறன் என்பது பிறகு தானம்மா எனக்குத் தெரிய வந்தது—உண்மையில் அவன் உன்னை யாரிடமும் ஒப்படைத்துவிட்டு வரவில்லை.

'''இன்னும் சில நாட்களில் குழந்தை சற்று பெரியவளான பின்பு நான் உன்னிடம் அவளைப் பத்திரமாகக் கொண்டு வந்து சேர்க்கிறேன்'', என்று அவன் எனக்கு ஆறுதலளித் தான். அவன் இவ்விதம் கூறியிராவிட்டால், நான் அங்கேயே சுயநினைவிழந்து வீழ்ந்திருப்பேன்.

'தில்லி சென்றோம், அங்கே ஒரு அழகிய வீட்டையடைந் தோம். வீடு வெகு அழகாக அலங்கரிக்கப் பட்டிருந்தது. அங்கு ஒருவரும் இருக்கவில்லை. அவன் அது தன் நண்ப னுடைய வீடு என்று கூறினான்.

'இரவு நேரத்தில் என்னுடன் ஒரு வேலைக்காரியை இருக்கச் செய்து விட்டுச் சென்றான். ''காலையில் வந்து உன்னை அனாதை விடுதியில் கொண்டு சேர்க்கிறேன்'' என்று கூறிச் சென்றான்.

'இரவை நான் ஒருவாறு நிம்மதியாகத்தான் கழித்தேன் என்று சொல்ல வேண்டும். ஆனால் உன் நினைவு அடிக்கடி வந்து என்னை மனங்கலங்கச் செய்து விடும். இரவு முழுதும் எனக்குத் தூக்கமே வரவில்லை. வேலைக்காரி என்னை மிகவும் அக்கறையுடன் தான் கவனித்துக் கொண்டாள். ஆயினும் என் கண்ணீர் நிற்கவில்லை.

'அதிகாலையில் நான் ஸ்நானம் முதலிய காலைக்கடன்களை முடித்துக்கொண்டு வந்தேன். அப்போது ஒரு கிழவி என் அருகே வந்து உட்கார்ந்துகொண்டாள். உடையைப் பார்த்தால் அவள் குறத்தியைப்போலக் காணப்பட்டாள். நான் பேசுவதற்கு முன்னமேயே அவள் பேச ஆரம்பித்தாள். —''மகளே! இரவில் ஏதாவது அசௌகரியமிருந்ததா? எனக்கு வேலையிருந்ததால் வரமுடியவில்லை. ஆனால் இந்த வேலைக்காரி மிகவும் நல்லவள். அவள் உனக்குத் தேவையான வற்றையெல்லாம் செய்து தந்திருப்பாள் இல்லையா?''

'அவளுடைய பேச்சைக் கேட்டு நான் பிரமித்துவிட்டேன். உச்சியிலிருந்து உள்ளங்கால்வரை அவளை உற்றுக் கவனித்த படி கேட்டேன்—''இது உங்கள் வீடா?''

''ஆமாம் குழந்தாய்! இறைவனளித்த பிச்சை!''

''லாலாஜி இன்னும் வரவில்லையா?''

"யாரது! லாலாஜியா?"

"என்னை விதவைகளின் விடுதியில் கொண்டு சேர்ப்பதாகக் கூறி இங்கு அழைத்து வந்தாரே அவர்தான்"—என்றேன் நான்.

'அவள் என் வார்த்தைகளைக் கேட்டுச் சிரித்தாள்—"மகளே! இந்த வீட்டில் லாலாக்களுக்கும் சேட்டுக்களுக்கும் குறைவே கிடையாது; எண்ணிக்கையும் கிடையாது. இங்கு ஒவ்வொரு நாளும் நூற்றுக்கணக்கானவர் வருகின்றனர், போகின்றனர். உன்னை என்னிடம் விற்றுச் சென்றானே, அவனைப்பற்றி நீ கேட்கிறாய் போலிருக்கிறது. அவன் உனக்கு வாக்களித்தபடி செய்துவிட்டுச் சென்றுவிட்டான். நேற்றிரவு வண்டியிலேயே அவன் இங்கிருந்து கிளம்பிவிட்டானே. குழந்தாய்! அவன் உன்னை விதவைகளின் விடுதியில்தான் கொண்டு சேர்த்திருக்கிறான். ஆனால் நீ நினைக்கும்படியான இடமல்ல இது. நம் நாட்டு ஆயிரக்கணக்கான, லட்சக்கணக்கான விதவைகள் தங்கள் வயிற்றுப்பசியைத் தணித்துக்கொள்ளும் இடம் இது தான். நிம்மதியான சுகவாழ்வைப் பெறும் இடம் இதுதான்" —என்று கூறினாள் கிழவி.

'அவளுடைய பேச்சைக் கேட்டு நான் திடுக்கிட்டேன். அழுதேன், அலறினேன், பசி—தாகத்துடன் பல தினங்கள் வாடினேன். ஆனால் யாருக்கும் என் மீது இரக்கம் ஏற்பட வில்லை. அந்தக் கிழவி எனக்குப் பலவிதமான ஆசைகளும், மகிழ்ச்சி மிக்க பூங்கா போன்ற இடத்தில் வாழ வழிகளும் காண்பிக்க அரும்பாடு பட்டாள். நான் அதற்கும் மசிய வில்லை. முடிவில் ஒரு பெண்ணை என்னுடன் இருக்கச் செய்தாள். என் மனதை மாற்றி மகிழ்வுறச் செய்யும் முயற்சியை அந்தப் பெண்ணிடம் ஒப்படைத்துவிட்டுக் கிழவி சென்றுவிட்டாள். கடைசியில் இந்த வழிக்கு அந்தச் சிறுமி என்னைக் கொண்டுவந்து விட்டாள். நான் எதற்கும் அசைந்து கொடுப்பவளாக இருக்கவில்லை. ஆனால் அந்தப் பெண் தன் வாழ்க்கையைப் பற்றி எனக்குக் கூறத் தொடங்கினாள். அந்தணருக்குப் பிறந்த அந்தப் பெண் மிகச் சிறந்த குடும்பத்து மருமகளாய் வாழ்ந்தவள். ஆனால் இந்தச் சமுதாயம்

இழைத்த கொடுமையின் காரணமாக அவள் இன்று இந்த இழிவான தொழிலில் இறங்கியிருக்கிருள். அவளுடைய நிலைமையைப் பற்றிக் கேட்டதும் என் உள்ளக் கொதிப்பு சற்று தணிந்தது. நானும் என் சுயாபிமானத்தை விற்று இந்தக் கொடிய தொழிலைச் செய்யச் சித்தமாகிவிட்டேன்.

'இதன் பிறகு என்னைப்பற்றியும் அவளுக்குக் கூறினேன். என் கதையைக் கேட்டு அவள் துடித்துப் போனுள். அப்படித்தான் எனக்குத் தோன்றிற்று. என்னைப் படுகுழியில் வீழ்த்த இன்னும் நல்ல வாய்ப்புக் கிடைத்துவிட்டது. "இப்படிப்பட்ட மக்களுக்காகவா நீ துடிக்கிருய்? உன்னை நீரிலிருந்து பிரிந்த மீனைப்போல் துடிக்கவைத்த மக்களைப்பற்றி நீ ஏன் நினைந்து உருகுகிருய்? குற்றமொன்றுமறியாத உன்னை இப்படிப் படுகுழியில் வீழ்த்திய மக்களைக்கொண்ட சமுதாயத்தை நாம் இப்படித்தான் பழிவாங்க வேண்டும். இந்தச் சமுதாயத்தின் மூக்கு அறுபட்டுப் போகும்படி நாம் செய்ய வேண்டும். பிறகு அதைத் தெருத்தெருவாக அலையவைத்து அவமானப்படுத்த வேண்டும்......"

'ஏற்கெனவே மானம், கௌரவம் எல்லாம் கிட்டத்தட்ட என்னிடமிருந்து பறிபோய்விட்டன. எஞ்சியிருந்த நேர்மையையும் சீலத்தையும் நசுக்கி எறிந்துவிட்டேன். குர்தேயி இப்போது அன்வர்ஜானுக மாறி ஆடவும் பாடவும் கற்க ஆரம்பித்துவிட்டேன். இறைவன் எனக்கு ஏற்கெனவே அழகையும் கவர்ச்சி மிக்க நிறத்தையும் அளித்திருந்தார். சில நாட்களுக்குள்ளேயே என் பெயரும் புகழும் பரவும்படி நான் அக்கலையில் வல்லவளாகிவிட்டேன்.

'குழந்தாய்! இந்தச் சமுதாயத்தின் கதியை இன்று நீ பார்க்கிருயல்லவா? நான் இந்து சம்பிரதாயத்துப் புனிதமான பெண்ணுக இருந்தபோது இந்தச் சமுதாயம் என்னைச் செருப்பால் அடித்து, செத்த எலியை எறிவதுபோல் எறிந்தது. ஆனுல் இன்று? நான் முஸ்லீம் பெண்—ஒரு ஆட்டக்காரி. தன்னை நாகரிகம், பண்பு இவற்றின் இருப்பிடமாகக் கூறிக்கொள்ளும் இந்தச் சமுதாயம்—இந்தச் சமுதாயத்துப் பொய்யர்கள், என் ஆட்டத்தையும் பாட்டையும் கேட்டு ரசித்துக்

கொண்டு என் காலடியில் வந்து விழுகின்றனர். இதையே தம் கவுரவம் மிக்க செயலாகவும் கருதுகின்றனர். சுருங்கச் சொல்லட்டுமா?—சமுதாயத்தின் ஆரோக்கியமான அங்கமாக இருந்த என்னை அது வெட்டி அழுக்கில் எறிந்தது. ஆனால் அதே சமுதாயத்தின் அழகிய அங்கம்—புழுத்து நெளியும் பயங்கர அங்கம், துர்நாற்றம் பிடித்த அதன் சகிக்க முடியாத நிலையினால் நல்ல மனிதர்கள்கூட குஷ்டரோகிகளாக மாறும் நிலையை அடைந்துவிட்டது—அதைத் தழுவிக்கொள்ள அதே சமுதாயம் தவம் கிடக்கிறது!

'இந்தக் கொட்டமும் கொம்மாளமும் யாருடைய திருமணத்திற்காக நடக்கின்றன என்று தெரியுமா மகளே? என் சக்களத்தியின் மகனுடைய திருமணம் இது. நீ அரை மணி நேரத்திற்கு முன்பு இங்கு வந்திருந்தால், உனக்கு மற்றுமொரு வேடிக்கை காண்பித்திருப்பேன். மாப்பிள்ளையின் சகோதரன் கரம்சந்த் இருக்கிறானே—என் சக்களத்தியின் மூத்த மகன்தான் அவன். ஒரு பிடி சோற்றுக்காக என்னை அடித்து அரைப் பிணமாக்கி வீட்டிலிருந்து துரத்தி விட்டான். ஓரிரவுவரை நேர்மையான முஸ்லீமின் வீட்டில் நான் தங்கியிருந்தேன். இதைக் காரணமாக வைத்துக் கொண்டு என்னை வாழ்நாள் முழுவதும் அங்கேயே இருக்கும்படி சொல்லி விட்டான். அவன் இப்போதுதான் இங்கே வந்திருந்தான். அந்தக் கிராதகப் பண்டிதனும் அவனுடனிருந்தான். அவர்கள் எதற்காக வந்தார்கள் என்று கேட்க விரும்புகிறாயா அம்மா! கரம்சந்த் தன் தாயுடன் காதல் விளையாட்டு விளையாட வந்திருந்தான். அவளிடம் காதல் பிச்சை கேட்க வந்திருந்தான். அந்தக் கிழப் பண்டிதன்—அவன் முதலில் 'மகள்—மகள்' என்று கூறிக் கொண்டு எனக்கு ஆறுதலளித்தான். பிறகு அந்தப் பாவிதான் உன் தந்தையிடம் (தாராசந்த்) என்னை விற்றவன்—அவன் இப்போது தன் மகளைப் பார்த்துக் காதல் பிச்சை கேட்க வந்தான். சுந்தரி! அவர்களுடைய காதல் துடிப்பை நீ பார்த்திருந்தால்—ஐயோ! நான் இறந்து போய் விடுவேன், உன் கண்களில் நான் கட்டுண்டேனே! உன் நினைவின் வேதனை என்னைக் கொள்ளை கொண்டு

விட்டதே!—என்றெல்லாம் அவர்கள் பிதற்றியதை நீ கேட்டிருந்தால் நின்றபடியே பூமிக்குள் புதைந்து போயிருப்பாயம்மா; "நாளைக்குப் பார்க்கலாம்" என்று கூறி அவர்களைத் தட்டிக் கழித்திராவிட்டால் இன்றிரவு முழுதும் என் வீட்டு வாசலைவிட்டு அசைந்திருக்க மாட்டார்கள்.

'நான் இங்கு எதற்கு, என்ன வேலை செய்வதற்கு வந்திருக்கிறேன் என்றுகூட அறிந்துகொள்ள ஆவலாய் இருப்பாய். நான் பாட்டுப் பாடவந்திருக்கிறேன் என்று நினைக்கிருய்? அதிலும் இத்தகைய மக்களின் முன்பு! இல்லை, நான் அப்படிப் பட்ட காரியத்தை ஒரு போதும் செய்ய மாட்டேன். என் சோற்றில் மண்ணைப் போட்ட இந்த இருவரின் இரத்தத்தையும் குடிக்க வந்திருக்கிறேன் என் கண்ணே! சுந்தரி! இந்த ஒரே விருப்பத்தால் உந்தப்பட்டுத்தான் நான் இங்கு வந்திருக்கிறேனம்மா. நான் எத்தனையோ நாட்களாக ஆவலுடன் இந்தத் திருமணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேனம்மா, இதற்காக நான் என் தரகர்களிருவரைக்கூட நியமித்திருந்தேன். மூன்ருவது கொலைகாரப் பாவியிருந்தானே—என்னை அந்த ஆட்டக்காரக் குறத்தியிடம் விற்றுவிட்டுச் சென்ருனே, அவனை எப்போதோ நான் தீர்த்துக் கட்டி விட்டேன். ஆனுல் இதுபற்றிய செய்தியை நான் ஒருவருடைய செவிக்கும் எட்டவிடவில்லை. அது ஒரு மிகப் பெரிய கதையம்மா. அவன் கொலையுண்டதைப்பற்றிக் கூறி உன் மென்மையான உள்ளத்தை நான் வருந்தச் செய்ய மாட்டேன். ஆனுல், ஒரு ஆசை, ஒரே ஒரு ஆசை—அது இறக்கும்போதுகூட என் நெஞ்சிற்குள்ளேயே அமிழ்ந்து கிடக்கும். நான் அந்தப் படுபாவி (தாராசந்த்)யின் இரத்தத்தால் என் கைகளை நனைத்துக் கொள்ள விரும்புகிறேன். ஆனுல், என்ன செய்வேன்! ஆயிரம் முயற்சிகள் செய்து பார்க்கிறேன். அப்படியிருந்தும் அவன் என் கைகளுக்குச் சிக்க மாட்டேன் என்கிருன்—ஒரு முறை எங்காவது அவனைப் பார்த்து விட்டால் போதும்.........'

இதற்கு மேல் அதிகமாகக் கேட்க சுந்தரியிடம் தெம்பிருக்கவில்லை. அவளுடைய உடல் முழுவதும் நெருப்பைப்போல்

எரிந்து கொண்டிருந்தது. பாத்தி கட்டி, சிறுபந்தல் போட்டுச் சின்னஞ்சிறு செடியைக் காப்பாற்றி வைத்தாலும் ஒரு சூரு வளிக்காற்று வந்தால் அதை வேருடன் பிடுங்கி எறிந்துவிடு மல்லவா? பச்சன்சிங் அளித்த உபதேசத்தால், சற்றே மாறி யிருந்த சுந்தரியின் உள்ளம் அந்தச் சின்னஞ்சிறு செடியைப் போல் மாறிவிட்டது. அவள் ஆதாரமென நினைத்து நின்று கொண்டிருந்த பூமியே ஆட்டங்கண்டு விட்டாற்போல் தோன் றிற்று அவளுக்கு. அவளுடைய வட்டமான கண்களுக்கெதிரே வீட்டிலுள்ள எல்லாப் பொருள்களும் சுழல்வது போலிருந்தன.

அன்வரின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்த சுந்தரி அவளுடைய வார்த்தையின் இடையில் ஆவேசத்துடன் பேசிய படியே எழுந்திருந்தாள்—'அவனுடைய இரத்தத்தை நான் குடித்து விட்டு மறுவேலை பார்க்கிறேனம்மா. நான் உங்கள் குழந்தை என்பது உண்மையானால், அவனுடைய இரத் தத்தைக் குடித்து நம் இருவருடைய உள்ளங்களின் ஆத் திரத்தைத் தணித்துக் கொள்வேன்.' என்று கூறியபடியே சுந்தரி எழுந்தாள், கடகடவென்று மாடிப்படிகளிலிருந்து இறங்கிக் கீழே சென்றாள். தனக்குப் பித்துப் பிடித்து விட்டாற் போல் அவள் நினைத்தாள்.

சுந்தரி சென்றவுடன் அன்வர் சிலையைப்போல் அசையாமல் அமர்ந்திருந்தாள். அவளுடைய உள்ளத்தில் தான் கூறிய வார்த்தைகளே ஒலித்துக் கொண்டிருந்தன—'நான் உண்மை யாகச் சொல்கிறேன்......' இன்று நடந்ததெல்லாம் அவ ளுக்குக் கனவைப் போலிருந்தது.

சுந்தரி கீழே இறங்கினதும், பச்சன்சிங் அவளை எதிர் பார்த்துக் கொண்டு இங்குமங்கும் அலைவதைக் கண்டாள். இரவின் இரண்டாம் ஜாமம் கழிந்து விட்டது. சுந்தரியை பச்சின்சிங் அழைத்துக் கொண்டு வீட்டிற்குச் சென்றான். அப்போது மூன்றும் ஜாமம் துவங்கி விட்டது.

[ 27 ]

வீட்டையடைந்ததும் இருவரும் இரவின் மூன்ருவது ஜாமத்தைப் பேசியே கழித்து விட்டனர். அறைக்குள் சென்று விளக்கொளியில் பச்சன்சிங் சுந்தரியின் முகத்தைப் பார்த்தான். அவனுக்கு ஒரே பயம் உண்டாயிற்று. சுந்தரியின் கண்களினின்றும் நெருப்புப் பொறி பறந்தது. அவளுடைய இதழ்களில் பயங்கரமான வன்முறைச் செயல் புரியச் சித்தமாக இருப்பதைக் குறிக்கும் புன்சிரிப்பு காணப்பட்டது.

அவன் உடனே சுந்தரியின் தோளை உலுக்கியபடி கேட்டான்—' சுந்தரி, என்ன விஷயம்?'

' ஒன்றுமில்லை, எல்லாம் சரியாகத்தானிருக்கிறேன்!' என்று கூறிய சுந்தரிக்கு பச்சன்சிங் தன் முகத்தின் வாயிலாகத் தன் உள்ளத்து எண்ணங்களைப் படிக்க முயல்வது தெரிய வந்தது. பேச்சை மாற்ற முயற்சித்தபடி சுந்தரி கேட்டாள்—' நீங்கள் மறுபடியும் திருமணம் நடக்கும் இடத்திற்குப் போனீர்களா?'

' இல்லை. வீட்டிலேயே இருந்தேன். சுந்தரி! உங்கள் கண்கள் இன்று மிகவும் சிவப்பாக இருக்கின்றன. என்ன காரணம்?'

தூக்கமில்லாதது போல் பாசாங்கு செய்தவளாய் சுந்தரி கை விரல்களால் கண்களைக் கசக்கிக் கொண்டே கூறினுள்— ' எல்லாம் உங்கள் கிருபைதான்!'

' எப்படி?'

' எனக்குத் தான் நீங்கள் அப்படிப்பட்ட வேலையை ஒப்படைத்திருந்தீர்களே!'

சுந்தரி மிகுந்த உற்சாகத்துடன் பதிலளித்த முறையிலிருந்தே அவன் தன் விருப்பத்தில் ஓரளவுக்கு வெற்றியடைந்து விட்டாள் என்று பச்சன்சிங் ஊகித்துக் கொண்டு விட்டான். அவளுடைய மனதிற்கு ஆறுதலளிக்கும் எண்ணத்துடன் அவன் அவளை மறுபடியும் கேட்டான்—' அடே! எங்கே சொல்லுங்கள் கேட்கிறேன்! என்ன ஆயிற்று?'

' எது செய்யப் போனேனே, அது தாஞயிற்று.'

'வெற்றி கிடைத்ததா?'
'முழு வெற்றி தான்.'
'இருக்க முடியாது!'
'வெகு எளிதில் கிடைத்து விட்டது.'
'அப்படியென்றால்?'

சுந்தரி அவனுக்குச் சுருக்கமாகப் பதிலளித்தாள். அன்வர் இனி நடனமாடுவதில்லை எனத் தனக்கு வாக்களிக்கும்படி சுந்தரி செய்துவிட்டு வந்ததாகமட்டும் கூறினாள்.

பச்சன் சிங்கினால் நம்பமுடியவில்லை. சந்தேகத்துடன் அவன் அவளைப் பார்த்தான்—'சுந்தரி! உங்களை எப்படி யாவது அங்கிருந்து அனுப்புவதற்காக அன்வர் அப்படிக் கூறி உங்களை ஏமாற்றியிருக்கிறாள்' என்றான்.

சுந்தரியின் முகத்தில் ஒரு உறுதி பிரதிபலித்தது. அவள் கூறினாள்—'எப்படியிருந்தாலும் சரி. இனி அவள் ஆட மாட்டாள், பாடமாட்டாள். உங்களுக்கே பிறகு தெரிய வரும்!'

'சுந்தரி! அவள் ஆடுவதை நிறுத்திவிட்டாள் என்று தெரிந் தால், நீங்கள் கல்லை உரித்து நாரை எடுத்தீர்கள் என்றுதான் கூறுவேன். நாளைக் காலையில்கூட அவள் பாட மாட்டாளா? திருமணத்திற்கு வந்திருப்பவர்களே இரண்டு தினங்களுக்குப் பிறகு தானே செல்லப் போகிறார்கள்! தீவான்பூரில் இருக்கும் வரையில் அவள் பாடக்கூடாது என்று கூறி அவளிடம் வாக்குறுதி வாங்கியிருக்க வேண்டும்.'

சுந்தரி சிரித்தபடி கூறினாள்—'நான் இதைவிடப் பெரிய வாக்குறுதி வாங்கி வந்திருக்கிறேனே!'

'என்ன?'

'அவள் இனி உயிருடனிருக்கும் வரை இந்தத் தொழிலைச் செய்ய மாட்டாள். அதாவது இந்தத் தொழிலை அடியோடு விட்டு விடுவாள். நாளைக்கு அவள் பாடப் போகிறாளே அது தான் அவளுடைய கடைசிக் கலை நிகழ்ச்சி என்று வைத்துக் கொள்ளுங்களேன்.'

'அதெப்படி முடியும் சுந்தரி?' பச்சன் சிங்கிற்கு சுந்தரி வேடிக்கைக்காக இப்படிக் கூறுகிறாளோ என்று சந்தேகம் உண்டாயிற்று. சுந்தரியை உற்றுப் பார்த்துக் கொண்டே

அவன் கேட்டான்—'கழுகைப் பிணம் தின்றுதே, சைவ உணவை உட்கொள் என்று கூறி அதனிடமிருந்து உறுதி மொழியை பெறுவதென்பது முடியாத காரியமாயிற்றே!'

சுந்தரி அவனுக்கு நம்பிக்கையூட்டினுள். ஆனுல் அன்வருடன் நடந்த பேச்சு முதலியவற்றைப் பற்றி அவனுக்குக் கூறவில்லை. தாயிடம் சபதமெடுத்துக் கொண்டு வந்திருப்பது பச்சன் சிங்கிற்குத் தெரிந்தால், அவளைப் பரிகசிப்பதுடன் கூடத் தன் வார்த்தைகளால் அந்த உறுதி மொழியினின்றும் தன்னை வழுவச் செய்துவிடப் போகிருனே என்று அவள் அஞ்சினுள்.

பச்சன் சிங் மகிழ்ச்சியால் தன் வசமிழந்தான். முதன் முதலாகவே இவ்வளவு பெரிய வெற்றியா? அதுவும் சுந்தரிக்கு! அவன் நாத்தழுதழுக்கக் கூறினுன்—'சுந்தரி! அப்படியானுல் நாம் நிச்சயமாக வெற்றியடைவோம்!'

காதலனின் வார்த்தைகளைத் திருத்தியபடி சுந்தரி கூறினுள் — 'இல்லை! வெற்றியடைந்து விட்டோம் என்று கூறுங்கள்!'

'சுந்தரி! நாம் இருவரல்ல! ஒருவராகி விடுவோம்!'

'எப்போதோ ஆகிவிட்டோமே!'

'இல்லை சுந்தரி! இப்போது வரை நாம் இருவராகத்தானிருக்கிறேம். நம் பெறப்போகும் அந்த வெற்றிக்கு இதுதான் முதல் படி. இன்னும் வெகு தூரம் சென்றுக வேண்டுமே!'

'என்ன சொன்னீர்கள்? நாம் இருவராகவா இருக்கிறேம்? இல்லை, நாம் எப்போதும் ஒருவர்தான். இந்த ஒற்றுமை என்றும் நிலைத்து நிற்கும்!'

'ஆன்மீகப் பார்வை கொண்டு பார்த்தால் இது சரி. ஆனுல் சுந்தரி! சமுதாயத்தின் கண் கொண்டு பார்த்தால் இன்னும் நாம் இரண்டறக் கலந்து ஒன்றுகவில்லையே!'

சுந்தரி அன்புடன் பச்சன் சிங்கின் கரத்தைப் பற்றியபடி கூறினுள்—'சமுதாயமா? எந்தச் சமுதாயத்தைப் பற்றிப் பேசுகிறீர்கள்? பேதம், பொருமை, அரக்கத் தன்மை, நாணயமற்ற நடத்தை இவையெல்லாம் நிரம்பியுள்ள சமுதாயத்தைப் பற்றியா பேசுகிறீர்கள்? இந்தச் சமுதாயத்தின் பார்வைக்கு

நாம் ஒருவராகத் தெரியவில்லையென்றால் உண்மையில் நாமிருவரும் தனித்தனியென்று பொருளல்ல—சமுதாயத்தின் பார்வைக்கு எப்போதும் ஒன்று இரண்டாகத் தெரியும். இந்தக் குற்றம் அந்தப் பார்வையினுடையது. கோடிப் பிறவிக ளெடுத்தும் அதன் இந்நோயைத் தீர்க்க யாராலும் இயலாது. சமுதாயம்...நீங்கள் இந்தச் சமுதாயத்தை மக்களின் கூட்டம் என்று கருதுகிறீர்கள், ஆனால் நான்.........'

பேசிக்கொண்டேயிருந்த சுந்தரியின் முகம் இரத்தத்தைப் போல் சிவந்துவிட்டது. அவளுடைய மூச்சு வேகமாக இயங்கத் துவங்கியது.

சுந்தரியின் அந்தப் போக்கைப் பார்த்து பச்சன் சிங் அஞ்சிவிட்டான். அவளுடைய முகத்தையும் கண்களையும் உற்றுக் கவனித்த பச்சன் சிங் சுந்தரிக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா என்ன என்று சந்தேகிக்கலானான்.

'குணமடையாத நோய்' என்பார்களே அது மிகவும் விசித்திரமானது. எத்தகைய சிகிச்சைக்கும் அது மசியாது. அல்லது வைத்தியரின் விசேஷத் திறமை காரணமாக சற்றே குணமடைந்துவிட்டால், ஒரு சிறு அவபத்தியம் நேர்ந்ததோ, வந்தது ஆபத்து. மறுபடியும் கப்பும் கிளையுமாக அந்நோய் உடல் முழுவதையும் பற்றிக்கொண்டுவிடும்.

இப்போது சுந்தரியின் நிலையும் அப்படித்தானிருந்தது. பச்சன் சிங் ஆயிரம் முயற்சிகள் செய்து தவறான வழியி னின்றும் அவளைச் சரியான வழிக்குக் கொண்டுவந்திருந் தான். சற்று அவள் மனமாற்றம் அடைவதற்குள் அன்வர் ஜானைச் சந்தித்த அந்தப் புதிய நிகழ்ச்சியின் காரணமாக அவள் பழைய நிலையையே அடைந்துவிட்டாள்.

'சுந்தரி! இன்று உங்களுக்கு என்ன வந்துவிட்டது?' பச்சன் சிங் அவளுடைய தோளை உலுக்கியபடி கேட்டாள்— 'இன்று மறுபடியும் நீங்கள் இம்சையே உருவெடுத்தாற்போல் காணப்படுகிறீர்களே, இதற்குக் காரணம் என்ன?'

இந்த நேரத்தில் இதுபற்றிப் பேசினால் சுந்தரி தன் சுய நினைவை இழந்து ஆவேசம் கொண்டுவிடுவாள் என நினைத்து பச்சன்சிங் அந்தப் பேச்சை அப்படியே நிறுத்திவிட்டான்.

சுந்தரியின் மனப்போக்கைச் சற்றே மாற்றுவதற்காகக் கூறினன்—'சரி அது கிடக்கட்டும். நாம் இனி என்ன செய்யவேண்டும்? ஏதாவது திட்டம் வகுத்துக்கொள்ள வேண்டாமா? நீங்கள் இதுபற்றி என்ன நினைக்கிறீர்கள்?'

சுந்தரி தன்னை ஒருவாறு சமாளித்துக்கொண்டாள். அவளுக்குத் தன் பலவீனத்தை நினைத்துச் சற்று வருத்தமாக இருந்தது. ஆனல் இதை பச்சன் சிங் அறிந்துகொண்டு விடாதபடி நடந்துகொள்ள விரும்பிய அவள், அவன் புரிந்துகொள்ளும்படி ஏன் நடந்துகொண்டாள்? இதை நினைத்து அவள் மனம் வருந்தினள். இனி இந்த விஷயத்தைப் பற்றிய விவாதத்தை வளர்த்திக்கொண்டே சென்றல், என் வாயினின்றும் வெளிவந்து விடுமோ என அஞ்சி சுந்தரி இந்தப்பேச்சை நிறுத்திவிடுவதே நல்லது என்று கருதினள்—'நீங்கள் முன்பு எழுதிய கடிதத்தில் தற்போது வெகு தூரம் நாம் செல்லவேண்டாம் என நினைக்கிறேன் என்று எழுதியிருந்தீர்களே!'

'அது சரிதான். நாம் இங்கு இருக்கும்வரை கூட ஏதாவது வேலை செய்துகொண்டே நானிருக்கவேண்டும். சுந்தரி! இந்த முதல் வேலையிலேயே வெற்றி கிட்டியிருப்பதைப் பார்த்தால் எனக்கு ஊக்கம் மேலிடுகிறது. ஆனல் உங்கள் ஆதாரத்தினல் தான் நான் ஏதாவது செய்யமுடியும். வாரக் கணக்கில் இடைவிடாமல் எந்த வேலைக்காக நான் அலைந்து திரிந்தும் ஒரு பலனையும் காணமல் திரும்பினேனே, அதே வேலையை நீங்கள் நேரடியாகச் சென்று சாதித்துக் காண்பித்து விட்டீர்கள். அதனல்தான் நான் சொல்கிறேன்...... நாம் இருவரும் வெகு விரைவில்......'

சுந்தரி பதிலுரைத்தாள்—'நான் ஒன்றுமே செய்யவில்லை. நான் இதுவரை ஏதாவது செய்திருக்கிறேன் என்றல் அது உங்கள் அறிவுரைகளாலும், நட்பினலும் தான். இல்லாவிட்டால் ஒரு குரங்காட்டியின் மகளிடம் என்ன எதிர்பார்க்க முடியும்? நீங்கள் என்ன செய்யத் திட்டமிட்டிருக்கிறீர்கள்?'

'நீங்கள் நான் சொல்வதைக் கேட்டு ஆவேசம் கொண்டீர்களே, அதைத்தான் நான் செய்ய விரும்புகிறேன்!'

'அப்படியென்றால் ?'

'திருமணம் வெற்றிகரமாக நடந்துவிடவேண்டும். பிறகு போர்க்களத்தில் இறங்கி நம் கனவை நனவாக்க முற்படலாம்.'

சுந்தரி சங்கோசத்துடன் சிரித்தபடி கூறினாள்—'இது இல்லாவிட்டால் நம் கனவு நனவாகாதா ?'

'முடியாது சுந்தரி! அது முடியாத காரியம்!'

'ஆனால் நான் இதை முடியாத காரியம் என்று நினைக்கவில்லையே!'

'அப்படியானால் உங்கள் கருத்து என்ன என்பதைக் கூறுங்கள்!'

'நாமிருவரும் தனித்திருந்து சில நாட்கள் வேலை செய்ய வேண்டும். பிறகு வேலை முடிந்த பிறகு பிழைத்துக் கிடந்தோமானால் இருவரும் ஒன்றாய் வாழ்க்கை நடத்தவேண்டும்!'

'சுந்தரி! உங்கள் பேச்சைக் கேட்டால் எனக்குப் பயமாக இருக்கிறது. நீங்கள் என்ன எண்ணத்துடன் இவ்விதம் பேசுகிறீர்கள் என்றே எனக்குப் புரியவில்லை.'

'அன்புப் பாதையில் பயத்திற்கு இடமேது? இதென்ன, வேடிக்கையான வார்த்தையை நீங்கள் பேச நான் கேட்டுக் கொண்டிருக்கிறேன். நான் சொல்வது என்ன தெரியுமா?....'

சுந்தரி திடீரென்று மௌனமாகிவிட்டாள். பச்சன் சிங் இன்னும் அதிகமாக அஞ்சினான்—'என்ன ?' என்று அவன் கேட்டான்.

'அதாவது சில நாட்களுக்கு நீங்கள் என்னை மறந்து விடுங்கள் என்கிறேன்.'

'உங்களை மறந்து விடுவதா ?' பச்சன் துடித்துவிட்டான். 'சுந்தரி! நீங்கள் என்ன சொல்கிறீர்கள் ? அன்வரின் வீட்டிற்குப் போவதற்கு முன்பு உங்கள் மனநிலை இப்படி இருக்கவில்லையே!'

'ஆமாம், மறந்து விடுங்கள்' அவனுடைய வார்த்தைகளைக் கவனித்துக் கேட்காமலேயே சுந்தரி பேசினாள்—'என்னை உங்களால் மறக்க முடியவில்லையென்றால், என் நினைவையே சுந்தரி என்று நினைத்துக் கொண்டு உங்கள் உள்ளத்தில் வைத்துக் கொள்ளுங்கள்.'

பச்சன் சிங்கின் கண்கள் கண்ணீரால் நிரம்பிவிட்டன. அவன் பரபரப்புடன் சுந்தரியின் கரத்தைப் பற்றிக் கொண்டு மன்றாடினான்—'சுந்தரி, கடவுளின் பேரில் ஆணையிட்டுச் சொல்கிறேன். தயவு செய்து இப்படிப்பட்ட வார்த்தைகளைப் பேச வேண்டாம். என் பேரில் இரக்கம் கொள்ளுங்கள். என் மனநிலையைப் புரிந்து கொள்ள மாட்டீர்களா?'

சுந்தரி பச்சன் சிங்கின் கரத்தை இறுகப் பற்றினாள். மனத்தின் குழப்ப நிலையை மறைத்துக் கொண்டு அவள் கூறினாள்—'உங்களுக்கு என்ன வந்துவிட்டது. நான் உங்களுக்குரியவள், உங்களுக்கு மட்டும் உரியவள், எப்போதும் உங்களுக்குரியவள். கண்ணீரால் என் பொறுமையைத் தகர்த்தெறிந்து விடாதீர்கள். என் பிரதிக்ஞையைப் பிளந்து விடாதீர்கள்.'

பச்சன் சிங்கின் உள்ளத்தில் எரிந்து கொண்டிருந்த தழலை அணைக்க இப்போது சுந்தரியிடமிருந்த கண்ணீரே நெருப்பாக மாறிவிட்டது. நெருப்பால் நெருப்பை அணைக்க சுந்தரி முயன்று கொண்டிருந்தாள். ஆனால் மறுபுறமும் நெருப்புத் தானே இருந்தது. தீப்பிடித்து எரிந்து கொண்டிருக்கும் வீட்டோடு சேர்ந்து நெருப்பணைக்கும் இயந்திரமும் எரிந்து போனால் எப்படியிருக்கும்! அப்படியிருந்தது அவர்களது நிலை!

பச்சன் சிங் கூறினான்—'என்னிடம் புதிர் போடாதீர்கள் சுந்தரி! உங்கள் உள்ளத்திலுள்ளதை ஒளிக்காமல் கூறி விடுங்கள்.'

சுந்தரி சிரிக்க முயன்றபடி கூறினாள்—'உள்ளபடி கூறுகிறேன் கேளுங்கள். என் ஒருத்திக்காக நீங்கள் இன்று வரை பட்ட கஷ்டங்களை நான் அறியாமலில்லை. தொல்லைகளுக்கு இத்துடன் முடிவிருந்தால் நான் பொறுத்துக் கொள்வேன். ஆனால் எனக்காக நீங்கள் படும் தொல்லைகளுக்கு முடிவே இருக்காது போல் தோன்றுகிறது. ஆகையால் என்னை விட்டுச் சில நாட்கள் வரையில் பிரிந்திருந்தால் நன்றாக இருக்கும் என்று எனக்குத் தோன்றுகிறது. உங்கள் தாய் உயிருடனிருக்கும்வரை அவர்களுக்குப் பணிவிடை செய்யுங்கள். வீட்டில் மகனைக் கண்டு அவர்கள் எல்லா வருத்தங்களையும் மறந்து விடுவார்கள்.'

பச்சன் சிங்கின் நெஞ்சில் அம்பு பாய்ந்தாற் போலிருந்தது. ஒரு கையால் தன் கண்களை மூடிக் கொண்டு அவன் மற்றொரு கையால் சுந்தரியைப் பேசாமலிருக்கும்படி சமிக்ஞை செய்தான்—'போதும் - போதும், சுந்தரி! கடவுள் பேரில் ஆணையிட்டுக் கூறுகிறேன். போதும் உங்கள் கதை! உங்களையன்றி வேறு வேறு யாரையாவது நான் மணந்து கொள்வதென்றால் அதன் விளைவு மரணம் தான். இதற்கு மேல் என்றால் ஒன்றும் சொல்ல முடியாது, கேட்கவும் முடியாது.'

சுந்தரி இந்த வார்த்தைகளைக் கவனிக்கவேயில்லை. அவள் வேறு எதையோ பற்றி ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தாள். இனி இப்போது அவளிடம் ஏதும் பேசுவது சரியல்ல என்று கருதி பச்சன் சிங் அங்கிருந்து கிளம்பினான். மற்றொரு சமயம் சுந்தரியின் மனநிலை நன்றாக இருக்கும் போது இத்தகைய எண்ணத்தை அவளது உள்ளத்தினின்றும் அப்புறப்படுத்த முயற்சிக்கலாம் என்று அவன் எண்ணினான்.

பச்சன் சிங்குடன் ஆன்மீக உறவு மட்டும் கொண்டு வாழ்ந்தால் என்ன? அப்படியிருக்க என்ன வழி என்று சுந்தரி யோசிக்கலானாள். பச்சன் சிங் வேறு ஒரு நல்ல பெண்ணை மணந்து கொண்டு தன் முட்கள் நிரம்பிய வாழ்வை மறுபடியும் பூங்காவைப் போல் மலரச் செய்து கொண்டால் என்ன என்று அவள் சிந்திக்கலானாள்.

இருளின் இடத்தை மெள்ள மெள்ளக் காலையின் ஒளி எடுத்துக் கொண்டது. இரவின் எஞ்சிய நேரம் குதித்தோடி விட்டது. பச்சன் சிங் எழுந்து தன் அறைக்குச் சென்றான். அன்போடு சுந்தரி அவனைப் பார்த்து - 'செல்கிறீர்களா?' என்று கேட்டாள்.

'பிறகு எப்போதாவது இப்படிப்பட்ட தவறான பிரமையை உங்கள் மனதிலிருந்து அப்புறப்படுத்த முயற்சிக்கிறேன். கடவுளருளால் அது பிரமையாகத் தானிருக்க வேண்டும்' என்று கூறிவிட்டுத் தன் அறைக்குச் சென்று விட்டான். சுந்தரியின் தூக்கம் நிரம்பிய கண்களில் அன்வரின் உருவம் சுழன்று கொண்டிருந்தது. இதே நிலையில் அவள் கண்ணயர்ந்து விட்டாள்.

## [ 28 ]

மூன்று ஜாமங்கள் வரை கண்விழித்திருந்த பிறகு சுந்தரியின் கண்கள் நான்காவது ஜாமத்தில் தாமாகவே மூடிக்கொண்டன. ஆனால் பயங்கரக் கனவுடன் கூடிய தூக்கம் அது. தூக்கம் அவளைக் கொலைகாரச் சூழ்நிலையில் கொண்டெறிந்துவிட்டது போலும்! நிலம், விண், சந்திரன், சூரியன் எல்லாமே இரத்தத்தால் ஆனவை போலிருந்தன. கண்கள், காதுகள் இவற்றின் வழியாகத் தன் உள்ளத்துக்குள் கத்திகளும், கோடரிகளும், வாட்களும் நுழைவதுபோல் தோன்றிற்று அவளுக்கு. தருக்களில் அமர்ந்திருந்த புள்ளினங்கள்கூட 'கொலை, கொலை'— எனப் பாடுவதுபோல் காணப்பட்டன. குளம், குட்டை, நதி, ஏரி எங்குமே நீருக்குப் பதிலாக இரத்தம்தான் இருந்தது. எங்கு சென்றாலும் யாரோ கொலையுண்டதை நினைத்து யாரோ ஒப்பாரி வைப்பதுபோல் தோன்றிற்று. அவளுடைய ஆடை, கேசம், கண்கள், நா, எல்லா இடங்களிலிருந்தும் இரத்தம் சொட்டிற்று. இரத்த ஆற்றைக் கடந்து அவள் நீந்திச் சென்று கொண்டிருந்தாள். அங்குள்ள சிறு மீன்களிலிருந்து பெரிய மீன் முதலைவரை எல்லாவற்றின் வயிற்றிலும் இரத்தம் நிரம்பியிருந்தது. இந்தப் பிராணிகள் மனிதர்களைப்போல் பேசும் சக்தி படைத்திருந்தன. 'கொலை—, கொலை!' என்று சத்தமிட்டுக்கொண்டே அவை ஒன்றன்பின் ஒன்றாக ஓடிக்கொண்டிருந்தன. கொலைபுரிபவர், கொலையுண்டவர் எல்லோரும் ஒரே வார்த்தையை உச்சரித்துக் கொண்டிருந்தனர்—கொலை! கொலை! கொலை!

இரத்த வெள்ளத்தின் ஆழத்தில் போய் அமிழ்ந்து விட்டோமே என்று சுந்தரி அஞ்சினாள். அவளுடைய மூச்சுத் திணறிற்று. அவள் பயந்து, பதைபதைத்து அலறினாள். ஆனால் அந்தக் குரல் வெளியே வருவதற்கு முன்னமேயே நெஞ்சிற்குள் சென்று மறைந்துவிட்டது. அவள் திரும்பிப் படுத்தாள். புரண்டாள். அவளுடைய இரண்டு கரங்களும் அவளது மார்பில் இருந்தன. அறையில் சூரியனின்

கிரணங்கள் பளிச்சிட்டுக் கொண்டிருந்தன. மஞ்சள் நிறத்திற்குப் பதிலாக அவையும் இரத்தச் சிவப்பு நிறத்தில் இருப்பவை போல் அவளுக்குத் தோன்றியது. கொலை! கொலை! எனும் சொல் இன்னும் அவளுடைய செவிகளில் ஒலித்துக்கொண்டிருந்தன.

அவள் விழித்துக்கொண்டாள். ஆனால் பயத்தின் காரணமாகக் கண்களை அவள் இறுக மூடிக்கொண்டாள். மறுபடியும் அவள் கண்களைத் திறந்தாள். கட்டிலில் சென்று உட்கார்ந்தாள். பொழுது விடிந்து வெகு நேரமாகிவிட்டது. வீடு முழுதும் மக்களால் சூழப்பட்டிருப்பதுபோல் அவளுக்குத் தோன்றிற்று. எங்கும் கொலை! கொலை! கொலை! எனும் கூக்குரலே அவளுக்குக் கேட்டது.

அவள் வாரிச்சுருட்டிக்கொண்டு அறைக்கு வெளியே வந்தாள். கிராமம் முழுதும் பச்சன் சிங்கைச் சூழ்ந்துகொண்டு விட்டது. போலீஸ் பச்சன் சிங்கின் கைகளில் விலங்கணிவித்திருந்தது. அவனுடைய தாய் அழுது அழுது மூர்ச்சையாகிக் கிடந்தாள். 'பச்சன்சிங் மூன்று பேரைக் கொலை செய்துவிட்டான்—நாட்டியக்காரி, கிழப்பண்டிதர், மணமகளின் சகோதரன் கரம்சந்த் மூவரையும் கொன்று விட்டான்' ஒரு ஓரத்திலிருந்து குரல் கேட்டது.

'உம்! மூன்று கொலையா! பச்சன்சிங்கா?' சுந்தரியின் கண்கள் இருண்டு போயின. போலீசார் பச்சன் சிங்கைக் காவல் நிலையத்திற்கு அழைத்துச் சென்று கொண்டிருந்தனர்.

வீட்டை விட்டுக் கிளம்பிய சுந்தரி குடல்தெறிக்க ஓடிவந்து, கூட்டத்தை விலக்கிக்கொண்டு பச்சன் சிங்கை அடைந்தாள். அவனை அணைத்துக்கொண்டு கதறினாள். அவனுடைய காலடியில் நினைவற்று வீழ்ந்தாள். கூட்டம் சென்றுவிட்டது—அவள் மட்டும் அப்படியே விழுந்து கிடந்தாள்.

பச்சன் சிங்கிற்கு எல்லாமே கனவைப்போல் தோன்றிற்று. ஆனால் சுந்தரியின் நிலையைக் கண்டு அவனுடைய உள்ளம் துடித்தது. பல முறைகள் அவன் பின்னே திரும்பிப் பார்த்தான்—ஒரிரு முறை அவன் நிற்க முயற்சித்தான். ஆனால் சிப்பாய்கள் அவனை உந்தித் தள்ளும்போது அவனால் ஒன்றுமே

செய்யமுடியவில்லை. சில கணங்களில் எங்கும் நிச்சப்தம் நிலவியது.

கிராமம் முழுதும் செய்தி வெகு விரைவில் பரவிவிட்டது—'பச்சன்சிங் ஒரே இரவில் மூன்று பேரைக் கொலை செய்து விட்டான்!'

சற்று நேரங்கழித்து சுந்தரி சுயநினைவிற்கு வந்தாள். உடல் முழுதும் புழுதி மண்டிக்கிடப்பதை அவள் உணர்ந்தாள். ரவாணி கிராமத்தில் தன் வீட்டில் அவள் இருந்து வந்தாள். ரவாணியைச் சேர்ந்த மக்கள் சிலர் அவள் மூர்ச்சித்து விழுந்த சற்று நேரத்திற்கெல்லாம் அவளை எடுத்து வந்து வீட்டில் சேர்த்தனர். அவளருகே பலர் உட்கார்ந்திருந்தனர். அவள் எழுந்து உட்கார்ந்துகொண்டாள். இப்போது எங்கிருந்து வந்ததோ தெரியாது, ஒரு குரல் அவளுக்குக் கேட்டது—'பச்சன்சிங் மூன்று பேரை கொலை செய்துவிட்டான்.'

சுந்தரியின் கண்களுக்கெதிரே நட்சத்திரங்கள் காணப் பட்டன! அவளுடைய தலைமீது குண்டு வீழ்ந்தாற்போலவும் அது வெடித்து அவளுடைய உடலை அக்கு அக்காகப் பிரித் தெடுத்துவிட்டாற் போலவும் அவள் கருதினாள். சுமார் பத்து நிமிடங்கள்வரை அவள் அப்படியே இருந்தாள். அவளுக்கு எதையும் பற்றிச் சிந்திக்கத் தெம்பு கிடையாது. தலை சுழன்றது—அவள் மறுபடியும் மூர்ச்சித்து விழுந்தாள்.

எவ்வளவு நேரம் இப்படிக் கழிந்ததோ, தெரியாது. திடீரென்று அவள் கண்விழித்தாள். பச்சன்சிங் பிடிபட்ட செய்தி அவளுக்குக் கனவைப்போல் தோன்றிற்று.

அவள் பித்துப்பிடித்தவளைப் போல் விழுந்தும் எழுந்தும், நடந்தும் ஓடியும் தீவான்பூரை யடைந்தாள். பலர் அவளைத் தடுத்து நிறுத்த முயன்றனர். ஆனால் அவள் நிற்கவில்லை. தெருவில் ஒரு ஜட்காவண்டி சென்றுகொண்டிருந்தது. அவள் அதில் உட்கார்ந்து கொண்டாள்.

சுந்தரி பச்சன்சிங்கின் வீட்டையடைந்தாள். பச்சன் சிங்கின் தாய் மூர்ச்சித்துக் கிடந்தாள். அவளைச் சுயநினைவிற் குக் கொண்டுவர மக்கள் அரும்பாடு பட்டுக்கொண்டிருந்தனர்.

பித்துப் பிடித்தவளைப் போல் சுந்தரி எல்லோரையும் பார்த்

தாள். யாரிடமும் அவள் ஏதும் கேட்கவில்லை. யாரையும் கூப்பிடவுமில்லை. அதேகணத்தில் பச்சன்சிங்கின் தாய் கண் திறந்து பார்த்தாள். சுந்தரி ஓடி அவளருகே சென்ருள்.

சுந்தரியைத் தன்னெதிரே பார்த்த சதாகௌர் கோபத்தால் சிவந்துபோனுள்.—சுந்தரியை ஒரு தள்ளுத் தள்ளிவிட்டு அவள் பேசினுள்—'சனியனே! தொலைந்துபோ! செத்து ஒழி! எல்லாத் தொல்லைக்கும் நீதான் அடிகோலினவள்! உன் முகத்தில் விழித்த நாள்தொட்டு என் மகன் மண்ணுய்ப் போய் விட்டான். சனியனே! நீ வராமலிருந்தால், நாங்கள் இப்படி நாசமாய்ப் போயிருக்கமாட்டோம். இகம் பரம் எங்குமே உனக்கு இடமில்லாமல் நசித்துப் போ!' கட்டிலிலிருந்து எழுந்தே சதாகௌர் சுந்தரியைத் திட்ட ஆரம்பித்தாள்.

வேறு சமயத்தில் அவள் இவ்விதம் பேசியிருந்தால் சுந்தரி என்ன செய்திருப்பாளோ, சொல்லமுடியாது. ஆனுல் இவற்றை யெல்லாம் வெகு பொறுமையுடன் சுந்தரி இப்போது சகித்துக் கொண்டாள். கானகத்தில் இருக்கும்போது சிங்கம் தன் னருகே ஒரு சிறு பறவையைக்கூட வரவிடாது. ஆனுல் மிருகக் காட்சிசாலையில் அடைபட்டுக் கிடக்கும் அதே சிங்கம், தன்னெதிரே தன்னைப் போல் நடந்தும் கர்ஜித்தும் சேட்டை கள் செய்யும் கரடியையும் குரங்கையும் ஒன்றுமே செய்யாமல் இருந்துவிடுகிறது. அவற்றின் குறும்புகளைப் பொறுத்துக் கொண்டுவிடுகிறது. சுந்தரியும் அப்படித்தான் பொறுமையாக இருந்தாள். அவள் உடனே காவல் நிலையத்தை நோக்கி விரைந்தாள்.

கல் தடுக்கினுல் சிறிது நேரத்திற்குப் பிறகு வலி அதிகமாகிக் கொண்டிருப்பதை நாம் உணர்கிருேமல்லவா? அதேபோல் வழியில் நடந்துகொண்டிருக்கையில் சுந்தரியின் மனவேதனை அதிகரித்தது—'என்ன? கொலைவழக்கா?' நான்கு புறமும் வேட்டைக்காரர்கள் துப்பாக்கிகளை வைத்துக் கொண்டு நின்ருல் ஒரு மான் என்ன செய்யும், பாவம்! குறிபார்த்துச் சுட அவர்கள் காத்துநிற்க, கானகத்தின் பின்புறம் தீ, முன்புறம் நதியும், மக்கள் நிறைந்த கிராமமும் இருந்தால் அந்த மான்

எப்படித் தன்னைக் காத்துக்கொள்ளும்? சுந்தரியின் நிலையும் அப்போது இப்படித்தானிருந்தது.

மறுபடியும் புத்தம் புதிதாகத் தன் நிலைமையைப் பற்றி அவள் சிந்தித்துப் பார்த்தாள். அவளுடைய உள்ளம் நடுங்கிற்று. அவளுடைய உலகமே அந்தக் காதலன்தான். அவனைக் கொலைக்காரன் என்று பொய்க் குற்றச்சாட்டை அவன் பேரில் யாரோ சுமத்தியுள்ளார்கள். அவனுடைய கிழத்தாய் என்ன செய்வாள் பாவம்? அவளைச் சுற்றி வளைத்துக்கொண்டு சுற்றத்தார் என்று சொல்லிக்கொண்டு மக்கள் அமர்ந்திருக்கிறார்கள். அவர்கள் காட்டும் அனுதாபம் அவ்வளவும் பொய்! வெளிவேஷம். கிராமம் முழுவதும் ஏற்கெனவே பச்சன் சிங்கைப் பகைவனாகக் கருதிவந்தது. இப்போது அவன்தான் கொலை செய்திருப்பான் என்று கிராமம்முழுவதும் நம்பிவிடும். இதில் ஆச்சரியப்பட என்ன இருக்கிறது?

படகோட்டியை முதலை கவ்விக் கொண்டுவிட்டது. படகு மட்டும் சுழலில் சிக்குண்டு பம்பரமாய்ச் சுழல்கிறது. அத்தகைய படகின் மீது தான் உட்கார்ந்திருப்பது போல் சுந்தரி நினைத்தாள். ரோடு ஒரு ஆதாரமாக இருந்தான். அவனைக் கொடியவர்கள் கொன்றுவிட்டனர். தாய் கிடைத்தாள். ஆனால் இருண்டமேகத்திடையே ஒருகணம் பளிச்சிடும் மின்னலைப் போல ஒளிவீசிவிட்டு அவளும் மறைந்துவிட்டாள். அது மட்டுமா? அவளை மக்கள் ரவாணிகிராமத்தில் கூட இருக்கவிட மாட்டார்கள். பாலாசிங் மற்றும் அவனுடைய தோழர்களிடம் கிராமத்துமக்களுக்கு ஒரே நடுக்கம். அதனால்தான் பச்சன்சிங் கூறிய வார்த்தைகளையும் அவனுடைய கருத்துக்களையும் விரும்பியபோதிலும் மக்கள் அவனுக்கு உதவ முன்வரவில்லை. தம்மை பச்சன்சிங்கின் ஆருயிர் நண்பர்கள் என்று சொல்லிக் கொண்டவர் கூட இந்த நேரத்தில் செவிடர் காதிற் சங்கு ஊதினாற் போல் பேசாமலிருந்துவிட்டனர்.

இந்நிலை பற்றிச் சிந்தித்தாள் சுந்தரி—‘இனி நானிங்கிருந்து பயனில்லை, அதுமட்டுமல்ல, இங்கிருப்பது அபாயமும் கூட. என் ஆருயிர்க் காதலர் மரணத்தின் வாசலில் இருக்க, நான் மட்டும் எங்கே செல்வேன்? தீவான்பூருக்கு எப்படிச்

செல்வேன்? அங்குள்ள மக்கள் என்னை வெறுக்கின்றனரே! மற்றும் சிலர் என்னைக் காமவெறியுடன் பார்க்கின்றனர்.'

பெண்டிர் எவ்வளவு நலிவுற்றவர், எவ்வளவு பேதைகள் என்பதை முதன் முறையாகச் சுந்தரி அன்றுதான் தெரிந்து கொண்டாள்.

இம்மாதிரி பலவிதமான எண்ணங்களை எண்ணிக்கொண்டும் மனக்கோட்டைகளைக் கட்டிக் கொண்டும் அவள் சென்றாள். ஆனால் அவளால் ஒருவிதமான முடிவிற்கும் வர முடியவில்லை. தன் காதலனுக்கு ஒருவிதமான உதவியும் அளிக்க முடியவில்லையே என்று மிகவும் வருந்தினாள். அவளுக்குத் தன் மீதே வெறுப்புத் தட்டியது. பிறருடைய வருத்தத்தைப் பார்த்துக் கொண்டிருப்பதை விட நம்மை நாம் மாய்த்துக் கொண்டு விடுவது நல்லது என்று எண்ணினாள். அப்படிச் செய்து விட்டால் எல்லா வேதனைகளுக்கும் ஒரு முடிவு கண்டு விடலாம் என்று அவள் கருதினாள். ஆனால் அவளுக்குள் மறைந்து கிடந்த ஒரு சக்தி அவளை அதையும் செய்ய அனுமதிக்கவில்லை. 'என் தாய் ஏன் இப்படி அவசரப்பட்டு விட்டாள்? பகைவர்களைக் கொன்று தற்கொலையே புரிந்து கொள்ள நினைத்தாலும், ஒரு கடிதம் எழுதி வைக்கக் கூடாதா? அப்படிச் செய்திருந்தால் பிறர்மீது பழி வந்திருக்காதல்லவா?' என்று சுந்தரி எண்ணலானாள்.

இம்மாதிரியான எண்ணங்களில் சிக்குண்ட அவள் காவல் நிலையத்தை யடைந்தாள். அவள் பச்சன் சிங்கைச் சந்திக்க வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தாள். ஆனால் போலீசாரின் வசைகளும், பிடித்து தள்ளுவதும்தான் அவளுக்குக் கிடைத்தன.

பகல் முழுதும் அவள் இவ்விதமே அவதிப்பட்டுக் கொண்டிருந்தாள். கிராமத்துப் பிரமுகர்களின் முன் சென்று கெஞ்சினாள். ஒரு முறை போலீசாரிடம் சிபார்சு செய்து பச்சன் சிங்கைக் காண அனுமதிக்கும்படி மன்றாடினாள். ஆனால் யாரும் அவளுடைய வேண்டுகோளுக்குச் செவி மடுக்கவில்லை. என்றாலும் அவளுக்குக் கிடைத்தவை இரண்டு தான்—வசை மொழிகளும் குத்தலான பேச்சுக்களும் தான்!

முடிவில் அழுது கொண்டே மாலை நேரத்தில் ரவாணி கிராமத்தில் தன் வீட்டில் அவள் வந்து விழுந்தாள்.

ஆகாயத்தில் பறந்து கொண்டிருக்கும் பறவையின் சிறகுகளைத் திடீரென்று யாராவது வெட்டி விட்டால் அது எப்படித் துடிக்கும்! அதே போல் சுந்தரி இரவு முழுதும் ஒன்றும் சாப்பிடாமல் துடித்துக் கொண்டிருந்தாள். அன்று ஒருவரும் அவளிடம் வந்து பேசவில்லை. ஆனால் அவள் அதை எதிர் பார்க்கவுமில்லை.

அதிகாலை நேரம். வெளியேயிருந்து யாரோ அவளை அழைப்பது போலிருந்தது. காவல் நிலையத்திலிருந்து காவலன் ஒருவன் வந்திருந்தான். பச்சன் சிங் ஒரு கடிதம் எழுதி அவன் வாயிலாக அனுப்பியிருந்தான். கடிதத்தைக் கொடுத்து விட்டுக் காவலன் விரைந்து சென்றான். சுந்தரி உள்ளே வந்து கடிதத்தைப் படிக்கலானாள்—

'சுந்தரி! கனவிலும் எதை நான் எண்ணிக்கூடப் பார்க்கவில்லையோ, அது நடந்துவிட்டது. மனதில் ஒன்றாய்க் குவிந்து கிடந்த கற்பனைகள், கனவுகள், ஆசைகள் எல்லாவற்றின் மீதும் இடி விழுந்து விட்டது. நான் கைதானதால் உங்கள் நிலை எப்படியிருக்கும் என்று எனக்குத் தெரியாமலில்லை. அப்பா! உள்ளம் எப்படி எரிகிறது தெரியுமா? எத்தனையோ கஷ்டப் பட்டு ரத்தினத்தை அடைந்தேன். அதை என் மகுடத்தில் பதித்துச் சிரத்தில் அணிந்து கொள்வேன், மாலையில் பதித்துக் கழுத்தில் அணிவேன் என்றெல்லாம் கனவு கண்டேனே. அந்த ரத்தினம் இப்போது மண்ணோடு மண்ணாய்ப் போய் விடப் போகிறது. இதை நினைத்து உள்ளம் இரும்பாலைபோல் கொதிக்கிறது...உலகம்...இந்தப் பேதை உலகம் என் ரத்தினத்தை ஒரு செல்லாத காசுக்குக் கூட மதிக்காதே!...சுந்தரி! நான் உங்களை ஒரு முறையாவது சுகமாக வாழ வைத்திருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? ஆனால் நான் ஒரு அதிர்ஷ்டக் கட்டையம்மா. உங்கள் கடிதத்தின் அந்த வார்த்தைகளைப் படித்து நான் சிரித்தேன்—இன்று அவை அப்படியே உண்மையாகி விட்டன. 'மலர்', 'சூறாவளி'

இரண்டையும் பற்றிய ஒரு ரகசியமான வேதாந்தக் கருத்து அது. அதை நான் இன்று தான் புரிந்து கொண்டேன்!

சுவர்க்கத்திற்கு நிகர்த்த என் தேவி! நாம் இருவரும் ஒன்று சேர முடியாமல் பிரிந்து விட்டோம் என்று மனம் கூறுகிறது. நம்மிருவருடைய பாக்கியத்திலும் இவ்வளவு தான் கொடுத்து வைத்திருந்தது. அதுவரை நாம் ஒன்ருய் இருந்து அனு பவித்து விட்டோம். ஒரேயடியாக மூன்று பேரைக் கொலை செய்த குற்றம் என் மீது சுமத்தப்பட்டு வழக்குத் தொடர விருக்கிறது. இதிலிருந்து நான் தப்பும்படி அவ்வளவு எளிய குற்றமல்ல அம்மா இது! கிராமத்து மக்கள் இதற்கு அளிக்கும் புதிய உருவத்தைப்பற்றிக் கேள்விப் பட்டால், இனி நம் சந்திப்பு இத்தோடு சரி என்று முடிவு கட்டிவிட வேண்டியது தான்.

ஆனால் சுந்தரி! என் நேர்மையில் உங்களுக்குக் கூட சந்தேகமா? நான் கொலைகாரன், என்று உங்கள் உள்ளமும் சாட்சி கூறுமா! உலகம் முழுதும் என்னைக் கொலைகாரன் என்று அழைக்கட்டும், நீதி மன்றம் என்னைக் கொலை செய் தவன் என்று கூறித் தூக்கு தண்டனை யளிக்கட்டும். நான் அதற்கு சிறிதும் கவலைப்படமாட்டேன். ஆனால், சுந்தரி, நீங்களும் என்னை அவ்விதம் நினைத்தால், என் வாழ்வே பிரளயமாகி விடும்.

அதிகம் எழுதும் நேரமல்ல இது. இந்த வரிகளை உங்க ளிடம் கொண்டு சேர்ப்பிக்க அரும்பாடு படவேண்டி வந்தது. இதே காவலன் மறுபடியும் உங்களிடம் வருவான். கடிதத் திற்குப் பதில் எழுதி அவனிடம் கொடுத்தனுப்புங்கள். யாருக்கும் தெரியவேண்டாம். பாவம், அவனுடைய வேலைக்கு ஏதாவது ஆபத்து வந்து விடப்போகிறது.

இன்று ஞானிஜிக்கும் ஒரு கடிதம் எழுதுகிறேன். இப்போது அவர் ஹரித்வாரில் இருக்கிருர். அவர் உடனே வந்து உங்களை அவருடன் அழைத்துச் செல்வார். தீவான்பூருக்கு அருகில் இருப்பது உங்களுக்கு ஆபத்தை விளைவிக்கும்!

இன்னும் ஒரே ஒரு வார்த்தை—என்னை எப்போதாவது சந்திக்கவேண்டும் என்ற எண்ணம்கூட உங்களுக்கு ஊறு

விளைவிக்கும். எப்படியாவது நான் உங்களுக்குக் கடிதம் எழுதிக்கொண்டுதானிருப்பேன். இனி கடிதங்களையே நம் சந்திப்பென எண்ணிக்கொள்ள வேண்டியதுதான்.

உங்களைப் பார்த்தால் என் நிலைமை என்னவாகும் தெரியுமா? நான் பொறுமையை இழந்துவிடுவேன். தானுக மரணம் வருவதற்கு முன்னமேயே, நான் இறந்துவிடுவேன். இதைத் தவிர உங்கள் நிலைமையும் பயங்கரமாகிவிடும்.

இந்தப்பரீட்சையில் நீங்கள் எவ்வளவு தேர்ச்சியடைகிறீர்கள் என நான் பார்க்க விரும்புகிறேன். உள்ளத்தை எவ்வளவு உறுதியுடன் வைத்துக்கொள்கிறீர்கள் என்று பார்க்க ஆசைப் படுகிறேன். சுந்தரி! உண்மையில் நான் ஏதோ எழுது கிறேனே தவிர, என் நிலைமை மிகவும் பயங்கரமாக இருக் கிறது. ஒவ்வொரு மணி நேரம் கழிந்த பிறகும் காவல் நிலையம் 'டன்' என்று மணி யடிக்கிறது. இந்த ஓசை எனக்கு எப்படி இருக்கிறது தெரியுமா? புதிய தொல்லை என்னை எதிர் நோக்கியிருப்பது போல் தோன்றுகிறது. உள்ளம் வேதனை யால் துடிக்கிறது. வேதனையைப் பொறுத்துக்கொள்ளவே முடியவில்லை.

சுந்தரி! என் உள்ளத்தைப்பற்றி நான் என்ன எடுத் துரைப்பேன்? நான் உங்களுக்கு ஆறுதல் கூறுகிறேன். ஆனால் இங்கு என்னைத் தேற்றுவார் யாருமில்லை. கிடக்கட்டும். நம் விதிப்படி நடந்துதான் தீரும்.

நான் உங்களுடன் பேசிக்கொண்டிருப்பதுபோலவே இப் போது எனக்குத் தோன்றுகிறது—இந்தப் பேச்சில்தான் எவ்வளவு சுகம்! ஒரு கண நேரமாகிலும் சரி—உலகத்துத் தொல்லைகளும், இனி வரப்போகும் இன்னல்களும் அவற்றைப் பற்றிய கவலைகளும் என்னை விட்டுப் பறந்தோடிவிட்டாற் போல் உணர்கிறேன்.

இப்படிக்கு
உங்கள்
பச்சன் சிங்'

கடிதத்தைப் படித்துக்கொண்டிருக்கையில் சுந்தரியின் எண்ணம் பலவித மாறுதலை யடைந்தது. அவளுக்கு ஆவேசம் வந்தது. பழி வாங்க வேண்டும் என அவள் துடித்தாள்.

உடனே அவள் எழுந்தாள். பேனாவையும் மைக்கூட்டையும் எடுத்துக் கடிதம் எழுதத் துவங்கினாள்—

'என் ஆருயிரே!

கடிதத்தைப் படித்தேன். இவ்வளவு சீக்கிரம் நீங்கள் பயந்துவிட்டீர்களே! ஆண்பிள்ளை, அதிலும் ஒரு பாவமுமறியாதவர். அப்படியிருந்தும் ஏன் அஞ்சவேண்டும்? எதற்காகப் பயப்பட வேண்டும்? எதைப் பற்றிய கவலை உங்களுக்கு? என்னை நினைத்தா அஞ்சுகிறீர்கள்?

என் காதலரே! வெள்ளையுள்ளப் பேரன்பே! மறுபடியும் இப்படிச் சொல்லாதீர்கள். உங்களைச் சந்திப்பதற்கு முன்பு என் உள்ளம் மலரின் இதழைப்போல் மென்மையாக இருந்தது. சில நாட்களுக்குப் பிறகு (அப்பாவின் மறைவிற்குப் பிறகு, உங்கள் பேரில் கொடுமை இழைக்கப்பட்டபிறகு) அதே உள்ளம் மரத்தைப் போலாகிவிட்டது. உங்கள் கடிதத்தைப் படித்தவுடன் அது எஃகு போலாகிவிட்டது.

காதலரே! உலகம் என்னைச் செல்லாத காசுக்குக்கூட மதிக்காவிட்டால் போகிறது. நான் அதை அதற்கும் கடையாகத்தான் மதிக்கிறேன். நீங்கள் என்ன சொன்னீர்கள்? என்னைச் சுகமாக வைத்துக்கொள்ள முடியவில்லையா? இது தான் உங்கள் தவறான எண்ணம். நீங்கள் அளித்த சுகம் என்னிடம் தானிருக்கிறது. 'மலர்' 'காற்று' இவற்றைப்பற்றி நீங்கள் குறிப்பிட்டிருந்தீர்கள். அப்போது நான் அன்பு காதல் எனும் பாதையைப்பற்றி ஒன்றுமே அறியாதிருந்தேன். ஆனால் இப்போது அதன் சிறப்பையும் பெருமையையும் உணர்ந்ததோடு நில்லாமல், அதை என் வாழ்விற்கே ஆதாரமாக ஆக்கிக் கொண்டுவிட்டேன். அதனால்தான் அந்நாட்களில் நான் கூறிய வார்த்தைகள் அனுபவமற்ற ஒருத்தியின் புத்திசாலித்தனமில்லாத சொற்களைப்போல் தோன்றுகின்றன.

என் தெய்வமே! முதலில் என் அன்பு உங்கள் உடலின் பேரில் இருந்தது. அதனால் நான் பல ஆபத்துக்களை எதிர்த்து

நிற்க நேர்ந்தது. ஆனால், இப்போது உங்கள் ஆன்மாவின் பேரில் நான் காதல் கொண்டுள்ளேன். ஆகையால் இனி ஒரு விபத்தும் என்னை ஒன்றும் செய்துவிட முடியாது. ஊழிகாலம் வரையில் என்னை 'உங்களிடமிருந்து எவராலும் பிடுங்கிக் கொள்ள முடியாது.

என் மகுடமே! எதை நினைத்து நீங்கள் அஞ்சுகிறீர்கள்? —மரணத்தைக் குறித்தா? உலகம் மரணம் என்று எதைக் குறிப்பிடுகிறதோ, அது உண்மையில் வாழ்வுப் பயணத்தின் ஒரு தங்குமிடம். இந்தப் பயணத்தின்பேரில் உங்களுக்கு மதிப்புக் கிடையாதா அல்லது அது இருப்பதையே நீங்கள் உணரவில்லையா? என் அன்புக் கடவுளே! நாம் இருவரும் ஆன்மீகரீதியில் இரண்டறக் கலந்துவிடுவோம். உலகத்தின் பொறுமைக் கண்கள் நம் அன்புக்கு முட்டுக்கட்டை போட முடியாது, நாம் தம்பதிகளாக வாழ்வோம், அந்த அரியாசனத்தை யடைந்து ஒருவரையொருவர் அன்புடன் அணைத்துக் கொள்வோம். அந்த இடத்தில் பிரமனும், இந்திரனும்கூட நம் அன்புப் பிணைப்பைப் பிரிக்கச் சக்தியற்றுக் காணப் படுவர். நீங்கள் அதையா மரணம் என்று குறிப்பிடுகிறீர்கள்? இது அநியாயம்! என் அன்பே, முற்றிலும் அநியாயம்!

நாம் பிரிந்து விட்டோம் என்று உங்கள் உள்ளம் ஒப்புக் கொண்டு விட்டதா? இல்லை, அன்பே! இல்லவே இல்லை, நாம் இருவரல்ல, இனி ஒருவராகி விட்டோம் என்று என் உள்ளம் கூறுகிறது.

உங்கள் உண்மையான நடத்தையில், நேர்மையில் எனக்கு என்றுவது அவநம்பிக்கை ஏற்படுமா? நீங்கள் குற்றம் புரியாதவர் என்று அறிவதோடு நில்லாமல் குற்றம் புரிந்தவர் யார் என்பதையும் நான் அறிவேன். ஆனால் நான் யாருக்கு நம்பிக்கையூட்டுவேன்! என் பேச்சை யார் நம்பப் போகிறுர்கள்?

அன்வர் தான் இருவரையும் கொன்று விட்டுத் தற்கொலை புரிந்து கொண்டிருக்கிறுள் என்று எனக்கு நன்ருகத் தெரியும். நான் அவளுடன் பேசிவிட்டு வந்த போது, அன்வர் அவ்விரு வரையும் மறுபடி அழைத்து வரச் சொல்லியிருப்பாள்.

அதற்குப் பிறகு தான் இந்த வேலையைச் செய்திருக்கிருள். ஆனல், இந்த உண்மையை நான் நீதி மன்றத்தில் எவ்விதம் கூறுவேன் என்று தான் அடிக்கடி சிந்தித்துக் கொண்டிருக் கிறேன்.

நீங்கள் ஞானிஜீக்குக் கடிதம் எழுதுவதும் ஒரு வகையில் நல்லது தான். ஆனல் உங்களை மரணத்தின் வாயிலில் விட்டு விட்டு நான் ஹரித்வார் செல்வது இயலாத காரியம். உங்களைக் காப்பாற்ற என்னல் ஒன்றுமே செய்ய முடியாதா? என் போன்ற அபலையால் ஒன்றும் முடியாது என்பதை நானறி வேன். நீங்கள் முடிக்காமல் விட்டு வைத்துள்ள சீர்திருத்தப் பணியை என்னல் மேற்கொள்ள முடியாதா? ஒன்றும் இயலா விட்டாலும் இந்தப் பேனு முனையின் வாயிலாகவாவது நாட்டில் சீர்திருத்தத்தை வெள்ளம் போல் பெருகச் செய்வேன். அதில் இந்த சமுதாய அழுக்குகளும் குப்பைகளும் மூழ்கி இருந்த இடம் தெரியாமல் நசித்துவிடும்.

ஆனல் என் நாயகரே! உங்கள் உள்ளம் இவ்வளவு பலவீன மாக இருக்கும் என்று கனவிலும் நான் கருதவில்லை. உள்ளத் தைத் தெம்புடன் வைத்துக் கொள்ளுங்கள். பயத்தை அருகே அண்ட விடாதீர்கள். நான் நேற்றிலிருந்து உங்களைச் சந்திக்க முயன்று வருகிறேன். ஆனல் நீங்கள் 'கூடாது' என்கிறீர்கள். ஒரே ஒரு முறை சந்திக்க விரும்பும் என்னை மன்னித்து விடுங்கள்.

அன்பே! நீங்கள் மிகுந்த உள்ளத்தெம்புடன் என்னை இந்தப் பரீட்சையில் தேறவேண்டும் என்கிறீர்கள். என்னைப் பற்றிய கவலையை விட்டு விட்டு இந்தப் பரீட்சையில் நீங்கள் தேர்வு காண முயலுங்கள். என் மணி மகுடமே! நான் சுகமாக இருப்பதை நீங்கள் விரும்புகிறீர்களல்லவா? நீங்கள் முழு உற்சாகத்துடனும் மன உறுதியுடனும் இருக்கவேண்டும். அதில் தான் என் சுகமும் மகிழ்வும் இருக்கின்றன.

நான் உங்களுடன் இரண்டறக் கலந்தவள்—

இப்படிக்குத்
தங்கள்,
சுந்தரி'

[ 29 ]

பச்சன் சிங் என்று கைதானதே, அன்றிலிருந்து சுந்தரி பாடம் கற்பிக்கும் வேலையைச் செய்யவேயில்லை. அவளுக்குத் தன்னைப் பற்றிய நினைவுமிருக்கவில்லை. காலையிலிருந்து மாலை வரை யார் வீட்டிற்காவது அலைந்து திரிந்து கொண்டேயிருந்தாள். தண்ணீர் அருந்துவது, உடையை மாற்றிக் கொள்வது போன்ற வேலையில் கூட அவளுக்கு நாட்டமில்லை. ஆனால் வெற்றி கிட்டும் என்ற நம்பிக்கை அவளுக்கு எங்கிருந்தும் கிடைக்கவேயில்லை. பச்சன் சிங்கின் தாய் மகனுக்காக வழக்காடப் போகிறாள்—ஆனால் அவளுடைய சுற்றத்தார் பச்சன் சிங்கை ஒழித்துக் கட்டிவிட்டு அவளுடைய பாத்திரம்—பண்டம், நில-புலன்களைப் பறித்துக் கொள்வதிலேயே நாட்டமாக இருக்கின்றனர்.

மறுபுறம், சுந்தரியை அடைந்து தன் வீட்டை ஒளிமயமாக்கிக் கொள்ள வழி என்ன என்று பாலாசிங் பார்த்துக் கொண்டிருக்கிறான். அவனுக்கு முட்டுக் கட்டை போட்டவர்களில் பெரும்பாலோர் அழிந்து விட்டனர்.

பாலாசிங்கின் நெஞ்சத் துணிவின் காரணமாகப் பொய் வழக்கு மிகவும் தந்திரமாகத் தொடுக்கப்பட்டு ஒரு வலைபோல் பின்னப்பட்டு விட்டது. அதனின்றும் பச்சன் சிங் தப்புவதற்கு வழியே கிடையாது, நம்பிக்கையும் கிடையாது.

போலீஸ் விசாரணை நடந்தது. சேட் ரலாராம் மற்றும் அவனுடைய மகனும் போலீசாரிடம் இவ்விதம் கூறினர்—'பச்சன் சிங் அன்வரின் சங்கீதக் கச்சேரியை நிறுத்த எங்களைப் பலவிதமாகப் பயமுறுத்தினான். நாங்கள் மறுத்ததும்—"சரி இதை வேறு விதத்தில் நிறுத்துகிறேன்" என்று சொல்லி விட்டுச் சென்றான்.'

பாலா சிங் கூறினான்—'இந்தச் சம்பவத்திற்கு முதல் நாள் பச்சன் சிங் என்னைச் சந்தித்தான். "நூறு அல்லது இருநூறு ரூபாய் வாங்கிக் கொண்டு இரண்டு - மூன்று பேரைக் கொலை செய்யக்கூடிய ஒரு ஆசாமியை எனக்குக் காண்பியேன்"

என்று என்னை அவன் கேட்டான். நான் அப்படிச் செய்யக் கூடாது என்று சொன்னேன்—அப்போது அவன்—" நானே எல்லா வற்றையும் முடித்து விடுகிறேன் " என்று கூறினான்.'

பாலா சிங்கின் தோழர்களில் ஒருவன் கூறினான்—' ஒரு கத்தியுடன் அன்றிரவு பச்சன் சிங் அன்வரின் வீட்டு வாசலில் உலாவிக்கொண்டிருந்தான்.' 'காலையில் இரத்தம் தோய்ந்த துணியை அலசிக்கொண்டிருந்தான். நான் அதைப் பார்த்தேன்' என்று மற்றொருவன் கூறினான். 'இந்த நிகழ்ச்சி நடந்த அந்த இரவு நான் பச்சன் சிங்கை அன்வரின் வீட்டுத் திண்ணையில் ஏறுவதைக் கண்டேன். பாட்டுக் கச்சேரியைப் பற்றி ஏதோ பேசுவதற்காக அப்போது கரம்சந்தும் பண்டிதரும் அங்கு சென்றிருந்தனர்' என்றான் மற்றொருவன்.

ஒரு கருமான் ரத்தம் தோய்ந்த கத்தியைப் பார்த்துக் கூறினான்—' ஆமாம் இதுதான் என் கடையில் செய்யப்பட்ட கத்தி. பச்சன் சிங் என் கடையிலிருந்து வாங்கிச் சென்றான் !' அந்தக் கத்தி அன்வரின் வீட்டுத் திண்ணையிலிருந்து இரத்தக் கறையுடன் எடுத்து வரப்பட்டது.

வழக்கு முழுவதுமே பச்சன் சிங்கிற்கு எதிராக இருந்தது. எல்லாவற்றிற்கும் முதலில் பச்சன் சிங்கின் தாய் அமர்த்தியிருந்த வக்கீலிடம் சுந்தரி இரவில் தான் அன்வரைச் சந்தித்த நிலைமை முழுவதையும் சொல்லிவிட நினைத்தாள். ஆனால் அதற்கும் முன்பாகவே ரகசியம் முழுவதையும் பச்சன் சிங்கிற்குத் தெரிவித்து விடுவது அவசியம் என்று அவள் நினைத்தாள்.

இரண்டு-மூன்று நாட்கள் முயற்சி செய்த பிறகு கடைசியில் சுந்தரிக்கு அனுமதி கிடைத்துவிட்டது.

## [ 30 ]

பச்சன் சிங் சிறையில் கட்டுப்பாடுகள் நிறைந்த அறையில் அடைபட்டுக் கிடந்தான். அவன் ஒரு சிப்பாயின் வழியாக சுந்தரிக்குக் கடிதம் அனுப்பி, அதற்குப் பதில் வாங்கி வரச் செய்தான். அந்தச் சிப்பாயின் உதவியினால் தான் இன்று சுந்தரி அவனைச் சந்திக்கும் நாள் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

மாலை ஐந்து மணியிருக்கும். சந்திப்பதற்கு ஏற்பாடாகியிருந்த கைதிகள் அவர்களுடைய அறைகளிலிருந்து வெளியே சிறையின் நிலைப்படிக்கருகே கம்பிகள் போடப்பட்ட வராந்தாவில் கொண்டுவரப்பட்டார்கள். அந்தக் கைதிகளில் பச்சன் சிங்கும் இருந்தான்.

பச்சன் சிங் கம்பிகளின் வழியாக யாரையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அவன் தொலைவில் வரும் சுந்தரியைப் பார்த்தான். அப்போது அவனுக்கு உண்டான வருத்தத்திற்கு அளவே கிடையாது. சுந்தரியின் நிலை பார்க்கக்கூடியதாக இருக்கவில்லை. அவளுடைய உடலில் இரத்தத்தையே காணோம். முகத்தில் வாட்டம் காணப்பட்டது. அவளுடைய கால்கள் நடுங்கிக்கொண்டிருந்தன. அவள் விழுந்துவிடுபவள் போலக் காணப்பட்டாள்.

'சுந்தரி! உங்களுடைய அந்தத் துணிவு எங்கே போய் விட்டது? நீங்கள் எனக்கு ஆறுதல் கூறிவந்தீர்களே!' பச்சன் சிங் கம்பிகளின் வழியாக கையை நீட்டி சுந்தரியின் கைகளைக் குலுக்கியவாறு கேட்டான். ஆனால் சுந்தரிக்குச் சுய உணர்வே யில்லை. தன் உள்ளம் கல் போன்றது என்று தான் அவள் இத்தனை நாட்களாக நினைத்து வந்தாள். ஒரு துளி கண்ணீர் கூட வடிக்காமலிருந்து வந்தாள். ஆனால் பச்சன் சிங்கின் எதிரே வந்ததும் அவளுடைய கண்களிலிருந்து ஒரு குடம் கண்ணீர் வழியலாயிற்று. ஒருவேளை இத்தனை நாட்களாகத் தேக்கி வைக்கப்பட்டிருந்தது தான் அப்படிப் பொங்கி வழிந்துவிட்டதோ என்னமோ!

'சுந்தரி! மிகக் குறைந்த நேரம் தானிருக்கிறது'—என்று பச்சன் சிங் அவளுக்கு ஆறுதல் அளித்தவாறு கூறினான். சுந்தரி தன் தவற்றை உணர்ந்துகொண்டாள். அவளுடைய கண்ணீர் உடனே நின்றுவிட்டது. அவள் கண்களைத் துடைத்துக்கொண்டு பச்சன் சிங்கைப் பார்த்துக் கூறினாள்—'நான் அதிக நேரத்தை வீணாக்கிவிட்டேன்!'

பச்சன் சிங் தொண்டையைச் சரிப்படுத்திக்கொண்டு சொன்னான்—'இல்லையே, இப்போதுதான் ஐந்து நிமிடங்கள்

ஆகியிருக்கின்றன. இன்னும் இருபது அல்லது இருபத்தைந்து நிமிடங்கள் இருக்கின்றன. சுந்தரி! நாம் சந்திப்பதால் ஒரு பயனும் உண்டாகப் போவதில்லை. அதனால் தான் உங்களுக்கு நான் கடிதம் எழுதியனுப்பினேன்.'

'ஆனால் நான் என்ன செய்வேன்?' சுந்தரி பெருமூச்சு விட்டவளாய் மேலும் கூறினாள்—'ஒரு வேலை இருந்தது. அதற்கு உங்களைச் சந்திப்பது அவசியமாக இருந்தது.'

'என்ன அப்படிப்பட்ட வேலை?'

'நான் உங்களை ஏமாற்றிவிட்டேன். உண்மையை உங்களுக்குக் கூறாமலிருந்துவிட்டேன்.'

'என்ன இது?'

அதுவரை பச்சன் சிங்கிடம் கூறாமல் மறைத்து வைத்திருந்த நிகழ்ச்சி முழுவதையும், அன்றிரவு நடந்த நிகழ்ச்சி முழுவதையும் சுந்தரி கூறிவிட்டாள்.

அதைக்கேட்டதும் பச்சன் சிங் திகைத்து நின்றுவிட்டான். இதுவரை அவன் தன்னைச் சிக்கவைப்பதற்காக பாலா சிங் தான் அந்தத் தீய செயல்களையெல்லாம் செய்ததாகவும் அந்த மூன்று கொலைகளையும் பாலா சிங்காவது அவனுடைய தோழர்களாவது தான் செய்திருக்கவேண்டும் என்றும் எண்ணியிருந்தான். தன்னைச் சிக்கவைப்பதோ அல்லது அன்வரின் நகைகளைக் கொள்ளையடிப்பதோ பாலா சிங்கின் எண்ணமாக இருந்திருந்தால், அவன் கரம்சந்தையும் பண்டித ராதா கிருஷ்ணனையும் ஏன் கொலை செய்தான் எண்ணியபொழுது பச்சன் சிங்கிற்கு ஆச்சரியமாக இருந்தது. ஆனால் ஒரு வேளை அந்த இரண்டு பெரிய மனிதர்களும் அந்த நேரத்தில் அங்கே வந்திருக்கலாம்; அதனால் பாலா சிங் அவ்விருவரையும் கொலை செய்திருக்கலாம் என்று எண்ணியதும் அவனுடைய சந்தேகம் தீர்ந்துவிட்டது.

ஆனால் அன்வர்தான் அந்த இருவரையும் கொலை செய்துவிட்டுத் தன்னையும் கத்தியால் குத்திக்கொண்டு விட்டாள் என்ற உண்மையை சுந்தரி கூறக்கேட்டதும் பச்சன் சிங் நடுங்கிப்போனான். மேலும் சுந்தரியின் தாய்க்கு (அன்வர்) இவ்வளவு பயங்கரமான முடிவு வரவேண்டுமா? இந்த

எண்ணம் அவனைச் சுய நினைவற்றவனாக ஆக்கிவிட்டது. அவனுடைய வாயினின்றும் வெகுநேரம் வரை பேச்சே கிளம்பவில்லை.

இன்று பச்சன் சிங் தன்னை வேசியின் மகள் என்று எண்ணுகிறான் என நினைத்து சுந்தரியின் கண்கள் தாழ்ந்து விட்டன.

பச்சன் சிங்கும் சுந்தரியின் மன நிலையை உணர்ந்து கொண்டான். ஆதலால் இவன் இதுபற்றி மேலும் பேச விரும்பாது கூறினான்—'ஆனது ஆகிவிட்டது. சுந்தரி! இது எவ்வளவு வேடிக்கையான விஷயம்! ஆமாம், இன்னும் ஞானிஜி (அறிஞர்) வரவில்லையா ?'

'இல்லை, ஒருவேளை இன்று மாலைக்குள் வரலாம்!'

'அப்படியென்றால் நீங்கள் நாளை காலை வண்டியில் அவர்களுடன் சென்றுவிடுவீர்கள். இல்லையா ?'

'இல்லை. என்னால் இப்போது போக முடியாது.'

'ஏன் ?'

'நான் நீதிமன்றத்தில் வாக்குமூலம் கொடுக்க வேண்டும்.'

'என்ன வாக்குமூலம் ?'

'இப்போது நான் உங்களிடம் சொன்னேனே, அதைத் தான். இதன் உதவியால்தான் நான் உங்களை நிரபராதி என்று நிரூபிக்க முடியும்.'

பச்சன் சிங்கிற்குச் சிரிப்பு வந்தது. அவன் கூறினான்—'சுந்தரி! உங்களுடைய வார்த்தைகளை யார் நம்புவார்கள்? அன்வர் தனது செயலைப் பற்றித் தன் கையால் எழுதிய அத்தாட்சி எதையாவது விட்டுப் போயிருந்தாலோ அல்லது இறக்கும்போது போலீசிடம் ஏதாவது இது போன்ற வாக்குமூலம் எழுதிக் கொடுத்திருந்தாலோ, ஒருவேளை நான் பிழைக்க முடியும். ஆனால் இப்போது நீங்கள் சொன்னால் மக்கள் சிரிப்பார்களே தவிர வேறு பயனேதும் ஏற்படாது.'

சுந்தரி ஆவேசத்துடன் கூறினாள்—'சுந்தரி ஒரு வேசியின் மகள் என்று சொல்லித்தானே மக்கள் சிரிப்பார்கள். இல்லையா? ஒரு முறையல்ல, ஆயிரம் முறை சொல்லட்டும். எனக்கு அதைப் பற்றிக் கவலையில்லை.'

'அப்படியில்லை சுந்தரி! உங்களுடைய இந்த ரகசியம் வெளியாவதை என்னால் சகிக்க முடியாது. உங்களுக்கு என்னிடம் உண்மையான அன்பு இருக்குமானால் இதை ரகசியமாகவே வைத்துக்கொள்ளுங்கள். மற்றொன்று என்னவென்றால் நீதி மன்றம் உங்களுடைய இந்த வாக்குமூலத்தை நம்பத் தயாராக இருக்காது; நம்பத் தகுந்ததாகவும் கருதாது. உங்களிடம் இதற்கு ஒரு ஆதாரமும் இல்லை.' சிறிது நேரம் யோசித்து விட்டு பச்சன் சிங் மறுபடியும் கூறினான்—'ஆனால் அன்வர் ஏன் ஒன்றுமே எழுதி வைத்துவிட்டுப் போகவில்லை என்பது தான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது.'

'அவ்வாறு எழுதுவதனால் என்னைப் பற்றியும் எழுத வேண்டி வரும் என்று எண்ணித்தான் அவர் ஏதும் எழுதி வைக்கவில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. சுந்தரி அவளுடைய மகள் என்பது மக்களுக்குத் தெரியக்கூடாது என்று அவர் நினைத்திருக்கலாம். ஆனால் அவருக்கு என்ன தெரியும்? அவளுடைய இந்தச் செய்கையால் உங்களுக்கே...' என்று சொல்லச் சொல்ல சுந்தரியின் தொண்டையை அடைத்தது. நாத் தழுதழுத்தது. அவளால் ஏதும் பேச முடிய முடியவில்லை.

இருவரும் இவ்வளவுதான் பேசினர். இருவருடைய கலங்கிய உள்ளங்களிலும் எத்தனையோ கதைகள் இன்னும் நிறைந்து கிடந்தன. ஆனால் அதற்குள் சந்திப்பு முடிந்துவிட்டது. மணி யோசை இதை அறிவித்தது. எல்லாக் கைதிகளும் தங்கள் விருப்பத்துடன் சந்திக்குமிடத்தை விட்டுச் சென்றார்களா அல்லது போலீஸ் அவர்களைத் தள்ளிக்கொண்டு அந்த இடத்தை விட்டு அகற்றிச் சென்றதா என்பது யாருக்குத் தெரியும்! பச்சன் சிங்கிடம் தெரிவிப்பதற்காக சுந்தரியின் உள்ளத்தில் குவிந்திருந்த துன்பங்கள் அப்படியே தங்கிவிட்டன. பச்சன்சிங் அந்த இடத்தை விட்டுப் போகும்போது அவளுடைய கண்களுக்கெதிரில் இருள் படர்ந்திருந்தது. பச்சன்சிங் எப்போது அவளுடைய கண்ணெதிரிலிருந்து அகன்றான். செல்வதற்கு முன்பு அவன் கூறிய கடைசி வார்த்தைகள் என்ன? சுந்தரிக்கு இவையெல்லாம் நினைவே யில்லை.

[ 31 ]

அவநம்பிக்கை, எங்கும் அவநம்பிக்கையாக இருந்தது. கண்களுக்குக் கெட்டிய தூரம் வரையிலும், மனக்கற்பனை செல்லும் தொலைவு வரையிலும் சுந்தரிக்கு அவ நம்பிக்கையே தென்பட்டது. அறிஞரும் அடுத்த நாள் வந்துவிட்டார். அம்ருத்சர் நீதிமன்றத்தில் வழக்கு நடந்து கொண்டிருந்ததால் அறிஞரும் சுந்தரியும் அமிருதசரிலேயே இருந்துகொண்டு வழக்காடத் தொடங்கினார்கள். ரவாணி கிராமத்திலோ தீவான்பூரிலோ இருப்பது சுந்தரிக்குத் தேவையற்றதாகவும் பயங்கரமானதாகவும் இருந்தது.

பச்சன் சிங்கின் வழக்கு கீழ் நீதி மன்றத்தில் நடந்து கொண்டிருந்தது. அதன் கடைசித் தீர்ப்பு என்ன ஆகுமோ! அது எல்லோருக்கும் தெரிந்து தானிருந்தது. ஆனால் வழக்கு போன போக்கைப் பார்க்கும் பொழுது குற்றவாளி தப்ப ஒரு வழியுமே யில்லாமலிருந்தது. நாட்டியக் கச்சேரியை எதிர் பார்ப்பதற்காகப் பல நாட்கள் பச்சன் சிங் பாடுபட்டது அவன் தான் கொலையாளி என்பதற்குப் பெரிய சான்றாகக் கருதப்பட்டது. இதைத் தவிர கொலை நடந்த இரவு அவன் அன்வரின் வீட்டு வாசலுக்கு வெளியே சுற்றிக்கொண்டிருந்ததும் நிரூபிக்கப்பட்டுவிட்டது. இந்த ஒரு சான்றே நூறு சான்றுகளுக்குச் சமமாக இருந்தது. அதுமட்டுமன்றி பாலா சிங், மற்றும் அவனுடைய குழுவினரின் தைரியத்தினால் பொய்ச் சாட்சியம் சொன்னவர்கள் எஞ்சியிருந்த குறையையும் தீர்த்து விட்டார்கள்.

நிகழ்ச்சி எவ்வாறு நடந்தது? அந்த இரவில் சுந்தரி அன்வரின் வீட்டிலிருந்து திரும்பி வந்த நேரத்தில் அன்வர் தனது ஒரு கையாளை அனுப்பிக் கரம்சந்தையும் பண்டித் ராதாகிருஷ்ணையும் கூப்பிட்டு அனுப்பினாள். அன்வரின் அழைப்பு அந்த இருவருக்கும் ஆண்டவனின் கருணைக்கு ஒப்பாக இருந்தது. இருவரும் அவளது வீட்டுப்பக்கம் ஓடினார்கள். அன்வர் அந்த இருவரையும் கொலை செய்வதற்கு

முன்பு நன்ருகக் காதல் நாடகம் நடித்தாள். முதலிலேயே அவர்களிருவரும் மதுவருந்திய மயக்கத்தில் கண்ணிழந்து கிடந்தார்கள். அன்வர் அவர்களை இன்னும் குடிக்கும்படி செய்தாள். குடித்துக் குடித்து இருவரும் மயங்கி விழுந்த பொழுது அன்வர் தனது கத்தியால் ஒவ்வொரு முறை குத்தி அவர்களைத் தீர்த்துக் கட்டிவிட்டு மூன்ரும் முறை தன்னையும் குத்திக் கொலை செய்து கொண்டாள்.

தினம்போல் காலையில் அன்ரு (அன்வரின் கிழ வேலைக்காரி) உள்ளே வந்து அங்கேயிருந்த காட்சியைப் பார்த்து விட்டு பலமாகக் கூக்குரலிட்டாள். அதைக் கேட்டு பலர் மேலே வந்தார்கள். பார்ப்பதற்குள் பெருத்த கூட்டம் அங்கே கூடி விட்டது. அறை முழுவதும் இரத்த வெள்ளமாக இருந்தது. அதில் மூன்று பிணங்களும் மிதந்து கொண்டிருந்தன.

பாலாசிங்கிற்கும் அவனுடைய நண்பர்களுக்கும் இந்தச் செய்தி எட்டியதும் அவர்களுடைய மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. அவர்கள் உடனே போய் போலீஸை அழைத்து வந்தார்கள். இந்தக் கொலை நாடகம் முழுவதற்கும் தலைவன் பச்சின்சிங் என்று தெரிவிக்கப்பட்டது.

கொலை எப்பொழுது யாரால் செய்யப்பட்டது என்ற உண்மையான ரகசியம் சுந்தரியைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது. ஆனல் தொண்ணூற்றைந்து சத விகித மக்களுக்கு பச்சன் சிங்கின் மீதுதான் சந்தேகமாக இருந்தது. நம்பிக்கையில்லாது சந்தேகம் ஏன் இருக்க வேண்டும்? அன்வரைத்தான் அவன் சீர்திருத்தும் வேகத்தில் கொலை செய்து விட்டான். ஆனல் முன்பின் தெரியாத பகைமையேயில்லாத மற்ற இருவரை, பகையே இல்லாத அவர்களை அவன் ஏன் கொலை செய்ய வேண்டும் என்ற எண்ணத்தால் அவர்களுக்குச் சந்தேகமாக இருந்தது. ஆனல் பண்டித் ராதாகிருஷ்ணனும், கரம்சந்தும் அடுத்த நாள் நடக்கவிருக்கும் நாட்டியக் கச்சேரியைப்பற்றி ஆலோசனை செய்வதற்காக அன்வரின் வீட்டை அடைந்தார்கள். அப்பொழுது பச்சின்சிங் அன்வரைக் கொலை செய்துவிட்டுக் கையில் கத்தியை எடுத்துக் கொண்டு திரும்பிக் கொண்டிருந்தான். இரகசியம் வெளியாகிவிடும் என்ற பயத்

தால் அவன் அந்த இருவரையும்கூடத் தீர்த்து விட்டான் என்று சில சாட்சியங்கள் நிரூபித்ததும் மக்களுடைய சந்தேகம் நீங்கி விட்டது. அதன் பிறகு பச்சின்சிங்தான் குற்றவாளி என்ற நம்பிக்கை மக்களுக்கு ஏற்பட்டு விட்டது. அப்பாவி சதாகௌர் நினைவிழந்து கிடந்தாள். சுந்தரியின் ஒரு கால் நீதிமன்றத்திலும் மற்றொரு கால் வக்கீலின் வீட்டிலுமாக இருந்தது. பச்சின்சிங்கின் வக்கீல் சுந்தரியின் சாட்சியத்தைக் குற்றவாளியின் தரப்புச் சாட்சியங்களில் சேர்த்து விட்டார். பச்சின் சிங்கின்மீது குற்றம் சாட்டப்பட்டபொழுது கடைசி வரையில் நடந்தது முழுவதையும் கூறி விட்டாள். ஆனால் அவளுடைய நீண்ட கதை வழக்கோடு தொடர்பு உள்ளதாகக் கருதப்படவில்லை. அன்வர் யார்? பண்டித் ராதா கிருஷ்ணன், கரம்சந்த்—இருவருடைய நடத்தையும் எப்படிப் பட்டது? அன்வர் எந்தக் காரணங்களால் வேசி வாழ்க்கை வாழ வேண்டி வந்தது? சுந்தரி முடிந்த வரையில் இவையெல்லாவற்றையும் தெளிவுபடுத்த முயற்சி செய்தாள். ஆனால் அவளிடம் இவையனைத்தும் உண்மை என்பதற்கு எந்த ஒரு சான்றும் இல்லை. இவைகளை உண்மையென்று நிரூபிக்க முடியும் என்று நம்ப இடமாக இருந்தவரும் கொலை செய்யப் பட்டு விட்டார்கள். அவர்களைத் தவிர சுந்தரியின் வாக்குமூலப்படி நான்காவதான இலாக்கா அதிகாரியும் அன்வர் கையால் கொல்லப்பட்டு விட்டார். ஒரே ஒரு சாட்சிதான் எஞ்சி இருந்தது. அதுதான் தாராசந்த். ஆனால் அவன் எங்கே யிருக்கிறான்? உயிரோடு இருக்கிறானா அல்லது இறந்து விட்டானா என்பது யாருக்கும் தெரியவில்லை.

குற்றவாளித் தரப்பு வக்கீல் நம்பிக்கையிழந்து சுந்தரியிடம் கூறினார். 'பெண்ணே! இன்று உன்னுடைய தந்தை இருந்திருந்தால், இந்த வழக்கில் உதவியாக இருந்திருக்கும். இப்பொழுதும் நீ அவரைக் கண்டு பிடிக்க முடியுமானால் நல்லது நேரக்கூடும்.'

இனி அறிய வேண்டியது கொலை யார் செய்தார் என்பது தான். இதுபற்றி சுந்தரி அளித்த சாட்சியம் மதிக்கப்பட வில்லை. தன் தாய் (அன்வர்) அந்த இருவரையும் கொன்று

விடுவதாகத் தன்னெதிரில் சபதம் செய்ததாகச் சுந்தரி தன் வாக்கு மூலத்தில் தெளிவாகச் சொல்லியிருந்தாலும் நீதி மன்றம் எவ்வாறு கண்டுபிடிக்க முடியும்? சுந்தரியும் அந்த நிகழ்ச்சி நடந்த நேரத்தில் அங்கே இல்லை. நீதிமன்றம் சுந்தரி யின் வாக்கு மூலத்தை வெறும் கற்பனைக் கதையோ அல்லது பைத்தியத்தின் உளரலோ என்று கருதிற்று.

அதாவது எல்லாம் அறிந்திருந்தும் சுந்தரியின் சாட்சி யத்தால் குற்றவாளிக்கு எந்தப் பயனும் கிடைக்கவில்லை. கடைசியாக வழக்கு செஷன் கோர்ட்டிற்கு ஒப்படைக்கப் பட்டது. இந்த முயற்சிகளால் சுந்தரிக்குக் கிடைத்தது என்ன வென்றால் இதுவரை தீண்டத்தகாதவனுடைய மகள் என்று முதலில் மக்களால் ஏசப்பட்ட அவள் இப்போது வேசியின் மகள் என்று அழைக்கப்படலானாள்.

நீதிமன்றத்துச் சட்டம் பணக்காரர்களின் அடிமையாகவும் ஏழைகளின் எஜமானனாகவும் இருக்கிறது. அது பணக்காரர் களின் கட்டளைப்படி நடக்கும்; ஏழைகளைத் தன் கட்டளைப் படி ஆட்டி வைக்கும்.

வழக்கு நடக்கும்பொழுது பச்சன் சிங் பலமுறை சுந்தரியை யும், சதாகௌரையும் அறிஞரையும் சந்தித்தான். அந்தச் சந்திப்பின் துன்பம் நிறைந்த காட்சியைக் காண்பித்து நாம் வாசகர்களை வருத்தப் படுத்த விரும்பவில்லை.

சில விசாரணைகளுக்குப் பிறகு செஷன் நீதிமன்றம் பச்சன் சிங்கிற்குத் தூக்கு தண்டனை அளித்து விட்டது. துரதிருஷ்டம் வாய்ந்த சதாகௌரால் இதைச் சகித்துக் கொள்ள முடிய வில்லை. இந்தச் செய்தியைக் கேட்டதும் சிறிது நேரம் வரை அவள் நினைவிழந்து போய் விட்டாள்.

பச்சன் சிங்கின் வாரிசுகளின் சார்பாக உயர்நீதி மன்றத்தில் அப்பீல் செய்யப்பட்டது. சுந்தரிக்கும் இது ஒரு சாதாரண மான வருத்தத்தை அளிக்கும் நிகழ்ச்சியாக இல்லை. ஆனால் அவளுடைய உள்ளத்தில் மூண்டிருந்த பழி வாங்கும் எண்ண மான நெருப்பின் கனல் அவளை அழித்து விடாமல் அவ ளுடைய உள்ளத்தை உறுதி வாய்ந்ததாக ஆக்கிவிட்டது.

# [ 32 ]

அம்ருத்சரிலுள்ள ஒரு சிறிய சந்தில் வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டு அறிஞரும் (ஞானிஜி) சுந்தரியும் அங்கே இருக்கத் தொடங்கினார்கள்.

பச்சன் சிங்கைக் காப்பாற்ற எடுத்துக்கொண்ட முயற்சி களனைத்தும் வீணாகப் போய்விட்டன. தூக்கு தண்டனைக்கு எதிராக உயர்நீதி மன்றத்தில் அப்பீல் செய்யப்பட்டிருந்த போதிலும் அது வெறும் கடமைதான், அதனால் எந்தப் பயனும் உண்டாகப் போவதில்லை என்பது சுந்தரிக்குத் தெரிந்திருந்தது.

தாராசந்தைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டுமென்ற விருப் பம் அவளுடைய மனத்தில் நாளுக்கு நாள் வளர்ந்து கொண்டே யிருந்தது. ஆனால் அதுவும் வெறும் மனக் கோட்டை கட்டு வதுபோல் தானிருந்தது. தான் அன்வரிடம் தாராசந்தின் உருவத்தைப்பற்றி ஏன் கேட்காமல் போனோம் என்று அவள் தன்னுடைய அறிவின்மையை நினைத்து வருந்திக் கொண் டிருந்தாள். உருவம் தெரியாமல் அவள் அவனைத் தேடிக் கண்டு பிடிப்பதில் எவ்வாறு வெற்றி காண முடியும்? அந்தக் காலத்தில் தாராசந்த் சியால்கோட்டில் ஏதோ ஒரு அரசாங்க அலுவலகத்தில் வேலை பார்த்து வந்தான் என்பதுமட்டும் அன்வரிடமிருந்து அவளுக்குத் தெரிந்திருந்தது. இதை வைத்துக் கொண்டு சுந்தரி சியால்கோட்டிற்குப் போய் அலுவலகங்களைச் சுற்றி வந்தாள். அவளுடைய பல நாட்கள் வீணாகப் போய் விட்டன. ஆனால் பதினெட்டு—பத்தொன்பது ஆண்டுகளுக்கு முன்பு நடந்ததை எவ்வாறு கண்டு பிடிக்க முடியும்! அங்கிருந்தும் சுந்தரி நம்பிக்கையிழந்து திரும்ப வேண்டி வந்தது.

ஆனால் சுந்தரி நம்பிக்கையை இழந்துவிட வில்லை. அவள் இங்குமங்கும் முயற்சி செய்து கொண்டேதானிருந்தாள். அத்துடன் பணம் சம்பாதிக்கும் எண்ணத்துடன் அவள் பல நாட்களாக விட்டுவைத்திருந்த தன் எழுத்துத் தொழிலை

மறுபடியும் துவக்கி விட்டாள். அவள் நாள் முழுவதும் ஏதாவதொரு வேலை செய்து கொண்டேயிருந்தாள். சாப்பாடு, துணி, மணி எதைப் பற்றியும் அவளுக்குக் கவலையே இல்லை. அவள் உயர்நீதி மன்றத்தின் தீர்ப்பை ஆர்வத்துடன் எதிர்ப் பார்த்துக் கொண்டிருந்தாள். இதிலேயே அவள் பல நாட்களைக் கழித்து விட்டாள். இந்த நாட்களில் அவளுடைய பல கதைகள் பஞ்சாபி இதழ்களில் வெளியாகியிருந்தன. அந்தக் கதைகளின் ஊர் பெயரில்லாத எழுத்தாளரைப் பற்றி எங்கும் ஒரே பேச்சாக இருந்தது.

அறிஞர் சுந்தரியை நன்ருகக் கவனித்துக் கொண்டிருந்தார். எப்பொழுதும் அவளுக்கு ஞாேபதேசம் அளித்து அவளுடைய உள்ளத்தில் அமைதியை உண்டாக்க முயற்சித்து வந்தார். ஆனால் சுந்தரியின் உள்ளத்தில் பழி வாங்க வேண்டுமென்ற எண்ணமான நெருப்பு எரிந்து கொண்டேயிருந்தது. ஆதலால் அவருடைய சொற்கள் எந்தப் பயனையும் அளிக்கவில்லை. சுந்தரியின் உடல் நாளுக்கு நாள் இளைத்துக் கொண்டிருந்தது. ஆனால் அவளுடைய உள்ளம் இன்னும் கடுமையாகவும் உறுதியாகவும் ஆகிக்கொண்டிருந்தது. அவளுக்கு உலகிலேயே வெறுப்பு ஏற்பட்டு விட்டதுபோல் இருந்தது. வாழ்க்கை அவளுக்குப் பொறுக்க முடியாததும் தேவையற்றதுமான சுமையாகத் தோன்றிற்று.

ஒருநாள் எதிர்பாராமல் பச்சன் சிங்கின் கடிதம் கிடைத்ததும் அவளுடைய உள்ளத்தில் பூரிப்பு தளிர்விட்டது. கவரின் மேல் பச்சன் சிங்கின் கையால் எழுதப்பட்ட விலாசத்தைப் பார்த்து அவள் நடுங்கியபடியே கவரைப் பிரித்தாள். கடிதத்தின் முதல் வரியில் எழுதப்பட்டிருந்த—'சுந்தரி! என் கடைசி அன்பு' என்பதைப் படித்ததும் அவளது தலை சுழன்றது. ஆனால் உடனே அவள் தன்னைத் தானே சமாளித்துக் கொண்டு கடிதத்தைப் படிக்கத் தொடங்கினாள்—

'அப்பீல் மறுக்கப்பட்டு விட்டது. தூக்கு தண்டனை நாளும் நிச்சயிக்கப்பட்டு விட்டது. அடுத்த செவ்வாய்க்கிழமை......'

சுந்தரியின் கையிலிருந்து கடிதம் கீழே விழுந்தது. அவளுடைய கால்களும் கைகளும் செயலற்றுப் போயின.

ஆனால் அவள் உதட்டைக் கடித்துக் கொண்டு ஒருமுறை தன் உள்ளத்தை உறுதிப் படுத்திக் கொண்டாள்; மேலும் கடிதத்தைப் படிக்கத் தொடங்கினாள்—

'ஐயோ! சுந்தரி! இப்பொழுது என் உள்ளத்தின் நிலை எப்படி யிருக்கிறது என்று உங்களுக்குத் தெரியுமா? என்னைப் போன்ற நிலையை அடைந்த பேதையைத் தவிர வேறு எவ ராலும் இதைப் புரிந்து கொள்ள முடியாது. அடேயப்பா! இந்த உலகம் எவ்வளவு பயங்கரமாகத் தோன்றுகிறது? கம்பிகள் சூழ்ந்த அறையில், அதுவும் சாதாரணக் கைதிகள் இருக்கும் அறையில் அல்ல, தூக்கு தண்டனை அடைந் தவர்கள் இருக்கும் அறையில் இருந்த போதிலும் உள்ளத்தால் நான் இப்போது சுதந்திரமானவனாகவும் இவ்வுலகை விட்டு மேலே பறந்து சென்று கொண்டிருப்பவனாகவும் உணர் கிறேன். ஒன்றன்பின் ஒன்றாக எத்தனையோ காட்சிகள் என் கண்ணெதிரே தோன்றுகின்றன. அவை என்ன காட்சிகள் தெரியுமா? எனக்கு நினைவு தெரிந்த நாள் முதல் இன்று வரை நான் பார்த்துக் கொண்டிருந்த காட்சிகள்தான் அவை.

மேலதிகாரி என்னுடைய அறைக்கருகே வந்து முதன் முறையாக எனக்குத் தூக்கு தண்டனையைப் பற்றித் தெரி வித்தார். அப்போது என் நிலைமை எப்படி இருந்தது தெரியுமா? அவர் அந்தச் சொல்லைக் கூறியவுடன் என் உலகமே மாறிவிட்டது. அப்பொழுது அறைச் சுவர்களும் கம்பிக் கதவுகளும் தரையும் எல்லாமாகச் சேர்ந்து கொண்டு 'தூக்கு தண்டனை', 'தூக்கு தண்டனை' என்று சத்தமிட்டு என் காதுகளைத் துளைத்துக் கொண்டிருந்தன. வெளியில் காவலன் துப்பாக்கியைத் தோளில் சார்த்திக் கொண்டு இங்கு மங்கும் எதையோ முணுமுணுத்துக் கொண்டே உலவிக் கொண்டிருந்தான். அவனும் தூக்கு தண்டனைப் பாட்டையே பாடிக் கொண்டிருந்தது போலிருந்தது. எதிரேயுள்ள முசுக் கட்டை மரத்தில் காக்கைகள் கத்திக்கொண்டிருந்தன. அவை களுக்கும் 'தூக்கு' என்ற சொல்லைத் தவிர வேறு ஒன்றும் நினைவில்லை போலும்.

நான் தலையிலிருந்து கால் வரையில் நடுங்கிக் கொண்டிருந்தேன். இல்லை, எனக்கு நடுக்கம் உண்டாகவில்லை. என்னுடைய ஒரு அவயவமும் நடுங்குவதாகத் தோன்றவில்லை. ஆனால் நான் நடுங்குவது போலவும், என்னுடைய உள்ளம், மூளை, எண்ணங்கள், எல்லாமே நடுங்கிக் கொண்டிருந்தன போலவும் தரை, கூரை, எதிரேயிருந்த முற்றம், வெளியே யிருந்த மரங்கள் எல்லாமே நடுங்கிக் கொண்டிருந்தன போல வும் எனக்குள்ளே ஓர் உணர்வு உண்டாகிக் கொண்டிருந்தது.

வெகு நேரம் வரை நான் இதே நிலையில் இருந்தேன். பிறகு மெதுவாக வேறொரு காட்சி எதிரில் தோன்றிற்று. அது களங்கமற்ற ஒரு தேவியின் காட்சியாகும். அந்தத் தேவியின் நிறம் கடுகுப் பூவைப் போன்று மஞ்சளாக இருந்தது. உடல் டாக்டரின் டிஸ்பென்ஸரியில் வைக்கப்பட்டிருக்கும் எலும்புக் கூடாக இருந்தது. ஆனால் அந்த மஞ்சள் நிறமான முகத்தி லிருந்து ஒரு ஒளி பரவிக் கொண்டிருந்தது. அந்த உருவத் தைப் பார்த்ததும் என் உள்ளம் மயங்கலாயிற்று. என் உள்ளத்தில் ஒரு பூரிப்பு தோன்றிற்று. அப்பொழுது நான் எனக்கு மரண தண்டனை கிடைத்திருக்கிறது என்பதையே மறந்து விட்டேன். அதுதான் என் சுந்தரியின் உருவம்.

மறு விநாடியே அந்த உருவம் மறைந்து விட்டது. என் கண்களுக்கு எதிரில் தூக்குமேடை தென்பட்டது. அதனருகி லேயே ஒரு கருத்த பயங்கரமான முகத்தை உடைய கொலை யாளி நின்று கொண்டிருந்தான். அவன் பெரு முயற்சியுடன் தூக்குக் கயிற்றுக்கு என்னெய் தடவி எதையோ பூசிக் கொண்டிருந்தான். இந்தக் காட்சியைப் பார்த்ததும் எனக்கு முதலில் தோன்றியதுபோல் நடுக்கம் தோன்றியது. என் மனம் பலவிதமான எண்ணங்களில் மூழ்கிவிட்டது. என் மனம் பயந்த குரலில் கொலையாளிடம் ‘என் நண்பனே! சிறிது நில். இவ்வளவு அவசரப்படாதே. இன்னும் என் னுடைய பல வேலைகள் முடிவு பெறாமல் இருக்கின்றன. அவை களை முடிக்க எனக்கு வாய்ப்புக் கொடு. நான் அதிக நேரம் எடுத்துக் கொள்ளமாட்டேன். விரைவில் அவற்றைச் செய்து விட்டு வந்து விடுகிறேன்’ என்று சொல்வது போலிருந்தது.

ஆனால் கொலையாளி இன்னும் அவசரப்பட்டவன் போல் 'அடேயப்பா! எனக்கு என் வேலையை முடிக்க அவசரம். உனக்கு உன் வேலையை முடிக்க அவசரம்! என்று கூறுவது போல் இருந்தது. அவன் மறுபடியும் அவசரமாகக் கயிற்றில் எதையோ பூசத் தொடங்கி விட்டான்.

அவனுடைய விடையைக் கேட்டு நான் நம்பிக்கை இழந்து விட்டேன். ஒரு பிரயாணி பல மாட்டு வண்டிகளில் சாமான் களை ஏற்றி வந்து இரயில் வண்டியில் அவைகளை ஏற்ற முயன்ற பொழுது இரயில் வண்டி ஊதி விட்டாலும் கார்டு பச்சைக் கொடி காட்டிவிட்டாலும் அந்தப் பிரயாணியின் நிலை எவ்வாறு இருக்குமோ அது போல் என் நிலையும் இருந்தது.

ஐயோ சுந்தரி! தாங்கள் தங்களுடைய ஒரு கடிதத்தில் சாவைப் பற்றிப் புகழ்ந்திருந்தீர்களில்லையா! அதன் பயனைத் தான் நான் அவ்வாறு எண்ணலானேன். ஆனால் ஐயோ! தூக்கு தண்டனையைக் கேட்டதும் தங்களுடைய உபதேசங்க ளெல்லாம் மறந்து விட்டன. இந்தச் சாவு முன்பைவிட ஆயிரம் மடங்கு பயங்கரமாக என்னெதிரில் வந்து நின்றது.

நான் உங்களை என்னைச் சந்திக்கவேண்டாம், சந்தித்தால் என் துன்பம் அதிகமாகிவிடும் என்று கூறித் தடுத்திருந்தேன். ஆனால் இப்பொழுது அந்த நிலைமை மாறிவிட்டது. என் னுடைய துன்பங்களுக்கெல்லாம் மருந்து நீங்கள் தான் என்று தோன்றுகிறது. நான் இறப்பதற்கு முன் ஒரு முறை, ஒரே ஒரு முறை உங்களைச் சந்திக்க விரும்புகிறேன். உங்களைச் சந்திப்பது எனக்குப் பெருத்த நன்மையை அளிக்கும்; நான் அமைதியுடனும் மகிழ்வுடனும் இறக்கமுடியும் என்று நான் நம்புகிறேன்.

சுந்தரி! இதை யெல்லாம் எழுதுவது யார்? இந்த ஆர்வம் எங்கிருந்து தோன்றுகிறது? மூளையிலிருக்கும் எந்தப் பொருள் முறையாகப் பேனாவால் இவைகளை எழுதிக் கொண்டிருக் கிறது? இந்த நாலு கெஜக் கயிறு ஒரே இழுப்பில் இந்த எல்லா வற்றிற்கும் ஒரு முடிவு கட்டிவிடுமா என்ன? இந்தச் சிறு வீச்சிலே இதுவரை வெள்ளம் போல் கண்களிலிருந்து பெருகிக் கொண்டிருக்கும் கண்ணீர் அலைகள் வற்றி காய்ந்து விடுமா

என்ன ? மின்னல் வேகத்தில் பேனவால் எழுதிக் கொண்டிருக்கும் இந்தக் கைகள் இன்றிலிருந்து ஆருவது நாளன்று காய்ந்த மரக்கட்டைகளாக ஆகிவிடுமா என்ன ? எனது இதயக் கோயிலில் வீற்றிருக்கும் அந்த தேவியின் உருவம்—தினந் தோறும் அன்பு மலர்களால் நான் பூசிக்கும் அந்த உருவம் கொடுமையான விதியின் வீச்சில் தூள் தூளாக ஆகிவிடுமா என்ன ?

அப்பப்பா ! நான் தான் எவ்வளவு முட்டாளாக இருக்கிறேன் ! வீட்டில் நெருப்பு பிடித்திருக்கும் பொழுது அந்த நெருப்பைக் கையால் தண்ணீரை எடுத்துப்போட்டு அணைக்க முயல்வது போல் நானும் இந்தக் கதையை ஏன் தூண்டிவிட வேண்டும் !

சுந்தரி ! நான் இங்கேயே கடிதத்தை முடித்து விடுகிறேன். துன்பம் தோய்ந்த இந்தக் கதை முடியப்போவதில்லை. உண்மையில் தாகத்தால் தவிப்பவனுடைய தாகம் கனவில் ஏராளமான தண்ணீரைக் குடித்தாலும் தணிந்து விடப் போவதில்லையே ! தங்களுடன் இதுவரை தான் என் தொடர்பு இருந்தது. ஆனல் அப்படி இல்லை ; இது பிரளயகாலம் வரை அழியாத தொடர்பாக இருக்கும்.

சுந்தரி ! உங்களுடைய அந்தக் கடிதத்தின் உண்மையான பொருளை நான் அப்பொழுது அறியவில்லை. இப்பொழுது தான் எனக்கு அது தெரியவருகிறது. நான் இறந்து விட்ட பிறகு நீங்கள் வாழ விரும்பவில்லையா ? நான் கடைசியாக ஒரு யோசனை சொல்லுகிறேன். நீங்கள் அவ்வாறு செய்யக்கூடாது. வேறு எந்த வகையிலும் உங்களால் இதை ஏற்றுக் கொள்ள முடியவில்லையென்றல் நான் உங்களுக்கு ஒரு விஷயம் நினைவு படுத்துகிறேன். துன்புற்ற ஒவ்வொருவரையும் தாங்க வேண்டியது உங்களுடைய கடமையாகும். இப்பொழுது வாழ்விற்கும் சாவிற்கும் இடையில் தவித்துக் கொண்டிருக்கும் உதவியற்ற என் தாயைக் கவனித்துக் கொள்ளுவது உங்களுடைய கடமையாகும். அவர்களைப் பற்றிய கவலையே இல்லாமற்போகும் வரையில் இவ்வாறு செய்ய உங்களுக்கு எந்த உரிமையும் கிடையாது. நாம் பல லட்சம் ஆண்டுகள்

வரையில் ஒன்று சேர்ந்து இருக்கப் போகிறோமே! அப்படி யிருக்க இந்தக் கொஞ்ச காலத்துப் பிரிவாற்றுமையைச் சகித்துக் கொள்வது ஒரு கஷ்டமா? நான் உங்களை எதிர் பார்த்துக் கொண்டிருப்பேன். ஆனால் நான் உங்களுக்கு ஒப்படைத்துச் செல்லும் கடமையை முடிக்காமல் நீங்கள் என்னிடம் வரக்கூடாது.

திங்கட் கிழமையன்று நான் என் உறவினர்களைச் சந்திக்கப் போகிறேன். செவ்வாயன்று உங்களைச் சந்திப்பேன். ஆதலால் செவ்வாயன்று காலையில் ஞானிஜியுடன் இங்கே வந்து சேருங்கள். சுந்தரி! நமது சந்திப்பு வெளிப்படையாகவும் அன்பு தோய்ந்ததாகவும் இருக்கும். மேலதிகாரி கருணை கூர்ந்து இதற்கு ஒப்புக் கொண்டிருக்கிறார்.

ஐயோ! சுந்தரி! நான் கடிதத்தை இங்கேயே முடித்து விடட்டுமா? ஆனால் இது எவ்வளவு கஷ்டமான வேலை! கடிதத்தை முடித்து விட்டால் எனக்கு இந்த உலகமே முடிந்து விட்டது போலவும் நான் செய்வதற்கு இவ்வுலகில் வேலை எதுவும் இல்லை போலவும் தோன்றுகிறது.

காகிதம் தீர்ந்துவிட்டது. காகிதத்தின் ஓரத்திலும் இடம் இல்லை. எழுத்திற்குள் எழுத்தை நுழைத்து எழுதியும் இவ்வளவுதான் எழுத முடிந்திருக்கிறது. காவலாக நின்று கொண்டிருக்கும் போலீஸ் காவலன், 'சீக்கிரம் கடிதத்தை எழுதி முடி. மேலதிகாரி வரும் நேரம் ஆகிவிட்டது' என்று கூறி துன்பப்படுத்திக் கொண்டிருக்கிறான்.

என் சுந்தரி! உங்களுடைய அன்பு கனிந்த உருவத்தை உள்ளத்தில் நிலைநிறுத்திக்கொண்டு இந்தக் கடிதத்தை முடிக்கிறேன். என் கடைசி அன்பு!

இப்படிக்கு

உங்கள்,

பச்சன் சிங்'

## [ 33 ]

தூக்கு தண்டனை அறிவிக்கப்பட்டதிலிருந்து இன்றுவரை பச்சன்சிங் இரவு பகல் எந்நேரமும் பலப்பல கற்பனை மாளிகைகள் கட்டிக்கொண்டும் அவற்றை அழித்துக்கொண்டும் இருந்தான். ஆற்று வெள்ளம்போல் பல விதமான எண்ணங்கள் அவனுடைய உள்ளத்தில் தோன்றி மறைந்து கொண்டிருந்தன. ஆனால் கடைசியில் அவன் கண்களுக்கெதிரில் தூக்குக்கயிறு, மரணம் இந்த இரண்டுதான் எஞ்சி இருந்தன. ஆனால் இன்று வாழ்வின் கடைசி நாள். அவனுடைய உள்ளத்தில் ஒரு ஆர்வமும் இல்லை, சக்திகளனைத்தும் உஷ்ணமாகிக் குளிர்ந்துவிட்டன போலும். ஒரு சாவுக்காட்சி மட்டும்தான் அவனுக்கெதிரில் மிச்சமாக இருந்தது. தூக்கு போடப்படுவதற்கு முன்பே, தான் இறந்து வேறு உலகிற்குப் போய் விட்டதுபோல் அவனுக்குத் தோன்றிற்று. பக்கத்திலிருந்த இருக்கைக் கருகில் இரண்டு மூன்று செக்குகள் சுற்றிக்கொண்டிருந்தன. அவைகளின் 'ஜீங், ஜீங்' என்ற சத்தம் ஒரு விதவை தன் கணவன் இறந்தது கண்டு அழுதுகொண்டிருந்தது போல் தோன்றிற்று. அறையின் ஒரு மூலையில் தத்துக்கிளி டங் டங் என்று சத்தமிட்டுக் கொண்டிருந்தது. ஆனால் அந்தச் சத்தம் ஒரு தாய் தன் இறந்துபோன மகனின் தலையைத் தொடையில் வைத்துக்கொண்டு அழுதுகொண்டிருப்பது போல் பச்சன் சிங்கிற்குத் தோன்றிற்று. எதிரேயுள்ள திறந்த வெளியில் இரண்டு மூன்று பறவைகள் கத்திக்கொண்டு ஓடுவதைப் பார்க்கும்பொழுது சாவு அவைகளைப் பின் தொடர்வது போலவும் அவைகள் பயத்தால் கத்திக் கொண்டு ஓடுவது போலவும் அவனுக்குப் பட்டது.

லாஹோர் சென்ட்ரல் சிறைச்சாலையிலுள்ள இந்தக் குறுகிய அறையில் உட்கார்ந்ததும் அவனுக்கு நேற்று தன்னைச் சந்திக்க வந்த தன் தாயின் நினைவு வந்தது. பின்னர் இன்று தன்னைச் சந்திக்க வரப்போகும் சுந்தரி நினைவிற்கு வந்தாள். கம்பிகள் சூழ்ந்த தனது சிறு அறையில் உட்கார்ந்தவாறு அவன்

எண்ணிக்கொண்டிருந்தான்—' இப்பொழுது சுந்தரி வண்டியை விட்டு இறங்கியிருப்பாள். டிக்கட் பரிசோதகரிடம் டிக்கட் கொடுக்கும்பொழுது அவளுடைய மெல்லிய மஞ்சள் நிறமான கைகள் நடுங்கிக்கொண்டிருக்கும். அவளுடைய கண்களில் கண்ணீர் நிரம்பியிருக்கும். அதனால் அவளுக்குப் பாதை தெளிவாகத் தென்படாது. இப்பொழுது அறிஞர் ஆறுதல் அளித்து அவளை டாங்காவில் ஏற்றியிருப்பார். வண்டி சிறைச்சாலையை நோக்கி ஓடிக்கொண்டிருக்கும். தெருவின் ஓரத்திலுள்ள மரங்கள் எதிரிலிருந்து பின் பக்கம் ஓடிப்போவது போலிருப்பதைப் பார்த்து சுந்தரி அவைகளை தன் கடந்துபோன இன்பங்களைப்போல் கருதி ' நண்பர்களே! போங்கள்! போய்விடுங்கள்!' என்று சொல்லிக்கொண்டிருப்பாள். டாங்கா வண்டி இப்பொழுது சிறையின் வாயிலை அடைந்திருக்கும். முதலில் சுந்தரியின் பார்வை கருப்பான கதவில் படும்பொழுது அது வருந்திக்கொண்டிருப்பது போல அவளுக்குத் தென்படும். கதவிற்கு எதிரில் உலவிக்கொண்டிருக்கும் சிவப்பு தொப்பிக்காரக் காவலன் அவளுக்கு யமதூதன் போல் தென்படுவான். ஒரு வேளை சுந்தரி இந்தக் காட்சியைச் சகிக்கமுடியாது மயங்கி......

அந்த நேரம் பலமான பூட்ஸ் சத்தம் கேட்டது. அவன் எழுந்து நின்றான். வெளியிலே ஒரு ஆங்கிலேய மேலதிகாரி, ஒரு டாக்டர், இரண்டு தலைமைச் சிப்பாய்கள், மற்றும் பல சிப்பாய்கள் நின்றுகொண்டிருந்தார்கள்.

அறைக் கதவு திறந்தது. யாரும் எதுவும் சொல்லாமற் போனாலும் 'தூக்குப் போடும் நேரம் வந்துவிட்டது' என்று பச்சன் சிங் புரிந்துகொண்டான்.

கைவிலங்குகளைப் பார்த்ததும் அவன் கைகளை நீட்டி விட்டான், ஒரு சிப்பாய் அவனுடைய இரண்டு கைகளையும் முதுகு பக்கம் கொண்டுபோய் விலங்குகளை மாட்டிவிட்டான். எல்லோரும் அவனை முன்னால் போகவிட்டு தாங்கள் பின்னே சென்றார்கள்.

பச்சன் சிங் தரையில் நடந்துகொண்டிருந்தான். ஆனால் அவனுடைய கால்களுக்கடியிலிருந்து தரை நழுவிவிட்டது

போலவும் தான் காற்றில் மிதப்பதுபோலவும் அவனுக்குத் தோன்றிற்று: அந்த நேரம் தலையில் மூளையும், மார்பில் இதயமும் இல்லைபோல அவனுக்குத் தோன்றிற்று. ஆனாலும் அவனுடைய உயிரற்ற சடலம்போன்ற உடலிலும் எப்பொழுதாவது ஏதோ ஒன்று உணர்வை உண்டாக்குவதுபோன்ற ஒரு பொருள் அவனுக்குள் எஞ்சியிருந்தது. அவனுடைய கண்கள் வெளிறிவிட்டன. ஆனால் அவைகள் இன்னும் எதையோ பார்க்க விரும்பிக்கொண்டிருந்தன. விலங்கு பூட்டப்பட்ட அவனுடைய கைகள் விரல்களால் எப்பொழுதாவது சங்கிலியைத் தடவிப் பார்த்து 'அது இரும்பா அல்லது மாமிசமா' என்று உணர விரும்பின.

அப்பொழுது பச்சன் சிங் அதுவரை தான் பார்த்திராத ஒரு இடத்தில் தான் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தான். ஆனால் அவன் அந்த இடத்தைப் பார்த்திராவிட்டாலும் கற்பனையால் அதனைப் பார்த்திருந்தான். அதுதான் தூக்குமேடை.

பச்சன் சிங் அந்த இடத்தைப் பார்த்து ஒருமுறை தலையிலிருந்து கால்வரை நடுங்கிவிட்டான். ஆனால் உடனேயே அவன் நிலை மாறிவிட்டது. அவனுடைய கண்களுக்கெதிரில் இப்பொழுது ஒன்றுமேயில்லை. வெறும் இருள்தான் பரவியிருந்தது.

தான் எத்தனை நேரம் அங்கே நின்றுகொண்டிருந்தோம் என்று அவனுக்குப் புரியவில்லை. அப்பொழுது அவனுடைய காதுகளில் ஒரு குரல் விழுந்தது, 'மிஸ்டர் பச்சன் சிங்! ஏதாவது சொல்ல விரும்புகிறாயா ?'

இதற்கு விடை கொடுத்தது யார்? அவனா அல்லது வேறு யாராவதா? அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. தான்தான் விடை கொடுத்தது என்று தெரிந்திருந்தும் அவனால் அதன் பொருளைப் புரிந்துகொள்ள முடியவில்லை. அதன் பிறகு மறுபடியும் முதல் குரல் காதில் விழுந்தது.

'நல்லது. அவர்களைக் கூப்பிடு.' இந்தச் சொல் பச்சன் சிங்கின் காதுகளில் பட்டது. அவனுடைய உணர்வு மறுபடியும் சிறிது நேரம் திரும்பிவந்தது போலிருந்தது.

சிறிது நேரத்திற்குப் பிறகு பின்புறத்திலிருந்து அழுகைக் குரலொன்று காதில் விழுந்தது. குரலைப் புரிந்துகொண்டு அவன் உடனே பின்புறம் பார்த்தான். அங்கே சுந்தரி காணப் பட்டாள். அறிஞர் அவள் தோள்களைத் தாங்கிக்கொண்டு அழைத்து வந்துகொண்டிருந்தார். அறிஞரின் வேண்டு கோளுக்கிசைந்து அதிகாரி குற்றவாளியின் விலங்கை நீக்கி விட்டார். சுந்தரி பச்சன் சிங்குக்கெதிரில் நின்றுகொண் டிருந்தாள். அவள் தன் பலத்தையெல்லாம் கொண்டு தன்னை நினைவோடு இருக்கவைக்க முயற்சித்துக்கொண்டிருந்தாள். அறிஞர் ஒரு கையில் பச்சன் சிங்கின் கையைப் பிடித்துக் கொண்டிருந்தார். மற்றொரு கையில் சுந்தரியின் கையைப் பிடித்துக்கொண்டிருந்தார். அவர்கள் இருவரும் வெளிறிப் போன கண்களால் ஒருவர் மற்றொருவரைப் பார்த்துக்கொண் டிருந்தார்கள். பரஸ்பரம் அவர்களது கண்கள் ஒன்றுக்குள் ஒன்றாக அடங்கிவிட்டன. அந்தக் கண்களுக்குள் தங்க ளுடைய அவர்களுடைய உடல் சூட்சுமமாக அடங்கிவிட்டதாக அவர்களுக்குத் தென்பட்டுக்கொண்டிருந்தது. பச்சன் சிங் சுந்தரியின் கண்களில் நிறைந்துவிட்டான். சுந்தரி பச்சன் சிங்கின் கண்களில் நிறைந்துவிட்டாள்.

அப்பொழுது சுந்தரி தன் தோளை ஏதோ ஒரு குளிர்ந்த பொருள் தொடுவதுபோல் உணர்ந்தாள்.

அறிஞர் துணி முடிச்சை அவிழ்த்து இரண்டு பூமாலைகளை எடுத்து இருவர் கழுத்திலும் போட்டதை அவள் பார்த்தாள். தன் கை பச்சன் சிங்கின் கையில் இருப்பதையும் அவள் பார்த்தாள். இருவருடைய கைகளையும் தன் கைகளால் பிடித்துக்கொண்டு அறிஞர் சொல்லிக்கொண்டிருந்தார், 'ஆண்டவனே! இந்தக் காதலர்களின் அன்பு ஊழிக்காலம் வரை அழியாது இருக்கட்டும். இவர்கள் சுவர்க்கத்திலும் இணைந்து எக்காலமும் காதல் வாழ்க்கை வாழட்டும்.'

அந்த நேரம் ஆங்கிலேய அதிகாரி தலையிலிருந்து தொப்பி யைக் கழற்றி விட்டார். மற்றவர்கள் (முஸ்லீம்கள்) தலை வணங்கி ஒரு குரலில் 'ஆமீன்! ஆமீன்!' என்று கூறினார்கள்.

அதன் பிறகு சிறிது நேரம் இருவருடைய உடலிலும் உணர்வு வந்தது. அவர்கள் ஒருவரை மற்றொருவர் அணைத்துக்கொண்டார்கள். ஒரு நிமிடம், இரண்டு நிமிடங்கள், ஐந்து நிமிடங்கள், கடைசியில் பத்து நிமிடங்கள் ஆகி விட்டன. ஆனால் அவர்கள் அணைப்பிலிருந்து பிரியவில்லை.

மேலதிகாரி சமிக்கை செய்ததைப் பார்த்து அறிஞர் கூறினார், 'பச்சன்சிங்! மகளே சுந்தரி! என் குழந்தைகளே!' ஆனால் அவர்கள் பிரியவில்லை. இருவருடைய உணர்வும் அகன்று விட்டது போலும். கடைசியில் அறிஞர் சுந்தரியின் கைகளைப் பிடித்தவாறு சொன்னார், 'என் மகளே!' மேலதிகாரி பச்சன்சிங்கின் கையைப் பிடித்துக் கூறினார், 'மிஸ்டர் பச்சன் சிங்!'

அவர்களுடைய பிடி தளர்ந்தது. பச்சின்சிங் நினைவற்ற நிலையிலிருந்த பொழுது ஒரு மனிதன் அவனுடைய தலையில் ஒரு நீண்ட கருத்த தொப்பியை அணிவித்தான். சுந்தரி கீழே விழவிருந்தாள். ஆனால் அறிஞர் அவளைப் பிடித்துக் கொண்டார். பின்னர் மேலதிகாரியின் கட்டளைப்படி கட்டில் ஒன்று கொண்டு வரப்பட்டது.

சுந்தரிக்கு நினைவு வந்தபொழுது நான்கு புறமும் இரவின் இருள் பரவியிருந்தது. இரயில் இஞ்சினின் சத்தம் ஒருபுறம், மற்றொருபுறம் பிரயாணிகளின் சத்தமும், வியாபாரிகள் 'பால் மிட்டாய் வேணுமா பால் மிட்டாய்' என்று கத்தும் கத்தலும் சிகரெட்டுப் புகையின் மணமும் சேர்ந்து சுந்தரிக்குத் தான் இருப்பது இரயில்வே ஸ்டேஷன் என்றும் தான் படுத்திருக்கும் இடம் பிரயாணிகள் தங்கும் விடுதி என்றும் புரிந்தது.

சுந்தரி எழுந்து உட்கார்ந்தாள். எழுந்ததும் அவள் தண்ணீர் கேட்டாள். அறிஞர் குவளையை எடுத்துக் கொண்டு தண்ணீர் கொண்டுவரப் போய்விட்டார். அன்றைய மறந்த நிகழ்ச்சி சுந்தரிக்கு மறுபடியும் நினைவுக்கு வந்தது. அவளுக்கு அப்பொழுது தன் தலை கனப்பதுபோலவும் தான் தன்னுடைய தோள்களில் ஏதோ ஒரு பெரிய கல்லின் சுமையைத் தாங்குவதுபோல் அவள் உணர்ந்தாள். தான் எந்த நிலையிலிருந்து

எந்த நிலையை அடைந்து விட்டோம்; இன்று எல்லாச் சொத்தையும் இழந்து உலகில் தான் ஆதரவற்றுத் தனிமையாக இருக்கிறோம் என்பதுகூட அவளுக்குத் தோன்றவில்லை. அவளது நிலைமை தூண் அகன்ற மேல்கூரை போலிருந்தது.

சிறிது நேரம்வரை அவள் வெளிறிய கண்களால் எதையோ பறிகொடுத்து விட்டதுபோல் இங்குமங்கும் பார்த்துக் கொண்டிருந்தாள். இதற்குள் அறிஞர் தண்ணீரை எடுத்துக்கொண்டு வந்தார். தண்ணீரைக் குடித்ததும் அவளுக்குச் சிறிது நினைவு வந்தது. அதுவரையில் நின்று போயிருந்த அவளுடைய மூளை எனும் இயந்திரம் மறுபடியும் மெதுவாக வேலை செய்யத் தொடங்கியது. அத்துடன் அவளுடைய கண்களுக்கெதிரில் இருந்த உலகத்தின் உருவம் மாறலாயிற்று. தன்னை ஏதோ ஒரு பாரம் அழுத்திக் கொண்டிருப்பதுபோல் அவளுக்குத் தோன்றிற்று.

பச்சன் சிங்கைத் தான் கடைசியாகச் சந்தித்த காட்சி அவள் கண்ணெதிரில் வந்து நின்றது. ஆனால் அந்தக் காட்சி தெளிவற்றது போல் கண்மையைப் போல், தென்பட்டது.

'அவரைத் தூக்கில் ஏற்றி விட்டார்கள்' என்ற எண்ணம் வந்ததும் அவள் கத்திக் கொண்டு இரண்டு கைகளாலும் முகத்தை மூடியவளாய் பெஞ்சியில் தலைகுப்புறப் படுத்துக் கொண்டாள். சுந்தரியின் குற்றமற்ற கணவன் இன்றுதான் தூக்கிலிடப்பட்டான் என்று அறிஞர் வாயிலாகக் கேள்விப் பட்ட பல பிரயாணிகள் அவளருகில் கூடி அவளுக்கு ஆறுத லளிக்கத் தொடங்கினார்கள்.

அப்பொழுது சுந்தரி அழ விரும்பினாள். ஆனால் அழமுடிய வில்லை. அவளுக்கு அழுகையே வரவில்லை. அவளுடைய உடலி லிருந்து கிளம்பும் தீக்கனல் அவளுடைய கண்ணீரை வற்றச் செய்துவிட்டதோ என்னவோ?

அவள் மறுபடியும் எழுந்தாள். எழுந்து பிரயாணிகள் தங்கு மிடத்தைவிட்டு வெளியே போய் விட்டாள். பார்வைக்கெட்டும் தூரம் வரையில் அவள் தன்னருகிலிருந்த பிரயாணிகளைக் கூர்ந்து கவனித்தாள். ஒவ்வொரு மனிதனிடமிருந்தும் நன்றி யின்மையும் தீயநாற்றமும்தான் வருவது போல் தோன்றிற்று.

ஆண்டவன் சிருஷ்டி அனைத்தையும் தன்னை அழிப்பதற்காகவே செய்திருப்பதாக அவளுக்குத் தோன்றிற்று. மேலே வானத்தைப் பார்த்தபொழுது இங்குமங்கும் ஓடிக்கொண்டிருந்த கருமேகங்கள்தான் தன்னிடம் உண்மையான அனுதாபத்துடன் துன்ப உருவத்தைத் தாங்கி வந்திருப்பதாக அவளுக்குப் பட்டது. ஒன்றிரண்டு நட்சத்திரங்கள் மட்டும் மின்னிக்கொண்டிருந்தன. ஒருவேளை அவளுடைய நிலையைக் கண்டு சகிக்கமுடியாமல் மேகங்களுக்கிடையில் அவை மறைந்துகொண்டிருந்தன போல் தென்பட்டது. உயர்ந்த மரங்களும் தலையை அசைத்து அசைத்து அவளுடைய துன்பத்தில் பங்குகொள்வன போல தென்பட்டன. இயற்கை முழுவதும் அவளுக்கு சோகத்தின் இருப்பிடம்போல் தோன்றிற்று.

அவளுடைய உடலில் திடீரென்று மின்னலைப் போன்ற வேகம் உண்டாயிற்று. அவள் தன்னருகில் நின்றுகொண்டிருந்த மக்களைக் கனல்வீசும் பார்வையால் பார்த்தவளாய் கூறலானாள், 'என்ன பார்த்துக்கொண்டிருக்கிறீர்கள்? என் இரத்தத்தைக் குடித்தபின்னும் உங்கள் வயிறு நிரம்பவில்லையா? இதைவிட நீங்கள் எனக்கு என்ன கஷ்டத்தைக் கொடுத்துவிட முடியும்? என்னுடைய எந்தப் பொருளையும் விடாது நீங்கள் என் சொத்தையே தின்று ஏப்பம் விட்டுவிட்டீர்களே! இன்னும்......'

அறிஞர் அவளுடைய கையைப் பிடித்து அவளை ஒருபுறம் உட்காரவைக்க முயற்சித்தவராய் கூறினார், 'மகளே! உணர்வோடு இரு, உன்னைச் சமாளித்துக் கொள்.'

பிரயாணிகள் அந்த இடத்தைவிட்டு அகன்றார்கள். அறிஞர் அவள் தலையை அன்போடு தடவியவாறு கூறினார், 'இந்த மாதிரியிருந்தால் நீ உன் உயிருக்கும் ஆபத்தைத் தேடிக் கொள்வாய். நடக்கவேண்டியது......'

சுந்தரி அறிஞரின் சொல்லைக் கேட்டு சிரித்துக்கொண்டு கூறினாள், 'அப்பா! என்ன சொன்னீர்கள்? என் உயிருக்கு ஆபத்தா? இல்லையப்பா! நான் இப்பொழுது சாகமாட்டேன். இன்னும் நான் செய்யவேண்டியது எத்தனையோ இருக்கிறது.

அவைகளை முடிப்பதற்குமுன் நான் சாகமாட்டேன். அப்பா! அவருடைய கடைசிச் சடங்கு?'

'அது நடந்துவிட்டது அம்மா! உன்னை நினைவிற்குக் கொண்டுவர எத்தனையோ முயற்சிகள் செய்யப்பட்டன. ஆனால்......'

'பரவாயில்லை.'

அதற்குப் பிறகு இருவரும் அம்ருதசர் போகும் வண்டியில் போய் உட்கார்ந்தார்கள்.

அம்ருத்சர் போய்ச் சேர்ந்து இருவரும் பிரயாணிகள் தங்குமிடத்தை விட்டு வெளியே வந்ததும் சுந்தரி அறிஞரிடம் கூறினாள், 'அப்பா! நான் உங்களை இனியும் கட்டுப்படுத்த விரும்பவில்லை. சிலநாள் என்னைத் தனியாக இருக்க விடுங்கள்.'

'தனியாக விடுவதா?' அறிஞர் ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்தவாறு கேட்டார். 'எதற்காக மகளே!'

'நான் தீவான்பூர் போகப் போகிறேன்.'

'ஆனால் அங்கே உனக்கு என்ன வேலை?'

'உங்களுக்குத் தெரியாது. அவர் தன்னுடைய தாயின் பொறுப்பை எனக்கு ஒப்படைத்துவிட்டுப் போயிருக்கிறார். நான் சிலநாள் அவருடைய தாயிடம் இருக்கப் போகிறேன்.'

'அப்படியானால் கிளம்பு. நான் உன்னை அங்கே கொண்டு விட்டுவிட்டு வருகிறேன்.'

'வேண்டமப்பா! நான் தனியாகவே போய்விடுகிறேன்.'

பல நேரப் பேச்சு வார்த்தைகளுக்குப் பிறகு அறிஞர் அவளைத் தனியாகவே விட்டுவிட்டுப் போக வேண்டியிருந்தது. கடைசியில் சுந்தரி தீவான்பூர் போவதாகவும் அறிஞர் ஓரிரண்டு நாட்கள் அம்ருத்சரில் இருந்துவிட்டு ஹரித்வார் திரும்பிப் போய் விடுவதாகவும் முடிவு செய்யப்பட்டது.

## [ 34 ]

ஸ்டேஷனிலிருந்து வெளியே வந்ததும் சுந்தரி தன் எதிர் காலத்தைப் பற்றிப் பலவாருக எண்ணிக் கொண்டே தீவான் பூரை நோக்கிச் செல்லலானுள். அந்த நேரம் அவளுடைய மனம் சஞ்சலமற்றிருந்தது. அவளுக்கு அடிக்கடி பச்சன் சிங்கின் நினைவே வந்து கொண்டிருந்தது. ஆனுல் அவனது நினைவு அவளை இப்பொழுது அழவைக்கவோ துன் புறுத்தவோ இல்லை. நெருப்புச் சூடு படப்பட மற்றப் பொருள் களைப்போல் உருகியோ எரிந்தோ போய்விடாமல் மேலும் மேலும் இறுகிப் போகும் இரும்பைப்போல சுந்தரியின் உள்ளமும் பச்சின் சிங்கின் சாவினுல் மேலும் அதிகமான வலிமை உள்ளதாகவும் பழி வாங்கும் எண்ணம் நிறைந்த தாகவும் ஆகி விட்டது.

ஒரு ஆபத்தையோ அல்லது துன்பத்தையோ எதிர் பார்த் திருப்பது எவ்வளவு துன்பம் தரக் கூடியதோ, உண்மை யிலேயே அது வந்து விட்டால் அவ்வளவு பயங்கரமாக இருப்ப தில்லை. குளிர்ந்த நீர் நிறைந்த குளத்தில் ஒருவன் ஓரிரு முறை முழுகி எழுந்த பிறகு அவன் எத்தனை நேரம் தண்ணீரில் நின்ருலும் அவனுக்குக் கஷ்டம் தோன்றுவதில்லை. சுந்தரிக்கு இப்பொழுது நினைத்த அளவு துன்பம் தோன்ற வில்லை. மற்ருென்று, சுந்தரியின் உள்ளம் இப்பொழுது துன்பத்தைச் சகித்துக் கொள்ளப் பழகியும் விட்டது.

அன்று சதாகௌர் சுந்தரியைப் பெரிதும் அவமானப்படுத்தி யிருந்தாள். ஆனுல் பச்சன் சிங்கின் கட்டளையை நினைத்து சுந்தரி எல்லாவற்றையும் மறக்கவேண்டியிருந்தது. தீவான் பூரை அடைந்ததும் அவள் முதலில் சதாகௌரின் வீட்டிற்குப் போனுள். வீட்டை அடைந்து கதவைத் தட்டிய பொழுது இரவு எட்டு மணியாகி விட்டது. உள்ளேயிருந்து ஒரு குரல் வந்தது, 'யார் அங்கே?'

சுந்தரி நடுங்கும் உள்ளத்துடன் விடையளித்தாள். 'அம்மா! நான் தான் சுந்தரி.'

சதாகௌர் முன்னைவிட அதிகமாக அவமானப்படுத்துவாள் என்று அவள் நினைத்தாள். பச்சன் சிங் உயிரோடு இருக்கும் பொழுதே அவள் சுந்தரியை அவமானப் படுத்தியிருந்தாள். இப்பொழுது ஆண்டவன்தான் காப்பாற்ற வேண்டும். ஆனால் அவள் எதையும் சகித்துக் கொள்ளத் தன் உள்ளத்தை உறுதிப் படுத்திக் கொண்டிருந்தாள்.

கதவு திறந்தது. கையில் விளக்கைப் பிடித்துக் கொண்டு சதாகௌர் எதிரில் வந்தாள். சதாகௌரின் பார்வை மங்கியிருந்ததனால் அவள் பகலில் கூட மிகச் சிரமப்பட்டுத் தான் மனிதர்களைப் புரிந்து கொள்ள முடிந்தது. சுந்தரி அவளுடைய வாயிலிருந்து கிளம்பப் போகும் நெருப்பு மழையைச் சகித்துக் கொள்ளத் தயாராக இருந்தாள். சதாகௌரின் வாயிலிருந்து எந்த வசவுச் சொல் முதலில் வருகிறது பார்க்கலாம் என்று சுந்தரி எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். ஆனால் அவள் இரண்டு கைகளையும் விரித்துக் கொண்டு சுந்தரியைப் பார்த்து, 'வா! என் துன்புற்ற மகளே! வா!' என்று கூறினாள். அதைக் கேட்டதும் சுந்தரிக்கு பெருத்த வியப்பு ஏற்பட்டது.

சுந்தரி அவளுடைய கால்களில் விழுந்தாள். சதாகௌர் அவளை அன்போடு தூக்கி அணைத்துக் கொண்டு அழுது கொண்டே கூறினாள், 'மகளே! இன்று உன்னுடைய மாங்கலியம் அழிந்து விட்டது.'

சுந்தரியால் ஒன்றும் பேசமுடியவில்லை. அவள் தேம்பித் தேம்பி அழத்தொடங்கினாள். தன் தாய் அன்வரைச் சந்தித்த பிறகு இன்று மறுமுறை சுந்தரியின் உள்ளத்தில் தாய்ப் பாசம் பொங்கியெழுந்தது.

நேற்று கடைசியாகச் சந்தித்த பொழுது பச்சன் சிங் சதாகௌரின் உள்ளத்தில் சுந்தரியின் பால் தூய்மையான எண்ணத்தை உண்டாக்கியிருந்தான். அவளை பச்சன் சிங் காகவே கருதி அணைத்து வைத்துக் கொள்ளும்படி அவன் தாயிடம் கூறியிருந்தான். இதையெல்லாம் ஒவ்வொன்றாக சதாகௌர் சொல்லத் தொடங்கினாள்.

அவர்கள் இருவரும் தங்கள் துன்பத்தைப் பகிர்ந்து கொள்ளும் பொழுது பச்சன் சிங் உயிரோடு இருப்பதாகவே அவர்களுக்குத் தோன்றிற்று.

இருவரும் துன்பக் கதையைப் பேசிக் கொண்டே பாதி இரவைக் கழித்து விட்டார்கள். ஆண்டவன் இந்தச் சந்திப்பைக் கொடுத்திருக்காவிட்டால் என்னுடைய நிலை என்னவாகியிருக்கும்? நான் எவ்வாறு உயிரோடு இருந்திருப்பேன் என்று இருவருடைய உள்ளத்திலும் ஒரு எண்ணம் தோன்றிக் கொண்டிருந்தது.

அதன் பிறகு பேச்சு வார்த்தையிலேயே சதாகௌரின் பணம் காசு எல்லாம் முன்னாலேயே தீர்ந்துவிட்டது; இந்த வழக்கில் அவளுடைய நகைகளும் விற்கப்பட்டுவிட்டன; சில நிலமும் அடைமானம் வைக்கப்பட்டு விட்டது. எஞ்சி இருக்கும் நிலத்தையும் சரீக் பிடுங்கிக் கொள்ளுவார். ஏனென்றால் சட்டப்படி அவர்தான் அதற்கு உரியவர், சதா கௌர் ஒவ்வொரு காசுக்கும் பிறர் தயவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்; ஒரு ரொட்டித் துண்டு கூட கிடைக்குமா என்பதும் அவளுக்கு சந்தேகமாக இருந்தது என்பதெல்லாம் சுந்தரிக்குத் தெரிய வந்தது.

இதைத் தவிர பாலா சிங் சதாகௌரின் மைத்துனன்மார்களை உடனடியாக ஜீவா சிங்கின் நிலத்தைக் கைப்பற்றிக் கொள்ளும்படி தூண்டி விடுவதாகவும் அவன் சொல்படி எல்லா ஏற்பாடுகளும் நடந்து கொண்டிருப்பதாகவும் சதாகௌரின் வாயிலாக சுந்தரி அறிந்து கொண்டாள்.

சுந்தரியின் காயம்பட்ட இதயத்தில் இதைக் கேட்டதும் மற்றொரு காயம் ஏற்பட்டது. அவளுடைய ஒவ்வொரு நரம்பும் அப்பொழுது பாலா சிங்கைப் பழி வாங்கத் துடித்துக் கொண்டிருந்தது. அவளுக்கு அங்கே தங்குவது கஷ்டமாகப்போய் விட்டது. பச்சன் சிங்கிடம் செய்த வாக்குறுதியும்—தான் ஏற்றுக் கொண்ட சதாகௌரின் பொறுப்பும் அவளுக்கு மறந்து விட்டது. சிறிது நேரத்திற்குப் பிறகு சதாகௌர் தூங்கி விட்ட பின்னர் சுந்தரி மெதுவாக எழுந்தாள். அலமாரியி

லிருந்து தீப்பெட்டியை எடுத்துக்கொண்டு வீட்டை விட்டு வெளியே வந்தாள்.

அப்பொழுது இரவு பன்னிரண்டு மணி இருக்கும். எங்கும் கும்பிருட்டாக இருந்தது.

பாலா சிங்கின் கூட்டம் இருந்து வந்த கிணற்றடியைச் சுந்தரி பார்த்திருந்தாள். அவள் உடனே வேகமாக அந்த இடத்திற்குப் போய்ச் சேர்ந்தாள். கூறைக்குப் பின்புறம் ஒரு சிறு துவாரத்து வழியாக உள்ளே நடக்கும் நிகழ்ச்சிகளின் சில பகுதியைப் பார்க்கமுடியும். அங்கே அவள் மறைந்து உட்கார்ந்து கொண்டாள். உள்ளே எள்ளெண்ணெய் விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது. அதன் ஒளியில் சுந்தரி அங்கே பாலா சிங்கும் அவனுடைய இரண்டு நண்பர்களும் கள் குடித்துவிட்டு வம்பு பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள். வீர் சிங் கூறிக் கொண்டிருந்தான், 'பாம்பும் இறந்தது, தடியும் தப்பி விட்டது.' பாலா சிங் கூறினான், 'ஆனால் நீ நேற்று இரவு உண்மையிலேயே ஜீவா சிங்கின் வீட்டிற்கு அவள் போவதைப் பார்த்தாயா? அல்லது மயக்கத்திலே உளறுகிறாயா?'

'குருவின் ஆணையாகச் சொல்லுகிறேன், நான் என் கண்களால் பார்த்தேன்.'

'அப்படியானால் அவள் இனி தப்பிப் போக முடியாது. நாளையே நீ அவளைக் கைப்பற்றிக் கொள். தினசரி ஏற்படும் துன்பம் ஒரேயடியாகத் தீர்ந்துபோகும்.'

'ஆனால் அவளை எங்கே வைப்பது?'

'பைத்தியக்காரன்? வைப்பதற்கு என்ன இடமா இல்லை? நாளையே நீ அவளைக் கடத்தி விடு. அவ்வளவு தான்.'

'ஆனால் ஐயா! அவள் கச்சேரியிலே வாக்குமூலம் கொடுத்திருக்கிறாளே! "நான் அந்த வேசியின் மகள்" என்று அவள் சொல்லியிருக்கிறாளே!'

'அடே! விடப்பா இந்த வீணான பேச்சுக்களை. இந்த மாதிரி விஷயங்களில் சீக்கியர்களுக்கு என்ன ஆர்வம் இருக்கப் போகிறது? நீங்கள் குருவின் பெயரைச் சொல்லிக் கொண்டு இரவோடு இரவாக அவளைக் கடத்தி வர வழி செய்யுங்கள்.'

'என் யோசனை ஜீவா சிங்கின் வீட்டின் பின்புறம் ஒரு பழைய சுவரிருக்கிறது. அதை உடைத்து விட்டு......'

'சரி சரி.'

இந்தப் பேச்சுக்களும் ஏற்பாடுகளும் எதற்காக நடந்து கொண்டிருக்கின்றன என்று புரிந்து கொள்ள சுந்தரிக்கு நேரம் பிடிக்கவில்லை.

இப்படியே அவர்கள் சிறிது நேரம் கற்பனைக் கோட்டை கட்டிக் கொண்டிருந்தார்கள். கடைசியில் குடித்து விட்டு தூங்கி விட்டார்கள்.

இதற்குள் சுந்தரி அக்கம் பக்கத்திலிருந்து உலர்ந்த புல்லைச் சேகரித்து இரண்டு மூன்று புற்கட்டுகளைத் தயாரித்து விட்டாள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு அந்தக் குடிசை ஓ ஓவென்று எரியத் தொடங்கிவிட்டது. அதன் ஜ்வாலையின் ஒளி வெகு வெகு தூரம் வரை பரவிக் கொண்டிருந்தது. கிராமம் முழுவதும் தலைகால் தெரியாமல் அந்தப் பக்கம் ஓடிவர ஆரம்பித்தது.

அருகில் நின்று கொண்டு சுந்தரி பைத்தியக்காரியைப்போல் சிரித்துக் கொண்டிருந்தாள். இன்று அவளுடைய முகத்தில் ஒரு பயங்கரச் சிரிப்பு காணப்பட்டது. அந்தச் சிரிப்பைப் பார்த்தால் சாவு கூட பயந்து நடுங்கிவிடும் போலிருந்தது.

கிராமம் முழுவதிலும் ஒரே கலவரமாக ஆகிவிட்டது. மக்கள் தடதடவென்று வந்து சேர்ந்தார்கள். ஆனால் அவர்கள் வந்து சேர்வதற்கு முன்பே அறையின் கூரைமீது போடப்பட்டிருந்த விறகுகளனைத்தும் நான்கு சுவர்களுக்கு நடுவில் வந்து விழுந்தது.

'இதோ நெருப்பு! அதோ நெருப்பு!' என்று கூறிக் கொண்டு சிலர் நெருப்பை அணைக்கத் தொடங்கினார்கள். சிலர் குற்றவாளியைத் தேடிக் கண்டு பிடிக்க இங்குமங்கும் ஓடலானார்கள்.

எவனோ ஒருவன் ஆற்றுப்பக்கமாக ஒரு உருவம் ஓடுவதைப் பார்த்ததாகக் கூறினான். உடனே எல்லோரும் அந்தப் பக்கம் ஓடத் தொடங்கினார்கள். மல்லிகைப் புதர்களில் தேடிக் கொண்டே மக்கள் வெகு தூரம் போய் விட்டார்கள்.

அதற்குள் ' அதோ பார் ! ஆற்று பாலத்தை நோக்கி அவள் போகிறுள் ' என்று ஒரு குரல் கிளம்பிற்று.

மக்கள் பாலத்தை நோக்கி ஓடினார்கள். ஆனால் இருட்டில் ஒன்றும் தெரியவில்லை, சிறிது நேரத்திற்குப் பிறகு பாலத்தின் மேலிருந்து ஒரு குரல் கேட்டது, ' நான்தான் கொலையாளி! வாருங்கள் ! தைரியமுள்ளவன் என்னைப் பிடிக்கட்டும். இரண்டு உயிர்களுக்கு பதிலாக நான் மூன்று உயிர்களைக் கொன்றுவிட்டுப் போகிறேன். நான் குற்றமற்ற எவனையும் ஒன்றும் செய்யவில்லை. என்னுடைய மாங்கலியத்தை அறுத்து எறிந்தவர்களையும் என்னுடைய கிழத்தந்தையின் இரத்தத் தைக் குடித்தவர்களையும் நான் கொன்று விட்டேன். அக்கிரமக் காரர்களே ! நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். ஒருவன் மனைவியை அவள் உயிரோடிருக்கும் பொழுதே விதவையாக்கு பவர்கள் அவளுடைய கோபத்திலிருந்து தப்ப முடியாது. பொய்ச் சாட்சி கூறி என் கணவனையும் கொலை செய்துவிட்டு என் கிழத்தந்தையைக் கொன்றவர்களைக் காப்பாற்றிய கிராமத் தவர்களை குருதான் பழிவாங்குவார். ஆனால் இந்த நேரம் உண்மைக் கொலையாளிகளுக்கு அவர்களுடைய பாவத்திற்கு தண்டனை கிடைத்துவிட்டது. வாருங்கள் ! என்னைப் பிடியுங்கள் !'

எதிரிலேயே ஆற்றுப் பாலத்தின் மேல் நின்று கொண்டு சுந்தரி கையை விரித்துக்கொண்டு சத்தம் போட்டு இவ்வாறு சொல்லிக் கொண்டிருந்ததை எல்லோரும் பார்த்தார்கள்.

அதற்குள் போலீசும் அந்த இடத்திற்கு வந்துவிட்டது. முன்னால் போலீஸ்காரர்களும் பின்னால் கிராமத்து மக்களுமாக எல்லோரும் பாலத்தின் பக்கம் சென்றார்கள். சுந்தரி அந்த இடத்திலேயே அமைதியாக நின்று கொண்டிருந்ததையும் அவள் சிறிதும் அசையாமல் இருந்ததையும் பார்த்து அவர் களுக்குப் பெருத்த வியப்பாக இருந்தது.

கூட்டம் பாலத்தை அடைந்தது. ஆனால் சுந்தரி இன்னும் தன் இடத்திலேயே நின்று கொண்டு மக்களைத் தூற்றிக் கொண்டிருந்தாள். போலீஸ்காரர்கள் அவளைப் பிடிக்க முன்

வந்ததும் அவள் ஆற்றில் குதித்துவிட்டாள். மக்களனைவரும் கைகளைப் பிசைந்து கொண்டு நின்றார்கள்.

அவள் விழுந்ததும் அமைதியாக ஓடிக்கொண்டிருந்த ஆற்று நீர் வேகமாகத் துள்ளிற்று. சுந்தரி குதித்த இடத்துத் தண்ணீர் வெண்மையாக மேலே குதித்தெழுந்தது; பிறகு அந்த இடத்தில் முன்போல அமைதி பரவி விட்டது என்பதை பாலத்தில் நின்று கொண்டிருந்த மக்கள் பார்த்தார்கள். பாலத்தின் கீழ் விளக்குகளைத் தொங்கவிட்டு கண்களை அகல விரித்து மக்கள் அவளைக் கண்டுபிடிக்கப் பெரிதும் முயன்றார் கள். ஆனால் அவர்களுக்கு எந்தச் சுவடும் கிடைக்கவில்லை. அவள் அவர்களுடைய கண்களிலிருந்து நிரந்தரமாக மறைந்து விட்டாள்.

சுந்தரி ஆற்றில் பாய்ந்ததை எல்லோரும் பார்த்தார்கள். ஆனாலும் அவள் இறந்துவிட்டாளா அல்லது எங்காவது கரை யைப் போய் அடைந்தாளா என்று யாராலும் சொல்ல முடிய வில்லை.

சில நாட்களுக்குப் பிறகு போலீசின் சார்பாக சுந்தரியின் படத்தோடு விளம்பரங்கள் வெளியிடப்பட்டன. அவளைப் பிடித்துக் கொடுத்தாலோ அல்லது அவளைப் பற்றிய விவரங்கள் தெரிவித்தாலோ பரிசு அளிப்பதாகவும் விளம்பரப் படுத்தப்பட்டது. போலீசும் கிராமத்து மக்களும் தீவிரமாக அவளைத் தேடத் தொடங்கினார்கள்.

## முற்றுப்பெருத பகுதியில் எஞ்சியது

இரவு நேரம்; குப்தேச்வர் எனும் பிரயாணி பாபுஷாம் தாஸின் அறையில் உட்கார்ந்துகொண்டு அவருக்கு ஒரு நாவலின் கையெழுத்துப் பிரதியைப் படித்துக் காண்பித்துக் கொண்டிருந்தான்—என்று புத்தகத்தின் துவக்கத்தில் வாசகர்கள் படித்திருந்தார்கள். நாவல் மிகப் பெரியது தான். ஆனல் ஒரே மூச்சில் ஷாம்தாஸ் முழு நாவலையும் கேட்க விரும்பினுன்.

பிரயாணி நாவலைப் படித்துக்கொண்டே சென்ருன். கேட்டுக் கொண்டேயிருந்தான். இதிலேயே இரவு கழிந்துவிட்டது.

நாவலில் ஒரு அத்தியாயம் தான் எஞ்சியிருக்கும்; அப்போது காலைக் கதிரவனின் கிரணங்கள் அறைக்குள் நுழைந்துவிட்டன.

கடைசி அத்தியாயத்தின் பக்கங்களைச் சீர்ப்படுத்த பிரயாணிக்குச் சில நிமிடங்கள் பிடித்தன. ஏனென்ருல் பலவித மான காகிதங்களில் அவை எழுதப்பட்டிருந்தன. பள்ளிக்கூட பாடம் எழுதப்பட்ட நோட்டுக் காகிதங்களின் மறுபுறத்தில்—சில பக்கங்கள் செய்தித் தாட்களில் விடப்பட்டிருந்த இடங்களில்—எழுதப்பட்டிருந்தன.

பக்கங்களைச் சரிவர அடுக்கிக்கொண்ட பிறகு பிரயாணி அவற்றைப் படிக்க ஆரம்பித்தான். அவனுடைய பார்வை ஷாம்தாஸின் மீது விழுந்தது. ஷாம்தாஸின் கண்களினின்றும் கண்ணீர் வெள்ளமாக வழிந்தோடியது. அவருடைய நிறம் உயிரற்றவனைப் போல் சோகை பிடித்துக் காணப்பட்டது. அவனுடைய உதடுகள் துடித்தன.

'உம்!' பிரயாணி கையிலிருந்த பக்கங்களை முக்காலியின் மீது வைத்துவிட்டுக் கூறினுன்—'நீங்கள் அழக் காரணம் என்ன? அப்படிப்பட்ட சோகக் கதையல்லவே இது!'

ஷாம்தாஸின் செவிகளில் இவ்வார்த்தைகள் விழுந்ததாகவே தெரியவில்லை. அவருடைய கண்ணீர் குறையவில்லை.

'சரி! இந்த இறுதி அத்தியாயத்தை விட்டுவிடுகிறேன்!'—என்று கூறியபடியே பிரயாணி முக்காலியின் மீது வைக்கப்பட்டிருந்த காகிதங்களை எடுத்தான்.

'வேண்டாம், வேண்டாம்', கண்களைத் துடைத்துக் கொண்டு ஒருவாறு சமாளித்துக் கொண்டவனாய் ஷாம்தாஸ் கூறினார்—'உம், படியுங்கள்! நான் இப்போது தயாராகி விட்டேன்!' அவன் பிரயாணியின் கைகளைப் பிடித்து அழுத்தியபடி கூறினார்—'அப்பா! இது எவ்வளவு வேதனையை உண்டாக்கும் கதை!'

குப்பை கூளம் போன்ற காகிதங்களை எடுத்துப் பிரயாணி நாவலின் கடைசி அத்தியாயத்தைப் படிக்க முற்பட்டான்.

## [ 35 ]

[மேற்கூறப்பட்ட நிகழ்ச்சிக்கு இரண்டாண்டுகளுக்குப் பிறகு]

மக்கள் குப்தேச்வர் எனும் பெயரைத்தான் அறிந்திருந் தார்களே தவிர அவனை நேரில் கண்டது கிடையாது. சில நாட்களுக்குள்ளேயே—இரண்டாண்டுகளுக்குள்ளேயே அவன் மிகவும் பிரசித்தியடைந்து விட்டான். பதிப்பாளர்களும் பத்திரிகையாளர்களும் குறிப்பாக அவனைக் காண விழைந் தனர். ஆனால் பல தடவைகள் முயன்று பார்த்தும் அவனைக் காண முடியவில்லை. 'குப்தேச்வர்' என்ற பெயரில் வெளியாகும் படைப்பு ஒவ்வொன்றும் அவர்களுக்குத் தபால் வாயிலாகத் தான் வந்து சேர்ந்தது. அதற்குகந்த சம்மானத்தை இந்த முகவரிக்கு அனுப்பவும் என்று அதில் எழுதி யிருந்தது.

ஆதலால் யாருக்கு விருப்பமோ, அவர்கள் அந்தத் தொகையை—'முஸம்மாத் சதாகௌர் சர்தார் ஜீவ சிங்கின் விதவை மனைவி, தீவான்பூர், அம்ருத்சர்' என்ற விலாசத் திற்கு அனுப்பி வந்தனர்.

அந்த விலாசத்திற்குக் கடிதமெழுதி மக்கள் பல முறைகள் குப்தேச்வர் இருக்குமிடத்தைக் கண்டுபிடிக்க முயன்றனர். ஆனால் அந்தக் கிராமம் முழுவதிலும் குப்தேச்வர் எனும் ஒருவரை யாருமே அறிந்தவரில்லை. எந்தப் பெண்மணிக்குப் பணம் போய்ச் சேர்ந்ததோ, அவளிடமிருந்துகூட குப்தேச்வர் இருக்குமிடத்தைப் பற்றி ஒரு தகவலும் கிடைக்கவில்லை.

குப்தேச்வர் அம்ருத்சரில் பக்தாவாயில் எனுமிடத்தில் மாதம் எட்டணு வாடகை கொடுத்துக்கொண்டு ஒரு சிறு அறையில் வசித்து வந்தான்.

யாருடனும் அவன் பேசிக்கொண்டிருக்க எவருமே பார்த்தது கிடையாது. பகல் நேரத்தில் கதவைத் தாளிட்டுக்கொண்டு அறையில் உட்கார்ந்து அவன் எழுதுவது வழக்கம். இரவு முழுவதும் பட்டணத்திற்கு வெளியே தோட்டங்களிலும் பூங்காக்களிலும் உலாவிக்கொண்டிருப்பான். பலதடவைகள் தோட்டக்காரர்கள் அவன் பாடுவதையும் அழுவதையும் பார்த்திருக்கின்றனர். பலர் அவனை 'மஸ்த்' என்று கூப்பிடுவது வழக்கம்.

சிற்சில சமயங்களில் அவன் மக்கள் கூட்டமாக இருக்குமிடத்தில் சுற்றுவான். பலதடவைகள் வழியில் சென்றுகொண்டிருப்போரை மறித்துத் தாறுமாருன கேள்விகள் கேட்டு வைப்பான். பலர் அவனுடைய அசட்டுக் கேள்விகளைச் சட்டை செய்யாமல் சென்றுகொண்டிருப்பர். சிலர் கேள்விகளைக் கேட்டு அவனிடம் சற்று நேரம் நிற்கவும் செய்வர்.

அவனுடைய அறையில் நிம்மதியாக நாட்களைக் கழிக்க வென்று ஒன்றுமே கிடையாது. ஒரு மூலையில் வைக்கோல் பரப்பியிருக்கும். அதுதான் அவனது படுக்கை. மற்ெருரு மூலையில் மூன்று செங்கற்கள் வைக்கப்பட்டிருக்கும். அவை தான் அவனுக்கு அடுப்பு. அருகிலேயே ஒரு தோசைக்கல், ஒரு கிண்ணம், மண் செம்பு ஒன்று, விறகுக் கட்டைகள் கொஞ்சம்—யாவும் வைக்கப்பட்டிருக்கும். தூங்குமிடத்திற்கருகிலேயே ஒரு செங்கல் நிறுத்திவைக்கப்பட்டிருந்தது. அதன்மேல் ஒரு சிறு அகல் விளக்கு உண்டு. இங்குதான் மண்டியிட்டு உட்கார்ந்துகொண்டு ஒரு சிறு பலகையை வைத்துக்கொண்டு அவன் எழுதுவது வழக்கம்.

அவனுடைய அறைக்குப் பக்கத்திலேயே வண்டியைப் பழுது பார்க்கும் முஸ்லீம் நண்பர்கள், மரச் சாமான்கள் செய்யும் தொழிலாளிகள், அல்வா விற்பவர்கள் முதலியவர்கள் வசித்து வந்தனர்.

அன்று காலையில் அவன் தன் அறையில் உட்கார்ந்து எழுதிக் கொண்டிருந்தான். ஒரு பழைய கிழிந்த கம்பளியால்

முழங்கால் வரை போர்த்தியிருந்தான். இரவு நேரத்தில் அது தான் அவனுக்குப் போர்வையாகவும் இருந்திருக்கும் என்பது தெரியவந்தது. அவனுடைய வலது பக்கத்தில் பல துண்டுக் காகிதங்கள் சிதறிக் கிடந்தன. அவற்றின் ஒருபக்கம் பள்ளிப் பாடம் எழுதப்பட்டிருந்தது. மறு பக்கத்தில் அவன் ஏதோ எழுதியிருந்தான்.

மாலை நேரமாகிவிட்டது. பகல் முழுதும் எழுதிய பிறகு பேனாவை அவன் கீழே வைத்தான். எழுதிய பக்கங்களை ஒழுங்குபடுத்திக் கொண்டு எழுந்தான். வாசற்படியருகே வந்து சோம்பல் முறித்துக் கொண்டான். நிமிர்ந்து நின்று கொண்டு கைவிரல்களைச் சொடுக்கிக் கொண்டான்.

பக்கங்களனைத்தையும் எண்ணிப் பார்த்த பிறகு, இன்று எழுதியதை ஒருமுறை மேலாகப் பார்வையிட்டான். உடனே அவனையுமறியாமல் அவனுடைய வாயினின்றும் வந்தது—

'இந்த அத்தியாயத்தோடு சரி—இதுதான் கடைசி அத்தி யாயம்—இன்னும் கொஞ்சம்தான் முடிவதற்குப் பாக்கியிருக் கிறது. இன்றே இதை முடித்துவிடுகிறேன். இனி இந்தச் சோகம் கலந்த வாழ்க்கையினின்றும் என்றென்றைக்கும் விடு பட்டு விடுவேன். ஆனால், ஆகா! என்னுடைய மற்றொரு காரியம் ஆயிரம் முயன்று பார்த்தும் முடிவடையவில்லையே! சரி, முடியாவிட்டால் என்ன? முடிவதும் கடினம்தான். நான் தான் வீணாக இருளில் கத்தியை வீசினேன். அதிருஷ்டக் கட்டையாகத் தானிக்க வேண்டும் என்று தலையில் எழுதி யிருந்தால் நான் என்ன செய்வேன்? இந்த முடியாத வேலைக் காக இனி நான் என் நேரத்தை வீணாக்கமாட்டேன். போதும், இதுவரை வீணாக்கியது போதும்.'

இதற்குப் பிறகு திடீரென்று எதையோ எண்ணியவனாய் ஆழ்ந்த கவலையில் மூழ்கிவிட்டான். வண்டி பிளாட்பாரத்தை விட்டு நகர்ந்த பிறகு, திடீரென்று பணம் வைத்திருந்த பர்ஸ் காணவில்லை என்பது நினைவிற்கு வருவதுபோலிருந்தது அவனுடைய நிலை. காகிதங்கள் தீர்ந்த பிறகு அவனுக்கு அப்படித் தோன்றிற்று.

அறையின் கோடியில் மற்ற காகிதங்கள் வைக்கப்பட்டிருந்த இடத்திலேயே அவற்றையும் வைத்தான். கையைத் தலைக்கு அடியில் வைத்துக்கொண்டு, கம்பளியைப் போர்த்திக் படுத்துவிட்டான்.

பட்டணத்தில் பணந்தான் எல்லாம். அங்கு காசில்லாமல் மூச்சு விடுவது கூடக் கடினம். அவனிடம் காசு கிடையாது. காலையில் எழுந்தவுடனேயே சிறகு வெட்டப்பட்ட பறவை வேறு போர்வையைத் தேடி அலைவது போல், அவன் கிளம்பினான்.

தொல்லை போதாததற்குக் குளிர்காலம் வேறு. குளிரில் போர்த்திக் கொள்ள அந்த ஏழையிடம் ஒரே ஒரு கிழிந்த கோட்டுதானிருந்தது. அது மிகவும் நீளமாக இருந்தது; அவனுடைய அளவிற்குத் தைக்கப்பட்டதல்ல. பித்தான்கள் பிய்ந்து கிடந்தன. குளிரிலிருந்து தப்புவதற்காக இரு புறங்களிலும் சிறு ஓட்டைகள் செய்து ஒரு நூலைக்கட்டியிருந்தான். முழங்கால் வரையில் நீண்ட ஒரு பைஜாமா இருந்தது. ரயில்வே பணிமனையில் வேலை செய்யும் தொழிலாளியின் உடை போல் அதன் ஓரங்கள் கறுத்து அழுக்கடைந்திருந்தன. அதே நிலைதான் அவனுடைய முகத்திற்கும் கைகளுக்கும். ஆனால் அவனுடைய சிவந்த நிறத்தில் படிந்திருந்த அழுக்கு அவ்வளவு மோசமாகத் தென்படவில்லை. கால்களில் காலணிகள் இருக்கவில்லை. குதிகாலில் வெடித்திருந்தது.

காகிதங்களுக்கு ஏற்பாடு செய்ய அவன் அந்தக் கடுங் குளிரில் வெளியே கிளம்பினான். ஆனால் அவனுடைய முயற்சி வீணாகி விட்டது. தன் அதிருஷ்டத்தை நினைத்து அவனுக்கு எரிச்சலாக வந்தது. நம்பிக்கையிழந்து அவன் வீடு திரும்பினான். தன் வேதனையால் தானே எரிந்து போய்க் கொண்டிருந்தான் அவன். அறைக்குள் நுழைந்ததும் இந்த முற்றுப் பெறாத புத்தகத்தை ஆத்திரம் தீர அடுப்பில் போட்டு எரித்து விட்டால் இந்த வேதனை நிரம்பிய வாழ்க்கை முடிந்து விடுமே என்று நினைத்தான். இந்தச் செயலுக்கு அவன் தயாராகியும் விட்டான். எல்லாக் காகிதங்களையும் எடுத்து அடுப்பின் மீது வைத்து விட்டான். அதில் நெருப்பு மூட்டுவதற்காக வத்திப்

பெட்டியை எடுத்தான். அது காலியாக இருந்தது. அதனல் அவனுடைய ஆத்திரம் இன்னும் அதிகரித்தது. நெருப்பைப் பற்றவைக்கத் தீக்குச்சியைத் தேடிக் கொண்டு அவன் மறுபடியும் வீட்டை விட்டு கிளம்பினன்.

இதே சமயத்தில் அவனுடைய எண்ணம் மெள்ள மெள்ள மாற்றமடையத் துவங்கியது. அவன் வெகுநேரம் வரையில் சுவரின்மீது சாய்ந்துகொண்டே வெளியே நின்ருன். பிறகு உள்ளே சென்று காகிதங்களை அடுப்பின் மீதிருந்து எடுத்து முன்பிருந்த இடத்திலேயே அடுக்கிவைத்தான். மறுபடியும் தன் அதிருஷ்டத்தைப் பரிசோதித்துப் பார்ப்பதற்காக அவன் வெளியே கிளம்பினன்.

சென்று கொண்டிருக்கையில் சூதாட்டம் ஆடும் மக்களின் தலைவன் நினைவிற்கு வந்தான். அவனிடம் சென்று ஒரு ரூபாய் கடன் கேட்டான். ரூபாய் அவனுக்கு கிடைத்தது, ஆனல் இரண்டு ரூபாயாகத் திருப்பித் தருகிறேன் என்று வாக்களித்த பிறகு.

அவன் நேரே வீடு வந்து சேர்ந்தான். காகிதங்களை அடுக்கி ஒரு பொட்டலமாகக் கட்டிக் கொண்டு இரயில்வே ஸ்டேஷனை அடைந்தான். சற்று நேரங் கழித்துப் பார்த்தால், அவன் ஆக்ராவின் கடைத்தெருப் பக்கம் சுற்றிக் கொண்டிருந்தான். நம்பிக்கையிழந்த பயங்கரமான நிலை அவனை வலைபோல் சுற்றிப் பிணைத்திருந்தது. கையெழுத்துப் பிரதி இருந்த நிலைமையும், எழுத்தாளனின் உருவமும் அந்தப் புத்தகத்திற்கு அதிக விலை மதிப்பிட விடவில்லை. அவனுடைய பயங்கரமான உருவத்தைக் கண்ட ஓரிரு பதிப்பாளர்கள் அந்தப் புத்தகத்திற்கு இட்ட மதிப்பு உள்ளத்தை உலுக்கும் வகையில் இருந்தது—பத்துப் பதினைந்து ரூபாய்தான் மதித்தார்கள். அவன் மட்டும், தான் குப்தேசவர் என்று கூறியிருந்தால், அவனுடைய கால் தூசியை எல்லோரும் தலையில் வைத்துக் கொள்வார்களே! ஆனல் அவன் அப்படிச் செய்யவில்லை. தப்பி ஓடிய கொலைகாரனைப் போன்று தன்னைத்தான் ஒளித்துக் கொள்ளவே அவன் விரும்பினன்.

திரும்பி வந்தபோது அவனுடைய கையில் ஒரு நான்கணுக் காசுதானிருந்தது. அதுவும் செல்லாத காசு. டிக்கட்டு வாங்காம லேயே அவன் வண்டிக்குள் ஏறி விட்டான். வண்டியிலிருந்த பெஞ்சின்மீது சில செய்தித் தாள்கள் கிடந்தன. அருகிலிருந்த பெரியவரிடமிருந்து ஒரு பென்சிலை வாங்கி, முற்றுப் பெருத அத்தியாயத்தின் எஞ்சிய பகுதியை அவன் எழுத ஆரம்பித் தான்.—ஆனல் அதுவும் முற்றுப் பெருததுதான்...

ஷாம்தாஸின் கண்களில் இன்னும் கண்ணீர் நிரம்பியிருந் தது. செய்தித் தாள்களின் ஓரத்தில் எழுதப்பட்டிருந்ததைத் தான் குப்தேச்வர் படித்துக் கொண்டிருக்கிருன் என்று ஷாம் தாஸ் அறிந்து கொண்டார். பென்சிலில் எழுதப்பட்டிருந்தது. எங்கும் ஒரு சிறு இடம்கூடக் காலியாக விட்டு வைக்கப்பட வில்லை. பயணியின் கையில் கடைசிக் காகிதம் ஒன்றுதான் காணப்பட்டது. அந்தச் செய்தித்தாளின் மீது எழுதப்பட் டிருந்த வரிகளைப் படித்தவுடன் பயணி நிறுத்தி விட்டான். இன்னும் கதை முற்றுப் பெறவில்லை.

மறுபடியும் குப்தேச்வர் ஷாம்தாஸை ஒருமுறை பார்த்தான். அவனுடைய முகம் வெளுத்துப் போயிருந்தது. குப்தேச்வர் அனுதாபத்துடன் கூறினன்—'தூக்கமின்றி நீங்கள் களைப் படைந்து காணப்படுகிறீர்கள். சற்று படுத்துக்கொள்ளுங்கள்.'

'இல்லை, இல்லை—நீங்கள் படித்துக்கொண்டே செல்லுங்கள்.' ஒரு பெருமூச்செறிந்தபடி ஷாம்தாஸ் கூறினர்.

'அவ்வளவுதான். இந்த நாவல் முடிவடைந்து விட்டது. இதன் கடைசிப் பகுதி முற்றுப் பெறவில்லை. அதனை...'

'முடிவடைந்து விட்டதா?' ஷாம்தாஸ் உள்ளத்து வேத னையை ஒளித்தபடியே கேட்டார்—'இன்னும் எவ்வளவு மிச்ச மிருக்கிறது?'

'மிகவும் குறைவு' என்று கூறியபடியே கலக்கமுற்ற அவ ருடைய முகத்தை நோக்கினன்.

அதிகாரி கேட்டார்—'ஆனல் குப்தேச்வர் சாஹப்! மன் னிக்க வேண்டும். இன்னும் ஒன்று உங்களைக் கேட்கவேண்டும். இந்த நாவலின் 'ப்ளாட்' உங்கள் கற்பனையா அல்லது...'

இடையிலேயே குப்தேசுவரர் கூறினான்—'இல்லை, இது உண்மையாக நடந்த நிகழ்ச்சி. இப்படிப்பட்ட உண்மையான 'ப்ளாட்' நாவலை எழுத மிகவும் பயன்படுகின்றது. இது நாவலின் ஒரு உயிர்த்துடிப்பை ஏற்படுத்துகிறது.'

அதிகாரி தன் கைக்குட்டையினால் நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டு கூறினார்—'ஆனால், இந்த நிகழ்ச்சியை நீங்கள் யாரிடமிருந்து கேட்டீர்கள் என்று கூற முடியுமா?'

'உம். சுந்தரியிடமிருந்து கேட்டேன்.'

'அப்படியா? சுந்தரியா இதையெல்லாம் உங்களுக்குக் கூறினாள்? அவளை நீங்கள் எங்கு சந்தித்தீர்கள்?—எப்போது சந்தித்தீர்கள்?'

ஷாம்தாஸின் உடல் முழுவதும் வியர்த்து விட்டது.

'ஒரு கிராமத்தில் சந்தித்தேன்!'

'பிறகு அதற்கு ஒரு நாவலின் உருவத்தை நீங்கள் அளித்து விட்டீர்களாக்கும்!'

'ஆமாம்! இந்தக் கதை எனக்கு மிகவும் ருசிகரமாகப் பட்டது.'

அதிகாரியின் முகத்தில் சிற்றத்தின் சின்னங்கள் புலப் பட்டன. கோபத்தை மறைத்துக்கொண்டு அவர் பேசினார்—'மன்னிக்க வேண்டும். உங்களைப் போன்ற நாவலாசிரியரால் இதைவிடச் சிறந்த முறையில் கற்பனை செய்ய முடியும்போது, இந்த உண்மை நிகழ்ச்சியை ஏன் எடுத்துக் கொள்ள வேண்டும்?'

'அது உண்மைதான். ஆனால் இதனால் நான் இன்னும் அதிக வெற்றியடைவேன் என்ற நம்பிக்கையிருந்தது.'

'மன்னிக்க வேண்டும். நான் நேருக்கு நேராக உண்மையைப் பேசி விடுபவன். உங்கள் இலக்கியச் செறிவு என்னை ஒரேடியாக ஆட்கொண்டு விட்டது. ஆனால் உங்கள் இந்தப் போக்கு எனக்கு அருவருக்கத் தக்கதாகத் தோன்றுகிறது. ஒருவன் தான் நீந்துவதில் மகா நிபுணன் என்று மக்களுக்குக் காண்பித்துக் கொண்டான். தன் திறமையை இன்னும் அதிகமாகக் காண்பிக்க எண்ணிய அவன் தன் சக்திக்கு மீறி நீந்த ஆரம்பித்தான். அதன் விளைவாக அவன் மூச்சுத்

திணறி இறந்து விட்டான். அதே மாதிரிதானிருக்கிறது உங்கள் போக்கும். வயிற்றுக்குள் தண்ணீர் போய் விட்டது. ஆனால் வேடிக்கை பார்க்கும் மக்கள் அவன் உயிரற்றவனைப் போல் நமக்குக் காண்பிக்கிறன் என்று நினைத்துக் கொண்டு கைதட்டி ஆர்ப்பரித்தனர். பாவம், அதேபோல் நீங்கள் செய் திருக்கிறீர்கள். ஒவ்வொரு கணமும் துடிதுடித்துக் கொண் டிருந்த அந்தப் பேதைப் பெண்ணின் வாழ்க்கையை நீங்கள் இவ்விதம் பயன்படுத்திக் கொண்டிருக்கக் கூடாது. 'ஆடு உயிருக்காக அழுததாம், கசாப்புக் கடைக்காரன் இறைச்சிக் காக அழுதானும்' என்பார்களே, அப்படி யிருக்கிறது உங்கள் கொள்கை.

'அன்பார்ந்த குப்தேச்வர்ஜி! இது உங்கள் கலைத்திறன் மீது ஒரு கரும்புள்ளி வைத்தாற் போலிருக்கிறது. இது உங்கள் இரக்கமற்ற தன்மையையும் எடுத்துக் காண்பிக்கின்றது. அந் தப் பெண்ணின் நெருப்புப் போன்ற கண்ணீர்த் துளிகளையும், பெரு மூச்சுக்களையும் உங்கள் சுயநலத்திற்காகப் பயன் படுத்திக் கொள்ளாமல், அவற்றை அவளுடைய நலனுக்காகவே பயன் படுத்தியிருக்க வேண்டும்.'

தலைகுனிந்தபடியே குப்தேச்வர் கூறினான்—'உண்மையில் நான் தவறு செய்துவிட்டேன். ஆனால் என் உள்ளம் என்னை அவ்விதம் செய்யும்படி வற்புறுத்திற்று. அதனால்தான் அவ்விதம் செய்தேன்.'

அதிகாரி கூறினார்—'போகட்டும். அது ஒன்றும் அவ்வளவு பெரிய குற்றமல்ல. கடவுள் ஒருவர் தான் குற்றம் புரியாதவர். சுந்தரி தான் இறப்பதற்குச் சிறிது நேரம் முன்பு தான் முழுக் கதையையும் உங்களிடம் கூறியிருக்கிறள் போலிருக்கிறது.'

'ஆமாம் ஐயா! மூழ்கி இறப்பதற்கு ஓரிரு தினம் முன்பு தான் என்னிடம் முழுக் கதையையும் கூறினாள்.'

'உங்களுக்கு அவள் நதியில் மூழ்கி இறந்தாள் என்பது எப்படித் தெரிய வந்தது?'

'அந்நாட்களில் நான் அதே கிராமத்தில் தான் இருந்து வந்தேன்.'

ஷாமதாஸுக்கு முட்களால் தன் உடலில் சதையை யாரோ கொத்துவது போலிருந்தது—அவருடைய உடலில் ஒவ்வொரு அணுவும் வலித்தது. சற்று நிதானித்து அவர் கூறினர்—‘குப்தேச்வர்! நீங்கள் எழுதியிருக்கிறீர்களே, அது மிகவும் அபாரம்! எஞ்சியுள்ள பக்கங்களின் வாயிலாக நீங்கள் உங்கள் கலைத்திறனைக் காண்பிக்கப் போகிறீர்கள். அப்படித் தானே? ஆனால், இன்று நீங்கள் அந்தப் பக்கங்களை நிச்சயம் எழுதியாக வேண்டும். இன்னும் ஒரே ஒரு வேண்டுகோள். அதை மறுத்து என் உள்ளத்தை முறித்துவிடமாட்டீர்கள் என்று நினைக்கிறேன். இன்றிலிருந்து இந்தத் தொண்டனுடைய குடிசையிலேயே நீங்களும் தங்கியிருக்க வேண்டும். உங்கள் புனிதமான நட்பினால் இந்தப் பாவியின் வாழ்க்கை சீர்ப் படட்டும். அந்தப் பேதைப் பெண்ணைப் பற்றி உங்களுக்கு இன்னும் ஏதாவது தெரிந்தால் தயவு செய்து அதை எனக்குச் சொல்லுங்கள்.’

குப்தேச்வர் மகிழ்ச்சியுடன் பதிலளித்தான்—‘என்னால் இந்த நாவலை முடிக்க முடிந்தால் அதை நான் பெரும் அதிருஷ்டமாகக் கருதுவேன்.’

‘ஏன்? அப்படி யென்றால்?’

‘அதாவது இந்த நாவல் முற்றுப் பெற இன்னும் ஒரே ஒரு சிறு பகுதிதான் இருக்கிறது. அதேபோல் என் வாழ்வின் முடிவிற்கும் இன்னும் கொஞ்சம் தான் எஞ்சியிருக்கிறது.’

‘ஆ! என்ன?......இதென்ன நீங்கள்......?’

‘ஆமாம். நான் உயிர் வாழ இனி ஓரிடமும் கிடையாது. நேரமும் கிடையாது. நான்—நான்’ என்று கூறியபடியே குப் தேச்வர் நிறுத்திவிட்டான். இதற்குப் பிறகு ஷாம்தாஸ் அடிக் கடி கேட்ட போதிலும் அவனால் ஒன்றும் கூற முடியவில்லை.

சிறிது நேரங் கழித்து குப்தேச்வர் கூறினன்—‘நான் உங்களுக்கு மற்றுமொரு தொல்லை கொடுக்கப் போகிறேன்!’

‘அது என் பேரதிருஷ்டமாயிற்றே. சொல்லுங்கள்! உங்கள் கட்டளைக்காகக் காத்து நிற்கின்றேன்.’

சற்று மௌனமாக இருந்து விட்டுப் பிறகு குப்தேச்வர் கூறினன்—‘நீங்கள் மனித உருவில் வந்த தெய்வம் போல்

தோற்றுகிறீர்கள். என் உள்ளம் உங்களை எவ்வளவு மதிக்கிறது என்று என்றால் எடுத்துக்கூற முடியாது. நான் உங்களை சிரமப்படுத்தப் போகிறேன். உங்களைப் போன்ற மகாத்மாக்களை இம்மாதிரி நல்லுதவி செய்யும் பொருட்டே இறைவன் உலகிற்கு அனுப்பியுள்ளார் என்று தான் நான் நினைக்கிறேன். எனக்காக உங்களால் ஒரு உதவி செய்ய முடியுமா?'

அவனுடைய வார்த்தைகளைக் கேட்டு ஷாம்தாஸ் தலை குனிந்து நின்று விட்டார். அவன் கூறினார்—'என் வாழ்நாள் முழுதும் நான் உங்கள் அடிமை என்று வைத்துக் கொள்ளுங்கள். நான் எதைச் செய்யத் தகுந்தவன் என நீங்கள் நினைக்கிறீர்களோ, அதனைத் தயங்காமல் கூறுங்கள்—கட்டளை பிறப்பியுங்கள். ஆனால் தயவு செய்து என்னை மிகவும் கௌவரப் படுத்தாதீர்கள். நான் ஒரு கடையன். என் வாழ்வில் நான் எண்ணற்ற பாவச் செயல்களைப் புரிந்துள்ளேன். நான் செய்த ஒரு மாபெரும் பாவச் செயலை என்றால் மறக்கவே முடியாது. அதை நீங்கள் கேட்டால் மெய் சிலிர்த்து நின்று விடுவீர்கள். அதனால் தான் என்னைப் புகழும் சிறந்த சொற்களுக்கு நான் தகுதியற்றவன் என்கிறேன். அந்தச் சிறந்த சொற்களனைத்தும் உங்களுக்குத் தான் தகுந்தவை.'

நன்றியுணர்ச்சியால் குப்தேச்வரின் கண்களில் நீர் மல்கிற்று. அவன் தலைகுனிந்து நன்றி தெரிவித்தபடி கூறினான்—'நீங்கள் என்னை மிகவும் உயர்ந்த இடத்திற்குக் கொண்டு சேர்க்கிறீர்கள். அதில் ஆயிரத்தில் ஒரு பங்கு சிறப்புக்கூட என்னிடம் இருப்பதாக நான் உணரவில்லை. உங்கள் இந்தப் பணிவு நிரம்பிய தன்னடக்கம் என் உள்ளத்தை இன்னும் அதிகமாக ஆட்கொள்ளுகிறது. உங்களுக்கு இன்னும் அதிக மரியாதையளிக்கும்படி என்னைத் தூண்டுகிறது.'

'என்னைப் பொறுத்த வரையில் நீங்கள் இறைவனின் திரு அவதாரம் தான்!'

குப்தேச்வர் தலைகுனிந்து கொண்டான். அதிகாரி கூறினார்:—'உம், கட்டளை என்ன! விரைவில் பணியுங்கள்!'

குப்தேச்வர் கூறினான்—'லாஹோரில் அந்தக் கடைக்காரனிடம் கொடுத்துவிட்டு வந்த அந்தக் கைக்குட்டையை

எப்படியாவது எனக்குத் திரும்ப வாங்கித் தரவேண்டும். லாஹோர் ரெயில்வே ஸ்டேஷனுக்கு எதிரே அவனுடைய கடை இருக்கிறது. நாவலின் இறுதி அத்தியாயத்தில் நான் ஒரு விலாசத்தைத் தெரிவித்திருக்கிறேன்—இந்தப் புத்தகத்தை அச்சிட்டு வெளியிட உங்களாலியன்ருல், அவ்விதம் செய்யுங்கள். அதினின்றும் வரும் வரும்படியை அந்த விலாசத்திற்கு அனுப்பி விடுங்கள்.'

ஷாம் தாசின் உடல் தசை நரம்புகளாலானது போலிருக்கவில்லே. மரக்கட்டை போலாகி விட்டது. அவனுடைய கண்கள் குப்தேச்வரின் கண்களோடு ஒன்றி விட்டன.

வழி தவறியவன் திடீரென்று திரும்புவது போல் குப்தேச்வரின் பேச்சைக் கவனித்தபடி ஷாம்தாஸ் கூறினுர்— 'மன்னிக்க வேண்டும். நான் வேறு எதையோ பற்றி எண்ணிக் கொண்டிருந்து விட்டேன். நீங்கள் என்ன சொல்லிக் கொண்டிருந்தீர்கள்?'

பயணி தன் இரு வேண்டுகோளேயும் மறுபடியும் தெரிவித்தான்.

ஷாம்தாஸ் தன் உள்ளத்தில் எரிந்து கொண்டிருந்த தீயை ஒருவாறு சமாளித்துக் கொண்டு பேசினுர்— 'உங்கள் கட்டளேப்படியே செய்கிறேன். மிகவும் மகிழ்ச்சியுடன் செய்கிறேன். ஏதோ ஒரு பெயரைப் படித்தீர்களே அது என்ன? உம். சதாகௌர்? உங்களுக்கு அந்த அம்மா ஏதாவது உறவினரா?'

'ஆமாம்'

'உங்கள் வீடு?'

'என் வீடு உங்கள் கழலடியில் தானிருக்கிறது. அதனுல் இதை நான் ஏழையின் குடிசை என்று சொல்லிக் கொள்ள முடியாது.'

'இது உங்கள் பெருந்தன்மையைக் குறிக்கிறது. ஆனுல், நீங்கள் எந்த ஊரைச் சேர்ந்தவர்?'

குப்தேச்வர் காகிதங்களேச் சேர்த்துக் கட்டியபடியே பேச்சை மாற்றி விட்டான்—'நீங்கள் மிகவும் களேத்துப் போயிருக்

கிறீர்கள். சிறிது ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள். வேலைக்கு வேறு நீங்கள் போயாக வேண்டுமே!'

'இல்லை, இன்று ஞாயிற்றுக்கிழமை தானே. சரி, இதையெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம்.' சிறிது நேரங் கழித்து அதிகாரி மறுபடியும் கூறினன்—'பிறகு, உங்கள் கைக்குட்டை நினைவிற்கு வருகிறது. இன்று ஞாயிற்றுக் கிழமை. நானே சென்று அதை வாங்கிக் கொண்டு வந்து விடலாமா என்று நினைக்கிறேன். அந்தக் கடைக்காரனின் விலாசம் தான் தெரியுமே. நீங்கள் கூறியிருக்கிறீர்களே!'

குப்தேச்வர் மறுபடியும் அந்தக் கடைக்காரனின் விலாசத்தைச் சொல்லியபடி கேட்டான்—'ஐயா! நீங்கள் இங்கு எத்தனை ஆண்டுகளாக இருக்கிறீர்கள்?'

'பதினறு அல்லது பதினெட்டு ஆண்டுகளாகி விட்டன.'

'அப்படியானல் இந்த நகரில் உங்களுக்கு மிகுந்த செல்வாக்கு இருக்குமே!'

'ஆமாம், உங்கள் தயவால், நிறைய மனிதர்களை நான் அறிந்திருக்கிறேன்'

குப்தேச்வர் சற்று உற்சாகத்துடன் கூறினன்—'ஒரு மனிதனுடைய விலாசத்தைக் கண்டுபிடிக்க நீங்கள் எனக்கு உதவுவீர்களா? நான் அவனை இரண்டு அல்லது மூன்று வருடங்களாகத் தேடி வருகிறேன்—ஆனல் இன்னும் என்னல் கண்டுபிடிக்க முடியவில்லை. இதுவரை அந்த மனிதனது உருவம் எப்படி, உடலமைப்பு எப்படி என்றுகூட நான் தெரிந்து கொண்டதில்லை—என்னல் உங்களுக்கு என் அறிவை நினைத்துச் சிரிப்புத்தான் வரும். உருவம் தெரிந்திருந்தாலும் தான் இதற்குள் அவரைக் கண்டு பிடித்து விடுவேன் என்பது என்ன நிச்சயம்!'

அதிகாரி கூறினர்—'உங்களால் இயன்றவரை அவர் எப்படி இருப்பார் என்று கூறுங்கள். எங்கிருந்தாவது கண்டுபிடித்து விடமுடியும் என்பது என் நம்பிக்கை. இரயில்வே வேலையில் தினசரி எத்தனையோ புதிய புதிய மனிதர்களைச் சந்திக்க நேரிடுகிறது. இரயில்வே அதிகாரிகளின் கண்களிலிருந்து தப்பியவர்கள் உலகில் யாராவது இருக்கமுடியுமா? அவனைப்

பற்றி உங்களுக்குத் தெரிந்த விவரத்தைத் கூறுங்கள்—உம், சீக்கிரம் !'

குப்தேச்வர் சொன்னான்—'எனக்கு அவனுடைய பெயர் மட்டும் தான் தெரியும்—வேறு ஒன்றும் தெரியாது.'

'அவனுடைய பெயரென்ன !'

'அவனுடைய பெயர் தாராசந்த்.........இதென்ன தூக்கமின்மையால் உங்கள் உடல்நிலை கெட்டுப் போய் விட்டதே ! இதெல்லாம் கிடக்கட்டும். இன்று நீங்கள் லாஹோர் போக வேண்டாம்—கைக்குட்டையைப் பிறகு எப்போதாவது வாங்கிக் கொள்ளலாம். இப்போது சிறிது நேரம் இளைப்பாறுங்கள். உங்கள் முகம் வெளுத்துப் போய் விட்டது.'

கைக்குட்டையால் தலையைத் துடைத்துக் கொண்டே, தொண்டையைக் கனைத்தபடி அதிகாரி மறுபடியும் பேச ஆரம்பித்தார்—'வேண்டாம், நீங்கள் கவலைப்படவேண்டாம். சிற்சில சமயங்களில் நான் இம்மாதிரி படபடப்படைவதுண்டு. ஆனால் உடனே சரியாகிவிடுவேன். அது சரி, அந்த தாராசந்த் முதலில் எங்கிருந்தான் ?'

'முதலில் அவன் சியால்கோட்டில் இருந்தான்......(அதிகாரியின் முகத்தைப் பார்த்தபடி) வேண்டாம் ஐயா ! உங்கள் உடல் நிலை சரியாக இல்லை. எழுந்து கட்டிலில் போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்.'

ஷாம்தாஸின் நடுக்கம் எல்லையை மீறிக்கொண்டிருந்தது. அவர் கைக்குட்டையால் விசிறிக் கொண்டே கூறினார்—'ஓகோ......அவனை எனக்கு வெகு நன்றாகத் தெரியுமே' ஷாம்தாஸின் முகம் உயிரற்றவனது முகத்தைப் போன்றாகி விட்டது. கைகள் விரைக்க ஆரம்பித்தன. இழுப்புநோய் வந்தவனைப் போல் மூச்சுத் திணறிற்று.

'உங்களுக்கு அவனைத் தெரியுமா ? நன்றாகத் தெரியுமா ?'

குப்தேச்வர் மகிழ்ச்சியடைந்தான். இழந்த நிதியைத் திரும்பப் பெற்றவனைப் போல் அவன் களிப்படைந்தான். தாங்கமுடியாமல் அவன் எழுந்தான். அதிகாரியின் அச்சத்தைக் கூட அவன் பொருட்படுத்தவில்லை. விறுவிறுவென்று அவன் பேசினான்—'தயவுசெய்து சொல்லுங்கள். அவன் இப்

போது எங்கே யிருக்கிறான்? அவனை சந்திக்க ஏற்பாடு செய்வீர்களா?'

'ஒரு தடவை என்ன, நூறுதடவைகள் வேண்டுமானாலும் சந்திக்கச் செய்கிறேன். எனக்கு அவனை மிகவும் நன்றாகத் தெரியும்.' கண்ணிமை கொட்டாமல் ஷாம்தாஸ் குப்தேச வரின் முகத்தைப் பார்த்தபடி கூறினார்.

குப்தேச்வர் ஒருவாறு தன் மகிழ்ச்சியை அடக்கிக்கொண்டு கேட்டான்—'அவன் எங்கே இருக்கிறான்? என்ன வேலை செய் கிறான்?'

'லாஹோரில் இருக்கிறான். சர்க்காரின் அலுவலகம் ஒன்றில் வேலைபார்த்து வருகிறான்.'

'தயவுசெய்து இன்றே நான் அவனைச் சந்திக்க உதவி புரியுங்கள். எப்போது போகலாம்?'

'மாலைக்குள் நானே அவனை என்னுடன் அழைத்து வந்து விடுவேன்.'

'ஆ! என் ஆருயிர் ஐயா! ஆயிரம்முறை நன்றி செலுத்து கிறேன், லட்சம் தடவைகள், கோடிதடவைகள் நன்றி கூறு கிறேன். என்னையே நீங்கள் விலைக்கு வாங்கிவிட்டீர்கள். என் வாழ்க்கையின் பயங்கரமான பிரச்னையை நீங்கள் தீர்த்து வைத்துவிட்டீர்கள். எவ்வளவு சிரமமாக இருந்தாலும் தயவு செய்து இன்றே அவனை நான் சந்திக்க நீங்கள் ஏற்பாடு செய் தாக வேண்டும்!'

இதற்குப் பிறகு இருவரும் சற்று இளைப்பாற உட்கார்ந்து கொண்டனர். இரவு முழுதும் தூங்கவில்லை. ஆயினும் இருவரின் கண்களும் சற்றுகூட மூடவில்லை.

வேலையாள் உணவு தயாரித்தான். இருவரும் ஸ்நானம் செய்த பிறகு சாப்பிட்டனர்.

குப்தேச்வரின் முற்றுப்பெறாத பகுதியை எழுதி முடித்து விடும்படி கூறிவிட்டு பன்னிரண்டேகால் மணி வண்டியில் ஷாம்தாஸ் லாஹோருக்குச் சென்றார்.

குப்தேச்வரின் முகம் வெற்றியின் மகிழ்ச்சியால் மிளிர்ந்தது. இத்தகைய மகிழ்ச்சியை அவன் தன் வாழ்நாள் முழுவதும் அடைந்ததே கிடையாது.

இன்று அவனிடம் காகிதங்களுக்குக் குறைவே கிடையாது. எழுதுவதற்கு வேண்டிய பொருள்களும் மிகச் சிறந்தவை யாகக் கிடைத்தன. இடமும் அழகானது. மகிழ்ச்சியின் மிகுதி வேறு ஒருபுறம். ஆனால் இன்று அவனிடம் எழுது வதற்கு ஒன்றுமே மிஞ்சவில்லை. வேட்டையாடுபவனுக்கு இரை எளிதில் கிடைத்தது. ஆனால் அதைப்பிடிக்க வேண்டிய சாதனம் இருக்கவில்லை. இன்று எல்லாமே இருக்கின்றன. ஆனால் அவனிடம் வேட்டையாடும் ஆர்வம் துளிக்கூட இல்லை. சாப்பிட்டவுடன் அவன் கட்டிலில் படுத்துக்கொண்டான். ஆனால் அந்தச் சந்திப்பின் ஆர்வம் அவனைத் தூங்கவே விடவில்லை.

தாராசந்தைத் தன் தயையுள்ள அன்பர் எப்போது அழைத்து வருவார் என்று அவன் ஆவலுடன் காத்துக்கொண் டிருந்தான். இந்த ஆறு மணி நேரத்தையும் ஒவ்வொரு விநாடி யாக எண்ணி எண்ணி அவன் கழித்தான். அவனுடைய பார்வை இடைவிடாமல் சுவரின் மீதிருந்த கடிகாரத்தின் மீதே பதிந்திருந்தது.

கடைசியில் ஐந்து மணியடித்தது. குப்தேச்வர் வாசற்புறம் வந்து உலாவ ஆரம்பித்தான். தெருக்கோடியில் ஏதாவது வண்டி வருவது போலிருந்தால், இவனுடைய உள்ளமும் 'தக்தக்' என்று துடிக்கும். எத்தனையோ வண்டிகள் வந்து போய்விட்டன. அவனுடைய பரபரப்பு ஒவ்வொரு கணமும் அதிகரித்துக் கொண்டே போயிற்று.

முடிவில் அந்த வண்டியும் வந்து சேர்ந்தது. ஷாம்தாஸ் அதில் தனியாகத்தான் இறங்கினார். வந்தவுடனேயே அவன் குப்தேச்வரின் பரபரப்பை உணர்ந்து கொண்டு—'அவர் வந்து கொண்டிருக்கிறார்' என்று கூறினார்.

குப்தேச்வருக்கு அப்போதுதான் உயிர் வந்தது. அவன் கேட்டான் 'எங்கே?'

அதிகாரியின் உடல் நடுங்கிற்று. முகம் 'வெறிச்' சென் றிருந்தது. மூச்சுத் திணறிற்று. அவனுடைய நிலைகண்டு குப்தேச்வர் மிகவும் கவலை கொண்டான். அவன் கேட்டான்—

' ஏன்? உங்கள் நிலைமை இப்படி மோசமாகக் காரணம் என்ன? இன்னும் உங்கள் உடல்நிலை சரியாக வில்லையா?'

தன் பயத்தை மறைக்க முயன்றபடி ஒரு செயற்கைப் புன் முறுவலுடன் அதிகாரி கூறினன்—' அதெல்லாம் ஒன்றுமில்லை. நேரமாகி விடுமே என்று லாரியில் வந்தேன். வழியில் ஒரு விபத்து நேர்ந்து விட்டது. லாரி ஒரு மரத்துடன் மோதிக் கொண்டது. பலர் காயமடைந்தனர். எனக்குக் காயமொன்றும் படவில்லை. ஆனல் இந்த விபத்தைப் பார்த்ததால் உள்ளத் திற்கு ஓர் அதிர்ச்சி ஏற்பட்டு விட்டது.

குப்தேச்வர் நடுங்கி விட்டான். ' அப்படியானல் உள்ளே வந்து ஓய்வெடுத்துக் கொள்ளுங்கள். சூடாகப் பால் கொண்டு வரச் சொல்கிறேன்...' என்று கூறினன்.

இடையே அதிகாரி கூறினர்—' வேண்டாம் அன்பரே! எனக்கு சிரமம் ஒன்றுமில்லை. நான் சற்று ஸ்டேஷன்வரை சென்று வருகிறேன். எங்கள் ஜெனரல் ஆபீசர் சொந்த வேலையாக இந்தப் பக்கம் வருகிறர். நாங்கள் சிலர் நிச்சயம் அவரைச் சந்திக்க வேண்டும். இதோ, உங்கள் கைக்குட்டை!'

குப்தேச்வரின் கையில் கைக்குட்டையைத் திணித்துவிட்டு ஒன்றும் கூறுமலேயே போய் வண்டியில் உட்கார்ந்து கொண்டார்—

' மிஸ்டர் தாராசந்த் ஆறேகால் மணிக்கு வருவான். இங்கேயே அவனை நீங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருங்கள். 4·45 மணிக்குப் புறப்படும் வண்டியில் கிளம்பியிருப்பான் என்று நினைக்கிறேன்.'

வண்டி தெருக்கோடி வரை சென்று பிறகு மறைந்துவிட்டது.

ஆறேகாலுக்குப் பதிலாக ஏழு மணி யடித்துவிட்டது. ஆனல் இன்னும் தாராசந்த் வந்தபாடில்லை. வாசலில் நின்று கொண்டிருந்த குப்தேச்வர் வழியில் வந்து போய்க் கொண் டிருக்கும் மக்களை மிகவும் கவனத்துடன் பார்த்துக் கொண் டிருந்தான்.

இருள் அதிகரிக்கத் துவங்கியது. திடீரென்று உயரமான ஒருவன் வந்து—' பாபு ஷாம்தாஸின் வீடு இதுதான?' என்று கேட்டான்.

அவன்தான் தாராசந்த் என்று குப்தேச்வர் தெரிந்து கொண்டு விட்டான். 'வாருங்கள். நீங்கள்தானே மிஸ்டர் தாராசந்த்?' என்று குப்தேச்வர் கேட்டான்.

'ஆமாம்' என்று கூறிவிட்டு அவன் உடனே உள்ளே நுழைந்தான். குப்தேச்வர் அவனை நாற்காலியில் உட்காரும்படி சமிக்ஞை செய்தான்.

தாராசந்த் ஓவர்கோட்டணிந்திருந்தான். கண்களில் வலியிருந்ததாலோ அல்லது வேறு எந்தக் காரணத்தாலோ கருப்புக் கண்ணுடி யணிந்திருந்தான். தலையில் மிகவும் பெரிய தலைப்பாகையிருந்தது. ஓவர்கோட்டின் காலர் மேலே தூக்கி விடப்பட்டிருந்தது. அதிலிருந்து குளிரென்றால் அவனுக்குப் பயம் என்பது புலப்பட்டது.

வெகு நேரம்வரை எதிரும் புதிருமாக இருவரும் நாற்காலிகளில் உட்கார்ந்திருந்தனர். முடிவில் குப்தேச்வரே மௌனத்தைக் கலைத்தபடி கேட்டான்—'என்ன ஐயா, நீங்கள்தான் தாராசந்த், இல்லையா?'

அவன் பேசாமல் தலையை அசைத்தபடி 'ஆமாம்' என்று பதலளித்தான்.

குப்தேச்வர் பிறகு ஆரம்பித்தான்—'உங்களைத் தேடித்தான் நான் இத்தனை காலமாக அலைந்திருக்கிறேனு? அதாவது உங்கள் இரத்தத்தைக் குடிக்கத்தான் இத்தனை நாட்கள் நான் உயிரோடிருந்திருக்கிறேனு?' என்று கேட்ட குப்தேச்வரின் குரல் உரக்க ஒலிக்க ஆரம்பித்தது. அவனுடைய கண்கள் சிவந்து விட்டன.

தாராசந்த் அதே அமைதியுடன் அமர்ந்திருந்தான். பிறகு கம்பீரமான குரலில் கேட்டான்—'நீங்கள் என்ன கூறுகிறீர்கள் என்று எனக்குப் புரியவில்லையே!'

குப்தேச்வர் கோபத்தால் நடுங்கினுன். அவனுடைய ஒவ்வொரு நரம்பும் பழிவாங்கத் துடித்தது. தன் வசமிழந்து அவன் பேசினுன்—'பிசாசே! என்ன சொன்னுய்? நான் பேசுவது உனக்குப் புரியவில்லையா? இதைப் புரிய வைப்பதற்காகத்தானே நான் இத்தனை நாட்களாக உன்னைத் தேடிக் கொண்டிருந்தேன்!'

தாராசந்த் மறுபடியும் பேசினான்—'இன்னும் ஏதாவது பேச்சுத் துவங்குவதற்கு முன்பு, உங்களைப் பற்றிய விவரம் கொஞ்சம் அறிந்து கொள்ளலாமா?'

'தாராளமாகக் கேளுங்கள்.' குப்தேச்வர் மிடுக்குடன் பதிலளித்தான். 'உனக்கு குர்தேயி என்ற பெயருள்ள பெண்மணி யாரையாவது தெரியுமா?'

'தெரியும். ஆனால் அவளுக்கும் உங்களுக்கும் என்ன உறவு?'

'உறவைச் சொல்லத்தானே உன்னைத் தேடியலைந்தேன். அவள் உனக்கு என்ன உறவு?'

'அவள் என் வீட்டுக்காரி!'

'இப்போது அவள் எங்கேயிருக்கிறாள்?'

தாராசந்த் ஒரு பதிலும் அளிக்கவில்லை. குப்தேச்வர் மறுபடியும் கேட்டான் — 'அவள் உயிருடனிருக்கிறாளா, அல்லது இறந்து விட்டாளா என்றாவது உனக்குத் தெரியுமா?'

தாராசந்த அதே அமைதியுடன் அமர்ந்தபடி பதிலளித்தான்—'அவள் இறந்து விட்டாளென்று நான் கேள்விப் பட்டேன்.'

'யார் சொல்லக் கேட்டாய்?'

தாராசந்த் மௌனமாக இருந்தான்.

குப்தேச்வர் மறுபடியும் கர்ஜித்தான்—'இல்லை! நீ பொய்யன். கொடிய பிசாசு நீ. அவள் உயிருடனிருக்கிறாளா அல்லது இறந்துவிட்டாளா என்று உனக்குத் தெரியாது. அதைத் தெரிந்து கொள்வது அவசியம் என்று கூட நீ நினைக்கவில்லை. அவளை மரணத்தின் வாயில் விட்டுவிட்டு நீ வீட்டிலிருந்து கிளம்பிவிட்டாய். அவ்வளவுதான் உனக்குத் தெரியும். அதற்குப் பிறகு அவள் பட்ட அவதியைப் பற்றி உனக் கொன்றுமே தெரியாது.'

உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை தாராசந்த் நடுங்கினான். அவன் வாயினின்றும் ஒரு சொல்கூட வெளி வரவில்லை.

இம்மாதிரி ஆவேசமான உணர்ச்சியுடன் குப்தேச்வரால் அமர்ந்திருக்க முடியவில்லை. ஆத்திரத்துடன் நாற்காலியிலிருந்து அவன் எழுந்தான். இரண்டு கைகளையும் மூடிக் கொண்டு சிங்கத்தைப்போல் அவன் மீது பாய்ந்தான். ஒரு

கையால் அவனுடைய கழுத்தை இறுகப் பிடித்துக் கொண்டு, மறு கையால் அவனுடைய தோளைப் பிடித்து உலக்கியபடி கூறினான்—' மிருகமே! பேசமாட்டாயா? உன்னை உயிருடன் விட்டு விடுவேன் என்று நினைத்துக் கொண்டு பாசாங்கு செய்கிறாயா? உலகத்தின் ஒரு சக்தியாலும் உன்னை என்னிட மிருந்து காப்பாற்ற முடியாது என்பது நினைவிருக்கட்டும். (பற்களைத் கடித்தபடி) நான் இதை (கோட்டிற்குள் மறைத்து வைத்திருந்த கூரிய கத்தியை எடுத்து) உன் நெஞ்சில் குத்தி உன் இரத்தத்தைக் குடிப்பேன்! அப்போது தான் எனக்குள் எரிந்து கொண்டிருக்கும் தீ அணையும். ஷாம்தாஸின் வீட்டில் உன்னைப் போன்ற சண்டாளனைக் கூப்பிட்டு நான் பெரும் தவறு செய்துவிட்டேன் என்பது எனக்குத் தெரியும். இந்தப் புனிதமான இடத்தில் உன் களங்கமடைந்த இரத்தம் சிந்தினால் நான் மாபாதகனாகி விடுவேன். ஆனால் இப்போது அதைப் பற்றி யெல்லாம் என்னால் சிந்தித்துப் பார்க்க முடியாது. என் அன்பர் ஷாம்தாஸிற்கு உன் பாதகச் செயலைப் பற்றித் தெரிந் தால் நானிழைத்த இந்தத் தவற்றை மன்னிப்பதோடு நில்லாமல், 'சபாஷ்' என்று கூறி என்னைப் பாராட்டுவார். மனிதரைக் கொன்று தின்னும் இந்த அரக்கனை அழித்து நில மகளின் சுமையைக் குறைத்தேனே என்று என்னைப் புகழ்ந்து பேசுவார்.

'உம் சொல், சீக்கிரம் சொல்!......சரி, ஒன்றும் பேசமாட் டாயா?...உன்னைக் கேட்கத்தான் என்ன தேவையிருக்கிறது? என் தாயைக் கொன்ற பாதகன் நீதான் என்று நான் தெரிந்து கொண்டால் அது போதுமானது. அவளுடைய ஆன்மாவை அழித்தவன் என்பது தெரிந்தால் போதும். உனக்கு இன்னும் ஐந்து நிமிடங்கள் தருகிறேன். இறப்பதற்கு முன்பு ஏதாவது கூறவிரும்பினால், அதையும் சொல்லிவிடு. அரக்கனே! சொல்லிவிடு!'

தாராசந்த் நடுங்கிக் கொண்டிருந்தான். அவனுடைய பார்வை தரையில் பதிந்து கிடைந்தது. குப்தேச்வரின் அதட்டலைக் கேட்டும் அவன் ஒரு பதிலும் கூறாமலிருந்தான்.

இடிபோல் கடுமையாகப் பேசினான் குப்தேச்வர்—

'கொடியனே! காதுகளை நன்ருக வைத்துக் கொண்டு கேள். ஒரு ஆதாரமும் இல்லாத பெண்ணை நம்பிக்கைத் துரோகம் செய்து, அவளை சூழ்ச்சி எனும் வலையில் சிக்கவைத்து விட்டு அவருடைய மானம் மரியாதை எல்லாவற்றையும் அழிக்க வழி செய்வதில் சற்றும் அஞ்சாத மனிதன் என்று அழைப்பது? மகப் பேறுகாலத்தில் அவளையும் அவளுடைய பச்சிளங் குழந்தையை யும் தெருத் தெருவாக அலைய வைத்து, உலகத்தின் கொடுமை களுக்கு இரையாக்கி விட்டுச் செல்பவனை மனிதன் என்று அழைப்பது? அவன் உயிருடனிருக்க ஒரு தகுதியும் பெருதவன்!'

தாராசந்த் கற்சிலை போல் அமர்ந்திருந்தான். குப்தேச்வர் மறுபடியும் கேட்டான்—'அப்படிப்பட்ட சண்டாளனை இந்த நிலத்திற்குச் சுமையாக உயிர் வாழவிடுவதா என்ன? இது நியாயமா என்று நிச்சயிக்கும் பொறுப்பை நான் உன்னிடமே விட்டுவிடுகிறேன். உம், சீக்கிரம் சொல், அப்படிப்பட்ட பாதகன் உயிருடனிருந்தாக வேண்டுமா?'

'வேண்டாம்' என்று தலையை யசைத்தபடி அவன் பதிலளித்தான்.

'அப்படியானுல் நீ இறக்கத் தயார்தானு?'

'ஆமாம்!' என்று தலையசைத்து அவன் பதிலளித்தான்.

'சரி, அப்படியானுல் தயாராகிவிடு.' என்று கூறி உடனே கத்தியை எடுத்தான். தாராசந்தின் இடத்தில் வேறு யாராவது இருந்திருந்தால், அந்தக் காட்சியைக் கண்டதுமே உயிரற்றுப் போயிருப்பான்.

அறையில் இருள் சூழ்ந்திருந்தது. குறி தவறிவிடப் போகிறதே என நினைத்து குப்தேச்வர் மின்சார விளக்குகளைப் போட்டான். அறை ஒளிவிட்டுப் பிரகாசித்தது. தாராசந்த் தப்பி ஓடிவிடப் போகிருனே என்று அவன் அஞ்சினுன். ஆகையால் அறையின் கதவைத் தாளிட்டுவிட்டான்.

ஒளியில் தாராசந்தை குப்தேச்வர் உற்றுக் கவனித்தான். கோட்டு, சட்டை எல்லாவற்றையும் விலக்கிவிட்டுத் தன் மார்பைத் தயாராக வைத்திருந்தான் அவன்.

தாராசந்தின் இந்த அச்சமற்ற தன்மையைக் கண்ட குப் தேச்வர் பிரமித்துவிட்டான். இறக்கத் தயாராகவே இங்கு

தாராசந்த் வந்திருக்கிருனே என்றுகூட குப்தேசவருக்குத் தோன்றியது. என் உள்ளத்தை இளக வைத்துவிட்டுத் தப்பித்துக் கொள்ளலாம் என்று வழி செய்கிருன் போலிருக் கிறது எனப் பிறகு எண்ணினான் குப்தேச்வர்.

இன்னும் தாமதமாக்குவது சரியல்ல என்று கருதி ஒரே வீச்சில் அவனைத் தீர்த்துக் கட்டும் எண்ணத்துடன் குப்தேச் வர் வாளை ஒரு வீச்சு வீசியபடி கையை ஓங்கினான். ஆனால் அவனுடைய கை தாராசந்தின் மார்புவரைகூடச் செல்ல வில்லை. அதற்குள் அவனுடைய பார்வை தாராசந்தின் மீது பட்டது.

அவனுடைய கை முன்னே செல்வதற்குப் பதிலாகப் பின்னே சென்றுவிட்டது. அவன் தானே முன்பு வந்தான். கழுத்தை அழுத்தியதால் தலைப்பாகை நழுவி விழுந்தது. மூக்குக் கண்ணாடியும் தலைப்பாகைத் துணியில் மாட்டிக் கொண்டு காதுப் பக்கத்திலிருந்து நழுவிவிட்டது. குப்தேச்வர் அவனுடைய உடலில் கை வைத்துப் பார்த்தான்—வியர் வையால் அவனது உடல் நனைந்திருந்தது. ஐஸ் கட்டியைப் போல் உடல் முழுதும் ஜில்லென்றாகிவிட்டது.

குப்தேச்வர் 'வீல்' என்று கத்தியபடி பின்னே சென்றான். அவனுடைய கண்களுக்கெதிரே இருள் சூழ்ந்துகொண்டது. மறுகணம் மறுபடியும் முன்னே சென்று தாராசந்தின் கண் ணாடியைக் கழற்றினான். பிறகு அவனுடைய முகத்தை உற்று நோக்கினான் குப்தேசவர். திடீரென்று அவன் அலறினான்—

'ஆ! ஷாம்தாஸ்! நீங்களா?'

குப்தேச்வருக்கு அறை முழுவதும் சுழல்வதுபோலிருந்தது. அவனுக்கு இதெல்லாம் ஏதோ செப்பிடுவித்தைபோலிருந்தது. எவ்வளவு நேரம் அவனையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந் தானே, குப்தேச்வருக்கே தெரியாது. ஒரு தடவை மறு படியும் அவனுடைய கை வாளுடன் எழுந்தது. ஆனால் எழுந்த கை கீழே விழுந்துவிட்டது.

குப்தேச்வர் தாராசந்தைத் தழுவியபடியிருந்தான்—தந்தை —மகன் இருவருடைய இந்தச் சந்திப்பும் மிகவும் வியப்பா னதாக இருந்தது.

ஷாம்தாஸ் அவனை இறுக அணைத்துக்கொண்டான். கண்ணீர் உதிர்த்தபடியே அவன் கூறினான்—'இந்தக் கொடிய தந்தை பெற்றப் பேதைப் பெண்ணே! சுந்தரி! இன்னும் நீ இந்த அரக்கனை, இதயமற்ற உன் தந்தையை உயிருடனிருக்கப் பார்த்துக் கொண்டிருப்பாயா?'

ஷாம்தாஸின் பார்வை தரையில் சென்றது. சற்று நிதானித்துப் பிறகு அவன் எழுந்தான். பிறகு ஒரு பாய்ச்சல் பாய்ந்து நின்றான். மறுகணம் அதே கத்தி அவனுடைய கையில் இருந்தது.

ஷாம்தாஸ் கத்தியின் நுனியைத் தன் மார்பகத்தில் செலுத்துவதற்காகக் கையைப் பின்புறம் நகர்த்தினான். ஒரு கணத்தில் கத்தி அவனது மார்பைத் துளைத்துக்கொண்டு முதுகுப் பக்கம் வந்திருக்கும். ஆனால், உடனேயே குப்தேச்வர் தன் இரு கைகளின் பலத்தாலும் அவனது கையை இறுகப் பிடித்துக் கொண்டான்.

கத்தி மார்பைத் தொடும் முன்பே அவனுடைய கை, காற்றில் அசையும் தீபச்சுடரைப்போல் நடுங்கிற்று. உடனே அன்பான ஒரு குரல் கேட்டது—'அய்யா! வேண்டாம். இந்தக் காரியம் செய்யக்கூடாது. நடந்தது நடந்துவிட்டது.'

ஷாம்தாஸ் அவனிடம் கூறினான்—'என் மகளே! என்னை மன்னித்துவிடு, சுந்தரி! இந்தப் பாவியை மன்னித்துவிடம்மா! ஆனால் உயிருடனிருக்கச் செய்து மன்னிக்காதே! கொன்றுவிடு. இனி நான் உயிர் வாழ்வது, உன் எதிரில் உயிர் வாழ்வது ஆயிரம் முறை இறப்பதற்குச் சமம். அதற்கும் கீழ்த் தரமானதம்மா! அதனால்தான் நான் மாறுவேடத்தில் வந்தேன். உன் வேலையில் தடை ஏற்படக்கூடாது என்பதற்காகத்தான் அவ்விதம் செய்தேன். சுந்தரி! என்னை உயிர் வாழ வைத்துவிட்டு என் பாவச் சுமையை இன்னும் அதிகமாக்கிவிடாதே. பிறகு நீ உன் கடமையைச் செய். அந்த துரதிருஷ்டத் தாயின் கட்டளையை நிறைவேற்று. இல்லாவிட்டால், அவளுடைய ஆத்மா துடித்துக்கொண்டேயிருக்கும்.—அந்தப் பாவம் உன்னையே சாரும்!

சுந்தரி (குப்தேச்வரல்ல—சுந்தரி) அவனை அன்புடன் எடுத்தாள். கட்டிலில் உட்கார்த்திவிட்டு, அவனுடைய தோளில் கைகளைப் போட்டபடி கூறினாள்—'அப்பா! என் கடமை முடிந்துவிட்டது. யாரைக் கொல்லும்படி என் அம்மா எனக்குப் பணித்திருந்தாளோ, அவர் நான் கொல்வதற்குமுன்னமேயே இறந்துவிட்டார். அவருடைய கெட்ட குணங்கள் பாவச் செயல்கள் எல்லாமே ஒவ்வொன்றாகச் செத்துவிட்டன. இனி அவருடைய வாழ்க்கையே மாறிவிட்டது. மகாத்மாக்களின் வாழ்க்கை என்று அதைக் கூறவேண்டும்.'

ஷாம்தாஸ் தன் இரு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு விம்மினான். சுந்தரி அவனருகே உட்கார்ந்தபடி அவனை அன்புடன் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தாள்—'அப்பா! நீங்கள் உயிருடனிருங்கள். ஆயிரங்காலம் இருங்கள்! இனி நீங்கள் இருப்பது எனக்கு மிகவும் அவசியம்!

ஷாம்தாஸின் வாயிலிருந்து வார்த்தையே வெளிவரவில்லை. சுந்தரி மறுபடியும் பேசினாள்—'அப்பா! எழுந்திருங்கள். நான் உங்கள் மகள் சுந்தரியல்லவா! என்னிடம் அன்பாக நடந்து கொள்ள வேண்டாமா? என்னை ஆசையாக வைத்துக் கொள்ள வேண்டாமா?'

ஷாம்தாஸின் உள்ளம் மடை திறந்த வெள்ளம் போல் உருகி வழிந்தோடியது. அழுது கொண்டே அவன் சுந்தரியின் நெற்றியில் முத்தமிட்டான். ஆனால் அவனது வாயினின்றும் வார்த்தையே வெளிவரவில்லை.

பிறகு வெகு நேரம் வரை இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டேயிருந்தனர். உடலின் அவயவங்கள் முழுதுமே கண்களின் தொழிலையே செய்வது போன்றிருந்தது. சுந்தரி கூறினாள்—'அப்பா! நீங்கள் என்னை முதலிலேயே கண்டு கொண்டீர்களா?'

தாராசந்த் தன்னைச் சமாளித்துக்கொண்டு கூறினான்—'குழந்தாய்! முழுவதும் கண்டு கொள்ள முடியவில்லை. ஆனால் கொஞ்சம் சந்தேகமாக இருந்தது. ஆனால் நீ கைக்குட்டையைப் பற்றிக் கூறினாயே அப்போது எனது சந்தேகம் இன்னும் அதிகரித்தது. பிறகு என் விலாசத்தைக் கேட்டா

யல்லவா, அப்போது இந்த குப்தேச்வர் சுந்தரிதான் என்று நான் நிச்சயித்து விட்டேன். பிறகு கைக்குட்டையைப் பார்த்தபோது எஞ்சியிருந்த சந்தேகமும் தெளிந்துவிட்டது.'

பச்சன் சிங்கிற்குத் தூக்கு தண்டனையளிக்கப்பட்டபோது ஊசியும் நூலும் கொண்டு அவன் அந்தக் கைக்குட்டையின் ஓரத்தில் அந்த எழுத்துக்களைத் தைத்துத் தந்தான்.—'பேதை சுந்தரி இழந்த அன்பனின் இறுதி அடையாளம்.'

ஷாம்தாஸ் மறுபடியும் கூற ஆரம்பித்தான்—'மகளே! உன்னை முதல் முதலில் ஸ்டேஷனில் கைது செய்தேனே, அப்போதே உன்மீது எனக்குச் சந்தேகம் எழ ஆரம்பித்து விட்டது. உன் கண்களில் உன் தாயின் (குர்தேயி) உருவம் தென்பட்டது. அவளுடைய கண்கள் உன் கண்களைப் போலவே இருக்கும். உண்மையில், நேற்று உன்னைக் கண்ட நான், பதினெட்டு அல்லது பத்தொன்பது ஆண்டுகளுக்கு முன்பு உன் தாயைக் கண்டாற்போலிருந்தது எனக்கு. ஆனால் சிலர் இயற்கையாகவே வேறு சிலரைப் போல் காணப்படுவர். ஆகையால் அதைப்பற்றி நான் அதிகமாகச் சிந்திக்கவில்லை.

'ஆனால், மகளே! ஆனால் ஒன்று சுந்தரி! உன் வாழ்க்கை பற்றிய கதை முழுவதிலும் இந்தக் கைக்குட்டை பற்றிய தகவலே வரவில்லையே. எங்குமே நான் கேட்கவில்லை!'

சுந்தரி தலை குனிந்தபடி பேசினாள்—'அப்பா! நான் ரோடுவின் குடிசையில் இருந்தபோது ஒரு நாள் குரங்கு காணமற் போய்விட்டது என்று புத்தகத்திலிருந்து படித்தேனே, நினைவில்லையா? அப்போது அவர் அங்கு வந்திருந்தார். நான் அழுதேன். அப்போது அவர் ஒரு கைக்குட்டையால் என் கண்ணீரைத் துடைத்தாரே, அந்தக் கைக்குட்டை பிறகு என்னிடமே இருந்து விட்டது. அது ஒன்றுதான் அவருடைய...' என்று கூறிய சுந்தரியின் கண்களில் நீர் மல்கிற்று. அவள் நாத் தழுதழுத்தது.

ஷாம்தாஸ் பெருமூச்செறிந்தபடி கேட்டான்—'ஆனால் மகளே! சுந்தரி நதியில் விழுந்து மூழ்கிப் போய்விட்டாள் என்றல்லவா இந்தப் புத்தகத்தில் எழுதியிருக்கிறாய்!'

நான் மூழ்கியது உண்மைதான். ஆனால் இறக்கவில்லை. நான் மிதந்து கொண்டே சென்றேன். என்னைப் பார்த்த ஒரு வயது முதிர்ந்த படகோட்டி என்னை எடுத்துக் காப்பாற்றினான். அவன் மிகவும் நேர்மையானவன். இன்றுகூட நான் அவனைப் பல தடவைகள் நினைத்துக் கொண்டேயிருக்கிறேன்.

'மகளே! பிறகு நீ அம்ருத்சர் வந்து விட்டாயா?'

'ஆமாம்!'

'நீ ஏன் இப்படி மாறு வேடத்தில் இருக்கிறாய்?'

இதற்குப் பல காரணங்கள் உண்டு. முதலில் போலீசிட மிருந்து தப்பவேண்டும். நான் மூவரைக் கொலை செய்தவளா யிற்றே! இரண்டாவது காரணம் நான் அவருடைய தாயைக் காப்பாற்ற வேண்டும் என்று அவர் எனக்குக் கட்டளை பிறப் பித்திருந்தார். அதற்காக நான் என் எழுத்தின் வாயிலாகக் கொஞ்சம் பணம் சம்பாதிக்க விரும்பினேன்—மூன்றாவதாக, மற்ற நூல்களைத் தவிர, என் சொந்த அனுபவம், சமுதா யத்தின் வெண் குருதி, இவற்றைச் சித்திரித்து ஒரு புத்தகம் எழுத விரும்பினேன். அதனால் உலகம் பயனடையவேண்டும் என்பது என் ஆசை. நான்காவதாக, நான் உங்களை......' என்று கூறியபடியே, அவள் மௌனமாகி விட்டாள். அவ ளுடைய தலை குனிந்தது.

தந்தை அவளுடைய தலையை வருடியபடியே கூறினார்—'மகளே! அப்படியானால் உன் வேலைகள் யாவும் நிறைவேறி விட்டன!'

சற்று மௌனமாக இருந்துவிட்டு சுந்தரி பதிளித்தாள்—'ஆமாம்! எல்லா வேலைகளும் முடிந்து விட்டன. இனி நான் என் பொறுப்புக்களினின்றும் விடுபட்டு விட்டேன்.'

'இனி என்னை விட்டுப் போகவே மாட்டாயல்லவா?'

'ஆமாம் அப்பா! உயிருள்ளவரை நான் உங்களை விட்டுப் பிரியவே மாட்டேன்.'

அன்புடன் தழுதழுத்தபடி ஷாம்தாஸ் கூறினான்—'என் அருமை மகளுக்கு அழகான ஆடைகள் தைக்கப் போகிறேன். சுந்தரி! போய் உன் உடையை மாற்றிக் கொண்டுவா.'

'அப்பா! நான் நாளைக்கு என் வேடத்தைக் கலைத்துக் கொண்டு விடுவேன். என் சுய உருவில் நாளைக்குப் புலப்படுவேன்!'

'அந்த உருவில் உன்னைப் பார்த்து நான் எவ்வளவு மகிழ்ச்சி யடைவேன்!'

'அப்பா! நீங்கள் மகிழ்ச்சியாகத்தானிருக்க வேண்டும். உங்கள் உள்ளத்தில் உண்மையில் மகிழ்விருக்கா விட்டாலும், நீங்கள் மகிழ்ச்சியடையத்தான் வேண்டும். என் வெற்றி காரணமாக, நான் என் சுயமான உருவில் புலப்படப் போகிறேனே, அதனால் கூட நீங்கள் மகிழ்வுற வேண்டும்.'

'சரியாப் போச்சு! என் வெள்ளையுள்ளக் கண்மணி! நான் மகிழ்ச்சியடையாமலிருப்பேனா? இதென்ன நீ இப்படிப் பேசுகிறாய்?'

'கடவுள் கிருபையால் அப்படியே இருக்கட்டும்!'

'அது சரி! இந்த நிகழ்ச்சியின் இறுதிக் கட்டம் என்ன!'

'அது நாளைக்கு அதிகாலையில் உங்களெதிரில் நிகழும்!'

சற்று நேரங்கழித்து சுந்தரி கூறினாள்—'அப்பா! நீங்கள் உங்களைப்பற்றி ஒன்றுமே சொல்ல வில்லையே?'

'மகளே! என் பாவச் செயல்களைப்பற்றிக் கூற என்னிடம் தெம்பு கிடையாதம்மா! உனக்குச் சொல்லவில்லையே. அதுவே நல்லதாய்ப் போயிற்று என்று தான் நினைக்கிறேன். சுருக்க மாகச் சொல்கிறேன் கேள். உன் அம்மாவை மரணத்தின் வாயிலில் விட்டுவிட்டு உள்ளதைச் சுருட்டிக் கொண்டு இங்கு மங்கும் சில நாட்கள் சுற்றித் திரிந்தேன். பிறகு எனக்கு இரயில்வேயில் வேலை கிடைத்தது. அதுவும் ஒரு எதிர்ப் பாராத நிகழ்ச்சிதான். அந்நாட்களில் இரயில்வே ஊழியர்கள் வேலை நிறுத்தம் செய்து கொண்டிருந்தனர். தபால் வண்டி களைத்தவிர மற்ற எல்லா வண்டிகளும் நின்று விட்டன. எப்படியாவது வேலை நடந்தாக வேண்டுமே என்று புதிய பணியாட்களை இரயில்வே நிலையம் நியமித்தது. எனக்கும் அம்மாதிரி சமயத்தில் தான் வேலை கிடைத்தது. என் கடந்த வாழ்க்கை மிகவும் பயங்கரமாக இருந்தது. அதனால் நான் என் பெயரை மாற்றி வைத்துக் கொண்டேன். கடந்த கால

நிகழ்ச்சிகளின் காரணமாக நீதிமன்றத்துக் கூண்டில் நிற்க வேண்டி வந்துவிடப் போகிறதே என்று நான் நடுங்கிக் கொண்டிருந்தேன்.'

இதன்பிறகு ஷாம்தாஸ் கடைத்தெருவிற்குச் சென்று அவளுக்காக ஆடைகள் வாங்கிவந்தார். இருவரும் இரவில் வெகுநேரம் வரை பேசிக்கொண்டிருந்தனர். பிறகு தூங்கி விட்டனர்.

அதிகாலையில் ஷாம்தாஸ் சுந்தரியின் அறைக்குச் சென்று பார்த்தான். அப்போது பெண்ணின் உடை தரித்துக் கொண்டு சுந்தரி தூங்கிக்கொண்டிருந்தாள். அவர் சுந்தரியைக் கூப்பிட்டார். எழுப்பிப்பார்த்தார். ஆனால் அவள் பேசவில்லை, சற்றும் அசையக்கூடவில்லை. அவளுடைய முகத்தில் போர்த்தப்பட்டிருந்த துணியை அவர் விலக்கிப் பார்த்தார். அப்படியே அவர் தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்துவிட்டார். சுந்தரி மீளா நித்திரையில் ஆழ்ந்துவிட்டாள். அவளுடைய முகத்தில் தெய்வீக ஒளி வீசிற்று. இதழ்களில் வெற்றிப் புன்னகை தாண்டவமாடிற்று. முந்திய தினத்துக் கைகுட்டை அவளுடைய மார்பிலிருந்தது. நீண்ட பிரிவிற்குப் பின்பு காதலி தன் காதலனது கரத்தைப் பற்றுவது போல அந்தக் கைக்குட்டையை அவள் தன் இரு கைகளாலும் பிடித்துக்கொண்டிருந்தாள். கைக்குட்டையின் நிறம் ஏற்கெனவே சிவப்பாக இருந்ததால் வேறொரு பொருள் அதனை இன்னும் கருத்த சிவப்பு வர்ணம் கொடுத் திருக்கிறது என்பதை ஷாம்தாஸால் புரிந்துகொள்ள முடிய வில்லை. கைக்குட்டைக்கு அடியில் முந்திய தினத்து அதே கத்தியின் பிடி கிடந்தது. அதன் நுனி சுந்தரியின் நெஞ்சில் பாய்ந்திருந்தது. ஷாம்தாஸ் வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு அலறினார். அப்போது முக்காலியின் மீதிருந்த சில காகிதங்களின் பக்கம் அவரது பார்வை சென்றது. அது சுந்தரியின் கடைசிக் கடிதம்.

'என் மதிப்பிற்குரிய தந்தையே! நீங்கள் உள்ளத் தெம்பும் தைரியமும் உள்ளவர் என்பதை நான் நன்கறிவேன். உங்களுக்கு மிகச் சிறந்த ஞானமும் பிறந்துவிட்டது. நான்

இவ்வளவு விரைவில் உங்களைப் பிரிந்து செல்கிறேன். இதனால் உங்களுக்கு மிகுந்த வருத்தம் உண்டாகும் என்பதையும் நானறிவேன். ஆனால் என் நிலை பற்றிச் சற்று நீங்கள் எண்ணிப் பார்த்தால் உங்கள் மனம் நிச்சயமாக நிம்மதியடையும்.

என் வாழ்வின் ஆதாரமான காதலரைப் பிரிந்து நான் கடந்த இரண்டு அல்லது இரண்டரை ஆண்டுகளாக எவ்விதம் உயிர் வாழ்ந்திருக்கின்றேன் என்பது உங்களுக்குத் தெரியும்! அவர் பணித்த கட்டளையில் அவ்வளவு தெம்பளிக்கும் சக்தியிருந்தது. இல்லாவிட்டால் என்னால் ஒரு கணம் மூச்சு விடுவதுகூட இயலாத காரியம்.

பாலாசிங் மற்றும் அவனுடைய நண்பர்களைக் கொன்றது மாபெரும் பாவச் செயல்தான். ஆனால் அப்போது நான் கண்ணிழந்தவளாக இருந்தேன். பழிவாங்கும் எண்ணம் என் அறிவையே மறைத்துவிட்டது. என்னை அப்படிச் செய்யக் கூடாது என்று அவர் (என் கணவர்) எத்தனையோ முறைகள் கூறியிருந்தார். நான் அப்போது ஒப்புக்கொள்ளவும் செய்தேன். ஆனால் எனக்கு என்ன வந்துவிட்டது என்று எனக்கே தெரியவில்லை. அவரைக் கொன்றவரைப் பழிவாங்க இதைவிடச் சிறந்த முறை கிடையாது என்று எண்ணினேன். இன்று உங்களைக் கண்டதும் பழிவாங்குவதில் மிகச் சிறந்த முறை எது என்பது புரிந்துவிட்டது. நான் உங்களிடம் நடந்துகொண்ட முறைகள் மிகச்சிறந்தது என்பது இப்போது தான் விளங்குகிறது. என் நூல்களைப் படித்து உங்கள் வாழ்க்கையே சீர்திருந்தியிருக்கிறது. இதே ஆயுதத்தை நான் அந்தக் கொலைக்காரர்களிடம் கூட உபயோகித்திருந்தால், சமுதாயத்தினிடம் கூட உபயோகித்திருந்தால், ஆவேசத்திற்குப் பதிலாக அறிவால் செயல் புரிந்திருந்தால், கத்திக்குப் பதிலாகப் பேனாமுனையைப் பயன்படுத்தி யிருந்தால், அவர்களுடைய வாழ்வு மாறியிருக்கும்; மற்றும் அவர்களைப் போன்ற எத்தனையோ நெறிகெட்டவர்கள் நேர்மையான பாதைக்கு வந்திருப்பர்!

ஆனால் கடந்துவிட்ட நேரம் மறுபடியும் வருவதில்லை. என் அன்புத் தந்தையே! அந்தக் கடவுள் என்மீது கருணை புரியட்டும்! அதற்காக நீங்கள் பிரார்த்திக்க வேண்டும்.

அவருடைய வயதான தாயைக் காக்கும் பொறுப்பினின்றும் விடுபட்டால்தான் தன்னிடம் நான் வரலாம் என்று அவர் பணித்திருந்தார். நீங்கள் கிடைத்துவிட்டீர்கள். வயது முதிர்ந்த என் மாமியைப்பற்றி இனி எனக்கு கவலை கிடையாது. இந்தப் பொறுப்பை நான் இன்று உங்களிடம் ஒப்படைக் கிறேன்.

இதுதவிர, என் தாய் எனக்களித்திருந்த பொறுப்பையும் நிறைவேற்றிவிட்டுத்தான் இன்று உங்களிடமிருந்து விடை பெறுகிறேன். அவளுடைய ஆத்மா உங்கள் இரத்தத்தால் தான் சாந்தியடைவதாக இருந்தது. ஆனால் உங்கள் கண் ணீரால் அது இன்னும் அதிகமாக அமைதியடைந்திருக்கும். இதில் எனக்கு முழு நம்பிக்கை யிருக்கிறது.

நான்காவது பொறுப்பு என்னைச் சார்ந்தது. என் வாழ்வில் நிகழ்ந்த இந்த இறுதிக்கட்டத்தை நாவலில் எழுதி இரக்கமற்ற சமுதாயத்தின் உண்மைச் சித்திரத்தை வெளிப்படுத்த நினைத்தேன். இந்த வேலையும் முடிந்து விட்டது. இப்போது நான் எல்லாக் கடமைகளையும் முடித்துவிட்டு இந்த சமுதாயத் தின் முன்பே என் உடலைப் போட்டுவிட்டு என் அன்பரிடம் செல்கிறேன்.

என் அன்பார்ந்த தந்தையே! நீங்கள் நேற்றிரவு கூறினீர் களே—'மகளே! உன்னைச் சுய உருவில் கண்டு நான் மட்டற்ற மகிழ்ச்சியடைவேன்' என்று. நீங்கள் உங்கள் வாக்குப்படி நடந்து கொள்வீர்கள் என்று நம்புகிறேன். என்னை என் இந்தச் சுய உருவில் கண்டு மகிழ்வீர்கள் என நம்புகிறேன்.

நான் உயிருடனிருந்து என் தந்தையின் அரவணைப்பைப் பெறும் பாக்கியத்தை இழந்து விட்டேன். ஆனால் என் தந்தையே! பருத்தியின்றி நூல்நூற்பது போலத்தானிருக்கும் இனி நான் உடனிருந்தால்! உடைந்த ஆணித்துண்டும் முறிந்த உள்ளமும் இனி எத்தனை அடிகளைத் தாங்கிக் கொள்ளும்? மேலும் ஒரு பெரிய கொலைகாரியின் நிலையில்

நான் இருக்கிறேன். தூக்கு மேடையில் ஏறுவதைவிட நானே கத்தியால் குத்திக் கொள்வது எனக்குச் சுகமளிப்பதாகப் பட்டது.

நான் உயிருள்ள வரை உங்களை விட்டுப் பிரியமாட்டேன் என்று உங்களுக்கு நான் வாக்களித்தேன். இந்த வாக்கை யும் இறுதிவரை காப்பாற்றி விட்டேன். இதைத் தவிர, இந்த நாவலின் முற்றுப் பெறாத பகுதியை முடிக்கும்படி நீங்கள் என்னை மிகவும் வற்புறுத்தினீர்கள். என் புத்தகமும் என் வாழ்க்கையும் ஒரே பொருள் என்பதை நீங்கள் அறிவீர்கள். என் நாவலின் இறுதிப் பகுதி முடிவடைகிறது. அத்துடன் என் வாழ்வெனும் கதையின் முற்றுப்பெறாத இறுதிப் பகுதியும் முடிவுறுகிறது.

என் மதிப்பிற்குரிய தந்தையே! நீண்ட பிரிவின் வேதனையை நான் மறந்து போகும்படி என்னை ஆசீர்வதியுங்கள். சுவர்க் கத்திற்குச் சென்று என் ஆருயிர்க் காதலனை அணைத்துக் கொண்டு மகிழ்வுறும்படி ஆசீர்வதியுங்கள். என் உயிரின் உயிர்ப்பான அவருடைய காலடியிலேயே அவருக்குப் பணி விடைகள் செய்து கொண்டு நான் வாழும்படி என்னை ஆசீர் வதியுங்கள்!

என் அன்புத் தந்தையே! உங்கள் அருமைக் குழந்தையின் இறுதி வணக்கம்! வாழ்வில் முதல் முறையாகவும், கடைசி முறையாகவும் சந்தித்துப் பிரியும்—ஒரு வழிபோக்குப் பயணி.

உங்கள்

சுந்தரி

—

# தமிழில் வெளிவந்துள்ள மற்ற நூல்கள்

## I. தேசீய வாழ்க்கை வரலாற்று வரிசை

| | | | ரூ. | பை |
|---|---|---|---|---|
| 1. | தியாகராஜர் - பி. சாம்பமூர்த்தி | ... | 1 | 75 |
| 2. | ராமானுஜர் - ஆர். பார்த்தசாரதி | ... | 2 | 00 |
| 3. | குரு நானக் - கோபால் சிங் | ... | 2 | 25 |
| 4. | முத்துஸ்வாமி தீக்ஷிதர் - டி. எல். வெங்கட்ராம அய்யர் | ... | 2 | 50 |
| 5. | கபீர் - பாரஸ்நாத் திவாரி | ... | 2 | 25 |
| 6. | ரண்ஜீத் சிங் - டி. ஆர். ஸூத் | ... | 2 | 75 |
| 7. | ஹரிநாராயன் ஆப்தே - எம். ஏ. க்ரந்தீகர் | ... | 2 | 75 |

## II. இந்தியா - நாடும் மக்களும் வரிசை

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | வீட்டுப் பிராணிகள் - ஹர்பன்ஸ் சிங் | ... | 4 | 50 |
| 2. | சாதாரண மரங்கள் - எஸ். சாந்தபௌ | ... | 4 | 75 |
| 3. | மக்கட் தொகை - எஸ். என். அகர்வாலா | ... | 3 | 75 |
| 4. | இந்தியப் பாம்புகள் - பி. ஜே. தேவரஸ் | ... | 6 | 50 |
| 5. | தோட்ட மலர்கள் - விஷ்ணுஸ்வரூப் | ... | 6 | 00 |
| 6. | பூமரங்கள் - எம். எஸ். ரந்தாவா | ... | 6 | 50 |
| 7. | நிலமும் மண்வளமும் - எஸ். பி. ராய் சௌதுரி. | | 5 | 25 |

## III. அனைத்திந்திய நூல் வரிசை

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அக்னி நதி - குர் அதுல்ஐன் ஹைதர் | ... | 8 | 50 |
| 2. | மறைந்த காட்சிகள் - பகவதி சரன் வர்மா | ... | 8 | 50 |
| 3. | காகித மாளிகை - முப்பாள ரங்கநாயகம்ம | ... | 4 | 25 |

*

| | | ரூ. | பை. |
|---|---|---|---|
| 4. | கதாபாரதி : இந்திச் சிறு கதைகள் - டா. நாம்வர் சிங் ... | 8 | 25 |
| 5. | அழிந்த பிறகு - சிவராம காரந்த ... | 5 | 25 |
| 6. | கவி - தாராசங்கர் வந்த்யோபாத்யாய ... | 5 | 50 |

## IV. பல்வகை நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | காந்தியின் இந்தியா - வேற்றுமையுள் ஒற்றுமை ... | 3 | 25 |
| 2. | அக்பர் - லாரென்ஸ் பின்யன் ... | 2 | 25 |
| 3. | அறிவு வளர்க்கும் அறிவியல் - ரிச்சி கால்டர் ... | 4 | 25 |
| 4. | அசோக சாசனங்கள் - என். ஏ. நிகம், ரிச்சர்ட் மக்கியோன் ... | 3 | 00 |
| 5. | கோதம புத்தர் - ஆனந்த கே. குமாரசாமி, ஐ. பி. ஹார்னர் ... | 6 | 00 |
| 6. | மார்கோ போலோ - மௌரின் காலிஸ் ... | 5 | 75 |
| 7. | குடதிசை - குண திசை ஞானப் பெண் மணிகள் - ஸ்வாமி காறுநந்தா ... | 6 | 00 |
| 8. | இன்பத்தின் வெற்றி - பெட்ராண்ட் ரஸ்ஸல் ... | 3 | 50 |
| 9. | பாமர மக்களின் பரம்பரைப் பாடல்கள் - அழ. வள்ளியப்பா ... | 1 | 25 |
| 10. | விழாவும் பூசையும் - எல். ஜி. கணபதி அய்யர் ... | 1 | 25 |